# தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம்

1



முனைவர் மு.தமிழ்க்குடிமகன்

# தமிழ் ஆட்சி மொழிச்

## செயலாக்கம்

(முதற் பாகம்)


முனைவர்

**மு. தமிழ்க்குடிமகன்,** எம்.ஏ., பிஎச்.டி.,

(தமிழ் ஆட்சிமொழி - தமிழ்ப் பண்பாட்டுத் துறை மேனாள் அமைச்சர்)



அறிவொளி பதிப்பகம்

81, கார்மேகனார் தெரு

தல்லாகுளம், மதுரை - 625 002

## நூற் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூற் பெயர் | : | தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கம் |
| ஆசிரியர் | : | முனைவர் மு. தமிழ்க்குடிமகன் |
| உரிமை | : | ஆசிரியர்க்கு |
| முதற்பதிப்பு | : | 2004 |
| மொழி | : | தமிழ் |
| மொத்தப்பக்கங்கள் | : | 384 |
| நூல் அளவு | : | 1/5 தெம்மி (இரட்டைக் கிரௌன்) |
| தாளின் தன்மை | : | 15.5 கி. மேப் லித்தோ தாள் |
| பொருள் | : | ஆட்சி மொழி வரலாற்று ஆய்வு |
| அச்சுஎழுத்து | : | 11 புள்ளிகள் |
| படிகள் | : | 1200 |
| விலை | : | உருபா. 225/- |
| அட்டை வடிவமைப்பு | : | நாணா |
| நூலாக்கம்<br>அச்சிட்டோர்<br>கட்டமைப்பு | : | யுனைட்டடு பைண்டு கிராபிக்சு<br>101 -ஏ, இராயப்பேட்டை நெடுஞ்சாலை<br>மயிலாப்பூர்<br>சென்னை - 600 004 |
| வெளியீடு | : | அறிவொளி பதிப்பகம்<br>81, கார்மேகனார் வீதி, தல்லாகுளம்,<br>மதுரை - 2, தொலைபேசி - 2568048<br>செல் பேசி - 98424-41301<br><br>11, விக்டோரியா தோட்டம்<br>20, நேரு நூறடிச் சாலை, கோயம்பேடு<br>சென்னை - 107, தொலைபேசி - 24750555<br>செல் பேசி - 98410-41301 |



## அறிஞர் அண்ணாவின் தீர்மானம்

"தமிழகத்தில் தமிழ் பயிற்சி மொழியாகவும், பாடமொழியாகவும் எல்லாக் கல்லூரிகளிலும், நிருவாக மொழியாகப் பல்வேறு துறைகளிலும் ஐந்தாண்டு காலத்துக்குள் நடைமுறைக்கு வருவதற்கான துரிதமான நடவடிக்கையை மேற்கொள்வது என்று இம்மன்றம் தீர்மானிக்கிறது" - 23.1.1968



## டாக்டர் புரட்சித்தலைவி அவர்களின் முழக்கம்

ஆட்சிமொழித் திட்டத்தை முழுமையாகச் செயற்படுத்திட உறுதி பூண்டுள்ளது எனது அரசு. தமிழ் தமிழருக்கு மட்டும் உரிய மொழி அன்று; இத்தரணிக்கே உரிய மொழி! தமிழ் உள்ளூர் மொழியன்று; உலக மொழி! அத்தகைய உலக மொழியை 'வானம் அளந்ததனைத்தும் அளந்திடும்' வளர் மொழியாக்க உறுதி கொள்வோம்!

## நூலுள் புகுமுன்

1996 - 2001 காலகட்டத்தில் அன்றைய தி.மு.க. அமைச்சரவையில் நான் இடம் பெற்றிருந்த போது ஆற்றிய 'தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கப்பணி'களின் படப்பிடிப்பே இந்நூல். இது வரலாறு. எனவே வரலாற்று உண்மைகள் எவையும் மறைக்கப் படவில்லை. என் பாராட்டும், மறுப்பும் தெரிவிக்கப்பட்ட கருத்துகளின் அடிப்படையில் மட்டுமே! எந்தத் தனி மனிதரையும் பாராட்டவோ, பழிக்கவோ அல்ல. இவற்றை மனத்திற் கொண்டு உள்ளே செல்லுங்கள்.

# அணிந்துரை

அறிவியல் அறிஞர், முனைவர் வா.செ. குழந்தைசாமி
(துணைவேந்தர், தமிழ் இணையப் பல்கலைக்கழகம்)

தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாட்டுத்துறை முன்னாள் அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள் தாம் எழுதியிருக்கும் 'தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கம்' என்ற நூலுக்கு அணிந்துரை வேண்டும் என்று கூறிய பொழுது நான் ஏறத்தாழ 200 அல்லது அதிகமாகப் போனால் 250 பக்கங்கள் கொண்ட ஒரு நூலை எதிர்பார்த்தேன். 1956 இல் அரசின் ஆட்சிமொழியாகத் தமிழ் அறிவிக்கப்பட்டது தொடங்கி, அவ்வறிவிப்புப் படிப்படியாக நடை முறைப்படுத்தப்பட்ட சரிதையின் விளக்கமாக இந்நூல் இருக்கும் என்று எண்ணினேன். தமிழகம் 1938 -இல் ஒரு முறை, 1965-இல் ஒரு முறை என இரண்டு மொழிப் போராட்டங்களைக் கண்ட தென்பதை நாமறிவோம். ஆனால் தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம் மூன்றாவது மொழிப் போராட்டமாக நடந்திருக்கிறது என்பதையும் அது இன்றும் முழுமை பெறவில்லை என்பதையும் முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்களின் 700 பக்கங்கள் கொண்ட நூலைப் பார்த்த பின்னர் தான் உணர்ந்தேன்.

தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கத்தில் ஐந்து கட்டங்களை நாம் மனத்தில் கொள்ளவேண்டும்.

1. ஒரு தன்னாட்சி நிலவும் நாட்டின் முதல் தேவை மக்கள் மொழியில் ஆட்சி நடைபெறவேண்டும். நாம் 1947-இல் விடுதலை பெற்றோமெனினும் 1956-இல் தான் மக்கள் மொழியான தமிழ், ஆட்சி மொழி எனும் தீர்மானம் காங்கிரசாட்சியால் திரு சி. சுப்ரமண்யம் அவர்கள் கொண்டுவந்த தீர்மானத்தின் மூலம் நிறைவேற்றப்பட்டது. அறிவிக்கப்பட்டது. நான்குமொழிகளைக் கொண்ட சென்னை மாகாணம், மொழிவாரி மாநிலப் பிரிவு கட்குப்பின் ஒரு மொழியைக் கொண்ட தமிழ் நாடாக மாறும் வரை பொறுத்திருந்து, நிதானமாகவே இப் பணியைத் தொடங்கியிருக்கிறோம். இந்த மாற்றத்திற்குக் கால வரம்பு எதுவும் அப்பொழுது நிர்ணயிக்கப்படவில்லை.

2. 1967 தேர்தலில் ஆட்சி மாறி, தி.மு.க. பொறுப்பேற்ற பின், அன்றைய முதல்வர் அண்ணா அவர்கள் ஐந்து ஆண்டுகட்குள் தமிழ் ஆட்சிமொழித் திட்டம் நிறைவேற்றப்படும் என அறிவித்தார். இது தமிழக ஆட்சியின் துறைகள் அனைத்தையும் சேர்ந்ததாகையால் ஒவ்வொரு துறையும், அரசின் கொள்கையைத் தன்னளவில் செயல்படுத்தும் என அவர் எண்ணியிருக்கக் கூடும்: நம்பியிருக்கக்கூடும். இதில் வருந்தத்தக்க செய்தி, துறைகள் தம் கடமையை உணர்ந்து அவ்வளவாகச் செயல்பட வில்லை என்பதுதான்.

3. 1971-இல் மீண்டும் முதல்வர் பொறுப்பேற்ற கலைஞர் கருணாநிதி, இத்திட்டம் நிறைவேற்றப்பட வேண்டுமாயின் அதன் செயல்பாடு, அடி முதல் நுனிவரை கண்காணிக்கப்படவேண்டும் என்பதை உணர்ந்தார். தமிழ் வளர்ச்சி இயக்ககத்தை மாநில அளவில் செயல்படும் துறையாக அமைத்து, அதற்கு இயக்குநர் மற்றும் உதவி இயக்குநர்கள், மேலும் அலுவலர்களையும் நியமித்தார். ஆட்சிமொழிச் செயல்பாட்டில் இது முக்கியமான திருப்பம்.

1978-இல் அன்றைய முதல்வர் டாக்டர் எம்.ஜி.ஆர். அலுவலர்கள் அனைவரும் தமிழில் தான் கையெழுத்திடவேண்டும், Initials என்பனவும் தமிழில்தான் இருக்கவேண்டும் என உத்தரவிட்டார்.

1996-இல் நான்காவது முறையாக முதல்வராகப் பொறுப்பேற்ற கலைஞர், தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம் கொள்கையாகப் பிரகடனப்படுத்தப்பட்டு நாற்பது ஆண்டுகளாகியும் நிறைவு தரும் முன்னேற்றம் காணாததால் இது ஆணைகளின் மூலம் நிறைவேற்றப்படக் கூடியமாற்றம் அன்று; இது ஓர் இயக்கமாக நடத்தப்பட வேண்டும் என்பதை உணர்ந்து தமிழ் ஆட்சிமொழி, பண்பாட்டுத்துறை என ஒரு துறையையே தலைமைச் செயலகத்தில் உருவாக்கி அதற்கென ஓர் அமைச்சரை நியமித்தார். அந்தப் பொறுப்பை முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்களிடம் ஒப்படைத்தார்.

இந்த நூல் தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்க இயக்கத்தின் வரலாறு. அந்த இயக்கத்தை முன்னின்று நடத்திய தளபதியே அந்த வரலாற்றின் ஆசிரியராக இருந்து நமக்குத் தகவல்களைத் தருகிறார். இவரன்றி வேறொருவர் இப்பொருளில் இவ்வளவு உள்நுழைந்து, நெருங்கி நின்று தகவல்களைத் திரட்டி, கோர்வையாகப் பொருத்தி, ஒரு நூலை எழுதியிருக்க இயலாது. உரை நடைவழியாக, மொழித்துறையில் அரசின் வெற்றி கூறும் ஒரு பரணியைப் படைத் தளித்திருக்கிறார். அவருக்குத் தமிழ் மொழி வரலாற்றுலகம் கடன் பட்டுள்ளது.

தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கத்தின் முன்னேற்றப் பயணத்தை, அதன் தொடக்ககாலம் முதல் பார்வையிடுவது பயன்தரும். 1920-களின் ஆரம்பம் முதல் திருவாளர்கள் பி.சி. முத்துச் செட்டியார், அரங்க நாத முதலியார், இராமலிங்கம் செட்டியார் போன்றவர்கள் சட்ட மன்றத்தில் தமிழில் பேசுவது பற்றியும் சட்டங்களை வட்டார மொழிகளில் கொண்டுவர வேண்டியது பற்றியும் குரல் கொடுத்தது முதல், நாட்டு விடுதலைக்கு முன்னும், பின்னும் சட்டமன்றங்களில் வட்டார மொழிப் பயன்பாடு பற்றி எழுந்த விவாதங்களில் குரல்கொடுத்தவர்கள், வாதங்களின் சாரம் வரை, ஆசிரியர் சற்று விரிவாகவே பதிவு செய்திருக்கிறார். திரு. கசபதி நாயக்கர் அவர்களின் ஈடுபாட்டை வியந்து விதந்து எழுதியிருக்கிறார். குளித்தலையில் 7.10.56 அன்று நடந்த 'தமிழ் ஆட்சிமொழி' மாநாட்டையும் அவர் குறிப்பிடத் தவறவில்லை. இவற்றின் இறுதி விளைவாக 27.12.56-இல் தமிழை ஆட்சிமொழியாக அறிவித்து திரு. சி. சுப்ரமண்யம் அவர்கள் கொண்டு வந்து நிறைவேற்றிய

தீர்மானம் வரலாற்றுச் சிறப்புடையது. சி. சுப்ரமண்யம் அவர்களின் முயற்சியை ஆசிரியர் மனந் திறந்து பாராட்டுகிறார். அன்றைய அரசு தாய் மொழியில் ஆட்சி நடத்துவது இயற்கையானது. எளிதாக நடக்கக் கூடியது என்று நம்பி, ஆங்கிலம் இருந்த இடத்தில் தமிழ் என்ற அளவில், அரசு அலுவலர்களின் பொறுப்பில் நடைமுறைப்படுத்துவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யும் பணியை விட்டு விட்டார்கள் என்றே கொள்ளவேண்டும். "முதலில் சமாளிக்கச் சிறிது காலம் ஆங்கிலத்தை வைத்திருந்தால், பிறகு தானே நம்முடைய மொழி, வளம் பெற்ற உடனேயே, ஆங்கிலம் விலகிவிடும்" என்கிறார் திரு. சி.சுப்ரமண்யம். ஆனாலும் தமிழ் ஆட்சி மொழிச் சொல் அகராதி தயாரித்தல், தமிழ் பயிற்சி அளித்தல், தமிழைப் பயிற்று மொழி ஆக்குதல் போன்றவற்றிலும் கவனம் செலுத்துகிறார்.

தமிழை ஆட்சி மொழி ஆக்கும் 21.1.1957 நாளிட்ட முதல் ஆணையே ஆங்கிலத்தில் மட்டும் வந்திருக்கிறது. இவ்வாணையில் தமிழை ஆட்சிமொழியாக்குவதற்கு, அரசிற்கு அறிவுரை கூற ஒரு குழு நியமிக்கப்படுகிறது. அந்த ஆணையும் ஆங்கிலத்தில் மட்டும்தான். அதுமட்டுமன்று; 21.1.57 முதல் 20.12.66 வரை தமிழாக்கத்திற்காக வெளியிடப்பட்ட 128 ஆணைகளும் ஆங்கிலத்தில்தான். ஆனால் 1.5.66 க்குள் எல்லா மாவட்டங்களிலும் அனுப்பப்படும், அனைத்து அலுவலகக் கோப்புகளிலும் தமிழ் பயன்படுத்தப்படவேண்டும் என்றே அரசாணைகள் அதிகாரத்தோடு ஆணையிட்டன. (பக்.55) இந்த இடத்தில் ஆசிரியர் சிங்கப்பூரில் ஆட்சி மொழிப் பீடத்தில் தமிழ்பெற்ற இடத்தைக் குறிப்பிடுகிறார். தமிழர்கள் சிங்கப்பூரில் 6 விழுக்காட்டிற்கும் குறைவு. தமிழர்கள் மண்ணின் மைந்தர்கள் அல்லர். குடியேறியவர்கள். ஆனால் அங்கு 9.2.56 அன்றே தமிழ் ஆட்சிமொழித் தகுதி பெற்றுவிட்டது. ஆனால் தமிழ் அதன் பிறந்த மண்ணில் ஆட்சி மொழியானது 27.12.56-இல் தான். ஏறத்தாழ ஆட்சிமொழித் தீர்மானம் நிறைவேற்றப்பட்டு, ஒரு மகாமகம் கழிந்தும் கணிசமான முன்னேற்றம் காணப்படாத நிலையில் 1967-இல் ஆட்சி ஏற்ற தி.மு.க. வின் சார்பில் 23.1.68-இல் அண்ணா ஒரு, மொழித்தீர்மானத்தைச் சட்ட மன்றத்தில் முன் வைத்தார். அதில் இடம் பெற்றிருந்த ஒரு துணைத் தீர்மானம் ஆட்சி மொழி பற்றியது. அது பின் வருமாறு:

> *"தமிழகத்தில் தமிழ் பயிற்சி மொழியாகவும் பாட மொழியாகவும் எல்லாக் கல்லூரிகளிலும், நிருவாக மொழியாகப் பல்வேறு துறைகளிலும் ஐந்தாண்டு காலத்துக்குள் நடைமுறைக்கு வருவதற்கான துரிதமான நடவடிக்கையை மேற்கொள்வது என்று இம்மன்றம் தீர்மானிக்கிறது.* (பக்.62)

நாம் நிருவாக மொழி பற்றி மட்டுமே இங்கு பேசுகிறோம். 6.3.67 முதல் 3.2.69 வரை அண்ணா, அதன் பின் 1975 வரை கலைஞர் என தி.மு.க. ஆட்சிக்காலத்தில் ஆட்சி மொழி பற்றி 88 ஆணைகள் பிறப்பிக்கப்பட்டன. இவற்றின் வழி பல திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. இவை அனைத்துக்கும் பின்னர் இருந்த நிலைமை பற்றி முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்களின் தீர்ப்புப் பின்வருமாறு:

"இந்த அளவிற்கு முயற்சிகள் எடுத்தும் தேவையான அரசாணைகள் பிறப்பித்தும் எதிர்பார்த்த அளவிற்கு முன்னேற்றம் இல்லை என்பதை உணரலாம்.

* * *

*1968 முதல் 1973-க்குள் ஐந்தாண்டுகளில் தமிழை முழு ஆட்சி மொழியாக்குவது அரசின் கொள்கை என்று அறிவித்தும், அண்ணாவே தீர்மானம் கொண்டுவந்தும், கலைஞர் முதல்வராக இருந்தும் 1973- கடந்து 1975 வரையிலும் கூட வரைவுகள், கோப்புகள் அரசாணைகள் எல்லாம் தமிழுக்கு மாறிவிடவில்லை. கி.பி.2001 இலும் இதை எண்ணிப் பார்த்து உறுதி செய்திட இயலும்" (பக்.66)*

1977 முதல் 1987 வரை அ.இ.அ.தி.மு.க. ஆட்சியில் 65 ஆணைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன. பல முக்கியமாக உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன என்றாலும் ஐந்து செயல்பாடுகள் குறிப்பிடத் தக்கவை.

1. 17.4.84-இல் தமிழ் வளர்ச்சிப் பண்பாட்டுத்துறைக்குத் தனியாக ஒரு செயலர் அமர்த்தப்பட்டார். மேலும் இப்பதவிக்கு இ.ஆ.ப. பிரிவைச் சேராத தமிழறிஞர் நியமிக்கப்பட்டார்.
2. 21.6.1978-இல் அரசு ஊழியர்கள் அனைவரும் தமிழில் மட்டுமே கையொப்பமிட வேண்டும் என ஆணைபிறப்பிக்கப்பட்டது. இந்த ஆணை ஆங்கிலத்தில் மட்டுமே பிறப்பிக்கப் பட்டுள்ளது என்பது இங்கு குறிப்பிடப்பட வேண்டிய ஒரு தகவல். பழக்கத்தின் பிடி எவ்வளவு இறுக்கமானது என்று இதன் மூலம் காணலாம்.
3. தந்தை பெரியார் நூற்றாண்டு விழாவை யொட்டி 19.10.78-இல் தந்தை பெரியார் குறிப்பிட்ட எழுத்துச் சீர்திருத்தம் ஏற்கப்பட்டு நடைமுறைப்படுத்தப்பட்டது. 23.5.1979-இல் ஒரு சிறுதிருத்தம் வெளியிடப்பட்டது.
4. கிறித்தவ ஆண்டுக்கு நேரான தமிழாண்டு, திங்கள், நாள் மற்றும் திருவள்ளுவராண்டையும் பயன்படுத்த வேண்டுமென ஆணையிடப்பட்டது.
5. விளம்பரப்பலகையில் தமிழ் முதலிடம் பெறுவது பற்றிப் பிறப்பிக்கப்பட்ட ஆணையும் முக்கியமானதாகும்.

இவற்றுடன், ஆட்சியில் தமிழ் இடம் பெறுவதைத் துரிதப்படுத்தவும், விரிவாக்கவும், மூவாண்டு முனைப்புத்திட்டம் முதல் பல செயல்பாடுகட்கு ஆணைகள் பிறப்பிக்கப்பட்டன. 1988-இல் அ.தி.மு.க. ஆட்சி கலைக்கப்பட்ட பின் வந்த குடியரசுத்தலைவர் ஆட்சியில் எந்த ஆணையும் பிறப்பிக்கப் படவில்லை.

ஆட்சிமொழித் தீர்மானம் நிறைவேறி 33 ஆண்டுகட்குப்பின், இதில் தமிழுக்கு உரத்த குரல் கொடுத்த திராவிட இயக்கம் 22 ஆண்டுகள் பதவி வகித்த பின், 1989 -இல் தி.மு.க. பதவியேற்றபொழுது அன்றைய முதல்வர் கலைஞருக்கு முனைவர் தமிழ்க்குடிமகன் 24.8.89 இல் எழுதியுள்ள கடிதத்தில் இடம் பெற்றுள்ள சில வரிகள் பின்வருமாறு:

> "*தமிழ் வளர்ச்சி இயக்ககத்தில் 15 உதவி இயக்குநர் பதவிகள் நிரப்பப்படாமல் இருக்கின்றன. . . . உதவி இயக்குநர்களே இல்லாமல் மாவட்டங்களில் அமைந்திருக்கும் தமிழ் வளர்ச்சித் துறைகள் எப்படிச் செயற்படும். . .*
>
> * * *
>
> *கடந்த காலத்தில் தமிழ் வளர்ச்சி குறித்துச் சிந்திக்கத்தேவை இல்லாத, தமிழ்ப் பற்றே இல்லாத வட்டாட்சியர்* **(Tahsildar)** *வட்டார வளர்ச்சி அலுவலர்* **(B.D.O.)** *போன்றவர்கள் எல்லாம் தமிழ் வளர்ச்சித்துறையில் பணியமர்த்தப்பட்டு, பொழுது போக்குவதற்கு இதுவும் ஒரு துறை என்ற அளவில் மட்டுமே இத்துறை இயங்கி வந்துள்ளது."* (பக்.29)

1989-91 காலப்பகுதியில் தி.மு.க. ஆட்சியில் பிறப்பிக்கப்பட்ட ஆணைகள் ஏழு. இவற்றுள் தலைமைச் செயலக ஆய்வுக்காகக் குழு அமைப்பது பற்றிய ஆணை குறிப்பிடத்தக்கது. ஆனால் குழு செயற்பட்டு ஆய்வு செய்யவில்லை. அடுத்து 1991-96 காலப் பகுதியில் செல்வி ஜெ.ஜெயலலிதா அவர்கள் தலைமையில் அ.தி.மு.க. ஆட்சி ஏற்றது. ஐந்தாண்டு கால ஆட்சியில் 15 அரசாணைகள் பிறப்பிக்கப்பட்டன. தலைமைச் செயலகத்தில் தமிழ்ப் பயன்பாட்டை ஆய்வுசெய்ய ஒரு குழு அமைக்க ஆணையிடப்பட்டது. 91-இறுதியில் 95 இறுதியில் இப்படிப்பட்ட ஆணைகள் பிறப்பிக்கப்பட்டாலும் தலைமைச் செயலக ஆய்வு நடைபெறவில்லை.

தஞ்சையில் 1.1.95 இல் தொடங்கி நடந்த தமிழ் மாநாடு குறிப்பிடத்தக்கது. தமிழ் எழுத்துச் சீரமைப்பிற்கு முனைவர் வா.செ. குழந்தைசாமி தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டது (15.3.1996). பயிற்சி மொழி தொடர்பாக, ஆட்சி மொழிச் செயற்பாடு தொடர்பாகக் குழுக்கள் அமைக்கப்பட்டன. மீண்டும் தி.மு.க. 1996-இல் பதவிக்கு வந்தது. அதன் தேர்தல் அறிக்கையில் ஆட்சிமொழி பற்றிய பகுதி பின்வருமாறு:

> "*1956-இல் சட்டமாக்கப்பட்டு, இதுவரை ஐம்பதுக்கு மேற்பட்ட அரசாணைகள் எல்லா ஆட்சிக் காலத்திலும் பிறப்பிக்கப்பட்டும் தமிழ் முழுமையாக ஆட்சிமொழியாக வில்லை என்னும் மனக்குறை உள்ளது. உயர் அதிகாரிகளையும் அலுவலக அரசு ஊழியர்களையும் ஒருங்கிணைத்து அனைத்து மட்டங்களிலும் ஒரு கால வரம்பு நிர்ணயித்து தமிழ் முழு ஆட்சிமொழியாகும் வகையில் ஆணை பிறப்பிக்கப்படும்"* (பக்.78)

நேர்தல் வாக்குறுதியை நிறைவேற்ற, இதுவரை இருந்துவந்த அமைப்புப் போதுமானது அன்று என்பதை உணர்ந்த கலைஞர் இதற்காக முதன்முறையாக ஓர்அமைச்சகத்தை உருவாக்கி முழுமையான பொறுப்புடன் ஓர் அமைச்சரை நியமிக்க முடிவு செய்கிறார். அதன்பின்,

*இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து*
*அதனை அவன்கண்விடல்*

என்ற வள்ளுவர் வழிநின்று முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்களை 'தமிழ் ஆட்சிமொழி-தமிழ்ப்பண்டுபாட்டுத் துறை' அமைச்சராக நியமிக்கிறார். பொறுப்பேற்ற முனைவர் தமிழ்க்குடிமகன் வழக்கமான அரசுத்துறைப் பாதையில் நடை போடாமல் ஆட்சிமொழித் தமிழ் செயலாக்கத்தை ஓர் இயக்கமாகவே தொடங்கி நடத்துகிறார். அந்த இயக்கத்தின் ஐந்தாண்டு வரலாற்றை ஏறத்தாழ 650 பக்கங்களில் நம்மை மலைக்க வைக்கும் புள்ளி விவரங்களோடு பதிவு செய்திருக்கிறார். ஒரு சுதந்திர நாட்டில், இரண்டு மூன்று மொழிகள் என்ற சிக்கல் இன்றி ஒரே மொழியை ஆட்சி மொழியாகக் கொண்ட ஒரு மாநிலத்தில், புதிதாக எந்த அமைப்பும் தேவைப்படாமல் இருக்கின்ற நிர்வாக அமைப்பில், ஓர் அந்நியமொழியில் நடந்து வந்த ஆட்சியை மக்கள் தாய் மொழியில் நடத்துவதற்கான மொழிபெயர்ப்புப் பணியில் இவ்வளவு தயக்கமா? அதற்கு இவ்வளவு தடைகளா? அதற்குத் தேவைப்படுவது இவ்வளவு முயற்சியா? இவ்வளவு வியர்வையா? என்று வியந்து நிற்கிறோம்: மலைத்து நிற்கிறோம். 1956-இல் ஆட்சி மொழித் தீர்மானத்தை முன்வைத்த சி.சுப்ரமண்யம் அவர்களோ, அல்லது 1968-இல் ஐந்தாண்டுக்குள் நிறை வேற்றுவோம் என உறுதியளித்த அண்ணா அவர்களோ இந்தப் பணி இப்படி ஒரு விசுவரூபம் எடுத்து நிற்கும் என்று கற்பனை செய்து பார்த்திருக்கமாட்டார்கள் என்றே எண்ணத் தோன்றுகிறது. பணி அவ்வளவு பெரிதன்று. ஆனால் நீண்ட காலம் நிலைத்து விட்ட ஒரு பழக்கத்தை குடியரசு வாழ்க்கை முறையில், மனித நேய அணுகு முறைவழி மாற்றுவது எளிதில் நடப்பதில்லை. தயக்கம், தடைகள் அவற்றால் தாமதம் எனப்பணி முடிவு காணாது தொடர்வது இந்த நாட்டு நிர்வாகத்தொடு இணைந்த ஒன்று.

தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கத்தை இந்நூல் வழி பதிவு செய்யும் பணியை மேற்கொண்ட முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்கள் ஒரு டாக்டர் பட்டத்திற்கு ஆய்வு செய்யும் மாணவன் போன்று ஏராளமான தகவல்களை 1956 முதல் 2001 வரைதொகுத்து, அசைந்து, அசைந்து நடைபோட்ட ஆட்சி மொழிப் பயணத்தை விவரித்திருக்கின்றார்.

முதல் முதலாகத் தமிழை ஆட்சி மொழியாகப் பல துறைகளிலும் பயன்படுத்துவதற்காகப் பிறப்பிக்கப்பட்ட ஆணைகள் அனைத்தும் தமிழில் இருந்தனவா என்றால், இல்லை என்பதுதான் என் பதில். 1956-முதல் 1968 வரை ஆட்சி மொழியாகத்தமிழைப் பயன்படுத்துவதுபற்றிப் பிறப்பிக்கப்பட்ட ஆணைகள் அனைத்தும் ஆங்கிலத்தில்தான். 1968-இல் அண்ணாவின் மொழித் தீர்மானம் வருகிறது. ஐந்து ஆண்டுகட்குள் ஆட்சி மொழிப் பீடத்தில் இருந்து ஆங்கிலம் அகன்று தமிழ்

அரியணை ஏறும் என்பது பிரகடனம். 1968-க்குப் பின் தமிழ் ஆட்சி மொழி தொடர்பான ஆணைகளாவது, எல்லாம் தமிழில் வந்தனவா என்றால் 'இல்லை' என்பதுதான் பதில். 1968-இல் தொடங்கி 1996 வரை தமிழ் ஆட்சிமொழி தொடர்பான ஆணைகளில் தமிழில் எத்தனை? ஆங்கிலத்தில் எத்தனை என வருடம் தோறும் பொறுமையாகக் கணக்கெடுத்துக் கொடுத்திருக்கிறார்.

ஆட்சிமொழியைத் தமிழாக்கும் பணியில் எவ்வளவு தேக்கம், இனம் புரியாத தயக்கம் இருந்திருக்கிறது என்பதை ஆசிரியர் தெளிவாக விளக்குகிறார்.

1. 1956-இல் அரசாணைகள் தமிழில் இருக்கவேண்டும் என்று சட்டம் வருகிறது.

2. 1971-இல் தி.மு.க. அரசு பிறப்பித்த ஆணை எண்.2070 நாள் 2.12.71 இல் இக்கருத்து மேலும் வலியுறுத்தப்படுகிறது.

3. 1986-இல் அ.தி.மு.க. ஆட்சியில் எண்.371-இல் இடப்பட்ட ஆணை இதை மீண்டும் வலியுறுத்துகிறது.

4. 1989-இல் தி.மு.க. ஆட்சியில் அரசாணை எண்.182 நாள் 27.6.89, அரசின் ஆணைகள் அனைத்தும் தமிழில் வரவேண்டும் என்றும், தலைமைச் செயலகத் துறைகள் ஆங்கிலத்தில் ஆணைகள் வெளியிட வேண்டும் என்ற கட்டாயம் ஏற்பட்டால், ஒரே நேரத்தில் தமிழிலும் ஆங்கிலத்திலும் அரசாணை சேர்ந்துவழங்கப்படவேண்டும் என்றும் கூறுகிறது.

இவை அனைத்திற்கும் பின் நிர்வாகச் சீர்திருத்தத்துறைச் செயலர் திரு. பாண்டியன் (இ.ஆ.ப.) தமது கடிதத்தில் 18.8.96-இல் கீழ்க்கண்டவாறு கூற வேண்டிய தேவை இருந்திருக்கிறது.

> "*ஆனால் பலதுறைகள் இவ்வாணைகளைக் கடைப்பிடிக்காமல் ஆங்கிலத்தில் மட்டுமே ஆணைகளை வெளியிடுகின்றன. எனவே அனைத்து அரசுத் துறைச் செயலர்களும் தங்கள் துறைகளில் வெளியிடப்படும் அனைத்து ஆணைகளும் தமிழிலும், ஆங்கிலத்திலும் வெளியிடுமாறு அறிவுறுத்தும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.*" (பக்.114)

ஆட்சிமொழியாகத் தமிழை அரியணை ஏற்றிச் சட்ட மன்றத்தில் தீர்மானம் நிறைவேற்றி 40 ஆண்டுகட்குப்பின், காங்கிரஸ் ஆட்சி, தி.மு.க. ஆட்சி, குடியரசுத் தலைவர் ஆட்சி, அ.தி.மு.க. ஆட்சி அனைத்தும் தமிழை ஆட்சி மொழியாக்கப் பல ஆணைகள் பிறப்பித்த பின், பல முயற்சிகள் மேற்கொண்ட பின் நிலவிய சூழலை திரு. பாண்டியன் அவர்களின் மடல் பிரதி பலிக்கிறது. இந்த நிலையில்தான் கலைஞர் ஆட்சிமொழிச் செயலாக்கத்திற்கு ஓர் அமைச்சகத்தை உருவாக்கி அதன் பொறுப்பை முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்களிடம் ஒப்படைக்கிறார்.

முனைவர் தமிழ்க்குடிமகன் அவருக்கே இயல்பான விரைவு, விறுவிறுப்பு, தீவிரத்துடன் பணியில் ஈடுபடுகிறார். ஒன்றரை ஆண்டு கழிந்தும் அவர் எதிர்பார்த்த விளைவுகள் இடம் பெறவில்லை. ஒரு சிலர்தவிர, உயர் மட்ட அதிகாரிகள், குறிப்பாகத் தலைமைச் செயலக இ.ஆ.ப. அதிகாரிகளிடம் அவ்வளவாக ஆர்வம் இல்லை.

பொறுப்பேற்ற பின் சில முயற்சிகளை முறையாக மேற்கொள்கிறார். ஆறுமாத கால முயற்சிகட்குப்பின் 27.11.96 -இல் தலைமைச் செயலர்க்குக் கீழ்க்கண்டவாறு கடிதம் எழுதுகிறார்.

"*வேறுவழியில்லை என்றால் இதனை மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வரவேண்டியது தவிர்க்க முடியாததாகி விடும்*" (பக்.143).

முன்னேற்றத்தை விரிவாக ஆய்ந்து கண்காணித்துப் பார்க்கிறார். நிலைமை நிறைவு தரவில்லை. எனவே 18.11.97-இல் தலைமைச் செயலர்க்கு மீண்டும் எழுதுகிறார். (பக்.117) இத்தனைக்கும் பின் பொதுத்துறையிலிருந்து அவருக்கே ஒரு மடல் ஆங்கிலத்தில் வருகிறது. இது குறித்து மீண்டும் 10.12.97-இல் தலைமைச் செயலர்க்கு எழுதுகிறார். (பக்.117)

போக்குவரத்துத்துறையில் 1.4.97 முதல் 31.12.97 முடிய உள்ள 9 மாத காலத்தில் வெளியிடப்பட்ட அரசாணைகள் 563. இதில் தமிழில் வெளியிடப்பட்ட அரசாணை ஒன்றே ஒன்றுதான். இந்த நிலையில் முதல்வர் பார்வைக்குக் கீழ்க்கண்டவாறு ஒரு குறிப்பை வைக்கிறார்"

*மாண்புமிகு முதல்வர் அவர்கள் பார்வைக்கும் முடிவுக்கும். (பக்.118):*

1. *தமிழ் வளர்ச்சித் துறையின் வேண்டுகோளுக்கு எந்த மதிப்பும் இல்லை*
2. *தாங்கள் வெளியிடும் அரசாணைகளைத் தமிழில் பிறப்பிக்க முன் வராத துறைகளின் மீது என்ன நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று மாண்புமிகு முதல்வர் அவர்கள்தான் முடிவு செய்யவேண்டும்.*
3. *தங்கள் வழிகாட்டுதலுக்குக் காத்திருக்கிறது - தமிழ் வளர்ச்சித்துறை. பணிவுடன் படைக்கும்,*

மு. தமிழ்க்குடிமகன்

இந்த முயற்சிகளின் விளைவுகளைக் கவனித்துவிட்டு, முன்னேற்றம் அவருக்குத் திருப்தி தருவதாக இன்மையால் தலைமைச் செயலருக்கு 20.7.1998-இல் ஒரு கடிதம் எழுதுகிறார். இந்தக் கடிதத்தில்தான் நடவடிக்கை எடுப்பது பற்றிக் குறிப்பிடுகிறார் (பக்.119).

"*. . . . இது குறித்துக் கடும் நடவடிக்கை எடுத்தாலன்றி நிலைமை மாறப் போவதில்லை என்றே கருதுகிறேன். தமிழக அரசு தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தை முழுமையாகச் செயற்படுத்தவில்லை என்று வெளியில் ஆர்ப்பாட்டங்கள் நடைபெறுகின்றன. 31 தமிழ் அமைப்புகள் கூடி ஒரு பேரணியும் நடத்தி உள்ளன. . . . .* (பக்.119).

. . . . . . எனவே இந்நிலை குறித்து அனைத்துத் துறைச் செயலாளர்கட்கும் நானே ஒரு கடிதம் எழுதியுள்ளேன். தாங்களும் ஒரு சுற்றறிக்கை வாயிலாக இதை வற்புறுத்துமாறு வேண்டுகிறேன்." (பக்.119)

மந்த 'கதியில்' ஆட்சிமொழி இயக்கம் தொடர்கிறது. தலைமைச் செயலகம் தான் ஆணைகளின் பிறப்பிடம். அங்கு துறை தோறும் பிறக்கப்படும் ஆணைகள் தமிழில் அமையுமாயின், படிப்படியாக கீழ்மட்டங்களில் தமிழாக்கம் இயல்பாகவே அமைந்துவிடும். எனவே, தலைமைச் செயலகத்துறைதோறும் பிறப்பிக்கப்படும் ஆணைகளைப் பார்த்து, தேவைக்கேற்பத் துறைச் செயலருக்கு மடல் எழுத ஏற்பாடு செய்கிறார்.

ஆணைகளின் பிறப்பிடம் தலைமைச் செயலகம் என்றால் அவை உருவாவது கோப்புகளில் தான். எனவே கோப்புகளில் குறிப்புகள், பரிந்துரைகள் ஆகியன தமிழில் இருந்தால், அவற்றின் அடிப்படையில் அமையும் ஆணைகள் தமிழில் அமைவது இயற்கையாகவே நடந்துவிடும். எனவே கோப்புகளில் தமிழ் எந்த அளவிற்கு இடம் பெறுகிறது என்பதைப் பார்வையிடத் தொடங்குகிறார். இங்கு ஒரு முக்கியமான சிக்கல் இருக்கிறது. அது பின்வருமாறு:

"தமிழ் நாட்டுக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் இ.ஆ.ப. அலுவலர்கள் 332 பேர். இதில் 2003-இல் உள்ள நிலவரப்படி தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள் 193 பேர்."

மேலே குறிப்பிட்டவர்களில் பிற மாநிலங்களைச் சேர்ந்தவர்கள் தமிழைத் தாய் மொழியாகக் கொள்ளாதவர்களில் பலர் என்று கூறாவிட்டாலும் சிலர் கோப்புகளில் ஆங்கிலத்தையே பயன்படுத்துகின்றனர். இந்தப் பட்டியலில் தமிழ் அலுவலர்கள் சிலரும் உண்டு. கலைஞர் பின்வருமாறு ஒரு கோப்பில் எழுதினார்.

"*கோப்புகள் இன்னும் ஆங்கிலத்திலேயே வருவதை நிறுத்தலாமே*" (பக்.149)

இந்தக் குறிப்பைத் தலைமைச் செயலாளர் அனைத்துத் துறைச் செயலாளர்க்கும் சுற்றாணைக் குறிப்பாக அனுப்பியுள்ளார். தலைமைச் செயலர் இந்தச் சுற்றறிக்கைக் குறிப்பை ஆங்கிலத்தில் தான் எழுதியுள்ளார். எனினும் கோப்புகளில் பயன்படுத்தப்படும் மொழியையும் இயன்ற அளவில் தமிழ்ப்படுத்த முயற்சி மேற்கொள்கிறார்.

கோப்புகளில் குறிப்பு எழுதுபவர்கள், அரசாணைகளின் வரைவைத் தயாரிப்பவர்கள், ஆணைக்கு ஒப்புதல் வழங்குபவர்கள் அனைவரும் தமிழில் கையெழுத்திட்டாகவேண்டும் என்று 21.6.78-இலேயே டாக்டர் எம்.ஜி.ஆர். முதல்வராக இருந்தபொழுதே எண்.1134 நாள் 21.6.1978 ஆணை பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஆணை என்னவோ ஆங்கிலத்தில்தான் பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. (பக்.152)

"....the Governor of Tamil Nadu herby directs that with effect on and from the 21st June 1978 all Government servents working under the administrative control of the Government of Tamil Nadu shall sign their names only in Tamil. ...." (பக்.152)

இந்த ஆணை அவ்வளவாகச் செயல்படுத்தப்படவில்லை என்பதை உணர்ந்த முனைவர் தமிழ்க்குடிமகன் இதைக் கண்காணித்து முதல்வர் பார்வைக்குக்கொண்டு செல்கிறார். இன்னொரு இடத்தில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

> "*நடவடிக்கை எடுப்போம் என இவ்வளவு கடுமையாக இருந்தும் எச்சரிக்கை செய்தும் பல அரசு ஊழியர்கள் செவிசாய்க்கவில்லை*" (பக்.153)

தமிழில் கையொப்பமிட வேண்டும் என்ற ஆணையைச் செயல்படுத்தப் பெரிதும் முயன்றுள்ளார். ஆணை எதுவாயினும் தட்டச்சுச் செய்துதான் வெளியிட வேண்டும். தமிழில் போதுமான அளவில் தட்டச்சுகள் இல்லை என்பது ஒரு காரணமாகக் கூறப்படுகிறது. எனவே போதுமான அளவில் தமிழ்த் தட்டச்சுப் பொறி வாங்க ஏற்பாடு செய்கிறார். 32 மின் அணு தட்டச்சு; கூடவே 500 தமிழ்த் தட்டச்சுகளை ரூ.50 இலட்சம் செலவில் 1996-97 -இல் வாங்கிக் கொடுக்கிறார். மீண்டும் 1997-98 வரவு செலவுத் திட்டத்தில் ரூ.40இலட்சம் ஒதுக்கீடு பெற்று மேலும் 500 தட்டச்சுகளை வாங்குகிறார். ஆனால் இவற்றைப் பட்டுவாடா செய்வதற்கே பெரு முயற்சி தேவைப்பட்டிருக்கிறது. பல துறைகள் தட்டச்சுகளைப் பெறுவதற்கு ஆர்வம்காட்டவில்லை. இறுதியாக 13.5.1996-இல் 872 ஆங்கிலத் தட்டச்சுகள் 304 தமிழ்த் தட்டச்சுகள் என்றருந்தநிலைமை 12.12.97-இல் 510 ஆங்கிலத் தட்டச்சுகள் 666 தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் எனமாறியது. இதற்குக் கூட "அயராத உழைப்பும், அதட்டலும், அடிக்கடி நினைவூட்டலும்" தேவைப்பட்டன என்கிறார் ஆசிரியர். ஏறத்தாழ ரூ.1 கோடி செலவில் புதிதாகவும், ஆங்கில விசைப்பலகைகளை மொழி மாற்றம்செய்தும் 1000க்குக் கூடுதலான தட்டச்சுப் பொறிகளைச் சேர்த்து வைத்து ஒவ்வொரு அலுவலகத்திற்கும் தமிழ் 75 விழுக்காடு, ஆங்கிலம் 25 விழுக்காடு என அரசு வழங்கியிருக்கிறது. அலுவலகங்கள் இவற்றைப் பெற்றுக் கொண்டு பயன்படுத்தவேண்டுமெனப் பல சுற்றறிக்கைகட்குப்பின் 17.11.97-இல் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் தலைமைச் செயலர்க்கு எழுதுகிறார். (பக்.183) செயலர் கைப்பட, அமைச்சர் கைப்பட எழுதிய பல கடிதங்கள், பல நினைவூட்டல்கட்குப்பின், அக்டோபர் 1998-இல் கண்ட நிலவரப்படி 51 துறைத் தலைமை அலுவலகங்களில் 133 தட்டச்சுப் பொறிகள் எடுத்துக் கொள்ளப்படவில்லை (பக்.183). ஏறத்தாழ ஒருகோடி ரூபாய் செலவு செய்து, 1000 தட்டச்சுகள் வாங்கி அவற்றை அரசுத்துறைகட்கு ஒதுக்கீடு செய்தபின் அவற்றை அந்தந்தத் துறையினர் பெற்றுக் கொள்வதற்கு இவ்வளவு தாமதம்: இத்தனை, நினைவூட்டல் கடிதங்கள் தேவைப்படுகிறது என்றால் அரசு இயந்திரத்தின் வேகத்தைப் புரிந்து கொள்ளலாம். இந்த நாட்டின் ஏழ்மை ஒழிப்பு, எழுத்தறிவின்மையைப் போக்குதல் போன்ற மகத்தான பணிகட்கு நாம் இந்த இயந்திரத்தை நம்பிக் கொண்டிருக்கிறோம். நாம் விடுதலைபெற்று, அரை

நூற்றாண்டு தாண்டியும் ஏழ்மையும் ஒழிய வில்லை. எழுத்தறிவின்மையும் போகவில்லை. இதில் ஆச்சரியப்படுவதற்கு எதுவுமில்லை.

அடுத்து அரசின் மடல் போக்குவரத்துக்கு வருகிறார். 1963-இலேயே தமிழாக்கத்தில் முதல் கட்டமாக பொதுமக்களிடமிருந்து வரும் கடிதங்கட்குப் பதில் தமிழில் எழுவேண்டும். மக்கட்கும், துறைத்தலைமை அலுவலர்கட்கும் எழுதும் மடல்கள் தமிழில் இருக்கவேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது. இது அரசின் திட்டத்தின் மூன்றாம் நிலை, (பக்.189). ஆனால் இதுவும்உறுதியுடன் கடைப்பிடிக்கப்படவில்லை.

சென்னையிலுள்ள நகராட்சி மேலாண்மை இயக்குநர் அலுவலகத்தில் ஆய்வு செய்த போது கண்ட உண்மை பின்வருமாறு: ஆய்வுக்கு முந்தைய அரை ஆண்டில் இவ்வலுவலகத்திலிருந்து அனுப்பப்பட்ட 39,569 மடல்களில் 22,985 மடல்கள் ஆங்கிலத்தில் உள்ளன", (பக்.188) மேலே குறிப்பிட்ட மூன்றாவது நிலை ஆணைக்கு 34 ஆண்டுகள் கழித்து நிலைமை இவ்வாறிருந்திருக்கிறது.

ஒரு பணியின்பயன்பாட்டில் முக்கியமான மாற்றம் வரும்பொழுது அதைச் செயல்படுத்த அதில் சம்பந்தப்பட்டவர்கட்குப் பயிற்சி தேவை. ஜூலை 1996-இல் தொடங்கி, அக்டோபர் 31, 2000 வரை 34 கருத்தரங்குகள் மாவட்டங்களில் அரசால் நடத்தப்பட்டுள்ளன. சில தன்னார்வ நிறுவனங்களும் கருத்தரங்குகள் நடத்தியுள்ளன (பக்.201, 203).

கருத்தரங்குகள் தவிர, தமிழ் பயிற்சிமொழி, ஆட்சிமொழி மாநாடு என நான்கு பெரிய மாநாடுகள் நடத்தி உள்ளனர். கருத்தரங்குகளின் நிகழ்ச்சிகள் மாநாடுகளின் நிகழ்ச்சிகள் இந்நூலில் விரிவாகத்தரப்பட்டுள்ளன. நிகழ்ச்சிகள் செய்தித் தாள்களிலும் விரிவாக வெளியிடப்பட்டுள்ளன. கருத்தரங்குகள் மாநாடுகள் அனைத்திலும் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள் பங்குகொண்டு உரையாற்றி இருக்கிறார். 23.10.98-இல் திண்டுக்கல்லில் நடந்த கருத்தரங்கில் கீழ்க்கண்ட தகவலைத் தருகிறார்:

> *"கடந்த 40 ஆண்டுகளில் 25 சதம்தான் தமிழ் தலைமைச் செயலகத்தில் புக ஆரம்பித்திருக்கிறது. இன்னும் 75 சதம் இருக்கிறது. ஆக 120 ஆண்டு ஆகும் போல் இருக்கிறது"* (பக்.244)

மாவட்டங்களில் நடக்கும் கருத்தரங்குகளால் பல நல்ல மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. தமிழ் உணர்வு ஆங்காங்கு ஏற்பட்டுள்ளது. நெல்லை மாவட்ட ஆட்சியர் கி. தனவேல் ஹைகிரவுண்ட், ஜங்ஷன் என எழுதப்பட்டிருந்தவற்றை 'மேட்டுத்திடல்' 'சந்திப்பு' என மாற்றியுள்ளார். இக்கருத்தரங்குகளில் நாடாளுமன்ற உறுப்பினர்கள், சட்டமன்ற உறுப்பினர்கள், அமைச்சர் பெருமக்கள் அவ்வளவாக ஆர்வம் காட்டவில்லை (பக்.250).

அடுத்ததாகப் பேசப்படுவது மாவட்ட ஆட்சியர் அலுவலக ஆய்வு. ஆட்சி மொழிக் கருத்தரங்கிற்கு முன் அந்தக் கருத்தரங்கு நடக்கின்ற மாவட்டத்தில் ஆட்சியர் அலுவலகம் ஆய்வு செய்யப்படும். ஆய்வின் முடிவுகள் கருத்தரங்கில் விவாதிக்கப்படும். அமைச்சரே ஆய்வு செய்த மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களும் உண்டு. ஒரு குறிப்பிட்ட ஆண்டில் மாத வாரியாக:

1. ஆங்கிலமும் தமிழும்
2. தமிழ் மட்டும்
3. தமிழில் விழுக்காடு

எனப் பட்டியலிட்டு ஆய்வறிக்கை தயார் செய்து விவாதிக்கப்பட்டுள்ளன. 1996-இல் மதுரை மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் ஜனவரி முதல் ஏப்ரல் வரை 90 சதவிகிதம் தமிழ் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

> "*இவ்வறிக்கைகளின் காரணமாக ஒவ்வொரு மாவட்ட ஆட்சியர் அலுவலகமும் ஆட்சி மொழிச் செயலாக்கத்தில் கூடுதலான கவனம் செலுத்தத் தொடங்கியது*" (பக்.280)

அலுவலக ஆய்வில் கடிதப் போக்குவரத்தும் ஆய்வு செய்யப்படுகிறது. 21.6.2000 அன்று மதுரை மாவட்ட ஆட்சி மொழிக்கருத்தரங்கு, அதற்கு முன்னதாகவே மதுரை மாவட்ட ஆய்வு நடத்தப்பட்டு அறிக்கையும் தரப்படுகிறது.

கி.பி.2000-த்தில் ஐந்து மாதங்களில் 3456 பக்கங்கள் தமிழில் தட்டச்சுச் செய்யப்பட்டுள்ளன, என்றால் 3050 பக்கங்கள் ஆங்கிலத்தில் தட்டச்சுச் செய்யப்பட்டுள்ளன. 1996 தொடக்கத்தில் செய்யப்பட்ட ஆய்வில் 90% வரை 'தமிழ் ஆட்சிமொழி' செயலாக்கப்பட்டது போல் தோன்றியது. ஆனால் 2000-த்தில் பார்த்ததில் 70% தேறுமா என்பது ஐயமே? (பக்.288)

மற்றபடி அலுவலகங்களின் பல ஆவணங்களும் தமிழில் உள்ளனவா என்பதும் ஆய்வு செய்யப்படுகிறது. சார்நிலை அலுவலகங்களும் ஆய்வு செய்யப்படுகின்றன. தமிழ் ஆட்சிமொழி பண்பாட்டுத்துறையின் நடவடிக்கை பற்றிய பரவலான கருத்தைக் கீழ்க்காணும் தினமலர் செய்தி பிரதி பலிக்கிறது.

> *அரசு அலுவலகங்களில் அதிரடி: எதிலும் தமிழ் புகுத்த அதிகாரிகட்குக் கிடுக்கிப்பிடி: உடனுக்குடன் ஆய்வு செய்யக்கூடும் உத்தரவு* (தினமலர் 13.12.98) (பக்.313).

அரசுத் துறைகளில் நிதித் துறைக்கு ஒரு தனிமுக்கியத்துவம் உண்டு. ஏதோ தாங்கள் சொந்தமாக நிதிவழங்குவது போன்று நடந்துகொள்வார்கள். தலைமைச் செயலகத்தில் நிதித்துறை முதன் முதலாகத் தமிழில் ஆணை வெளியிட்டதை ஏதோ ஒரு வரலாற்று நிகழ்ச்சி போன்று குறிப்பிடுகிறார் ஆசிரியர். சிவகங்கை மாவட்டத்தில் ஓர் அலுவலகத்தில் இருந்து ஒருவர் தமிழில்

பட்டியல் அனுப்பினால் ஏற்பதில்லை என்றும் திருப்பிவிட்டு விடுகிறார் என்றும் செய்தி வந்ததை அறிந்த முனைவர் தமிழ்க்குடிமகன் உடனே நடவடிக்கை எடுத்தார் (பக்.317) சில தடங்கல்கட்கும், தாமதத்திற்கும் பின் கருவூலங்களில் சம்பளப்பட்டியல் தமிழில் அனுமதிக்கப்படும் நிலை மாவட்டம் முழுவதும் வந்தது.

அலுவலக ஆய்வைப் பொருத்தவரை, ஒவ்வோர் உதவி இயக்குநரும் ஒரு நாளைக்கு இரண்டு, மூன்று அலுவலகங்களை ஆய்வு செய்கிறார். இப்பணியின் பரிமாணத்தை மதிப்பிட ஒரு புள்ளி விபரம் போதும். 1.4.99 முதல் 31.3.2000 முடிய ஒரு நிதியாண்டில் ஆய்வுமேற்கொள்ளப்பட்ட அலுவலகங்கள் 10288 ஆகும், (பக்.322) ஒவ்வொரு அலுவலகத்திலும் உள்ள பலவகையான பதிவேடுகள், மேலும் கடிதப் போக்குவரத்து, வருகைப் பதிவேடு, ரப்பர் முத்திரைகள், பணிப்பதிவேடுகள், தட்டச்சுப் பொறிகள், காலமுறை அறிக்கை, கலந்துரையாடல் குறிப்புரை என அனைத்தும் ஒவ்வொரு அலுவலகத்திலும் ஆய்வு செய்யப்படுகின்றன.

ஆய்வுகள் குறிப்பிட்ட தேதிகளில் செய்வது மட்டுமின்றி, முன் அறிவிப்பு இன்றிப் பறக்கும்படை ஆய்வுகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கத்தின் பறக்கும்படை செயல்பாடுகள் பற்றிய செய்தித் தாள்களின் எதிரொலிக்கு ஒரு சான்று கீழே தரப்படுகிறது.

*எங்கும் தமிழ் எதிலும் தமிழ் கொள்கையை அமுல்படுத்த அரசு அலுவலகங்களில் அதிரடி* சோதனை, (கதிரவன் இதழ் 23.12.2000) (பக்.342)

நீண்ட கால இடைவெளிக்குப்பின் தலைமைச் செயலகம் ஆய்வுக்கு வருகிறது. அமைச்சரின் கூற்று பின்வருமாறு.

நான் பங்கு கொண்ட ஆட்சிமொழிக் கருத்தரங்குகளில் பலரும் தலைமைச் செயலகத்தைத் திருத்துங்கள் என்று வேண்டுகோள் வைத்த பிறகுதான் தலைமைச் செயலகத்தில் கை வைத்தோம் (பக்.348).

இதற்கு முன்பு 31.10.1986 -இல் தான் அப்பொழுது வெளியிடப்பட்ட 371-ஆம் எண்ணுள்ள அரசாணையின்படி தலைமைச் செயலகத்தில் ஆட்சி மொழிச் செயலாக்கம் கொண்டு வரப்பட்டது. சட்டம் நிறைவேறி 30 ஆண்டுகழிந்த பின்புதான் "ஆட்சி மொழித் தமிழ்" தலைமைச் செயலகத்துக்குள் வரலாம் என ஆணைபிறப்பிக்க வேண்டிய நிலை (பக்.349). 1988-இல் தலைமைச் செயலகத்தை ஆய்வு செய்திட வழிவகைகள் செய்யப்பட்டுள்ளன. ஆனால் எதுவும் நடைபெறவில்லை.

*ஆட்சி மொழிச் சட்டம் வெளி வந்த காலத்தில் இருந்து கடந்த 43 ஆண்டுகளாகத் தலைமைச் செயலகத்தில் ஆய்வுகள் மேற்கொள்ளப்படவில்லை. ஆனால் திமுக.*

*ஆட்சியில் முதல் முறையாக 1999-இல் தலைமைச் செயலகத்தில் உள்ள 31 துறைச் செயலாளர் அலுவலகங்களும் ஆய்வு செய்யப்பட்டன.* (பக்.349)

முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்கள் பொறுப்பேற்ற பின் இருமுறை எல்லாத் துறைகளும் ஆய்வு செய்யப்பட்டுள்ளன. இது உண்மையிலேயே ஒரு சாதனைதான். ஆய்வின் முடிவில் ஒவ்வொரு துறை அமைச்சருக்கும், செயலருக்கும் விரிவான ஓர் அறிக்கை தரப்படுகிறது. சான்றுக்காக வருவாய்த்துறை ஆய்வு பற்றிய நீண்ட அறிக்கையில் இருந்து சில தகவல்கள்

1. ஆய்வு செய்த நாள் 4.2.2000
2. அறிக்கை தரப்பட்ட நாள் 8.2.2000 (அமைச்சருக்கும் செயலருக்கும்)
3. வருகைப் பதிவேட்டில் 237பேர்களில் 65 பேர் மட்டுமே தமிழில் ஒப்பமிடுகிறார்கள்
4. 34 நாட்களில் வெளியிடப்பட்ட அரசு ஆணைகளில் தமிழில் 65-ம், ஆங்கிலத்தில் 96-ம் உள்ளன. துறையில் போதுமான தமிழ்ச் செயலாக்கம் இல்லை என்பது புரிந்துவிடுகிறது.
5. 1999-இல் 971 ஆணைகள் தமிழில் என்றால் 1473 ஆணைகள் ஆங்கிலத்தில் 2000-இல் 73- ஆணைகள் தமிழில் என்றால் 116 ஆங்கிலத்தில்.
6. கடிதப்போக்குவரத்தில் மட்டும் இத்துறையில் முன்னேற்றம் காணப்படுகிறது. ஏழை உழவர்களில் இருந்து கிராம நல அலுவலர் வரை இத்துறைக்குத் தொடர்பு உள்ளவர்கள் எனும் முறையில் 1,38,426 மடல்கள் தமிழில்; 36,092 மடல்கள் ஆங்கிலத்தில்

அறிக்கை மேலும் தொடர்கிறது.

ஒவ்வொரு அமைச்சகத்திலும் மடல்களைத் துல்லியமாகக் கடைசி எண்வரை பொறுமையாக எண்ணி தமிழில் எத்தனை, ஆங்கிலத்தில் எத்தனை என்று தோராயமாகச் சொல்லாமல் துல்லியமாகக் கொடுத்திருப்பது நம்மை மலைக்க வைக்கிறது. இதைப் போன்று பக்கத்திற்குப் பக்கம் புள்ளிவிபரங்கள். ஓர் இமாலயச் சாதனை. இவ்வளவு தகவலும் இவரிடம் எப்படி இருக்கிறது? அல்லது அமைச்சராக இல்லாத காலத்தில் இன்று எப்படித் திரட்டமுடிந்தது? அல்லது அமைச்சராக இருந்த பொழுதே எழுதத் தொடங்கிவிட்டாரோ? - தெரியவில்லை.

தமிழ்ப்பயன்பாட்டில் இருக்கும் தேக்கத்திற்கு உயர்மட்ட அதிகாரிகளைப் பொருத்தவரை அவர்களின் ஈடுபாடின்மையும் காரணமாக இருக்கலாம்; இயலாமையும் காரணமாக இருக்கலாம். ஏனெனில் I.A.S., I.P.S., I.F.S., அதிகாரிகளில் தமிழ் தவிர்த்த மற்ற இந்தியமொழிகளைத் தாய்மொழியாகக் கொண்டவர்களும் இருக்கின்றனர். இவர்களில் பலருடைய தமிழ்ப்பயிற்சி

போதுமானதாக இல்லாதது ஒரு தடையாக இருக்கலாம். எனவே தகுதிகாண் பருவத்தை நிறைவு செய்வதற்கு முன் எழுத வேண்டிய தமிழ் மொழித் தேர்வின் தரத்தை உயர்த்துவதற்குப் பாடப் புத்தகம்போல் அமையுமாறு எழுதப்பட்ட 'ஆட்சித் தமிழ்' ஓர் அருமையான பங்களிப்பு. இப்பொழுது எழுதும் முன்னுரைக்காக நான் 'ஆட்சித் தமிழ்' என்ற நூலை முழுமையாகப் படித்தேன். உண்மையிலேயே பயனடைந்தேன். இந்நூல் தகுதிகாண் தேர்வுக்கான பாடப்புத்தமாக இன்றும் நடைமுறைப்படுத்தப்படவில்லை எனத் தெரிகிறது.

இயல் 30 தமிழ் வளர்ச்சி மன்றம் பற்றிப் பேசுகிறது. இது ஒரு பயனுள்ள பிரிவு. வணிக விளம்பரங்கள், மழலையர் கல்வி, வாகனங்களில் தமிழ் எனப் பொதுவான தமிழ்ப் பயன்பாடு மற்றும் எழுத்துச் சீரமைப்பு ஆகியன பற்றி இம் மன்றத்தில் விவாதிக்கப்பட்டது. அரசுக்கு ஆலோசனை கூறவும், அரசின் நிலையை அமைச்சர் எடுத்துரைக்கவும் இந்த மன்றம் பயன்பட்டது. இங்கு விவாதிக்கப்பட்ட தலைப்புகளில் எழுத்துச் சீரமைப்பும் ஒன்று. நாவலர் நெடுஞ்செழியன் அவர்களின் ஈடுபாடு காரணமாக அ.தி.மு.க. ஆட்சியில் என் தலைமையில் எழுத்துச் சீரமைப்புக்குழு அமைக்கப்பட்டது. இதன் அறிக்கை தி.மு.க. அரசுக்குச் சமர்ப்பிக்கப்பட்டது. அந்த அறிக்கையின் அடிப்படையில் இத் தலைப்பு விவாதத்திற்கு வந்தது. இலங்கை, மலேசியா, தழுவிய தமிழ் அறிஞர்களின் பரவலான கருத்தறிந்து இச்சீர்திருத்தத்தைச் செய்யலாம் என முடிவு செய்யப்பட்டது. அதற்கு மேல் முயற்சி தொடரவில்லை. பெரியார் செய்த பரிந்துரையின் ஒரு பகுதியை அவர் நூற்றாண்டின் பொழுது செயல்படுத்தி டாக்டர் எம்.ஜி.ஆர். இறவா வரம் தேடிக்கொண்டார். மீதமிருப்பதில் முக்கியமானது உயிர் மெய் உகரம் உயிர்மெய் ஊகாரம் என மொத்தம் 36 எழுத்துகட்குப் பதிலாக இரண்டு குறியீடுகள் போதும் என்ற சீரமைப்புத் தான். இன்றில்லாவிட்டால் நாளை இம்மாற்றம் வந்தே தீரும். முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்கள் தமிழ்மொழித் துறை அமைச்சராக இருந்த காலத்தில், இந்த மாற்றத்தைச் செய்து அழியாப் புகழைத் தமிழறிந்த கலைஞர் பெற்றிருக்கலாம். ஆனால் நடக்கவில்லை. தக்கவர் தக்கது பெறுவது இயற்கை. தக்கவர் தக்கது பெறுவதைத் தவறவிடுவதும் இயற்கைதான் போலும். இந்த அரிய வாய்ப்பு யாருக்காகக் காத்திருக்கிறதோ?

முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்களின் தமிழாக்க முயற்சியில் விரைவு இருந்தது; விறுவிறுப்பு இருந்தது; தீவிரம் இருந்தது. இவற்றுடன் கண்டிப்பும் இருந்தது. அதையும் கடந்து சற்றுக் கடுமை இருப்பது போன்ற தோற்றமும் இருந்தது. செய்தித் தாள்களின் தலைப்புகள் உரத்துப் பேசுகின்றன.

> *அரசாணையை மீறிய குற்றத்திற்கு ஆளாகாதீர்: தமிழில் ஆணை பிறப்பிக்காவிடில் அதிகாரிகள் மீது நடவடிக்கை, அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை*
> (தினகரன் 1.12.96)

அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுத்தால் அரசு அலுவலகங்களில் தமிழ் ஆட்சி மொழி ஆகிவிடும் - தமிழ்க்குடிமகன் பேட்டி *(தினத்தந்தி 1.12.96)*

ஆங்கிலத்தில் குறிப்பு எழுதும் அதிகாரிகள்: தமிழ்க்குடிமகன் கோபம் - *(தினமலர் 27.4.97)*

அதிகாரிகள் தமிழைப் பயன்படுத்தாவிட்டால் தலைமைச் செயலகத்தில் உள்ள ஆங்கிலத் தட்டச்சு எந்திரங்களை அள்ளிச் செல்வேன் - அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை *(கதிரவன் 28.4.97)*

ஆங்கிலத்தில் குறிப்பு எழுதும் அதிகாரிகள் மீது நடவடிக்கை: அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை. *(தினத்தந்தி 30.6.98)*

தட்டு, குட்டு - தமிழ்க்குடிமகன் மிரட்டல் *(தினமலர் 10.7.99)*

மன்னிப்புக்கேட்டால் விட்டுவிடுவார் என்ற மதமதப்பு: தமிழில் எழுதாத அதிகாரிக்கு இனிக் கடும் தண்டனை - அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை, *(தினகரன் 28.10.99)*

அவ்வளவு உத்தரவும் இனித் தமிழில்தான், அரசு அதிகாரிகட்கு 6 மாத கெடு. சட்ட சபையில் தமிழ்க்குடிமகன் அறிவிப்பு. *(தினமலர் 26.4.2000)*

முனைவர் தமிழ்க்குடிமகனின் இந்த எச்சரிக்கை, மிரட்டல் போன்றன அதிகாரிகளைச் சற்று அதிர வைத்திருக்கும் என்பது ஒருபுறமிருக்க தமிழக முதல்வர் கலைஞரையும் சற்றுச் சஞ்சலப்பட வைத்திருக்கிறது. அவர்களிடையே நடந்த உரையாடல் இதைவிளக்கும்

". . . முதல்வர் அடுக்கி வைக்கப்பட்டிருந்த செய்தித்தாள்களை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டு என்னிடம் கேட்டார்

"என்ன புலவர்! அரசு அலுவலர்களை இப்படி மிரட்டியிருக்கிறீர்களே?" என்றார்

* * *

நானும் விளக்கம் சொல்லிவிட்டுச் சொன்னேன். நான் எவ்வளவோ கடும் முயற்சி எடுத்தும் அரசாணைகளைச் சுட்டிக்காட்டியும், சில அரசு அலுவலர்கள் இன்னும் ஆங்கிலத்தை விட்டு மாறவேயில்லை. அப்படிப் பட்டவர்களை மிரட்டாமல் என்ன செய்வது? அவர்களை எப்படித்திருத்துவது?" என்று கேட்டேன்.

"எல்லாம் காலப்போக்கில் சரியாகி விடும். ஆனால் அரசு ஊழியர்களை இப்படியெல்லாம் மிரட்டக் கூடாது. அவர்களில் பலர் வருத்தப் படவேண்டிவரும். அது நமது ஆட்சிக்கு நல்லதா?" என்று கேட்டார்.

அரசு ஊழியர்களை அரவணைத்துச் செல்லவேண்டும் என்பது முதல்வர் கருத்து. அதட்டலும், மிரட்டலும், ஒரு மட்டத்தில்: அரவணைப்புச் சற்று உயர் மட்டத்தில் என்ற இணைப்பும் நடைமுறைக்கு ஏற்றதாகவே தோன்றுகிறது. முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்கள் தூய தமிழ்பற்றி ஆங்காங்கு வலியுறுத்துகிறார். அவரளவில் தூய தமிழில் எழுதும் முயற்சியை மேற்கொண்டிருக்கிறார். தூய தமிழ் என்ற சொற்றொடர் எல்லோருக்கும் புரிகிறது. எனினும் அது துல்லியமாக வரையறுக்கப்படாத ஒன்று. தேவையற்ற பிற மொழிச் சொற்களைத் தவிர்ப்பது என்ற அளவில் தூய தமிழ் ஏற்புடையதுதான். ஆனால் பிறமொழிச் சொற்களே இல்லாத தமிழ் என்பது நடைமுறைக்கு ஏற்றதன்று. நாள்தோறும் வளரும், பரந்து விரிந்திருக்கும் கல்வி உலகில் பிற மொழிச் சொற்களைக் கடன் பெறாத மொழி எதுவும் இல்லை. எனவே ஆட்சிமொழி என்று வரும் பொழுது பொதுவாக ஆட்சித் தமிழ் என்பது அடிப்படையில் அறிஞர்கள் ஏற்கும் தமிழாக இருக்கவேண்டும். ஆனும் கட்சிக்கேற்ப மாறுவதாகவோ, அமைச்சருக்கேற்ப மாறுவதாகவோ இருக்க இயலாது. சுருக்கமாகக் கூறுவதானால் ஆட்சிமொழி பற்றிய அணுகுமுறையில் தமிழ் வழக்கில் இறுக்கம் பயன்படாது. சற்று இளக்கம் தேவை.

பொதுவாகத் தமிழைத் தாய்மொழியாகக் கொள்ளாத அலுவலர்களில்கூட ஒரு சிலர் தவிர மற்றவர்கள் ஆங்கிலம் இருந்த இடத்தில் தமிழ் ஆட்சி மொழியாவதை ஏற்பவர்களாகவே இருப்பதாக ஆசிரியர் கூறுகிறார். அது சரியான மதிப்பீடு என்றே கருதுகிறோம். அப்படியாயின் கொள்கை அறிவிக்கப்பட்டு அரை நூற்றாண்டை எட்டும் நிலையிலும் இந்த மாற்றம் முழுமையடையாத நிலைமை ஏன்? இந்த மாற்றத்திற்கு இவ்வளவு தயக்கம் ஏன்? தாமதம் ஏன்? என்ற கேள்வி எழுகிறது. சராசரி மனிதன் புதிய பணிக்குத் தன்னைத் தயார் செய்து கொள்ள முன் வருபவன் அன்று. இருப்பதைத் தொடர்பவனே அன்றி இல்லாத ஒன்றை உருவாக்குவதற்கு வியர்வை சிந்துபவன் அன்று. பொதுவாக மாற்றத்திற்கு எதிர்ப்பு இல்லாத சூழ்நிலையும், அதைவிட முக்கியமாக வரவேற்பும் அமைவது குறைவு. இரண்டாவதாக ஆங்கிலம் நம்மை விட்டு அகன்றுவிடவில்லை. மைய அரசின் ஆட்சி மொழியாக இருக்கிறது. இந்திய மக்களின் தொடர்புமொழியாக, பரவலாக அது ஆட்சி பீடத்திலேயே அமர்ந்திருக்கிறது. அனைத்துப் பல்கலைக் கழகங்களிலும் பொறியியல், மருத்துவம், வேளாண்மை, வணிகம் போன்ற தொழில் நுட்பத்துறைகள் அனைத்திலும் பயிற்று மொழியாக இருக்கிறது. *ஆங்கிலத்தில் கல்வி கற்றவர்களை வைத்துத்தான் நாம் தமிழில் ஆட்சி நடத்த முயல்கிறோம்.* இவையனைத்தினும் மேலாக வள்ளுவர், "வினைத்திட்டம் என்பது ஒருவர் மனத்திட்பம்" என்று கூறுவார். தமிழை ஆட்சிமொழி ஆக்குவதில் நம்மிடையே ஆங்கிலத்தில் 'strong will' என்று கூறப்படும் மனத்திட்பம் இல்லை. தமிழக அமைச்சர்கள் அனைவரும் தமிழ் ஆட்சி மொழியாவதை முழுமனத்துடன் கொள்கையளவில் ஏற்றவர்கள்: தமிழ் ஆட்சி மொழியாக வேண்டுமென்பதில் ஈடுபாடும், ஆர்வமும் உடையவர்கள் தாம் என்றாலும் அவர்களில் பெரும்பாலோர் முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்களின் வேகம், விறுவிறுப்பு, அவசரம், கண்டிப்பு, குறிப்பாக மொழித்தூய்மை ஆகியவற்றில்

முழுமையாக ஒத்தகருத்துடையவர்களாக இருந்திருப்பார்கள் என்று எண்ண இயலவில்லை. அப்படி முழுமையாக ஒத்த கருத்துடையவர்களாக இருந்திருந்தால் தலைமைச் செயலகத்தில் செயலர்கட்கும், அமைச்சர்கட்கும் முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்கள் இத்தனை நேர்முகக் கடிதங்கள் எழுத வேண்டிய தேவை எழுந்திருக்காது.

மைய அரசின் ஆட்சிமொழி என்ற ஆங்கிலத்தின் செல்வாக்கு, கல்வியுலகில் ஆங்கிலத்தின் ஆதிக்கம், அரசு அலுவலர்களின் மெத்தனம், மாற்றத்தை ஏற்பதற்கு இருக்கும் இயற்கையான தயக்கம், அமைச்சர் பெருமக்களின் அவசரமின்மை, தூய தமிழ் பற்றிய கருத்து வேற்றுமை, எடுத்த வினையை ஈடுபாட்டோடு செய்யும் மனத்திட்பம் பொதுவாக நம்மிடம் இன்மை ஆகிய சுமைகள் அனைத்தையும் சுமந்துகொண்டு, கலைஞர் ஆதரவு என்ற ஊன்று கோலுடன் தமது துறை அலுவலர்களின் ஒத்துழைப்புடன், முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்கள் "ஆட்சி மொழித் தமிழ்" என்ற சிகரத்தை நோக்கி நடை போட்டிருக்கிறார். பாராட்டத்தக்க வெற்றியும் கண்டிருக்கிறார். அந்த வெற்றிப் பயணத்தின் விரிவான சரிதை தான் இந்நூல். தமிழ் மொழியின் மேம்பாட்டின், பயன்பாட்டின், வளர்ச்சியின் வரலாற்றில் இந்த நூலுக்கு ஒரு முக்கியமான இடம் உண்டு. இந்நூலாசிரியரின் பங்களிப்பைத் தமிழுலகம் நன்றி உணர்வுடன் நினைவு கூறும்: பாராட்டும்.



# ஆட்சி செய்ய வாரீர்!

மு. தமிழ்க்குடிமகன்

நான் ஆட்சிமொழித் துறை அமைச்சராகப் பொறுப்பேற்ற உடன் பல நண்பர்கள் வாழ்த்தியும், பாராட்டியும், பலவற்றை எதிர்பார்த்தும் மடல் எழுதியிருந்தனர்.

அவர்களுள் குறிப்பிடத்தக்க சிலருடைய வாழ்த்தினை இங்கு எடுத்துக் காட்டவேண்டியுள்ளது. அவை வெறும் வாழ்த்துகள் அல்ல! வினாக்கள்! செய்வீர்களா என்று அன்று தொடுத்த வினாக்கள்!

திரு. ம. இலெனின் தங்கப்பா தமிழிலும் ஆங்கிலத்திலும் வல்லமை படைத்த பேராசிரியர். நாங்கள் இருவரும் 'தென்மொழி'யின் துணை ஆசிரியர்கள்; இந்தி எதிர்ப்பை ஒட்டிக் கடலூரில் நீதிமன்றம் ஏறியவர்கள். அவர் எழுதுகிறார்.

*இல்லை இனிக்கவலை. எங்கள் தமிழ்க்குடிமகன்*
*அல்லல் அகற்றி அரண் நிறுத்தி - நல்லுரிமை*
*தந்து தமிழைத் தலைநிமிர்த்த வேண்டுகின்றோம்*
*முந்தும் உணர்வால் முனைந்து.*

*தக்க பணியைத் தகுதியார் பெற்ற மகன்*
*மக்கள் விரும்புமொரு மாண்அமைச்சாய் - நற்றமிழ்க்கே*
*சீர்த்த வினையாற்றிச் செம்மை நலம் எய்துகென*
*வாழ்த்துகின்றேன் மீண்டும் மகிழ்ந்து*

த.வ.துறை சார்பில் வணிகச் சொற்பட்டியல் உருவாக்கப்பட்ட போது இவரும் குழு உறுப்பினர். அதன் வெற்றியை அவர் அறிவார். அவர் வினாப்படி, நற்றமிழ்க்கே சீர்த்த வினையாற்றியுள்ளேனா?

காரைக்குடி, பாவலர் மணி ஆ. பழநி 'அனிச்ச அடி' நாடகத்தால் தமிழுக்குப் பெருமை சேர்த்தவர்; அவர் எழுதுகிறார்.

"நம் வாழ்வின் உயிர்ப்பாக இருக்கும் தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சரானமை எனக்கு மிகுந்த மகிழ்ச்சியையும் நம்பிக்கையையும் தருகின்றது.

பெரும்பான்மை வலு - நிலைத்த ஆட்சி ஆகிய இவற்றைக் கொண்டு தமிழுக்கு ஆற்றவேண்டிய பணிகள் அனைத்தையும் ஆற்றி ஏற்ற வேண்டிய இடத்தில் எல்லாம் தமிழை ஏற்றி வைக்க வேண்டுகிறேன். அவ்வாறு செய்வீர்கள் என்ற நம்பிக்கையும் எனக்குண்டு.

தமிழுக்கு நான்குவகை எதிரிகள் உள்ளனர்.

1. தேசிய நீரோட்ட எதிரிகள்
2. ஆங்கில அடிமையாகி விட்ட எதிரிகள்
3. சமற்கிருத வழிப்பட்ட எதிரிகள்
4. தான் தமிழன் என்பதை மறந்து தன் இனத்துக்கும் மொழிக்கும் குழி பறிக்கும் எதிரிகள்

இவர்கள் அனைவருமே தமிழுக்கு முதன்மை கிடைப்பதை விரும்புவதில்லை. அப்படியே கிடைக்க ஒப்புக் கொண்டாலும் கலப்படத் தமிழுக்கு மட்டுமே ஆதரவு கொடுப்பார்கள்.

சுற்றிலும் நான்குவகைப்படைபோல நாற்புறத்தும் எதிரிகள். உங்கள் பணி எவ்வளவு கடினமானது என்பதை நான் அறிவேன்."

என் காலத்தில் இவர் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் ஆட்சிப் பேரவை உறுப்பினராக்கப்பட்டார். சீர்குலைவை நோக்கிச் சென்று கொண்டிருந்த அப்பல்கலைக்கழகம் என்னால் எப்படித் தூக்கி (சிலரைத் தூக்கி ) நிறுத்தப்பட்டது என்பதனை அவர் அறிவார்.

நான்கு வகை எதிரிகளை வென்றேனா? இல்லையா?

புலவர் முருகண்ணன் புதுவையில் வாழும் மூத்த பாவலர். பாவேந்தரின் இனிய நண்பர். அவர் எழுதுகிறார்.

1. *மூவேந்தர் கண்ட தமிழ் மூவாத் திறத்ததென்று*
*நாவேந்தர் கண்டபடி நாடேந்தப் - பாவேந்தர்*
*கண்ட தமிழியக்கம் காட்சிபெற வைத்திடுக!*
*தொண்டுதமிழ் வாழ்வாத் தொடர்ந்து!*

2. *தாங்குதமிழ்த் தாயிருக்கத் தாவிப்போய் ஆங்கிலத்தைத்*
*தாங்கி வழிபட்டுத் தாழ்வார்க்குப் - பாங்குதமிழ்*
*ஆட்சிமொழி காட்டி அரசுத் துறைபெங்கும்*
*காட்சிதரச் செய்க தமிழ் கண்டு.*

3. *எங்கும், எதிலும், இயங்கு தமிழ்மாட்சி*
*பொங்குணர் வூட்டிப் பொலிவேந்த - இங்குன்*
*பணிஇருக்க வேண்டும்; பயன்தமிழ் வாழ்வின்*
*அணிஇருக்க வேண்டும் அமைந்து.*

என்பணி எப்படியிருக்கவேண்டும் என்று சுட்டிக் காட்டி வாழ்த்தியபடி பணிகள் நடந்துள்ளனவா?

பழநி, பேரா. ப. காளிமுத்து மாணவராக இருந்தபோதே பறம்புக்குடி உ.த.க. மாநாட்டில் பங்குபெற்றவர். இவர் எழுதுகிறார்.

"தங்கள் காலத்தில், தமிழுக்கு என்ன செய்ய வேண்டுமோ எல்லாவற்றையும் செய்து முடித்துவிட்டு வெற்றி முகத்தோடு வாருங்கள். உங்களைத் தவிர்த்து இனியொருவர் வந்து தமிழுக்குச் செய்வார் என்று நான் எதிர்பார்க்கவில்லை."

அழுத்தந்திருத்தமான இவர் நம்பிக்கை நிறைவேறியதா? இந்தக் கேள்விகளுக் கெல்லாம் விடைதான் இந்த நூல்.

சி. சுப்பிரமணியம் சொன்ன ஒரு கருத்து எவ்வளவு மேன்மை யுடையது என்பதை எண்ணிப் பார்க்கிறேன். அதன்படி நாம் உயர்கல்வியைத் தமிழில் தந்திருந்தால் தமிழ் ஆட்சிமொழித் திட்டமும் முழுமையான வெற்றியடைந்திருக்கும். தி.மு.க. தேர்தல் அறிக்கையில் அடிக்கடி குறிப்பிட்டிருந்தாலும் பேரா. அன்பழகனுக்கு அது நினைவில் இருந்திருக்காது என்றே கருதுகிறேன். சி.சு. சொன்னது இதுதான்:

"கல்வித்துறையிலேயே பெரும்மாற்றம் செய்வது அவசியமாயிற்று. அதுதான் கல்லூரிகளிலும் தமிழையே பாட போதனை மொழியாகச் செய்யும் முயற்சி. இன்றுள்ள அதிகாரிகளுக்கு என்னதான் தமிழில் பயிற்சி அளித்தாலும்கூட, அவர்களுக்கு ஆட்சி மொழிச் சொல் அகராதியைத் தந்தாலும்கூட இவையெல்லாம் தற்காலிக ஏற்பாடுகளாகத்தாம் இருக்க முடியும். ஆட்சியில் தமிழ் முழுமையாக, முறையாக இடம் பெற வேண்டுமானால் தமிழிலேயே கல்வி பயின்று பட்டம் பெற்றவர்கள் அதிகாரிகளாகும் காலம் வர வேண்டும். அதுதான் நிரந்தர ஏற்பாடாக இருக்க முடியும்."

அண்ணா 1968 இல் இயற்றிய தீர்மானத்தையாவது பின்வந்த கல்வி அமைச்சர்கள் கடுமையாகச் செயற்படுத்தியிருந்தாலே போதும்!!

தமிழக அரசுக்கு ஊழியர்களைத் தேர்ந்தெடுக்கும் தேர்வாணையத்திலேயே தமிழில் தேர்வு எழுதலாம் எனும் திட்டமே 1969 இல் தானே வந்திருக்கிறது! விடுதலைபெற்று 21 ஆண்டுகள் கழித்துத்தானே தமிழில் எழுதுபவர்கள் வேலைக்கு வரமுடிந்தது!

பிறருடைய பேச்சுகளைச் சட்டமன்றக் குறிப்பேட்டில் பதிவாகி உள்ளபடியே தந்துள்ளேன். அதனால் செக்ரடேரியட், ராஜ்ஜியம் போன்ற சொற்களும் இடம் பெற்றுள்ளன. ஆனால் இன்று. . .? எவ்வளவு மாறுதல்! மனம் மகிழும் மாறுதல்!

'வடசொற்கிளவி வடவெழுத்து ஒரீஇ'எழுத வேண்டியதுதான் தொல்காப்பியர் கட்டளை. கம்பனே 'லக்ஷ்மணனை' இலக்குவன் என்றாக்கியவனாயிற்றே! ஆனால் தவிர்க்கமுடியாத சில இடங்களில் ஸ், ஜ போன்ற எழுத்துகளைப் பயன்படுத்தியுள்ளேன். அன்பர்கள் பொறுத்தருள்க.

இதுகுறித்து ஒரு திட்டவட்டமான முடிவை எடுத்தாகவேண்டும் என்று வா.செ. குழந்தை சாமி கூறிவருகிறார். 'இராசாசி' இப்படி வரும்போது 'எம்.ஜி.ஆர்.' இப்படி வருகிறார். தக்க அவையில் முடிவு செய்யலாம்.

முந்தைய காலத்தைவிட இப்போது தவிர்க்க முடியாத, ஏற்றுக்கொள்ள வேண்டிய சில மாறுதல்கள் மொழியில் ஏற்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக வன்றொடர்க் குற்றியலுகரம் பன்மையாகும்போது ஒற்று மிகாமிலிருப்பதே சரி என்கிறார் இலக்கண அறிஞர் மே.வீ. வேணுகோபாலர். எனவே பிறர் பேச்சிலும் எழுத்திலும் 'பூட்டுக்கள்' என்றிருந்தாலும், நாங்கள் 'பூட்டுகள்' என்றுதான் எழுதுவோம்.

முனைவர் வா.செ. கு. அணிந்துரை எழுதியதும் என்னிடம் கேட்டார். "ஒன்றிரண்டு இடங்களில் 'தறுதலைகள்' போன்ற சொற்கள் வருகின்றனவே! அவற்றைத் தவிர்க்கலாமா?" என்று. கணித ஆசிரியர் ஒருவர் 'வட்டம்' என்பதும் 'விட்டம்' என்பதும் மாணவர்களுக்கு அதிகம் தெரியாது; 'சர்க்கிள்'தான் தெரியும்" என்கிறார். இப்படிப்பட்டவர்களை வேறெப்படி அழைப்பது? "எற்றிற்குரியர் கயவர்?" என்ற வள்ளுவனுக்கு ஏற்பட்ட சினம் தான் எனக்கும். எனவே 'இருக்கட்டும்' என்றே கருதினேன். 'கரும்பு போல் கொல்லப்பயன்படும் கீழ்'என்பதை உணர்ந்தே இருக்கிறேன்; அதனால்தான் இந்தவேகம்.

தமிழ் பயின்ற, தமிழைப் பலகாலம் பலருக்கும் சொல்லிக்கொடுத்த தமிழ்ப் பேராசிரியர், கல்வி அமைச்சர் அன்பழகன் துறைதான் இதில் மோசமாக இருந்தது. இதை நானே வலிந்து தருவதாகக் கருதக்கூடாது என்பதால்தான் ஆசிரியர் பேரணி இதழிலிருந்து எடுத்துக்காட்டுகளை வரிசைப்படுத்தினேன். ஆர்வம் காட்டியவர்களைப் பாராட்டவும் தவறவில்லை; நெளிபவர்களை அடையாளம் காட்டாமலும் விடவில்லை.

அரசு ஆணைகள், அறிவிப்புகளில் சில இடங்களில் சந்திப் பிழைகள் இருக்கும். செப்பமான இலக்கணப்படி அமைந்த தமிழ்நடை என்று சொல்ல முடியாது. எனினும் அவரவர்க்கு முடிந்த வரை நல்ல முறையில் தமிழில் வரைவுகளை, அரசாணைகளை, கோப்புகளை உருவாக்கியுள்ளனர் என்பதுதான் கவனிக்கத்தகுந்தது.

'சிங்கப்பூர் தமிழை வாழ வைக்கிறது; தமிழ் நாட்டிலோ நடிப்பு கொடிகட்டிப் பறக்கிறது' என்று கூறியிருப்பதை அரசு அலுவலர்கள் கவனிப்பார்களாக.

செய்தித்தாள்கள் எங்கள் பேச்சுகளைப் போட்டி போட்டுக்கொண்டு வெளியிட்டுள்ளன. முதலில் ஆர்வத்தோடு செய்திகளைக் கேட்டு எழுதி வெளியிட்ட செய்தியாளர்கட்கு என் நன்றியைச் சொல்லியே ஆகவேண்டும். அவர்கள் வெளியிட்டதால்தான் இந்த நூலே உருவாகியிருக்கிறது. ஆனால் என் பேச்சைக் கேட்டு எழுதி வெளியிடுபவர்கள் சில பிழைகளைச் செய்து விடுகிறார்கள். என் பேச்சு வேறு; இதழில் வந்துள்ள நடைவேறு. அவரவர் விருப்பத்திற்குச் சில சொற்களைப் போட்டும், ஒற்று இல்லாமலும் எழுதிவிடுகிறார்கள். இது குறித்து 'தினமலர்' ஆசிரியர்

கிருட்டிணமூர்த்தி குறிப்பிடுவதைக் கவனியுங்கள். "நாங்களும் தமிழில் எம்.ஏ. பட்டமும், பி.எச்.டி. பட்டமும் பெற்றவர்களைத்தான் வேலைக்குச் சேர்க்கிறோம். ஆனால் அவர்களே ஒற்றுப் பிழைகளோடு எழுதிவிடும்போது, நாங்கள் எப்படிப்பொறுப்பேற்பது" என்று குறிப்பிட்டார். உண்மைதான். என் பேச்சிலேயே விஷயம் உத்தரவு அமல் போன்ற சொற்கள் வந்துள்ளன. என்னை அறிந்தவர்களுக்குத் தெரியுமே, நான் இவைபோன்ற சொற்களைப் பயன்படுத்தமாட்டேன் என்று. என் நேரடி நடை உங்களுக்கு வழிகாட்டட்டும்; செய்தித்தாள் நடை உங்களுக்குச் செய்திகளைக் காட்டட்டும்.

முன்னுரையில் நான் அதிகம் எழுத விரும்பவில்லை; உள்ளே எல்லா மூலைகளையும் படம்பிடித்து விரிவாகவே காட்டியுள்ளேன். அவற்றைப் படித்து உணர்ந்தால் போதும்.

இப்போதும், தமிழன்பர்களிடம் நான் எதிர் பார்ப்பது இதுதான். அரசிலிருந்து எவரேனும் ஆங்கிலத்தில் மட்டுமே மடல் எழுதியிருந்தாலோ, அறிக்கை விடுத்தாலோ என் கவனத்துக்குக்கொண்டு வாருங்கள். நூலில் என் முகவரிகள் உள்ளன. இப்போதும் அரசாணைகளை மேற்கோள் காட்டி நீங்களே நடவடிக்கை எடுக்கலாம்; நானும் எடுக்க முடியும்.

இந்த நூலை எழுதியதால் தமிழ்க்குடிமகன் எதை நிலைநாட்டியிருக்கிறான் என்று கேட்பவர்கட்கு, அணிந்துரை எழுதிய அறிஞர் வா.செ. கு.வின் சொற்களையே விடையாக வழங்குகிறேன்.

*"தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம் மூன்றாவது மொழிப்போராட்டமாக நடந்திருக்கிறது"*

*"இவரன்றி வேறொருவர் இப்பொருளில் இவ்வளவு உள் நுழைந்து, நெருங்கி நின்று தகவல்களைத் திரட்டி ஒரு நூலை எழுதியிருக்க முடியாது"*

*"வழக்கமான அரசுத் துறைப் பாதையில் நடை போடாமல் இதனை ஓர் இயக்கமாகவே தொடங்கி நடத்துகிறார்"*

*"அவருக்கே இயல்பான விரைவு, விறுவிறுப்பு, தீவிரத்துடன் பணியில் ஈடுபடுகிறார்."*

*"தோராயமாகச் சொல்லாமல் துல்லியமாகக் கொடுத்திருப்பது நம்மை மலைக்க வைக்கிறது. இதைப்போன்று பக்கத்திற்குப் பக்கம் புள்ளி விவரங்கள் ஓர் இமாலயச் சாதனை."*

1956க்கு முன்பே சட்டம் செய்யாமல் வெறும் திட்டம் மட்டும் செய்து பயனில்லை என்றார்கள். திருச்சி மாவட்டத்தில் 'ஆட்சி மொழித் திட்டம்' தான் வகுக்கப்பட்டது. விளைவு? அரை குறை உயிரோடு தவித்துக் கொண்டிருந்தது. ஆனால் 1956 இல் சட்டமும் நிறைவேற்றி, நம் காலம் வரை எத்தனையோ திட்டங்களையும் செய்தும் ஏன் முழுவெற்றியடையவில்லை? எண்ணிப்பாருங்கள்!

நான் ஆற்றிய பணிகள் குறித்த இரண்டு நூல்களை உங்களிடம் தந்துவிட்டேன். இன்னும் ஒன்று - இந்த ஆண்டுக்குள் வந்துவிடும். ஒரு காலத்தில் கசபதி நாயக்கர் போன்ற உண்மையான ஆர்வலர்களும், சி. சுப்பிரமணியம் போன்ற அக்கறையுள்ளவர்களும் இருந்தார்கள். எனவே சட்டம் பிறந்தது. பின்னால் வந்த முதலமைச்சர்கள் எல்லாருமே ஆற்றல் மிக்கவர்கள். ஆனால் அலுவலர்கள்! ஆட்சிமொழித் தமிழின் மென்னியை முறிப்பவர்களே அவர்கள்தானே!

அறிஞர் வா.செ.கு. அவர்கள் முழுமையான ஈடுபாட்டுடன் நூலைப் படித்து மிகச் சிறப்பானதோர் அணிந்துரையை வழங்கியுள்ளார். தமிழ் பல்துறையிலும் தன் திறம் காட்டி மிளிர வேண்டும் என்பதில் அயர்ச்சி இல்லாத ஆர்வம் காட்டி உழைப்பவர்; உரைப்பவர் அவர்; என் பணிகளைக் 'காய்தல் உவத்திலின்றி'ப் பாராட்டி மகிழ்ந்திருக்கும் அவர்க்கு என் நெஞ்சாரந்த நன்றி உரியது. அவரது அகவையைக் கணக்கில் கொள்ளாமல் அறிவை மட்டும் பெரிதும் போற்றி அவர்க்கொரு பெரிய பணியைக் கொடுத்துவிட்டேன். எனினும் பெரும் பயன் பெற்றேன்! என் தலை தாழ்ந்த வணக்கங்கள்!

அட்டையில் என்னை அடையாளம் காட்டிய என் கெழுதகை நண்பர் பேரா. இளவரசு அவர்கட்கு உரிமையுடன் நன்றி கூறுகிறேன்.

என் எழுத்தைப் புரிந்துகொண்டு விரைவில் தட்டச்சுச்செய்து நூலினை வடிவமைத்துக்கொடுத்த, கணினியர் கண்ணனுக்கு என் நன்றியும்பாராட்டும்.

முனைவர் இராமர் இளங்கோ வழக்கம்போல், என் எண்ணத்திற்கு வண்ண வடிவம் தந்து நூலை அழகுற வெளிக்கொணரச் செய்துள்ளார். அவர்க்கு என் நன்றி . அவர் குறிப்பின்படி நூலை அச்சிட்டு அழகாக வழங்கி இருக்கும் தனபாலன், கௌதம சங்கர் ஆகிய இருவருக்கும் நன்றி. அட்டையை அழகுற வடிவமைத்துத் தந்த ஓவியர் நானா அவர்களுக்கும் நன்றி.

ஆர்வமும், அக்கறையும் உள்ள அரசு ஊழியர்களில் குறிப்பிடத்தக்க சிலராவது இந்த நூலைப் படித்தால் உண்மை நிலையை உணர்ந்து கொள்வர். அவர்கள் ஆங்கிலத்தை 'விட்டு விடுதலையாகி' வெளியே வந்து என்னளவில் தமிழில் எல்லாவற்றையும் இயற்றிக் காட்டுவேன் என்று சூளுரைத்தாலே போதும்!

தமிழ் அரியணையில் அமர்ந்து கோலோச்சும் முழுமையான காட்சியை நாம் காண்போம்!

தினபூமி கோவை 8.6.99

# மம்மி-டாடி கலாசாரத்திற்கு முற்றுப்புள்ளி வையுங்கள்

## அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேச்சு

# நூல் கிடைக்கும் இடங்கள்

விசயா பதிப்பகம், 20, இராசவீதி, கோவை - 641 001. தொலைபேசி - 2394614

வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 600 017

திருமகள் புத்தக நிலையம், 16, வேங்கடநாராயணா சாலை, தி.நகர், சென்னை - 600 017

பாரி நிலையம், 184, பிரகாசம் சாலை, சென்னை - 600 001

சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், 522, டி.டி.கே. சாலை, சென்னை - 600 018

மணிவாசகர் பதிப்பகம், 5, சிங்காரவேலர் தெரு, தி.நகர், சென்னை - 600 017
சென்னை - 600 108, மேல சன்னதி, சிதம்பரம் - 1,
வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை- 1,
15, இராச வீதி, கோவை - 1
நந்திகோயில் தெரு, திருச்சி - 2

சர்வோதய இலக்கியப் பண்ணை, மேலவாசல், மதுரை - 1

நியூ செஞ்சுரி புத்தகநிலையம், மேலக்கோபுர வாசல், மதுரை - 1.
இராசராசன் வணிக வளாகம், தஞ்சாவூர் - 1
42/7, சிங்காரத்தோப்பு, திருச்சி - 8
4, பெரியார் பேருந்து நிலையம், நெல்லை - 1

பழனியப்பா பிரதர்சு, மேலக் கோபுர வாசல், மதுரை - 1
அச்சகச் சாலை, ஈரோடு - 1
செர்ரி சாலை, சேலம் - 1

அய்யனார் புத்தக நிலையம், டட்லி மேல்நிலைப்பள்ளி வளாகம், திண்டுக்கல்

காஞ்சிபுரம் - வெற்றி புத்தக நிலையம், கார்த்திகேயன் (பதி பரிசு & நூலகம்)

நாகை - சிவசக்தி பதிப்பகம், நீலா தெற்கு வீதி

இக்கின் பாதம்சு புத்தகக் கடைகள்

# உள்ளடக்கம்

# தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கம்

அமைச்சர் பொறுப்புக்கு வருமுன்பே நான் எழுதிய மடல் - இது என் உள்ளக் கிடக்கை.

நான் அமைச்சர் பொறுப்புக்கு வருமுன்பே தமிழ் வளர என்ன செய்தால் தகும் என்று கருதி, என் உள்ளக் கிடக்கையைப் புலப்படுத்தும் வகையில் ஒரு விரிவான மடல் எழுதினேன். அதனைப் பலருக்கு வழங்கினேன்.

அம்மடலை அப்படியே தருகிறேன்.

## தமிழ் வளர்ச்சி குறித்து

பெறுநர்

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள் 24.08.89

தமிழ் நாடு அரசு

மதிப்பிற்குரியீர்,

தாங்கள் தமிழ்நாட்டின் முதலமைச்சராய் அரசாளும் இந்த வேளையில் உடனடியாகச் செய்யப்படவேண்டிய தமிழ் வளர்ச்சிப் பணி குறித்துத் தங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

தமிழ் வளர்ச்சி இயக்ககத்தில் 15 உதவி இயக்குநர் பதவிகள் நிரப்பப்படாமல் இருக்கின்றன. மாவட்டங்களில் 13 இடங்களும், தலைமையகத்தில் 2 இடங்களும் காலியாக உள்ளன. உதவி இயக்குநர்களே இல்லாமல் மாவட்டங்களில் அமைந்திருக்கும் தமிழ் வளர்ச்சித் துறைகள் எப்படிச் செயற்படும் என்பதை நான் சுட்ட வேண்டிய தேவையே இல்லை.

எனவே உடனடியாக இந்த 15 இடங்களும் நிரப்பப்படுவதற்குத் தக்க ஆணையைப் பிறப்பிக்க வேண்டுகிறேன்.

கடந்த காலத்தில் தமிழ் வளர்ச்சி குறித்துச் சிந்திக்கத் தேவையேயில்லாத, தமிழ்ப் பற்றே இல்லாத வட்டாட்சியர் (Tahsildar), வட்டார வளர்ச்சி அலுவலர்(B.D.O.), போன்றவர்கள் எல்லாம் தமிழ் வளர்ச்சித் துறையில் பணியமர்த்தப்பட்டுப் பொழுது போக்குவதற்கு இதுவும் ஒருதுறை என்ற அளவில் மட்டுமே இத்துறை இயங்கி வந்துள்ளது.

எனவே இப்போது நிரப்பப்படவுள்ள இடங்களுக்குக் கல்லூரிகளில் தமிழ் முதுகலைப்பட்டமும் எம்.பில், பி.எச்.டி., முதலிய ஆய்வுப் பட்டங்களும் பெற்றுத் தமிழ்ப் பேராசிரியர்களாகப் பணியாற்றுபவர்கள் மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

கல்லூரித் தமிழ்த் துறைகளில் பணியாற்றுபவர்களிலும் மொழிப்பற்றே இல்லாத - மொழிப்பணி என்பதையே கேலி செய்பவர்களும் உண்டு.

எனவே உண்மையான மொழிப்பற்றும், மொழி வளர வேண்டும் என்ற துடிப்பும் உள்ளவர்களையே இப்பணிகளில் அமர்த்த வேண்டும். நேரடியாக அமர்த்தம் செய்யவேண்டும் என்ற நிலை எழுந்தால் மேற்கண்ட தகுதிகளோடு வேலைக்காகக் காத்திருக்கின்றவர்கள் பட்டியலிலிருந்து நேர்காணல் வாயிலாகத் தேர்ந்தெடுக்கலாம்.

எதுவாயினும் உடனடியாக எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகள் என்ற அளவில் இந்தக் கோரிக்கையைத் தங்கள் முன் படைக்கின்றேன்.

தங்கள் அன்புள்ள,

மு. தமிழ்க்குடிமகன்

6.9.89 இல் மற்றொரு மடல் எழுதினேன்.

பெறுநர்

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள்,
தமிழ்நாடு அரசு.

மதிப்பிற்குரியீர்,

பொருள் : தமிழ் வளர்ச்சி - மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகள் குறித்து - கவனத்திற்காக.

1. மழலையர் பள்ளிகளில் தமிழ் இழிவு படுத்தப்படுகிறது. இப்பள்ளிகளைக் கண்டிக்க வேண்டும். அனைத்துப் பள்ளிகளிலும் தமிழ் கட்டாயப் பாடமாக வைக்கப்பட்டு அரசுப் பாட நூல்களே பின்பற்றப்பட வேண்டும்.

2. தமிழ் இளங்கலை, முதுகலை பயின்றவர்கட்கும், தமிழைப் பயிற்றுமொழியாகக் கொண்டு பயின்றவர்கட்கும் வேலைவாய்ப்பு நேர்காணலில் 5 மதிப்பெண் கூடுதலாக வழங்க ஆணை பிறப்பிக்கவேண்டும்.

3. 23.1.1968 இல் சட்டப்பேரவையில் பின்வரும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டுள்ளது.

"தமிழகத்தில் தமிழ் பயிற்சி மொழியாகவும் பாட மொழியாகவும் எல்லாக் கல்லூரிகளிலும், நிர்வாக மொழியாகப் பல்வேறு துறைகளிலும், ஐந்தாண்டுக் காலத்துக்குள் நடைமுறைக்கு வருவதற்கான துரிதமான நடவடிக்கையை மேற்கொள்வது என்று இம்மன்றம் தீர்மானிக்கிறது."

1973க்குள் முடிந்திருக்கவேண்டிய இப்பணி இன்றும் நிறைவடையவில்லை.

இந்தக் காலகட்டத்தில் இதை நிறைவேற்றியாக வேண்டும். ஆளுநர், பிறமாநிலங்கள், நடுவண் அரசு, வெளிநாடுகட்கு அனுப்பப்படும் மடல்கள், கோப்புகளைத் தவிரப் பிற அனைத்துக் கோப்புகளும், மடல்களும் தமிழில் எழுதப்பட வேண்டும்.

4. அரசாணைகள் அனைத்தும் தமிழிலும் ஆங்கிலத்திலும் ஒரே நேரத்தில் பிறப்பிக்கப்பட வேண்டும்.

5. விளம்பரப் பலகைகளில் நல்ல தமிழ் முதலில் இடம் பெறுவதற்காக ஏற்கெனவே உள்ள ஆணையை விளம்பரமாக வெளியிடுவதுடன் 'தொழிலாளர் நல உதவி ஆணையாளர்கள் (Assistant Commissioners of Labour) அனைவர்க்கும் ஒரு சுற்றறிக்கை வாயிலாக இதனை நன்கு செயற்படுத்துமாறு அறிவிக்க வேண்டும்.

6. தமிழ் வளர்ச்சி இயக்ககத்தில் பல்வேறு இடங்களில் காலியாக உள்ள பணியிடங்கள் உடனடியாக நிரப்பப்பட வேண்டும்.

7. தமிழகக் கல்லூரிகள் அனைத்திலும் ஆங்கிலப் பயிற்று மொழி வகுப்புக்கு இணையாக அதே பாடத்தில் தமிழ்ப்பயிற்று மொழி வகுப்பினைத் தொடங்குவதற்கு அரசு அனுமதி அளிக்கவேண்டும்.

அன்புடன்

மு. தமிழ்க்குடிமகன்

எல்லா நிலைகளிலும் தமிழ் தனக்குரிய இடத்தைப் பெற வேண்டும் என்பதிலும், தமிழ் முழுமையான ஆட்சிமொழியாகவும், கல்வி மொழியாகவும் ஆகவேண்டும் என்பதிலும் எனக்கிருந்த ஆர்வத்தாலேயே முன்னைய மடல்கள் எழுதப்பட்டன. என் உள்ளம் இதுதான் என்பதனை உணர்ந்து நூலுக்குள் செல்வோம்.

ஈரோட்டில் ஆட்சிமொழி கருத்தரங்கு

# அமைச்சர் தமிழ்க்குடிமகன் கடும் எச்சரிக்கை

## தமிழில் கையெழுத்து போடாவிட்டால் நடவடிக்கை

என்றும் முதல்—அமைச்சரிடம் வலியுறுத்தியேன்.

தமிழ்நாட்டில் தமிழில் படிக்காமல் இனி பட்டம் பெற முடியாது என்ற அரசு ஆணை விரைவில் வர இருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசினார்.

## இயல் ஒன்று

## குரல் கொடுத்தவர்கள்

*வானமளந்த தனைத்தும் அளந்திடும்*

*வண்மொழி வாழியவே!'* என்றார் பாரதியார்.

*'சாதி ஒழித்திடல் ஒன்று - நல்ல*

*தமிழ் வளர்த்தல் மற்றொன்று - இதில்*

*பாதியை நாடு மறந்தால் - மற்ற*

*பாதி துலங்குவதில்லை'* என்றார் பாவேந்தர்.

இப்படியே, தமிழைப் பாராட்டியோரின் பெயர்களை எல்லாம் கூறி, அவர்கள் சொன்ன கருத்துகளையெல்லாம் தொகுத்தால் ஒரு பெருநூலை உருவாக்கலாம். வளமிக்கது தமிழ் என்பதைப் பாவாணர் போன்றவர்கள் தம் நூல்களின் வாயிலாகவே எடுத்துக்காட்டிவிட்டார்கள். ஆனால் தமிழ் வாழ்வியல் மொழியாகியிருக்கின்றதா? நம்மை ஆளும் மொழியாக இருக்கிறதா? நாம் அதற்கான ஏற்பாடுகளை ஒழுங்காகச் செய்திருக்கிறோமா? பிறர் செய்த எளிய ஏற்பாடுகளையாவது கொச்சைப்படுத்தாமலாவது இருக்கிறோமா?

இவற்றை எல்லாம் எண்ணிப் பார்த்தால் ஒரு நீண்ட பெருமூச்சே வரும். அதே நேரத்தில் 'தமிழின் பயன்பாட்டில்' நாம் அதிக அளவு வளர்ந்துள்ளோமா இல்லையா? இதை யார் மறுக்க முடியும்?

கணிதத்தையும், பிற அறிவியல் பாடங்களையும் தமிழில் சொல்லிக் கொடுக்க முடியாது என்று தமிழ்நாட்டில் வாழத் தகுதியற்ற ஒரு சில தறுதலைகள் கூற முற்படும் வேளையில் - கணிப்பொறியில், இணையத்தில், மின்அஞ்சலில் தமிழ் எந்த அளவுக்கு இடம் பெற்றுள்ளது என்பதை எண்ணும்போது நாம் வியக்காமல் இருக்கமுடியாது!

'பழக்கத்தால் மாடுகளும் செக்கைச் சுற்றும்'

என்ற பழமொழி கூறுவதைப்போல் வெந்ததைத் தின்று விதிவந்தால் சாவோம் எனும் முடிவோடு - எந்த மழை பெய்தாலும் உறைக்காத எருமை மாடுபோல வாழும் தமிழர்களையும் நம்மைச் சுற்றிப் பார்க்கிறோம். பொறுப்புணர்ச்சியற்ற பலர் தங்கள் கடமைகளைச் சரிவரச் செய்யாததாலேயே இந்தப் பின்னடைவு என்பதையும் உணர்கிறோம். இதற்கிடையில் தமிழை முழுமையான ஆட்சிமொழியாக்குவதற்கு எடுக்கப்பட்ட முயற்சிகளை, பிறப்பிக்கப்பட்ட ஆணைகளை, மேற்கொண்ட ஆய்வுகளை, விடுக்கப்பட்ட எச்சரிக்கையை எல்லாம் பார்த்தால் தான் இப்போது நம் நிலை என்னவென்பது விளங்கும்.

1956 ஆம் ஆண்டில் தமிழ் ஆட்சிமொழிச்சட்டம் கொண்டு வரப்பட்டது. 47 ஆண்டுகள் கடந்த பின் நான் இந்த நூலை எழுதுகிறேன். வெற்றியை உணர்த்தும் புன்முறுவலோடு முடிப்பேனா? தோல்வியை ஒப்புக் கொண்டு 'தொலையட்டும்' எனும் வெறுப்போடு முடிப்பேனா?

பொறுத்திருந்து பார்ப்போம்

தமிழ் ஆட்சிமொழியாக வேண்டும் என்று குரல்கொடுத்தவர்கள் பலர். குறிப்பாகச் சட்டமன்றத்தில் முழங்கியவர்கள், விடாப்பிடியாக வலியுறுத்தியவர்கள் பலர். 1956 இல் சட்டம் வருவதற்கு முன் நடைபெற்ற நிகழ்ச்சிகளை ஒரு பார்வை பார்த்தால்தான் நம் முயற்சியின் தொடக்கம் தெரியும்.

தமிழ் நாட்டில் பல இனங்கள் ஊடுருவியிருந்தாலும், பலரும் தத்தம் மொழிச் சொற்களைப் புழக்கத்தில் விட்டிருந்தாலும் கி.பி.1526 வரை தமிழே ஆட்சிமொழியாக இருந்தது என்பதை யாரும் மறந்துவிடக்கூடாது.

அதன்பின் வந்த முகலாயர் ஆட்சி, விசயநகரப் பேரரசுகளின் ஆட்சி ஆகியவற்றில் தாம் அரபு, பாரசீகச் சொற்களும், சமற்கிருதம், தெலுங்குச் சொற்களும் ஆட்சித் துறையில் வழக்குப் பெற்றன. இதன் பின் 1839இல் ஆங்கிலம் இந்நாட்டின் ஆட்சிமொழியானது. 1844 இல் ஆங்கிலம் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களுக்கு மட்டும் வேலை வாய்ப்பில் முன்னுரிமை வழங்கப்பட்டது.

"சுய பாஷையைப் படிக்காமல் இங்கிலீஷ் மட்டும் படிக்கிறவர்களை இங்கிலீஷ் தேசத்துக்கு அனுப்பிவிடுவோம். பிரெஞ்சு மட்டும் படிக்கிறவர்களைப் பாரிசுப் பட்டணத்துக்கு அனுப்புவோம். லத்தீனுக்கும் சமஸ்கிருதத்திற்கும் சொந்த ஊர் இல்லாத படியால் அந்தப் பாஷைகளைப் படிக்கிறவர்களை அநாமகரணத் தீவுக்கு அனுப்புவோம்" என்றார் மயிலாடுதுறை வேதநாயகம் பிள்ளை (1889). தனித்தமிழ் இயக்கத்தைத் தோற்றுவித்த மறைமலையடிகள் பல தமிழ்ச் சொற்களைப் புழக்கத்தில் கொண்டுவந்தார். "மணிப்பிரவாள நடை"யை அறவே தூக்கி எறிந்தோம் என்றால் அதற்கு மூலவர் மறைமலையடிகள் தாம். பொதுக்கூட்டங்களில் (1918) தமிழர்கள் தாய்மொழியிலேயே பேச வேண்டுமென்று தீர்மானம் கொண்டு வந்து புரட்சி செய்தவர் திரு.வி.க.

'அதன்பின் காங்கிரசுச் செயற்குழுக் கூட்டம் தன் நிகழ்வுகளைத் தமிழில் ஆற்றலாயிற்று' என்கிறார் அவர்.

"தமிழ் நாட்டின் ஆட்சி தமிழில் நடைபெற்றால்தான் தமிழன் தமிழைப் படிப்பான்" என்று அடித்துச் சொல்கிறார் மு.வ.

சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தைச் சேர்ந்த இ.மு. சுப்பிரமணிய பிள்ளை புதிய கலைச் சொற்களைத் தொகுத்து வெளியிட்டார். 1952 இல் இவ்வமைப்பு 'தமிழ் ஆட்சிமொழியாக வேண்டும்' என்று ஆளுநருக்கும் தமிழக அரசுக்கும் வேண்டுகோள் வைத்தது. அந்தக் கால கட்டத்திலேயே தமிழ் ஆட்சிமொழி மாநாடுகள் பல நடைபெற்றுள்ளன.

1953 இல் சென்னையில் பி.டி.இராசன் தலைமையில் மாநாடு. பின் 1953 திசம்பரில் சென்னையிலும் 1954 ஏப்ரலில் பெண்ணாடகத்திலும் 1954 மே மாதத்தில் தூத்துக்குடியிலும் நெல்லையிலும் ஆட்சிமொழி மாநாடுகள் நடைபெற்றன. இவற்றுக்குத் தலைமை தாங்கியவர் அ. கசபதி நாயக்கர் ஆவார்.

சட்டமன்றத்தில் பணியாற்றி, தன் தனித் தீர்மானங்களாலும், அவ்வப்போது ஆற்றும் உரைகளாலும் காங்கிரசு ஆட்சியினரை உலுக்கி எடுத்து, பிற உறுப்பினர்களும் இவரைச் சார்ந்து பேச வைத்து 1956 இல் சட்டம் வருவதற்கே முழுமுதற் காரணமாக இருந்தவர் கசபதி நாயக்கர் தான்.

1955 சனவரியில் 'ஆட்சிச் சொல் அகராதி' உருவாக்கப்பட்டது. அப்போது நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் 'தமிழ்நாட்டில் தமிழ் ஆட்சிமொழியாவதற்கு அரசு ஆவன செய்யவேண்டும்' எனும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தமிழ் அறிஞர்களும் தமிழை ஆட்சிமொழியாக்க வேண்டும் என்று குரல் கொடுத்தனர். 7.10.1956 இல் குளித்தலையில் நடைபெற்ற 'தமிழ் ஆட்சிமொழி மாநாடு' இதற்குச் சான்றாகும். பாவேந்தர் தலைமையில் சுத்தானந்த பாரதியார் மாநாட்டைத் தொடங்கி வைத்தார். அன்று தமிழ்க் கொடி ஏற்றியவர் கசபதி நாயக்கர்தான். அப்போது அவர் சட்டமேலவை உறுப்பினராக இருந்தார் (MLC). கலந்து கொண்டவர்கள்: கி.பழநியப்பன் (ப.நெடுமாறன் தந்தையார்) குன்றக்குடி அடிகளார், சி. இலக்குவனார், ப. சீவானந்தம், ப. சோதிமுத்து, அ. இரத்தினசபாபதி, ஞா. தேவநேயப் பாவாணர், மா. இராசமாணிக்கனார், கீ. இராமலிங்கனார், முனைவர் பா. நடராசன், மே.சி. சிதம்பரனார், சு. சிவலிங்கம் (தமிழில் தொலைவரி வழங்கியவர்).

இந்த மாநாட்டை நடத்தியவர்கள் இளமுருகு பொற்செல்வி இணையர்.

காங்கிரசுப் பேரியக்கத்திலும் மொழிவாரி மாநில எண்ணம் தலை தூக்கியது. 1924 இல் நடைபெற்ற மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட பின்வரும் தீர்மானங்கள் இதனை மெய்ப்பிக்கும்.

1. மாநில அரசுகளை மொழி அடிப்படையில் திருத்தி அமைக்க வேண்டும்.
2. அந்தந்த மாநில மொழியிலேயே அதனதன் சட்டமன்றம் நடைபெற வேண்டும்.
3. மாநிலந்தோறும் உள்ள நீதிமன்றங்களும் மாநில மொழியிலேயே நடைபெற வேண்டும்.

இக்காலகட்டத்தில் சட்டமன்றத்தில் யார்யார் எல்லாம் தமிழை ஆட்சி மொழியாக்குவதற்குக் குரல் கொடுத்தவர்கள் என்பதையும் பார்க்கவேண்டும்.

(குழித்தலை கழக உயர்நிலைப்பள்ளி)

# தமிழ் ஆட்சிமொழி மாநாடு

7-10-56 ஞாயிறு அன்று காலை 9 மணி முதல்

தலைவர் - புரட்சிக்கவி பாரதிதாசன் M.L.A.

திறப்பாளர் - யோகி சுத்தானந்த பாரதி

தமிழ்க்கொடி ஏற்றுபவர் - கஜபதி நாயக்கர் M.L.C.

சொற்பொழிவுகள்

குன்றக்குடி அடிகளார்
ப. ஜீவானந்தம்
அ. இரத்தினசபாபதி
மா. இராசமாணிக்கம்
பா. நடராசன்

சி. இலக்குவனார்
ப. சோதிமுத்து
ஞா. தேவநேயப்பாவாணர்
கி. இராமலிங்கம்
மே.சி. சிதம்பரனார்

அ. சிவலிங்கம்

மணி-அரங்கநாதன் குழு

இசை - P.S. கலைமணி குழு



இவண் -

மீ.சு. இளமுருகுபொற்செல்வி,

குழித்தலை.

1956க்கு முன் தமிழகம், கேரளம், ஆந்திரம், கர்நாடகம் ஆகியவை இணைந்த சென்னை இராசதானி (Madras Presidency) தான் இருந்தது. 1921இல் தான் சட்டமன்றத்தில் நம் உறுப்பினர்கள் இடம் பெற்றனர். இச் சூழ்நிலையில் நான்கு திராவிட மொழிகளிலும் ஆங்கிலத்திலும் தான் உறுப்பினர்கள் பேசியிருப்பார்கள் என்பது உண்மை. ஒரிசாவின் ஒரு பகுதியும் தமிழ்நாட்டில் அடங்கியிருந்தது என்பதும் உண்மை.

ஆங்கிலத்தில் பேசினால்தான் சட்டமன்றக் குறிப்பேட்டில் பதிவாகும். மாநில மொழிகளில் பேசினால் ஆங்கில மொழிபெயர்ப்புக் கொடுத்தாக வேண்டும்.

தனிநபர் சட்டமுன்வடிவாகப் பல முறை சட்டமன்றத்தில் தீர்மானங்களைக் கொண்டுவந்தவர் கசபதி நாயக்கர்தான்.

இந்த நிலையில் 28.3.1921 ஆம் நாளில் பி.சி. முத்துச் செட்டியார் என்பவர்தான் சட்டமன்றத்தில் முதலில் தமிழில் பேசியவர்.

"தற்போதைய இங்கிலீஷ் பாஷையில் நான் அப்பியாசமில்லாதவனாய் இருக்கிறபடியால் இங்கு நடக்கும் நடவடிக்கையை எல்லோரும் அறியும்படியாய் சுயபாஷையில் எப்போது பேசும்படி ஏற்படுமோ தெரியவில்லை" என்ற தன் ஏக்கத்தையும் அன்று புலப்படுத்தியிருக்கிறார்.

4.8.1921 இல் வெங்கடரங்கா ரெட்டி எனும் ச.ம.உ.. ஒரு தீர்மானம் கொண்டுவந்தார்.

"சட்டமன்ற நடவடிக்கைகளை வட்டார மொழிகளில் மொழிபெயர்த்து, சுருக்கமாக அதன் சாராம்சத்தை உறுப்பினர்களுக்கு மாவட்ட கெஜட்டுகளுடன் விநியோகிக்க வேண்டும்" என்றார். இந்தத் தீர்மானம் தோல்வி அடைந்தது என்பதுதான் வியப்பு.

19.1.22 - டி. சிவசங்கரப் பிள்ளை ஒரு தீர்மானம் கொண்டுவந்தார்.

மக்கள் பயனடையும் வகையில் சட்டங்களை வட்டார மொழிகளில் கொண்டுவரத் தீர்மானம் கொண்டுவந்தார்.

"தாலுக்கா போர்டுகளில் பதவி வகிக்கும் உறுப்பினர்களில் பல பேர் வட்டார மொழிகள் மட்டுமே தெரிந்தவர்கள்; அவர்கள் தங்களுடைய அலுவல்களில் சரியான ஈடுபாடு காட்ட வேண்டுமென்றால் சட்ட திட்டங்களை வட்டார மொழிகளில் மொழிபெயர்த்தே ஆகவேண்டும். இது மிக அவசரமானது" என்ற கருத்து வலியுறுத்தப் பட்டது.

எனினும் இத்தீர்மானத்தை ஆதரித்தவர்கள் 22 பேர்; எதிர்த்தவர்கள் 48 பேர். யார்யாரெல்லாம் எதிர்த்தார்கள் என்று அறிந்தால் நீங்கள் வியந்து போவீர்கள். 1) பி. சுப்பராயன் - பிற்காலத்தில் தமிழக முதல்வராக வந்த இவர் வட்டார மொழிகளில் சட்டங்கள் மொழிபெயர்த்து வெளியிடப்பட வேண்டும் என்பதை ஏற்கவில்லை. 2) எம். இரத்தினசாமி - பிற்காலத்தில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராக வந்த இவர்க்குத் 'தமிழ்' எண்ணம்

இல்லை 3) இராமநாதபுரம் இராசா - பாண்டித்துரைத் தேவர் இவரது முன்னோடியாக இருந்தும் இவர்க்கும் தமிழ் எண்ணம் இல்லை.

மொழியாலும் தமிழர்களாக மட்டுமே இருக்கின்ற இப்போதைய சட்டமன்றத்தில் கூட இன்றும் மிகப் பலர் நாம் கொண்டு வரும் எந்தச் சீர்திருத்தத்தையும் மனத்திற் கொள்ளவில்லை; செயற்படுத்தவில்லை.

'TN 01 A 929 என்பதை 'த.நா.01.ஆ.929' என்று மாற்றி எழுதிக் கொள்ள மனம் வரவில்லை. அமைச்சர்களிடையே 3 பேரைத் தவிர இப்படி எழுதிக் கொண்டவர் எவருமில்லை. இந்தக் காலத்திலேயே இப்படி இருக்குமானால், 1922 இல் அனைத்து மொழியினரும் பங்குபெற்ற 'சென்னை இராசதானி'யின் சட்டமன்றத்தில் எப்படி இருந்திருக்கும்?

அரசின் பலவகைச் சட்ட நூல்களையும் வட்டார மொழியில் மொழி பெயர்க்க ஒரு தீர்மானம் - இதனை 1922 இல் அரங்கநாத முதலியார், இராமலிங்க செட்டியார் போன்றவர்கள் வலியுறுத்தினர். தீர்மானம் நிறைவேறியது. இதனையும் 70 பேரில் 22 பேர் எதிர்த்தனர் என்பது வரலாறு. 1925 இல் "தாலுக்கா மற்றும் ஜில்லா போர்டு கூட்டங்களிலும் நகர மன்றக் கவுன்சில் கூட்டங்களிலும் வட்டார மொழிகளையே பயன்படுத்துவதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்ய இச்சட்டமன்றம் பரிந்துரையை அளிக்கக் கோருகிறது" என்ற தீர்மானத்தை இரகுசந்திர பல்லால் கொண்டுவந்தார்.

அரங்கநாத முதலியார் "என்னுடைய மாவட்டத்தை எடுத்துக் கொண்டால் அங்கிருக்கும் தாலுக்கா மற்றும் ஜில்லா போர்டு தலைவர்கள் பலருக்கு அவர்களுடைய வட்டாரமொழி மட்டும்தான் தெரியும். நடைமுறையில் அலுவலகக் கடிதப் போக்குவரத்தும் அங்குள்ள பதிவேடுகளும் ஆங்கிலத்திலேயே இருப்பதால், அத்தலைவர்கள் அலுவலகத்திலுள்ள எழுத்தாளர்களின் கைப்பாவையாகும் நிலைமை இருக்கிறது. ஆகவே, மாவட்ட அளவிலே நடைமுறையில் உள்ள கடிதப் போக்குவரத்து, கூட்ட நடவடிக்கைகள் வட்டாரமொழியிலே இருப்பதுதான் உசிதமானது. இருப்பினும், இப்பொழுது இருக்கின்ற விதிகளின் படி, இம்மாறுதல் சாத்தியமா என்பது எனக்குத் தெளிவாகத் தெரியவில்லை" என்றார்.

பனகல் அரசர் விடை நமக்குச் சார்பாக உள்ளது. "1921ஆம் ஆண்டில் போடப்பட்ட அரசு ஆணையின்படி ஊராட்சி மன்றங்கள் தங்கள் நடவடிக்கைகளை ஆங்கிலத்திலோ தங்கள் மாவட்டத்திலுள்ள வட்டார மொழியிலோ நடத்தலாம் என்றுள்ளது; அந்த ஆணையின்படி பல ஊராட்சி மன்றங்கள் தங்களுடைய அலுவல்களை வட்டார மொழிகளிலேயே நடத்தி வருகின்றன" என்றார்.

சட்டமன்ற உறுப்பினர்கள் பேசிய பேச்சிலிருந்து ஒன்றைத் தெரிந்து கொள்ளலாம்.

"ஒரு நாட்டின் மக்களாட்சி, கலை, பண்பாடு, நாகரிகம், வரலாறு ஆகியவை போற்றிக் காக்கப்படவும் பின்பற்றப்படவும் அந்நாட்டின் மொழியே ஆட்சிமொழியாக இருக்க வேண்டும்" என்று எல்லோரும் வலியுறுத்தினர் என்பதே அந்த உண்மை.

ஆட்சிமொழிச் செயலாக்கத்துக்கு முதன் முதலில் தேவைப்பட்டவை: தமிழ்ச் சுருக்கெழுத்தாளர்கள், மொழிபெயர்ப்பாளர்கள், தமிழ்த் தட்டச்சு, தமிழில் ஆட்சிச் சொல் அகராதி ஆகியவை. சட்டமன்ற உறுப்பினர்களின் தருக்கங்களும் இவற்றை ஒட்டியே சென்றதைக் காணலாம்.

அலமேலு மங்கத்தாயாரம்மாள் 1936 இல் இப்படி வலியுறுத்துகிறார்.

". . . . தமிழிலே எழுதக்கூடிய சுருக்கெழுத்தாளர்கள் இல்லாத குறையினால், உறுப்பினர்கள் பேசமுடிவதில்லை. இம்மாநிலத்தில் பிரதான மொழி தமிழாகும். தமிழிலே பேசப்படுவதை ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பது கடினமாக இருப்பதாலும், அப்படியே மொழி பெயர்க்கப்பட்டாலும், மொழி பெயர்ப்பில் தவறுகள் நேர்ந்துவிட்டால் செய்தித் தாளில் செய்திகள் திரிந்துவிட வாய்ப்பாகிவிடும். ஆகவே தமிழ்ச் சுருக்கெழுத்தாளர்கள் கட்டாயமாக நியமிக்கப்பட வேண்டும்."

அரங்கசாமி அய்யங்கார் ". . . . மக்களுடைய தாய்மொழியில் சட்டமன்றத்தையும் நிருவாகத்தையும் நடத்தினாலொழிய, நம்முடைய மக்களுக்குப் பொறுப்பான அரசாங்கம் இல்லையென்ற நிலை ஏற்பட்டு விடும்" என்கிறார்.

டி. பிரகாசம் "ஆட்சிமொழியாகவும், பள்ளி, கல்லூரிகளில் பயிற்சி மொழியாகவும் வட்டார மொழிகளே இருக்க வேண்டும் என்பதை நாம் உணர வேண்டும்" என்கிறார்.

1946, 47 களில் விடுதலைக்கு முன்னும் பின்னுமாக அன்றைய கல்வியமைச்சர் அவினாசிலிங்கம் செட்டியார் பேசிய பேச்சுகள் கருதத் தக்கவை.

'இந்த மாகாணத்தின் எதிர்காலம் எப்படியிருக்கப் போகிறது? வங்காளத்தில் வங்காள மொழிதான் ஆட்சிமொழி; ஐக்கிய மாகாணத்திலும், மத்திய மாகாணத்திலும் இந்தி மொழிதான் ஆட்சிமொழியாக உள்ளது. விரைவிலேயே இம்மாகாணம் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் என்று பேசப்படுகின்ற மொழியின் அடிப்படையில்தான் புதிய மாநிலங்களாகப் பிரியப் போகின்றது. அப்பொழுது, நீதிமன்றங்களிலும் கல்லூரிகளிலும் அரசு நிர்வாகத்திலும் அந்த அந்த வட்டார மொழிகளையே பயன்படுத்துவார்கள்..." என்கிறார்.

இக்காலகட்டத்தில் முதல்வராக இருந்த ஓ.பி. இராமசாமி ரெட்டியார் தன் கருத்தினைத் தெளிவுபட எடுத்து வைத்துள்ளார்.

"....இப்போது ஆகஸ்ட் 15 ஆம் நாளுக்குப் பிறகு இந்த மாகாணத்தின் அரசாங்கத்தை மாகாண பாஷையில்தான் நடத்த வேண்டும். இனிமேல் அப்படித்தான் நடத்த வேண்டும் என்பதை நான் எச்சரிக்கை செய்திருப்பதை ஞாபகப்படுத்துகிறேன். இனி இங்கிலீஷ் பாஷையில் அரசாங்கத்தை நடத்த முடியாது என்பதையும் சொல்ல விரும்புகிறேன். அரசாங்கத்தை மாகாண

பாஷையில் நடத்த வேண்டுமென்று கிளர்ச்சி செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதை உணர வேண்டும். அதற்கு அனுகூலமாகவே நானும் இப்பொழுது பிரதமராக வந்திருக்கிறேன் என்பதை அங்கத்தினர்களுக்கு ஞாபகமூட்டுகிறேன்."

இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் 345, 346, 347 ஆம் பிரிவுகள் 'ஒரு மாநிலத்தின் பெரும்பான்மையான மக்கள் பேசும் மொழியை ஆட்சி மொழியாக்கிக் கொள்ள' வழிவகை செய்கின்றன.

இந்திய விடுதலைக்குப்பின் தமிழகத்தில் மாறுதல்கள் ஏற்பட்டன. முதலில் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் ஒரு வெள்ளோட்டமாக (சோதனை முறையில்) அரசு அலுவல்கள் யாவும் தமிழில் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டது. எனினும் முழுவீச்சில் அங்கு பணிகள் நடைபெறவில்லை என்றே சொல்லலாம்.

1952இல் கூட - திருச்சிராப்பள்ளியில் ஆட்சி மொழித் திட்டம் செயற்பட்டும் - விடுதலை பெற்று ஐந்தாண்டுகளாகியும் கூட - பிறமாவட்டங்கட்கு விரிவு படுத்திட அரசு முன்வரவில்லை. 1952 இல் இராசாசி கூறிய விடைகளும் தமிழ் ஆட்சிமொழிக்குத் துணை செய்வதாக இல்லை.

தொடர்ந்து நாம் இன்றும் ஆங்கிலத்திலேயே உரை நிகழ்த்திக் கொண்டிருப்பது வேடிக்கையாக இருக்கிறது என்கிறார் பி. இராமமூர்த்தி.

"ஆங்கிலம் இந்த நாட்டு மொழியில்லை. இந்த நாட்டிலும் அம்மொழி வேரூன்றவில்லை. அப்படி இருக்கிற மொழியை நாம் இந்நாட்டிலிருந்து வெளியேற்ற வேண்டும்..... ஆங்கிலேயர்களை விரட்டிய பின்பும், தொடர்ந்து அவர்கள் விட்டுச் சென்ற மொழியைப் பயன்படுத்துவதும் மிகவும் அவமானம் தரக்கூடிய ஒன்றாகும்'' என்கிறார் வி.ஆர். கிருட்டிண ஐயர். ஆனால் காங்கிரசுக் காரர்களாகிய பி.ஜி. கருத்திருமனும், கே. வினாயகமும் இவர்களுடைய தமிழ்ச் சார்பான கருத்துகளை எதிர்த்தே பேசியுள்ளனர். இவர்களை மறுத்து, ப. சீவானந்தமும் ஆணித்தரமாக முழங்கியுள்ளார். ஏ. கோவிந்தசாமியும் (பிற்காலத்தில் தி.மு.க. அமைச்சர்) டி. விசுவநாதனும் தமிழின் பயன்பாட்டுக்காகக் குரல் கொடுத்தனர்.

இதற்கு விடை சொன்ன அமைச்சர் சி. சுப்பிரமணியம் நமக்கு ஆறுதல் தரும் வகையிலேயே பேசியுள்ளார். குறிப்பாக, தெலுங்கு, மலையாளம், கன்னடம், ஒரியா, தமிழ் பேசும் எல்லாரையும் ஒரே மாநிலமாக வைத்துக் கொண்டு தமிழை முழு ஆட்சி மொழியாக்குவது கடினம் என்றும், முதலில் மொழிவாரி மாநிலம் அமைய வேண்டும் என்றும் வற்புறுத்தினார். ''மொழி வழி மாகாணங்கள் பிரிப்பதனால்தான் சிக்கல்கள் பல ஒழியும் என்றார்கள். நானும் அதை ஒப்புக் கொள்கிறேன். அப்படிப்பட்ட மொழிவாரி மாகாணங்கள் உருவாவதற்கு நாம் எல்லோரும் ஒன்றாகத் திரண்டு உழைப்போமாக'' என்றார்.

பலரும் வற்புறுத்திய அடிப்படையில் சூலை 1953இல் ஆந்திர மாநிலம் புதிதாக உருவானது. இதன்பின் சட்டமன்றத்தில் தெலுங்கை நீக்கிவிட்டு மற்ற மொழிகள் பேசப்பட்டன.

1953 திசம்பரில் மாவட்ட அளவிலும் நீதிமன்றங்களிலும் வட்டார மொழிகளில் நடவடிக்கைகள் அமையுமா என்று வி.ஆர். கிருட்டிண ஐயர் கேட்கிறார். ஆனால் இதற்கு, முதல்வராக இருந்த இராசாசி ஆர்வமிக்க, அக்கறை காட்டும் விடையைத் தரவில்லை.

"1948 ஆம் ஆண்டு எல்லா அரசாங்க நடவடிக்கையும் கடிதப் போக்குவரத்தும் ஒன்றிரண்டு மாவட்டங்களில் தமிழில் நடத்தவேண்டும் என்று ஆணையிடப்பட்டது. ஆனால் அரசுடன் கடிதப்போக்குவரத்து ஆங்கிலத்திலேயே தொடரும். உள்ளாட்சித் துறை அலுவலகங்களிலும் இச்செயல்முறை நடைமுறையில் இருக்க ஆணையிடப்பட்டது. ஆனால் நீதிமன்றங்களில் அமுல் படுத்தப்படவில்லை. ஒவ்வோர் ஆண்டும் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் குறித்துத் திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவர் அரசுக்கு அறிக்கை அனுப்பி வைக்கிறார்."

இந்நிலையில் ஏ. கோவிந்தசாமி ஓர் உண்மை நிகழ்ச்சியைச் சட்டமன்றத்தின் கவனத்துக்குக் கொண்டு வந்தார்.

"அண்மையில் சர்வ கட்சிகளும், சட்டசபை அங்கத்தினர்களும், தமிழ் ஆட்சிமொழி மாநாடு நடத்தி, தமிழ் ஆட்சிமொழியாக ஆகவேண்டுமென்ற தீர்மானம் சர்க்காருக்கு அனுப்பப்பட்டிருக்கிறது" என்கிறார்.

தமிழ் ஆட்சி மொழியாக வேண்டும் என்றால் சட்டமாக இயற்றப்பட வேண்டும் என்கிறார் சட்டப் பேரவைத் தலைவர். இந்த நிலையிலும் சி. சுப்பிரமணியம் உண்மையான நிலையைத் தெளிவு படுத்துகிறார்.

"உறுப்பினர்களுக்குத் தெரிந்த மொழியிலேயே, சட்டமன்றத்தில் நடவடிக்கைகள் அமைய வேண்டும் என்பதில் எவ்விதக் கருத்து வேறுபாடும் இருக்க முடியாது. மலையாளம், கன்னடம் பேசுகின்ற உறுப்பினர் நண்பர்கள் தொடர்ந்து சட்டமன்றத்தில் இருப்பதனால் மூன்று மொழிகளையும் பயன்படுத்துவதால் மிகவும் சிக்கலிற்கு, அநாவசியச் செலவு செய்ய வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளாக்கப்படுவோம். மொழிவாரி மாகாணங்கள் பிரிக்கப்பட்டால் இந்தப் பிரச்சினைக்கு ஒரு முடிவு கட்ட முடியும். அந்நாள் விரைவிலேயே வரும் என்று எதிர்பார்க்கிறேன்" சி. சுப்பிரமணியத்தின் போக்கு இதில் மிகத் தெளிவாக உள்ளமையைக் காணலாம்.

இந்தச் சூழ்நிலையில் ஒன்று மட்டும் தெரிகிறது. அனைத்துக் கட்சியினரும் தமிழ் ஆட்சிமொழியாக வேண்டும் என வலியுறுத்தினர். குறிப்பாக அந்தக் காலகட்டத்தில் செல்வாக்குடன் இருந்த, தி.மு.க. பொதுவுடைமைக் கட்சி, தமிழரசுக் கழகம் ஆகியவை எனலாம்.

வெளியிலும் தமிழ் அறிஞர்கள் பலர் மாநாடுகள் போட்டு 'தமிழ் ஆட்சிமொழி'யாக வேண்டும் என்று முழங்கினர். அரசுக்கு வேண்டுகோளும் வைத்தனர். எனவே அரசியல் கட்சிகளும், தமிழ் அறிஞர்களும் தமிழ் ஆட்சிமொழியாக வேண்டும் என்று வற்புறுத்தினார்கள் என்பதை மகிழ்வோடு குறிப்பிடலாம்.

எத்தனையோ பேர் சட்டமன்றத்தில் ஆர்வத்துடன் பேசியுள்ளார்கள். தமிழை ஆட்சிமொழியாக்க வேண்டும் என்று குரல் கொடுத்துள்ளனர். ஆனால் இவர்கள் அத்தனை பேரிலும் முன்னிற்பவர் கசபதி நாயக்கர்தான்.

17.3.55 இல் அவரது வினா: "சட்டமன்றத்தில் தமிழிலும், ஆங்கிலத்திலும் பதிவு செய்யப்பட்ட பேச்சுகள் எத்தனை?"

இதற்கு சி. சுப்பிரமணியம் சொல்லும் விடை மிகவும் கவனத்துக்குரியது. 1989 இல் நான் சட்டப் பேரவைத் தலைவராக இருந்தபோதும் 1996-2001 இல் அமைச்சராக இருந்தபோதும் சட்டமன்ற நடவடிக்கைகளை நினைவு கூர்கிறேன். ஓசூர், தளித் தொகுதிச் சட்டமன்ற உறுப்பினர்கள் பெரும்பாலும் தெலுங்கு பேசுவோர்களாக இருப்பார்கள். எனவே அவர்கள் வேறு வழியின்றி ஆங்கிலத்தில் பேச நேர்ந்தது. சில அமைச்சர்களும், சட்டப் பேரவைத் தலைவர் பழனிவேல் ராசனும் தங்கள் ஆங்கில வல்லமையைக் காட்டுவதற்காக எப்போதாவது ஆங்கிலத்தில் பேசுவது உண்டு. உறுப்பினர் அப்துல் லத்தீப் அவ்வப்போது தமிழ், உருது, ஆங்கிலம் என வேறுபாடில்லாமல் அள்ளி விடுவார். அப்போது சில மணித்துளிகளில் ஆங்கிலம் இடம் பெறும்.

மற்றபடி அனைத்தும் தமிழில்தான். என் தீர்ப்பின்போது நான் சிலவற்றை ஆங்கிலத்தில் மேற்கோள் காட்டியிருக்கிறேன். காரணம் 'May's parlimentary procedure' 'Koul and Sakthar தந்த நூல்கள் - ஆகியவற்றில் பல குறிப்புகள் அடங்கியுள்ளமையால் அவற்றைத் தக்க இடத்தில் மேற்கோள் காட்டித் தான் ஆகவேண்டும்.

மற்றபடி எல்லாம் தமிழில்; நல்ல தமிழில்; அவ்வப்போது நயம்மிக்க தமிழில், கசபதி நாயக்கர் 1955 இல் கொண்டு வந்த தீர்மானம் கவனத்தில் கொள்ளத் தக்கது.

"செங்கற்பட்டு, தென்னார்க்காடு, வடார்க்காடு ஆகிய மாவட்ட அரசு அலுவலகங்களிலும், இவற்றுக் கிடையேயும் சென்னை அரசுச் செயலகத்திற்கு இடையேயும் நடக்கும் தொடர்பு மடல்கள் அனைத்திலும் ஆங்கிலத்தைத் தவிர்த்துத் தமிழிலே நடத்த வேண்டும்" என்பது அவர் தீர்மானம்.

இந்த நிலையில் சி.சு.வின் விடை இதுதான்:

சட்டமேலவை (Legislative Council) கூடிய பின் ஆகஸ்டு 1954 வரை 332 பேர் ஆங்கிலத்தில் பேசியுள்ளனர். 34 பேர்தான் தமிழில் பேசியுள்ளனர். சட்டமன்றச் செய்தியாளர்கள் இப்படித்தான் பதிவு செய்துள்ளனர்.

ஆனால் சட்டமன்றக் கீழவையில் (Assembly) 596 ஆங்கிலப் பேச்சுகளும் 515 தமிழ்ப் பேச்சுகளும் பதிவு செய்யப்பட்டன. ஆங்கிலத்தில் பதிவு செய்ய 12 செய்தியாளர்கள் தமிழுக்கு 4 பேர், மலையாளத்திற்கு ஒருவர் என அப்போது இருந்துள்ளார்கள். மேலும் தமிழ்ச் சுருக்கெழுத்தாளர்கள் அமர்த்த ஆவன செய்வதாக அரசு உறுதியளித்தது.

19.3.55 இல் கசபதி நாயக்கர் பேசியதிலிருந்து சில உண்மைகள் தெரிய வரும்.

செங்கற்பட்டு தெ.ஆ., வ.ஆ. மாவட்டங்களில் இருக்கும் அலுவலகங்களிலும் இவற்றுக்கு இடையேயும் இவற்றுக்கும் சென்னைத் தலைமைச் செயலகத்துக்கும் இடையேயும் நடக்கும் கடிதப் போக்குவரத்துகள் அனைத்தும் ஆங்கிலத்திலேயே இருந்துள்ளன.

இவற்றைத் தமிழ் மொழியில் கொண்டுவர வேண்டும் என வற்புறுத்தி உரையாற்றுகிறார். அவர் உரை இதுதான்.

"கடிதப் போக்குவரத்துகள் இப்போது நடைபெறும் ஆங்கிலத்தில் இருப்பதைத் தவிர்த்து, தமிழ் மொழியில் நடத்த வேண்டும்"

அவரது பேச்சு வரலாற்றுச் சிறப்பு மிக்கது என்பதை உணர முடியும். அதிலிருந்து சில உண்மைகளும் பெறப்படும். ஏற்கெனவே 'தமிழை ஆட்சிமொழி'யாக்கவேண்டும் என்று சிலர் தனி நபர் சட்டமுன் வடிவாகக் கொண்டு வந்துள்ளனர் ஆனால் ஆளுநர் அதை எடுத்துக் கொள்ள ஆணை பிறப்பிக்கவில்லை.

இந்த நிலையில் மார்ச்சு 1955 இல் மீண்டும் தீர்மானம் கொண்டு வந்து அவர் பேசுகிறார். கடிதப் போக்குவரத்து தமிழில் வரவேண்டுமென்பதற்காக எவ்வளவு பேச வேண்டியிருக்கிறது?

ஒவ்வொரு மாவட்டத்திற்கும் இரண்டு தமிழ்த் தட்டச்சர்களையும் தமிழ்ச் சுருக்கெழுத்தாளர்களையும் அமர்த்த வேண்டும் என்கிறார் (இன்றைக்கு இவற்றின் எண்ணிக்கை. . . . ?)

1955 இல் இவர் வேண்டுவது இவ்வளவுதான். ஆனால் 1996 இல் நான் அமைச்சர் பொறுப்பேற்றபின் 1000 புதிய தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் - எண்ணற்ற தமிழ்த் தட்டச்சர்கள் - ஏராளமான தமிழ்ச் சுருக்கெழுத்தாளர்கள்.

மேலும் தமிழ் மென்பொருளைப் பயன்படுத்தித் தமிழிலேயே அனைத்தும் கொண்டு வந்துவிட்டோம். நெல்லை மாவட்டத்தில் தமிழ் மென்பொருளைப் பயன்படுத்தி அனைத்து நடவடிக்கைகளையும் தமிழ் மயமாக்கிட அப்போதைய மாவட்ட ஆட்சித் தலைவர் கி. தனவேல் ஆவன செய்தார். திருவாரூர் மாவட்டத்தில் அனைத்தையும் கணினி மயமாக்கித் தமிழில் எல்லாம் வருமாறு செய்தார் அப்போதைய மாவட்ட ஆட்சித் தலைவர் உமாசங்கர். இவை சில எடுத்துக்காட்டுகள். கசபதி நாயக்கர் காலத்துக்கும் தமிழ்க்குடிமகன் காலத்துக்கும் இடையில்

எத்தனை முன்னேற்றங்கள்! எத்தனை மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன என்பதை அனைவரும் ஒரு கணம் எண்ணிப் பார்க்கவேண்டும்.

பழைய வரலாற்றைப் புரட்டினால் ஏ. சுப்பிரமணியம் என்ற உறுப்பினரும் வலியுறுத்திப் பேசியுள்ளார். டாக்டர் சீனிவாசனும் உணர்ச்சி வசத்துடன் பேசியுள்ளார்.

என். அண்ணாமலைப் பிள்ளை பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

". . . . .மொத்த ஜில்லாக்களிலும் தமிழ் மொழியை ஆட்சி மொழியாகக் கொண்டு வரவேண்டுமென்பதைத் தவிர, இம்மாதிரியாக இரண்டு ஜில்லாக்களுக்கும் மூன்று ஜில்லாக்களுக்குமாகக் கொண்டு வருவதில் பிரயோஜனம் இல்லை."

வி.கே. ஜான் என்பவர் மலையாளம் பேசுபவராக இருந்தும் தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தை வலியுறுத்துகிறார்.

".....தமிழே ஆட்சிமொழி என்பதற்கான மசோதாவை அரசாங்கம் கொண்டு வரவேண்டுமென்று நான் விரும்புகிறேன். அப்படிச் செய்யாமல் அவையில் எங்களுக்குப் புரியாத நிலையில், தமிழிலே பேசுவது சரியல்ல. . . தமிழை ஆட்சிமொழியாகக் கொண்டு வருவதற்குச் சட்டமன்றத்தில் மசோதா ஒன்றைத் தாக்கல் செய்யுங்கள். அந்த மசோதாவை ஆதரிக்க நான் தயாராக இருக்கிறேன்."

அப்போது பக்தவத்சலம் போன்றவர்கள் பாம்புக்கும் வலிக்காமல் தடியும் சேதமாகிவிடாமல் பேசியதைப் பார்க்கும்போது வியப்பாக உள்ளது. ஆனால் கசபதி நாயக்கர் விடவில்லை. அவர் மீண்டும் வலியுறுத்துகிறார்.

"....தமிழ் ஆட்சிமொழியாக இருந்தால் எல்லா நடவடிக்கைகளும் தமிழ் மொழியிலே நடைபெறும். அதற்காகத்தான் இப்பொழுது மூன்று ஜில்லாக்களுக்கும் சென்னை வாழ் செக்ரடேரியட்டிற்கும் தொடர்பு ஏற்படுத்த வேண்டுமென்று இந்தத் தீர்மானத்தின் மூலமாகக் கேட்கிறேன். ஆட்சி மொழியாக வேண்டும் என்பதுதான் எல்லோருடைய அவாவும்.

ஒரு ஆணும் ஒரு பெண்ணும் மணம் செய்து கொண்டால்தான் குடும்ப வாழ்க்கை நடத்துவதாக அர்த்தம். அதுபோல் ஒரு இராஜ்யத்தை ஆண் என்றும் மொழியைப் பெண் என்றும் வைத்துக் கொண்டு இராஜ்ஜியத்திற்கும் மொழிக்கும் தொடர்பு ஏற்பட்டால்தான் ஆட்சி ஒழுங்காக நடைபெற முடியும். தமிழ் ஆட்சிமொழியாக வேண்டுமென்று மசோதா கொண்டு வந்தபோது, நான் ஒருவனே தனியாளாய்ப் பேசினேன். யாரும் அதற்கு ஆதரவு கொடுக்கவில்லை.... இப்பொழுது நாடோடித் தமிழ் வேண்டும் என்று சொல்கிறார்கள். நான் ஆங்கிலம்தான் படித்து உத்தியோகம் வகித்தேன். தமிழ் ஓரளவுதான் படித்திருக்கிறேன். ஆனால் தமிழில் உள்ள ஆர்வத்தினால் இப்பொழுது நன்கு தமிழைப் படித்தும், அதைப் பற்றிப் பேசியும் வருகிறேன். நான் இப்பொழுது என்ன

சொல்லுகிறேன் என்றால் சட்டம் செய்யாது இந்தக் காலத்தில் திட்டம் ஒன்றும் செய்துவிடமுடியாது. அது என்றைக்கும் இழுக்கு உண்டாக்கும். ஏற்கெனவே திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் நடவடிக்கைகள் தமிழில் இருக்க வேண்டும் என்று திட்டம் செய்திருக்கிறார்கள். அது ஒழுங்காக நடக்கிறதா என்பதுதான் இப்பொழுதுள்ள கேள்வி. திருச்சியில் திட்டமாக அங்கு என்ன வேலைகள் நடந்து இருக்கின்றன? திட்டம் வகுக்க வேண்டுமென்று கனம் ஓ.பி. இராமசாமி ரெட்டியார் அவர்கள் சொன்னார்களே, அதற்கெல்லாம் என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன? கனம் மந்திரி அவர்கள் மனதில் கை வைத்துச் சொல்வார்களா? அப்படியிருந்தால் 100 ஆண்டுகள் ஆனாலும் தமிழ் வராது. திருச்சிராப்பள்ளியை எடுத்துக் கொண்டால், அங்கே ஒரு கலெக்டர் ஒரு குமாஸ்தாவைப் பார்த்துப் பரிகாசமாக 'வாங்க ஒட்டக்கூத்தரே' என்று அழைப்பார். மற்றொருமுறை 'வாருங்கள் புகழேந்திப் புலவரே' என்று அழைப்பார்; பரிகாசமாகப் பேசுவார். இப்படி நிகழ்ந்தால் தமிழ்மொழி எப்படி வளரும்? இந்த மாதிரியாகத்தான் தமிழைத் தமிழரல்லாதார் அவமானப்படுத்துகிறார்கள்... திருச்சியில் ஐந்து ஆண்டுகளாகப் பரிசீலனை செய்த திட்டம் இன்னும் சரியாக நடைபெறுவதாகத் தெரியவில்லை. அங்கேயும், 'சபடேஜ்' (sabotage) செய்து வைத்திருக்கிறார்கள். நல்ல தமிழன் இதைக் கண்டு சும்மா இருப்பானா? .... தமிழை உண்மையாக நாட்டு மொழியாகச் செய்ய வேண்டுமானால் சென்னை வாழ் செக்ரடேரியட்டில் அது புகுத்தப்படவேண்டும். ...உங்கள் இஷ்டம்போல் ஒரு காலவரையறை ஏற்படுத்துங்கள் என்றுதான் கேட்கிறேன். எத்தனை ஆண்டுகள் ஆகும் என்ற கால அளவு சொல்லுங்கள் என்றுதான் கேட்கிறேன். ....சமீபத்தில் ஆந்திர தேசத்தில் ஒவ்வொரு ஆபிசருக்கும் ஓர் அகராதியைக் கொடுத்து, அதிலுள்ள சொற்களைப் பயன்படுத்திக் கொண்டு வருகிறார்கள். அவர்கள் அவ்விதம் செய்யும்போது, நாம் ஏன் செய்யக்கூடாது? அந்த அளவுக்கு நம்மனம் மாறவேண்டும். அதற்கான முயற்சிகள் செய்யவேண்டும்.... அதிகாரத்தில் இருக்கிறவர்கள் உறுதியாகச் செய்ய முடியும்."

சி. கந்தசாமி, பி. அரங்கசாமி ரெட்டியார் போன்றவர்களும் சார்ந்தே பேசினர். ப. சீவானந்தம் குறிப்பிடுகிறார்.

"நான் இந்த இராஜ்யத்தின் ஆட்சிமொழி தமிழாகத்தான் இருக்கவேண்டும் என்று கருதுகிறேன். தமிழ் மட்டுமல்ல கன்னடியர்களும், மலையாளிகளும் நம் இராஜ்யத்துடன் இருக்கும் வரையில் கன்னடமும், மலையாளமும் கூட நம் இராஜ்ய ஆட்சி மொழியாகவே இருக்க வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்கிறேன்."

5.8.55 இல் சி.சு.வின் பேச்சும் குறிப்பிடத்தக்க தெளிவைத் தருகிறது.

தமிழை ஆட்சிமொழியாக்கிட அரசும் விரும்புகிறது என்றும் மொழிவாரி மாநிலங்கள் பிரிந்துவிட்டால் நல்லது; அதன்பின் தமிழகத்தில் தமிழை ஆட்சிமொழியாகக் கொண்டுவந்து

விடலாம் என்றும் அவரது பேச்சில் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

எம்.பி. கோவிந்தமேனன் "தமிழ் ஆட்சிமொழியாக எங்கும் பரவி நிலைக்க வேண்டும் என்பதே தம் ஆசை" என்கிறார்.

இந்நிலையில் 26.11.1955 இல் கசபதி நாயக்கர் கொண்டுவந்த தனி நபர் தீர்மானம் மிகவும் குறிப்பிடத்தக்கது.

"எல்லா மாவட்ட அலுவலகத்திலும் இருந்துவரும் கடிதப் போக்குவரத்து மற்றும் நடைமுறைக்குப் பயன்படுத்தும் ஆங்கில மொழியை அகற்றிவிட்டுத் தமிழ்மொழியைப் பயன்படுத்த அரசைக் கோருதல்."

ஏ. சுப்பிரமணியம், அண்ணாமலைப் பிள்ளை போன்றவர்கள் கசபதி நாயக்கர் வழியில் குரல் கொடுத்தனர்.

எனவே சட்டமன்றத்தில் 1955 வரை யார் யாரெல்லாம் தமிழ் ஆட்சி மொழியாவதற்காகக் குரல் கொடுத்தனர் என்பதை நம்மால் உணர முடியும். கசபதி நாயக்கரின் பங்கு எத்தகையது என்பதையும் மனத்திற் கொள்ள வேண்டும்.

வெளியுலகில் ஒரு நல்ல சூழல் உருவாகி வந்தது. 1956 இல் கருநாடகம், கேரளம் ஆகியவையும் மொழிவாரி மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டன. எனவே 1.11.1956 இல் தமிழ்நாடு மட்டும் தனி மாநிலமாக, மொழி வாரி மாநிலமாகச் செயற்படத் தொடங்கியது.

இனி மலையாளம், கன்னடம் பேசுகின்ற உறுப்பினர்கள் அவரவர் மாநிலச் சட்டமன்றத்துக்குள் அடங்கி விடுவார்கள். ஏற்கெனவே ஆந்திரா பிரிந்துவிட்டது. இப்போது தமிழை ஆட்சிமொழியாக்கிடச் சட்டம் கொண்டு வருவதில் எந்தச் சிக்கலும் இல்லை.

இந்தச் சூழ்நிலையில் 7.10.1956 அன்று குளித்தலையில் நடைபெற்ற 'தமிழ் ஆட்சிமொழி மாநாட்டை' மீண்டும் நினைவிற் கொள்ள வேண்டும்.

ஒரு புறம் மொழிவாரி மாநிலமாகத் தமிழ் மாநிலம் தனித்து அமைந்துவிட்டது. வெளியில் தமிழ் அறிஞர்கள் எல்லாம் கூடி வலியுறுத்துகிறார்கள். தி.மு.கழகம், தமிழரசுக் கழகம், பொதுவுடைமைக் கட்சியினரும் வேகமாகக் குரல் கொடுக்கின்றனர்.

எனவே ஒரு நல்ல சூழ்நிலை உருவாகிவிட்டது. ஏற்கெனவே சி. சுப்பிரமணியம் உறுதியளித்தபடி பெருந்தலைவர் காமராசர் முதலமைச்சராக இருந்த காலத்தில் 27.12.1956 அன்று தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் கொண்டு வரப்பட்டது.

சி.சு. பேசுகிறார்:

"தமிழ் மலர்கிறது என்றால், அது ஒரு தனிப்பட்ட நிகழ்ச்சி அல்ல. நம் நாட்டிலே இந்த ஐம்பது, அறுபது வருஷ காலமாக நடந்த நிகழ்ச்சிகளின் ஒரு பலனாக, இன்றைக்கு ஒரு செடியிலே ஒரு பூ மலர்கிறது. இதிலும் நல்லகாயும் கனியும் இன்னும் நன்றாக வளர்ச்சி அடையும் என்பதில் எனக்கு எந்த விதமான சந்தேகமும் கிடையாது. ஆகையினால் நம்முடைய அரசாங்க மொழி தமிழாக இருக்கும் என்று பிரகடனம் செய்வதிலே நாம் ஒரு பெரிய முன்னேற்றப் பாதையிலே ஓர் அடியை எடுத்து வைத்திருக்கிறோம்" என்று பேசினார்.

மேலும் அவர் கூறுகிறார். "தமிழ் ஆட்சி மொழியாகிறதென்றால், அது அரசாங்க நிர்வாகத்துறையில் ஒரு முக்கியமான நிகழ்ச்சி என்பதில் சந்தேகமில்லை. ஆனால், நிர்வாகத்துறையில் மாற்றம் வேண்டும் என்பதற்காக மட்டும் செய்ததல்ல அது. மற்ற சூழ்நிலைகளுக்கேற்ப நாட்டில் உருவாகி வந்துள்ள சூழ்நிலைகளையொட்டி, நிர்வாகத் துறையிலும் மாற்றம் அவசியம் என்ற அடிப்படையில்தான் இன்று நாம் தமிழை ஆட்சி மொழியாக்கி வருகிறோம். ஆக, அது ஒரு தனிப்பட்ட நிகழ்ச்சி அல்ல"

இதில் பங்கு கொண்டவர்கள் கருத்துகளையும் பார்த்து நாம் மகிழவேண்டும். 'ஆட்சித் தமிழ்' நூல் பின்வருமாறு தொகுத்தளிக்கிறது.

சி.சு. பேச்சின் பிற்பகுதி

"என்னுடைய முன்னோர்கள் செய்த தவப்பயன் காரணமாக இந்தப் பெருமை எனக்குக் கிடைத்தது என்று கருதுகிறேன். என்னைவிடத் தகுதி பெற்றவர்கள், தமிழுக்காக உழைத்தவர்கள், தமிழிலேயே பெரும் பாண்டித்தியம் பெற்றவர்கள் எல்லாம் இருக்க, எனக்கு அந்தப் பாக்கியம் கிடைத்தது தனிப் பெருமை. அதைப்பற்றி உண்மையிலேயே எண்ணியெண்ணி மகிழ்கிறேன்."

இந்த நேரத்தில் சி.சு.வின் முயற்சியைக் குறிப்பிட்டுப் பாராட்டாமல் இருக்க முடியாது.

"தமிழை நிர்வாக மொழியாகக் கொண்டுவருவதற்குப் பல முயற்சிகள் எடுத்துக் கொள்ளவேண்டியது அவசியம் என்பதை எல்லோரும் ஒப்புக் கொண்டிருக்கிறோம். இந்த அடிப்படையில் பல நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன. படிப்படியாகத் தமிழ்மொழி நிர்வாக மொழியாக வரும் என்பதை வலியுறுத்தித் தெரிவித்துக் கொள்கிறேன்.

நிர்வாக விஷயத்தில் எவ்வளவிற்கு நம்முடைய மொழியை உபயோகப்படுத்திக் கொள்ள முடியுமோ அவ்வளவிற்கு உபயோகப்படுத்திக் கொள்ள விரும்புகிறோம். முதலில் சமாளிக்கச் சிறிது காலம் ஆங்கிலத்தை வைத்திருந்தால் பிறகு, தானே நம்முடைய மொழி, வளம் பெற்றவுடனேயே ஆங்கிலம் விலகிவிடும்"

மேலும் 1962 ஆம் ஆண்டில் சி.சு. பின்வருமாறு கூறுவதையும் இணைத்துப் பார்க்கவேண்டும்.

"தமிழில் ஆட்சி மொழிச் சொல் அகராதி தயாரித்தல், தமிழ்ச் சுருக்கெழுத்து, டைப்ரைட்டிங் பயிற்சி போன்ற ஏற்பாடுகள் மட்டுமன்றிக் கல்வித்துறையிலேயே பெரும்மாற்றம் செய்வது அவசியமாயிற்று. அதுதான் கல்லூரிகளிலும் தமிழையே பாட போதனை மொழியாகச் செய்யும் முயற்சி.

இன்றுள்ள அதிகாரிகளுக்கு என்னதான் தமிழில் பயிற்சி அளித்தாலுங்கூட, அவர்களுக்கு ஆட்சி மொழிச் சொல் அகராதியைத் தந்தாலுங்கூட இவையெல்லாம் தற்காலிக ஏற்பாடுகளாகத்தாம் இருக்க முடியும். ஆட்சியில் தமிழ் முழுமையாக, முறையாக இடம் பெற வேண்டுமானால் தமிழிலேயே கல்வி பயின்று பட்டம் பெற்றவர்கள் அதிகாரிகளாகும் காலம் வர வேண்டும். அதுதான் நிரந்தர ஏற்பாடாக இருக்க முடியும்.

இதில் முதல் பிரச்சினை, ஆங்கிலத்தில் உள்ள சொற்களுக்கெல்லாம் அவற்றிற்கு நேரான தமிழ்ச் சொற்களை நிர்ணயிக்க வேண்டியிருந்தது. ஆங்கிலத்திலுள்ள நிர்வாகத்துறைச் சொற்கள், சட்டத்துறைச் சொற்கள் போன்றவற்றையெல்லாம் தமிழ்ப் படுத்த வேண்டியிருந்தது. அதேபோல், அரசாங்க அலுவலகங்களில் டைப்ரைட்டர்கள் உபயோகம் ஒரு முக்கிய அம்சமாக இருப்பதால் தமிழில் டைப்ரைட்டர் இயந்திரங்களை அபிவிருத்தி செய்வது, தமிழ்ச் சுருக்கெழுத்து டைப்ரைட்டிங்கில் நிறையப் பேர்களுக்குப் பயிற்சி அளிப்பது ஆகியவையும் அவசியமாயின. அதேபோல், ஆங்கிலத்தையே நிர்வாக மொழியாகப் பயன்படுத்திப் பழக்கப்பட்ட அதிகாரிகளுக்குத் தமிழில் பயிற்சி அளிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஆனால், அவர்களுக்கு அத்தகைய பயிற்சி அளிப்பதற்கும், பிறகு அவர்கள் பார்த்து உபயோகிப்பதற்கும் ஆட்சிச் சொல் அகராதியைத் தமிழில் தயாரிக்க வேண்டியிருந்தது."

இந்த இயலில் தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் நிறைவேற்றப்படுவதற்கு முன் இருந்த நாட்டுச் சூழ்நிலையையும், யார்யாரெல்லாம் வெவ்வேறு முனைகளில் இருந்து குரல் கொடுத்தார்கள் என்பதையும் விரிவாகப் பார்த்தோம்.

அரசு அலுவலகங்களில்

## கடிதப்போக்குவரத்து தமிழில் உள்ளதா?

### ஆய்வு செய்ய தனிப்படை அமைப்பு

## இயல் - இரண்டு

# தமிழ் ஆட்சிமொழிச் சட்டம்

பிற செய்திகட்குள் நாம் புகுவதற்கு முன் 1956 இல் நிறைவேற்றப்பட்ட தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தினை முழுமையாக ஒரு பார்வை பார்க்க வேண்டும்.

## 1956ஆம் ஆண்டு தமிழ்நாடு ஆட்சிமொழிச் சட்டம்

(தமிழ்நாடு சட்ட எண்.XXXIX/1956)

(1957 ஆம் ஆண்டு சனவரி 19 அன்று ஆளுநரின் இணக்கமளிப்பைப் பெற்று, முதலாவதாக 1957 ஆம் ஆண்டு சனவரி 23 அன்று புனித ஜார்ஜ் கோட்டை அரசிதழில் வெளியிடப்பட்டது.)

தமிழ்நாடு மாநிலத்தின் அலுவல் முறை நோக்கங்களில் பயன்படுத்தப்பட வேண்டிய மொழியாகத் தமிழை ஏற்றுக் கொள்வதற்கு வகை செய்வதற்கான ஒரு சட்டம்.

ஒரு மாநிலத்தின் சட்டமன்றம் சட்டத்தின் வாயிலாக அந்த மாநிலத்தில் வழங்கி வருகிற மொழிகளில் ஏதேனும் ஒன்றை அல்லது ஒன்றுக்கு மேற்பட்டவற்றை அந்த மாநிலத்தின் அலுவல் முறை நோக்கங்கள் எல்லாவற்றுக்கும் அல்லது அவற்றில் எதற்கும் ஏற்றுக் கொள்வதையும், சட்டமுன் வடிவுகள், சட்டங்கள், அவசரச் சட்டங்கள், ஆணைகள், விதிகள், ஒழுங்குமுறை விதிகள், துணைவிதிகள் ஆகியவற்றில் பயன்படுத்துவதற்காக ஆங்கில மொழி அல்லாத பிறமொழி எதையும் வகுத்துரைப்பதையும் அரசமைப்பு இயல்விப்பதால்:

இந்தியக் குடியரசின் ஏழாம் ஆண்டில் பின்வருமாறு சட்டம் இயற்றப்படுவதாகுக:-

1. (1) இந்தச் சட்டம், 1956ஆம் ஆண்டு தமிழ்நாடு ஆட்சிமொழிச் சட்டம் என்று வழங்கப்பெறும்

   (2) இது தமிழ்நாடு மாநிலம் முழுவதையும் அளாவி நிற்கும்.

2. தமிழ்நாடு மாநிலத்தின் ஆட்சிமொழியாகத் தமிழ் இருத்தல் வேண்டும்.

3. 2ஆம் பிரிவில் என்ன இருந்தபோதிலும், மற்றும் அரசமைப்பின் 346, 347 ஆகிய உறுப்புகளின் வகைமுறைகளுக்கு ஊறின்றியும், ஆங்கில மொழியானது, அது இந்தச் சட்டத்தின் தொடக்க நிலைக்கு முன்பு மாநிலத்தின் எந்த அலுவல் முறை நோக்கங்களுக்குப் பயன்படுத்தப்பட்டு வந்ததோ அந்த நோக்கங்கள் எல்லாவற்றிலும், மாநில அரசு 4ஆம் பிரிவின் படி அறிவிக்கை வாயிலாக, அந்த அறிவிக்கையில் குறித்துரைக்கப்படும் அலுவல் முறை நோக்கம் எதைப் பொறுத்தும், வேறு வகையில் பணிக்கும் வரை, தொடர்ந்து பயன்படுத்தப்படுதல் வேண்டும்.

4. மாநில அரசு, அவ்வப்போது பிறப்பிக்கும் அறிவிக்கை வாயிலாக அந்த அறிக்கையில் குறித்துரைக்கப்படலாகும் அலுவல் முறை நோக்கங்களைப் பொறுத்துத் தமிழ் பயன்படுத்தப்படுதல் வேண்டும் என்று பணிக்கலாம்.

1/4 அ இந்தச் சட்டத்தின் 2,3,4 ஆகிய பிரிவுகளில் அல்லது 1908 ஆம் ஆண்டு உரிமை வழக்கு விசாரணைமுறைத் தொகுப்புச் சட்டத்தில் (மையச் சட்டம் ஏ/1908) அல்லது 1973 ஆம் ஆண்டு குற்ற விசாரணை முறைத் தொகுப்புச் சட்டத்தில் (மையச் சட்டம் 2/1974) என்ன அடங்கியிருந்தபோதிலும், எல்லா நடவடிக்கைகளிலும் சான்றைப் பதிவு செய்யும் நோக்கத்திற்காக:-

அ) உயர் நீதிமன்றத்துக்குக் கீழமைந்த உரிமை வழக்கு நீதி மன்றங்கள் மற்றும் குற்றவழக்கு நீதி மன்றங்கள்.

ஆ) தீர்ப்பாயங்கள், மற்றும்

இ) குத்தகை நீதிமன்றங்கள் மற்றும் வருவாய்த்துறை நீதிமன்றங்கள், எல்லாவற்றின் மொழியாகத் தமிழ் இருத்தல் வேண்டும்.

ஆனால் அத்தகைய நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயம் எதிலும் தலைமை வகிக்கும் அலுவலர், தமிழில் சான்றைப் பதிவுசெய்கையில் சரியான கருத்தையும் பொருளையும் வெளிக்கொணர்வதற்குத் தேவையென அவர் கருதுகின்ற இடத்திலெல்லாம், ஆங்கிலச் சொற்களையும் சொற்றொடர்களையும் பயன்படுத்தலாம்.

மேலும் உயர்நீதிமன்றம், பொது அல்லது சிறப்பு ஆணை வாயிலாக:-

அ) உரிமை வழக்கு அல்லது குற்றவழக்கு நீதிமன்றங்களில் அல்லது தீர்ப்பாயங்களில் தலைமை வகிக்கும் அலுவலர்களில் எந்த வகையினருக்கும், அல்லது

ஆ) அத்தகைய நீதி மன்றம் அல்லது தீர்ப்பாயம் எதிலும் தலைமை வகிக்கும் அலுவலர் எவருக்கும்

அத்தகைய ஆணையில் குறித்துரைக்கப்படலாகும் சூழ்நிலைகளிலும் அதில் குறித்துரைக்கப்படலாகும் கால அளவுக்கும் சான்றை ஆங்கிலத்தில் பதிவு செய்வதற்கு இசைவளிக்கலாம்:

அத்துடன், வருவாய்த்துறை வாரியம், பொது அல்லது சிறப்பு ஆணை வாயிலாக:-

அ) குத்தகை நீதிமன்றங்களில் அல்லது வருவாய்த்துறை நீதிமன்றங்களில் தலைமைவகிக்கும் அலுவலர்களில் எந்த வகையினர்க்கும், அல்லது

ஆ) அத்தகைய நீதிமன்றம் எதிலும் தலைமை வகிக்கும் அலுவலர் எவருக்கும்

அத்தகைய ஆணையில் குறித்துரைக்கப்படலாகும் சூழ்நிலைகளிலும் அதில் குறித்துரைக்கப்படலாகும் கால அளவுக்கும் சான்றை ஆங்கிலத்தில் பதிவு செய்வதற்கு இசைவளிக்கலாம்.

விளக்கம்: இந்தப் பிரிவிலும் 4 அ பிரிவிலும் "குத்தகை நீதிமன்றம்" அல்லது "வருவாய்த்துறை நீதிமன்றம்" என்பது, வருவாய்த்துறை அலுவலர் ஒருவரால் தலைமை வகிக்கப்படும் நீதிமன்றம் எதுவும் என்று பொருள்படுதல் வேண்டும்.

1/4அ. (1) இந்தச் சட்டத்தின் 2,3,4 ஆகிய பிரிவுகளில் அல்லது 1908 ஆம் ஆண்டு உரிமை வழக்கு விசாரணை முறைத் தொகுப்புச் சட்டத்தில் (மையச் சட்டம் ஏ/1908) அல்லது 1973 ஆம் ஆண்டு குற்ற விசாரணை முறைத் தொகுப்புச் சட்டத்தில் (மையச் சட்டம் 2/1974) என்ன அடங்கியிருந்த போதிலும், மற்றும் (2) ஆம் உட்பிரிவின் வகை முறைகளுக்கும் உட்பட்டுத் தீர்ப்புகள், தீர்ப்பாணைகள், ஆணைகள் ஆகியவற்றை எழுதும் நோக்கத்திற்காக:-

அ) உயர் நீதிமன்றத்துக்குக் கீழமைந்த உரிமை வழக்கு நீதிமன்றங்கள்,

ஆ) உயர் நீதிமன்றத்துக்குக் கீழமைந்த குற்றவழக்கு நீதிமன்றங்கள்,

இ) தீர்ப்பாயங்கள், மற்றும்

உ) குத்தகை நீதிமன்றங்கள் மற்றும் வருவாய்த்துறை நீதிமன்றங்கள், எல்லாவற்றின் மொழியாகத் தமிழ் இருத்தல் வேண்டும்.

ஆனால் அத்தகைய நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயம் எதிலும் தலைமை வகிக்கும் அலுவலர், தீர்ப்புகளை, தீர்ப்பாணைகளை மற்றும் ஆணைகளைத் தமிழில் எழுதுகையில், சரியான கருத்தையும் பொருளையும் வெளிக்கொணர்வதற்குத் தேவையென அவர் கருதுகின்ற இடத்திலெல்லாம், ஆங்கிலச் சொற்களையும் சொற்றொடர்களையும் பயன்படுத்தலாம்.

மேலும் உயர்நீதிமன்றம், பொது அல்லது சிறப்பு ஆணை வாயிலாக:-

அ) உரிமை வழக்கு அல்லது குற்றவழக்கு நீதி மன்றங்களில் அல்லது தீர்ப்பாயங்களில் தலைமை வகிக்கும் அலுவலர்களில் எந்த வகையினருக்கும், அல்லது

ஆ) அத்தகைய நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயம் எதிலும் தலைமை வகிக்கும் அலுவலர் எவருக்கும்

அத்தகைய ஆணையில் குறித்துரைக்கப்படலாகும் சூழ்நிலைகளிலும் அதில் குறித்துரைக்கப்படலாகும் கால அளவுக்கும் தீர்ப்புகள், தீர்ப்பாணைகள், ஆணைகள் ஆகியவற்றை ஆங்கிலத்தில் எழுதுவதற்கு இசைவளிக்கலாம்.

மேலும் வருவாய்த்துறை வாரியம், பொது அல்லது சிறப்பு ஆணை வாயிலாக:-

அ) குத்தகை நீதிமன்றங்களில் அல்லது வருவாய்த்துறை நீதிமன்றங்களில் தலைமைவகிக்கும் அலுவலர்களில் எந்த வகையினருக்கும், அல்லது

ஆ) அத்தகைய நீதிமன்றம் எதிலும் தலைமை வகிக்கும் அலுவலர் எவருக்கும்

அத்தகைய ஆணையில் குறித்துரைக்கப்படலாகும் சூழ்நிலைகளிலும் அதில் குறித்துரைக்கப்படலாகும் கால அளவுக்கும் தீர்ப்புகளையும், ஆணைகளையும் ஆங்கிலத்தில் எழுதுவதற்கு இசைவளிக்கலாம்.

(2), (1) ஆம் உட்பிரிவின் வகைமுறைகள், மாநில அரசு அறிவிக்கை வாயிலாகக் குறிக்கலாகும் தேதியில் நடைமுறைக்கு வருதல் வேண்டும், மற்றும் -

அ) உயர் நீதிமன்றத்துக்குக் கீழமைந்த உரிமை வழக்கு நீதி மன்றங்கள்,

ஆ) உயர் நீதிமன்றத்துக்குக் கீழமைந்த குற்றவழக்கு நீதிமன்றங்கள்,

இ) தீர்ப்பாயங்கள், மற்றும்

உ) குத்தகை நீதிமன்றங்கள் மற்றும் வருவாய்த்துறை நீதிமன்றங்கள்,
பொறுத்து வெவ்வேறு தேதிகள் குறிக்கப்படலாம்.

5. மாநில அரசு அறிவிக்கை வாயிலாகக் குறித்துரைக்கலாகும் தேதியன்றும் அது முதற்கொண்டும்:-

அ) தமிழ்நாடு மாநிலச் சட்டமன்றத்தில் அறிமுகப்படுத்தப்படும் சட்டமுன் வடிவுகளில் அல்லது அதைப் பொறுத்து முன் மொழியப்படும் திருத்தங்களில் அல்லது அந்தச் சட்டமன்றத்தால் நிறைவேற்றப்படும் சட்டங்களில்.

ஆ) அரசமைப்பின் 213 ஆம் உறுப்பின்படி சாற்றாணை செய்யப்படும் அவசரச் சட்டங்களில்,

இ) அரசமைப்பின்படி அல்லது நாடாளுமன்றத்தால் அல்லது மாநிலச் சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட ஏதேனும் சட்டத்தின்படி மாநில அரசால் பிறப்பிக்கப்படும் ஆணைகளில், விதிகளில் ஒழுங்குமுறை விதிகளில் மற்றும் துணை விதிகளில் பயன்படுத்தப்பட வேண்டிய மொழி தமிழாக இருத்தல் வேண்டும்.

ஆனால் (அ) முதல் (இ) வரையில் உள்ள கூறுகளில் குறிப்பிடப்பட்டுள்ள வெவ்வேறு இனங்களைப் பொறுத்து வெவ்வேறு தேதிகளை மாநில அரசு குறிக்கலாம்.

6. 4,5 ஆகிய பிரிவுகளின்படி பிறப்பிக்கப்படும் அறிவிக்கைகள் அனைத்தும் அவை பிறப்பிக்கப்பட்ட பின்பு கூடிய விரைவில் மாநிலச் சட்டமன்றத்தின் ஈரவைகளின் முன்பும்

வைக்கப்படுதல் வேண்டும்; மற்றும் அந்த அறிவிக்கைகள், சட்டமன்றப் பேரவை, அது ஒரே கூட்டத் தொடரிலோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட கூட்டத் தொடர்களிலோ, உள்ளபடியே அமர்கிற நாளிலிருந்து பதினான்கு நாட்களுக்குள் செய்யலாகும் திருத்தங்கள் என்னும் முறையிலான மாறுதல்களுக்கு அல்லது நீத்தறவுக்கு உட்பட்டவையாயிருத்தல் வேண்டும்".

1956ஆம் ஆண்டில் வெளியான இந்தச் சட்டத்தின் சில பிரிவுகளில் 1976 ஆம் ஆண்டு சில திருத்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. (சட்ட எண்: 41/1976) அவற்றையும் இணைத்தே மேற்கண்ட சட்டப் பிரிவுகள் இங்கே தரப்பட்டுள்ளன.

## எங்கே தமிழ்?

C.No. 401/97/B.2 dt. 6-97

*CERTIFICATE No

678486



DISTRICT CODE 0 2

TALUK CODE 1 0

VILLAGE CODE 0 9 3

### COMMUNITY CERTIFICATE

This is to certify that ......Jeyapirakash.......... son/~~daughter~~ of Thiru ........ Ganesan - .......... of ...Keel Nallathur... village/town ....Tiruvallur...., taluk ......MGR................district of the State of Tamil Nadu belongs to .....Hindu Vanniar..........community, which is recognised as a Most Backward Class/~~Scheduled Caste/Scheduled Tribe~~ as per G.O. Ms. No.......28.........Dated 19.7.94./~~The S.C and S.T.~~ Orders (Amendment) Act, 1976, vide Sl. No....26..

2. It is certified that..........Jeyapirakash..........and his/her family ordinarily reside(s) at............Keel Nallathur village/town ......Tiruvallur.....taluk.........MGR........ district of the State of Tamil Nadu.

ZONAL DEPUTY TAHSILDAR
VENGATHUR ZONE
THIRUVALLUR TALUK.

Seal



* This Certificate Should not be Filed in the Application Forms.

Note.—Competent Authority for issue of Certificate: For SC/STs, ... Taluk Tahsildar; ... R.D.O.'s; for B.Cs and O.Cs, Head Quarter's Deputy Tahsildar/Special Deputy Tahsildars.

தமிழ்நாடு அரசு வழங்கும் சாதிச் சான்றிதழ். இது. இதில் மருந்துக்குக் கூடத் தமிழ் இல்லை! துணை வட்டாட்சியர் கூட ஆங்கிலத்தில்தான் கையெழுத்திட்டு இருக்கிறார்!

—இரா.ஏ. கணேசன், கீழ்நல்லாத்தூர்.

இயல் - மூன்று

## பேராயக் கட்சி ஆட்சிக்காலம்

1956 இல் காமராசர் முதலமைச்சராக இருந்தபோது கல்வியமைச்சராக இருந்த சி. சுப்பிரமணியம் அவர்கள் தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தைக் கொண்டு வந்தார் என்பதை அறிவோம். இந்நிலையில் 1957 தேர்தலிலும் பேராயக்கட்சியே ஆட்சி அமைத்தது. இவ்வாட்சி 1962 இலும் வெற்றி பெற்று 1967 வரை தொடர்ந்தது.

காமராசருக்குப் பின் பக்தவத்சலம் முதல்வராக வந்தார். 1957 முதல் 1965 வரை அமைதியாகவே நாடு சென்றது. 1965 இல் தீவிரமான இந்தித் திணிப்பு எதிர்ப்புப் போராட்டம் நடைபெற்று எண்ணற்றோர் தீக்குளித்து மாண்டனர். பலர் அரசினரின் துப்பாக்கிச் சூட்டில் மாண்டனர்; எனவே 1965 முதல் 1967 வரை தமிழை ஆட்சிமொழியாக்குவதற்கான முயற்சிகள் அல்லது ஆர்வம் பள்ளத்துக்குத் தள்ளப்பட்டன என்பதை அனைவரும் உய்த்துணர முடியும். எனினும் 1957 முதல் 1965 வரை ஏன் 1967 வரை பத்தாண்டு காலத்தின் பேராயக் கட்சி ஆட்சி தமிழை ஆட்சிமொழியாக்குவதில் காட்டிய அக்கறை எவ்வளவு என்று பார்க்கலாம்.

தமிழை ஆட்சிமொழியாக்க வேண்டும் என்று சட்டமியற்றி விட்டோம். அதைச் செயற்படுத்தும் பொறுப்பு இப்போது அலுவலர்கள் கையில் வருகின்றது. அதுவும் செயலர்களாக இருக்கின்ற இ.ஆ.ப. அலுவலர்கள்தாம் இதைச் செயற்படுத்த வேண்டும். ஆனால் தமிழை ஆட்சிமொழியாக்கும் முதல் அரசாணையையே ஆங்கிலத்தில் வெளியிடுகின்றனர். இது அதிர்ச்சி தரத்தக்க உண்மையாகும்.

அந்த ஆணையை அப்படியே தருகிறேன்.

GOVERNMENT OF MADRAS

ABSTRACT

Correspondence - Tamil as Official language - Implementation Committee - Constituted.

PUBLIC (GENERAL - M) DEPARTMENT

G.O. Ms No.192 Dated 21st January 1957

ORDER :

The Government have undertaken legislation to provide for the adoption of Tamil as the language to be used for official purpose in the State of Madras. The Bill has received the approval of the legislatures and is awaiting assent. The Government have decided to constitute a Committee to advise the Government as to the steps that should be taken above. They accordingly constitute a Committee consisting of the following Members:

1. Sri S. Venkateswaran, I.C.S., Member, Board of Revenue, Madras: Chairman
2. Sri R.A. Gopalaswamy, I.C.S., Secretary, Health, Education and Local Administration Department, Madras: Member
3. Sri M. Anantanarayanan, I.C.S., Director of Legal Studies, Madras: Member
4. Sri T.K. Sankaravadivelu, I.A.S., Secretary, Revenue Department, Madras: Member

2. The Committee is requested to set about its work immediately and submit its report to Government within a period of two months.

(By Order of the Governor)

W.R.S. SATTHIANANDHAN
Chief Secretary of Government.

தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தை எப்படிச் செயற்படுத்தலாம் என்பதற்கு அறிவுரை வழங்குவதற்காக ஒரு குழு. இதை எளிதாய்த் தமிழில் எழுத முடியும். (இப்போது தமிழில் மட்டும் இதுபோன்ற ஆணைகள் வருகின்றன என்பதையும் மனத்திற் கொள்ள வேண்டும்)

ஆனால் தலைமைச் செயலர் பெயரில் வெளியான அரசாணை ஆங்கிலத்தில் வெளி வந்தது. அப்போதைய கல்வி அமைச்சர் இதில் கவனம் செலுத்தவில்லை என்றே கருதுகிறேன். 1957 முதல் 1962 வரை தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர்கள் 15 பேரும், 1962 முதல் 1967 வரை தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர்கள் 50 பேரும் இருந்துள்ளனர். அவர்களில் யார்யாரெல்லாம் ஆங்கிலத்தில் அரசாணை வருவதைக் கண்டித்துப் பேசினர், தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கத்திற்கான கருத்துகள் எவ்வாறு எடுத்து வைக்கப்பட்டன என்பது குறித்துத் தனியே ஓர் ஆய்வு நடத்த வேண்டும்.

அந்த வகையில் பேராயக்கட்சி ஆட்சியில் வெளியிடப்பட்ட அரசாணைகள் இவைதாம்.

21.1.1957 முதல் 20.12.1966 இல் வெளியிடப்பட்ட ஆணை வரை அனைத்தும் ஆங்கிலத்தில்தான். அலுவலர்கள் பத்தாண்டு காலத்தைத் 'தமிழ் ஆட்சிமொழி' என்னும் பெயரில் எப்படி வீணடித்துள்ளார்கள் என்பதை உணரலாம். இந்தக் காலகட்டத்தில் வந்தவை 128 அரசாணைகள்.

அரசாணைகள் பற்றி விரிவாக மற்றோர் இயலில் ஆய்வு செய்யப்படுவதால் இங்கு அரசின் முயற்சிகள் மட்டுமே சுட்டப்படுகின்றன.

அரசாணைகளைப் பார்க்கும்போது தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தினைத் தமிழகத்தின் எல்லாத்துறைகட்கும் கொண்டு வந்து விட்டார்கள் என்றே சொல்லத் தோன்றுகிறது. ஆனால் நடந்தது என்ன?

அரசாணைகளையே ஆங்கிலத்தில் வெளியிட்டுக் கொண்டிருக்கும்போது தலைமைச் செயலகமே இன்னும் தமிழில் அரசாணைகளை வெளியிட முன் வராதபோது மாவட்ட அலுவலகங்களில், துணைத் தலைமை அலுவலகங்களில் எந்த அளவுக்குத் தமிழ் ஆட்சிமொழியாகக் கையாளப் பட்டிருக்கும் என்பதைப் புரிந்து கொள்ள வெகுநேரம் பிடிக்காது.

அதிலும் பெரும்பாலான அரசாணைகள் தமிழ்த் தட்டச்சுப் பொறிகள், தமிழ்த் தட்டச்சர்கள் பணியமர்த்தம், தமிழில் தட்டச்சுச் செய்யப் பயிற்சி, தமிழ்ச் சுருக்கெழுத்தாளர்கள் அமர்த்தம் போன்றவற்றைப் பற்றியே விரிவாகப் பேசியுள்ளன.

1993 இல் நான் எழுதிய கட்டுரையை 82 ஆம் பக்கத்தில் பார்க்கவும். அரசாணைகள் பற்றிய இயலில் பிற விளக்கங்களை அறியவும்.

1.5.66 க்குள் எல்லா மாவட்டங்களிலும் அனுப்பப்படும் அனைத்து அலுவலகக் கோப்புகளிலும் தமிழ் பயன்படுத்தப்பட வேண்டும் என்றே அரசாணைகள் அதிகாரத்தோடு ஆணையிட்டன.

ஆனால் 1997 இல் தலைமைச் செயலகத்தை ஆய்வு செய்த போதுதான் 1966 இல் நம் அலுவலர்கள் என்ன செய்திருப்பார்கள் என்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது. அலுவலர்கள் இதில் போதிய அளவு அக்கறை காட்டவில்லை என்பதோடு தமிழை அலட்சியமாகக் கருதி ஒதுக்கினர். ஆங்கிலத்தை விடவே மறுத்தனர் என்பதுதான் உண்மை. தமிழ் ஆட்சிமொழிக்காக அரசாணை பிறப்பித்தவர்களே, அவர்கள் அளவில் ஆங்கிலத்தை விட்டுவிடாமல் அடுத்தவர்க்கு ஆணை பிறப்பித்துக் கொண்டிருந்தனர்.



இயல் - நான்கு

# முந்திக் கொண்ட சிங்கப்பூர்

நமது மாநிலத்தில் தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் வந்து விட்டது அதைச் செயற்படுத்துவதற்கான அரசாணைகள் பிறப்பிக்கப்பட்டு விட்டன. 1956 முதல் 1967 வரை 11 ஆண்டுகள் ஓடிப் போய் விட்டன.

இந்த நேரத்தில் 'சிங்கப்பூரில் தமிழ் ஆட்சிமொழி' பற்றியும் நாம் ஒப்பிட்டுக்காண வேண்டும். அப்போது தான் சில உண்மைகள் விளங்கும்.

தமிழகத்தில் (2001) இப்போது மக்கள் தொகை 6 கோடியே 21 இலட்சம். வெளிநாடுகளில் தமிழர்களின் எண்ணிக்கை 77 இலட்சம். இதை அப்படியே புள்ளி விவரத்தோடு தந்தால் நம் இனத்தார் எங்கெங்கெல்லாம் இருக்கிறார்கள் என்பதைத் தெரிந்துகொள்ள முடியும். நம் தோழர்கட்குப் பரவலாகத் தெரிந்த நாடுகளும் உண்டு. கவனத்துக்கு வாராத பகுதிகளும் உண்டு.

உலகெங்கும் உள்ள தமிழர்கள் விவரம்

(தோராயமாக)

| | | | |
|---|---|---|---|
| 1. | ஸ்பெயின் | - | 1,000 |
| 2. | ஜிபுட்டி | - | 1,000 |
| 3. | இராக் | - | 1,000 |
| 4. | பிலிப்பைன்க | - | 1,000 |
| 5. | ஆங்காங் | - | 2,000 |
| 6. | தாய்லாந்து | - | 2,000 |
| 7. | போர்த்துகல் | - | 2,500 |
| 8. | சுவீடன் | - | 3,000 |
| 9. | நார்வே | - | 3,000 |
| 10. | காடார் | - | 3,000 |
| 11. | ஜோர்டான் | - | 4,000 |
| 12. | ஓமான் | - | 5,000 |
| 13. | டென்மார்க் | - | 5,000 |
| 14. | இத்தாலி | - | 5,000 |

| | | | |
|---|---|---|---|
| 15. | நியூசிலாந்து | - | 5,000 |
| 16. | பஃரெயின் | - | 5,000 |
| 17. | சீசெல்சு | - | 7,540 |
| 18. | எமிரேட்சு | - | 10,000 |
| 19. | அமெரிக்க ஐக்கிய நாடுகள் | - | 10,000 |
| 20. | கயானா | - | 10,000 |
| 21. | குவைத் | - | 10,000 |
| 22. | சவூதி அரேபியா | - | 25,000 |
| 23. | செர்மனி | - | 40,000 |
| 24. | இந்தோனேசியா | - | 50,000 |
| 25. | ஆசுதிரேலியா | - | 75,000 |
| 26. | மொரிசியசு | - | 1,00,000 |
| 27. | சுரிநாம் | - | 1,00,000 |
| 28. | பிரான்சு | - | 1,00,000 |
| 29. | கனடா | - | 1,20,000 |
| 30. | சிங்கப்பூர் | - | 1,20,000 |
| 31. | மியான்மர் | - | 2,50,000 |
| 32. | தென் ஆப்பிரிக்கா | - | 3,00,000 |
| 33. | பிரிட்டன் | - | 3,00,000 |
| 34. | இரியூனியன் | - | 3,50,000 |
| 35. | மலேசியா | - | 16,00,000 |
| 36. | இலங்கை | - | 40,00,000 |
| | | | 76,26,040 |

நாம் தமிழர்கள். நமது நாடு தமிழ்நாடு. எனவே தமிழ்தான் தமிழ் நாட்டின் ஆட்சிமொழி என்று சட்டம் செய்வதில் எந்த இடரும் இல்லை. அதிலும் ஆந்திரம், கேரளம், கருநாடகம் என்ற மாநிலங்கள் பிரிந்த பிறகு, 1.11.1956 இல் தமிழ்நாடு தனி மாநிலம் ஆன பிறகுதான் நாம் ஆட்சிமொழிச் சட்டத்தைக் கொண்டுவர முடிந்தது. ஆனால், சிங்கப்பூரைப் பொறுத்தவரையில் தமிழர்கள் குடியேறியவர்கள்தான். எண்ணிக்கையும் அதிகமில்லை. சற்றேறக்குறைய 1,20,000 பேர்தான். சீனர்களும் குடியேறிவர்கள்தான்.

சிங்கப்பூர்ச் சட்டமன்றத்தில் எந்தெந்த மொழியில் பேசுவது என்று முடிவு செய்ய 6.12.1956 இல் அமைக்கப்பட்ட குழு 'For the purposes of oral debate the languages of the Assembly should be English, Malay, Mandarin and Tamil' என்று பரிந்துரைத்தது.

சிங்கப்பூர் அரசியல் சட்டத்தின் 53 ஆம் பிரிவு பின்வருமாறு குறிப்பிடுகிறது.

Until the legislature otherwise provides, all debates and discussions in Parliament shall be conducted in Malay, English, Mandarin or Tamil.

சிங்கப்பூரில் இன்று 73 விழுக்காடு (%) சீனர்களும், 18 விழுக்காடு மலேசிய மக்களும் 6 விழுக்காடு இந்திய மக்களும் உள்ளனர். மிகப்பெரிய மக்கள் பலம் பெற்றிருந்தாலும், மக்கள் செயல் கட்சித் தலைவரும் 30 ஆண்டுகளுக்கும் மேலாக ஆட்சியில் இருந்த பிரதமருமாகிய லீ-குவான்-யூ அவர்கள், ஆட்சிமொழி குறித்துத் தெளிவானதும் பெருந்தன்மையுமான முடிவை எடுத்துள்ளார். இதில் தேசிய மொழி(National Language) என்பது மலாய் மொழியாகும். காரணம்: இதுதான் மண்ணின் மொழியாகும்.

அடுத்து, ஆட்சிமொழிகளாவன (Official Language) 1. மலாய், 2. சீனம், 3. தமிழ், 4. ஆங்கிலம். இதனைச் செயற்படுத்துவதிலும் இந்த ஒழுங்கு, முறையாகக் கடைப்பிடிக்கப்படுகிறது. சிங்கப்பூர் நாடு முழுமையும் ஆட்சி செலுத்துவதற்கான தலைமையான இடம் நாடாளுமன்றம்தான். அந்த நாடாளுமன்றத்தின் முகப்பில் முதலில் மலாய் மொழியிலும், அடுத்துச் சீன மொழியிலும், 'நாடாளுமன்றக் கட்டிடம்' என்று மூன்றாவது இடத்தில் தமிழ் மொழியிலும், 'Parliament House' என்று நான்காவது இடத்தில் ஆங்கில மொழியிலும் பெயர்ப்பலகை இருப்பதைக் காணலாம். இந்த அனைத்து மொழிகளுக்கும் தொடர்பு மொழியாகவும், நிருவாக மொழியாகவும் 'ஆங்கிலம்' விளங்குகிறது. இது தொடர்பாக, சிங்கப்பூர் அரசு வெளியிட்ட செய்திக் குறிப்பு கீழே தரப்பட்டுள்ளது.

LANGUAGE AND LITERACY

The Official languages are Malay, Chinese, Tamil and English, Malay is the national language and English the language of administration, Mandarin is being increasingly used among the Chinese in place of the main Chinese dialects - Hokkien, Teochew, Cantonese, Hakka, Hainanese and Foochow. Besides Tamil, some of the other languages spoken by Indians are Malayalam, Punjabi, Telugu, Hindi and Bengali.

சிங்கப்பூர் சட்டமன்றப் பேரவை (Legistative Assembly, S'pore)சில உண்மைகளை நமக்குச் சொல்கிறது. 9.2.1956 அன்றே சிங்கப்பூர் சட்டமன்றப் பேரவை ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி அதன் வழியில் சட்ட மன்ற மொழிகளில் ஒன்றாகத் தமிழையும் சேர்த்துக் கொண்டுள்ளது.

அதன்பிறகு 6.12.1956 அன்று சட்டமன்றப் பேரவையின் தீர்மானப்படி ஒரு குழு அமைக்கப்படுகிறது. அந்தக் குழு மலாய், சீனம், தமிழ், ஆங்கிலம் ஆகிய நான்குக்கும் சம உரிமை கொடுத்துத் தன் அறிக்கையைத் தருகிறது. சட்டமன்றப் பேரவை இதனை அச்சிட்டு வெளியிட 24.10.1957 அன்று இசைவு வழங்குகிறது.

இதன் அடிப்படையில் தான் தமிழ் ஆட்சிமொழியாவதற்கான தொடக்கம் செய்யப்படுகிறது.

இப்போது கொஞ்சம் ஒப்பிட்டுப் பாருங்கள்.

நாம் சட்டம் கொண்டு வந்தது 27.12.1956 இல்

ஆனால் சிங்கப்பூர் நாடாளுமன்றம் தீர்மானம் கொண்டு வந்தது, 9.2.1956இல்

அவர்கள் குழு அமைத்தது 6.12.1956 இல்

நாம் குழு அமைத்தது 21.1.1957இல்

இப்போது சொல்லுங்கள் தமிழ் பிறந்த தமிழ்நாட்டில் - பிறருக்கெல்லாம் தாயகமாக விளங்கும் தமிழ்நாட்டில் தமிழ் ஆட்சிமொழியானது 1956 திசம்பரில், ஆனால் சிங்கப்பூரில் வாழ்வதற்காகக் குடியேறிய தமிழர்களின் வாழ்வுரிமையாகத் தமிழ் அரியணை - ஆட்சிமன்றம் ஏறியது 9.2.1956 இல்

இப்போது சொல்லுங்கள் சிங்கப்பூர் முந்திக் கொண்டதா இல்லையா?

ஆம்! சிங்கப்பூர் நமக்கு வழிகாட்டுகிறது.

அதுமட்டுமல்ல தமிழை ஆட்சிமொழியாகச் செயற்படுத்துவதில் சிங்கப்பூர் நம்மை விட்டு வெகு தொலைவு முன்னேறிச் சென்று விட்டது.

எடுத்துக்காட்டுக்குச் சில:

பிறப்பிக்கப்படும் அரசாணைகள் அனைத்தும் நான்கு மொழிகளிலும் வெளிவருகின்றன.

எந்த இடத்திலும் நான்கு மொழிகளைப் பார்க்கலாம். Plaza Singapura (malay) Singapore Plaza (Eng) என்றிருந்தால் 'கடைத் தொகுதி' எனும் நல்ல தமிழ்ப் பெயரும் அதில் கட்டாயம் இருக்கும். ஆனால் அங்குள்ள கட்டிடங்களைப் பார்த்து வந்து இங்கு கட்டிடம் கட்டிக் கடை வைக்கும் எவர்க்கும் தமிழ் வருவதில்லை. அவர்கள் இங்கே 'பிளாசா' என்றே தமிழில் எழுதுகிறார்கள்.

அங்கே, 90ஆவது மாடிக்குச் சென்றால் '90ஆம் அடுக்கு' என்று தமிழில் கட்டாயம் இருக்கும். சிங்கப்பூர் தமிழை வாழவைக்கிறது. தமிழை உண்மையாய்ப் போற்றுகிறது. தமிழ்

நாட்டிலோ 'நடிப்பு' கொடி கட்டிப் பறக்கிறது. தமிழைப் பயன்படுத்துவதில்கூட நடிப்புத் தான். நம்மையும் முந்திக் கொண்டு தமிழை ஆட்சிமொழியாக்கிய சிங்கப்பூர், சட்டத்தின் வலிமையான ஆட்சிகாரணமாகத் (Rule of law) தமிழை உரிய இடத்தில் வைத்துப் போற்றுகிறது.

இங்கே நாம் இன்றும் விளையாடிக் கொண்டிருக்கிறோம்.

சிங்கப்பூரின் தமிழ் உணர்ச்சிக்குக் காரணமான அனைவரையும், குறிப்பாக, தமிழவேள் கோ. சாரங்கபாணியையும் நினைத்துப் போற்றுவோம்.



## இயல் - ஐந்து

# அறிஞர் அண்ணாவின் துணைத் தீர்மானம்

1965இல் ஏற்பட்ட மாபெரும் இந்தித் திணிப்பு எதிர்ப்புப் போராட்டம்; அதில் பேராயக் கட்சி நடந்து கொண்ட விதம் ஆகியவை தமிழகத்தில் அரசியல் மாற்றத்தை உருவாக்கிடக் காரணமாக அமைந்தன.

1965 இந்தி எதிர்ப்புப் போர் தி.மு.கழகத்தின் மீது மக்கள் வைத்த நம்பிக்கையை அதிகப்படுத்தியது.

காங்கிரசார் தமிழ்ப் பற்றில்லாதவர்கள், தி.மு.க. வினர் தான் தமிழுக்காகக் குரல் கொடுக்கக் கூடியவர்கள் - தமிழ்ப் பற்றாளர்கள் எனும் எண்ணம் நாடெங்கிலும் பரவியது. அதிலும் அறிஞர் அண்ணாவின் தலைமை அனைவர்க்கும் நம்பிக்கை யூட்டுவதாக அமைந்தது.

அண்ணா ஏற்கெனவே பொறி பறக்கப் பேசிச் சிந்தனைக் கிளர்ச்சியை உண்டாக்கக் கூடியவர். அரசியல் மேடைகளில் அவரது காரசாரமான பேச்சு இலட்சோப லட்சம் மக்களை ஈர்த்து, காங்கிரசாரை மெல்ல மெல்லச் சாய்த்தது.

இந்த எழுச்சி 1967 இல் தி.மு.கழகத்தை ஆட்சிக் கட்டிலில் அமர்த்தியது. அறிஞர் அண்ணா முதல்வரானார். விரைவில் தமிழ்த் தொடர்பான சட்டங்களைச் செய்ய அண்ணா முனைந்தார். காலம் ஆகிறதே என்று கருதி மாணவர்களும் மறுபடியும் சிறுசிறு கிளர்ச்சிகளில் ஈடுபடத் தொடங்கினர். அறிஞர் அண்ணா, அவர்களுக்கு உறுதிமொழி அளித்து மாணவர்களின் கிளர்ச்சிக்கு நிலையான முற்றுப்புள்ளி வைத்தார்.

23.1.1968 இல் வரலாற்றுப்புகழ் மிக்க இருமொழிச் சட்டத்தைச் சட்டமன்றத்தில் கொண்டுவந்து நிறைவேற்றினார்.

"மத்திய அரசின் இந்தித் திணிப்புத் திட்டத்தை இந்த மன்றம் ஏற்க மறுக்கிறது."

"மத்திய அரசின் மொழித் தீர்மானத்தை இந்த அரசு செயல்படுத்த மறுக்கிற வகையிலும் தமிழக மக்களும் மாணவர்களும் வெளியிட்டுள்ள கருத்துக்கு மதிப்பளிக்கிற முறையிலும்,

தமிழகத்தின் எல்லாப் பள்ளிகளிலும் மும்மொழித் திட்டத்தை அகற்றிவிட்டு, தமிழ் ஆங்கிலம் ஆகிய இரு மொழிக்கு இடமளித்து இந்திமொழியை அறவே நீக்கி இம்மன்றம் தீர்மானிக்கிறது."

இது இந்தியை அறவே நீக்கும் தீர்மானம்.

அண்ணா அவர்கள் அந்த அளவோடு நிற்கவில்லை. மற்றொரு துணைத் தீர்மானத்தையும் அதே அவையில் கொண்டு வந்து நிறைவேற்றினார்.

"தமிழகத்தில் தமிழ் பயிற்சி மொழியாகவும், பாடமொழியாகவும் எல்லாக் கல்லூரிகளிலும், நிருவாக மொழியாகப் பல்வேறு துறைகளிலும் ஐந்தாண்டு காலத்துக்குள் நடைமுறைக்கு வருவதற்கான துரிதமான நடவடிக்கையை மேற்கொள்வது என்று இம்மன்றம் தீர்மானிக்கிறது" என்ற தீர்மானமும் கொண்டு வரப்பட்டது.

இதன் அடிப்படையில்தான் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் விரைவு படுத்தப்பட்டது என்பதை அனைவரும் உணர வேண்டும்.

அறிஞர் அண்ணா கொண்டு வந்து, நிறைவேற்றி நமக்களித்த கட்டளையைச் செயற்படுத்துவதில் நாம் ஏன் பின்வாங்க வேண்டும்?

இதுதான் இப்போது நம் சூளுரை! அதன் அடிப்படையில் எங்கள் வேகம் அமைந்தது.

இந்தக் கருத்தினை அண்ணா அவர்கள் பேசுகிற இடங்களிலும் தொடர்ந்து வலியுறுத்தினார்.

மதுரை காமராசர் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில் அவர் பேசியதை இங்கு நினைவு கூர்தல் நல்லது.

"பயிற்றுமொழி, பாடமொழி, ஆட்சிமொழி, இணைப்பு மொழி என்ற சொற்றொடர்கள் வேகமாக உலவிடக் காண்கிறோம். "தாய்மொழி" என்னும் தகுதிக்கு ஈடாக, வேறு எந்தத் தகுதியையும் ஒரு மொழி பெற்றிடத் தேவையில்லை. ஆயினும் நமது தமிழ்மொழி, நமது தாய்மொழி என்பதால் மட்டுமன்று, வளமிக்கது என்பதாலும் எவரும் வியந்து பாராட்டத்தக்கதாகிறது. அங்கே வளம் கெடாமலும் மேலும் வளரவுமான செயல்களைச் செம்மையாக்கித் தருவது உமது கடமையாகும். தமிழ் ஆட்சிமொழியாக எல்லாத் துறைகளிலும் திகழ்வதற்கான சூழ்நிலையை உருவாக்குவதில் உமது நல்லார்வம் நிரம்பத் தேவை".

எனவே அறிஞர் அண்ணா ஏற்கெனவே தன் உள்ளக் கிடக்கையாக இருந்த தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தை எல்லாத் துறைகளிலும் செயல்படுத்திட மாணவர் உலகத்தையும் வேண்டி நிற்கிறார். அவர்காலத்திலும் 1969 இல் ஆட்சிக்கு வந்த கலைஞர் காலத்திலும் (1967 முதல் 1975 வரை) வெளியான அரசாணைகளில் குறிப்பிடத்தக்கவற்றை மட்டும் பார்த்தால் தி.மு.கழக ஆட்சிக் காலத்தில் எந்த அளவுக்கு வளர்ச்சி நிலைகள் இருந்தன என்று பார்த்துவிட முடியும்.

இயல் - ஆறு

## தி.மு.க. ஆட்சிக் காலம்

6.3.67 இல் அறிஞர் அண்ணா ஆட்சிப் பொறுப்பேற்றார். 3.2.69 அன்று மறைந்தார். இவரது ஆட்சிக் காலத்தில் 26 அரசாணைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன.

23.1.1968 இல் சட்டமன்றத்தில் அறிஞர் அண்ணா அவர்களால் கொண்டு வரப்பட்ட துணைத் தீர்மானத்தையும் இப்போது நினைவிற் கொள்ளவேண்டும். அதன்படி பார்த்தால் 1973ஆம் ஆண்டுக்குள் தமிழ் முழுமையான ஆட்சி மொழியாகியிருக்கவேண்டும்.

அதன்பிறகு பொறுப்பேற்ற கலைஞர் ஆட்சி 1969 முதல் 1975 வரை இருந்தது. இவரது ஆட்சிக் காலத்தில் 62 அரசாணைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன. மொத்தத்தில் தி.மு.க. ஆட்சிக் காலத்தில் பிறப்பிக்கப்பட்ட அரசாணைகள் 88. பிறப்பிக்கப்பட்ட அரசாணைகளிலிருந்து நாம் தெரிந்து கொள்ளக் கூடிய செய்திகளை ஒரு பார்வை பார்க்கலாம்.

தமிழ் ஆட்சிமொழித் திட்டம் பல துறைகளுக்கும் விரிவுபடுத்தப்பட்டது.

இ.ஆ.ப., இ.கா.ப. அலுவலர்களாகப் பணியாற்றுபவர்களில் தமிழைத் தாய்மொழியாகக் கொள்ளாதவர்கள், தமிழில் தகுதியேற்றிருந்தால் சிறப்புப் பரிசுகள் வழங்கப்பட்டன.

இளநிலை இ.ஆ.ப., இ.கா.ப. அலுவலர்கட்குத் தமிழ்ப் பயிற்சி அளிக்க வகை செய்யப்பட்டது.

அரசுப் பணியாளர்கள் தமிழில் போதிய பயிற்சி பெற வகுப்புகள் நடத்தப்பட்டன.

தேர்வாணையத்தில் இனிமேல் தமிழில் தேர்வு எழுதலாம் என்ற ஆணையும் பிறப்பிக்கப்பட்டது. அப்படியானால் இதற்கு முன்னால் ஆங்கிலத்தில்தான் தேர்வு எழுதியுள்ளனர் என்பதும் விளங்கும்.

கமுக்கக் கோப்புகள் (Confidential files) யாவும் தமிழில் பேணப்படவேண்டும். துறை ஆய்வுகளின் போது தரப்படும் வினாப்பட்டியலும், விடைகளும் தமிழிலேயே இருக்க வேண்டும். செயலகத் துறைகளுக்குள் தமிழிலேயே கடிதப் போக்குவரத்து அமையவேண்டும். மேலும் எல்லாப் பொருள்களிலும் தமிழிலேயே கடிதப் போக்குவரத்து அமைய வேண்டும் - இவை ஆணைகளின் சாரம்.

1968 ஆம் ஆண்டில் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம் செம்மைப் படுத்தப்பட்டு அம்மன்றம் கவனிப்பதற்கெனப் பல பணிகள் வரையறுக்கப்பட்டன. அறிஞர் அண்ணாவின் தீர்மானத்துக்குச் செயல்வடிவம் கொடுக்கும் வகையில் ஆணை பிறப்பிக்கப்பட்டது.

உரிமையியல், குற்றவியல் நீதிமன்றங்களிலும், தீர்ப்பாயங்களிலும் (சாட்சிகளை) சான்றுகளைப் பதிவு செய்யவும் செயல்முறை ஆணைக்கும் தமிழைப் பயன்படுத்த வேண்டும்.

நீதித்துறை அமைச்சுப் பணியில் உள்ள தட்டச்சர், சுருக்கெழுத்தாளர்கள் தமிழ்த் தட்டச்சிலும், தமிழ்ச் சுருக்கெழுத்திலும் கீழ் நிலைத் தேர்ச்சியேனும் பெற்றிருக்க வேண்டும். அப்போதுதான் பணி உறுதி (Job Confirmation) செய்யப்படும்.

இவ்வளவு முயற்சிகள் செய்தும் ஆணைகள் பிறப்பித்தும் முன்னேற்றம் மனநிறைவு அளிக்கவில்லை என்றே இரண்டு அரசாணைகள் தெளிவு படுத்துகின்றன. 1796/27.9.69 அரசாணையும் 2079/4.12.1971 அரசாணையும் இதனைப் புலப்படுத்துகின்றன.

'அலுவலகங்கள் பலவற்றில் போதிய முன்னேற்றம் இல்லாததால்' என்றே அரசாணைகளின் சாரம் அமைந்துள்ளது.

27.12.1969 இல் வெளியான அரசாணை அறிஞர் அண்ணாவின் எண்ணத்தை - தீர்மானத்தை - அரசின் குறிக்கோளாகவே குறிப்பிடுகிறது.

"ஐந்தாண்டுக்குள் (1973க்குள்) முழுதும் தமிழில் அமைய வேண்டும் என்ற அரசின் குறிக்கோளை நிறைவேற்றும் வகையில்" என்று ஆணை பேசுகிறது.

அரசு அலுவலகங்களில் தமிழ்த் தட்டச்சுகள் தேவை என்பது உணரப்பட்டுள்ளது.

அரசு அலுவலகங்களில் தமிழை நடைமுறைப் படுத்துவது தொடர்பாக அனைத்துத் தட்டச்சர்களும் தமிழ்த் தட்டச்சில் போதிய பயிற்சி பெற்று ஓராண்டுக் காலம் தமிழ்த் தட்டச்சராகப் பணியாற்ற வேண்டியது கட்டாயமாக்கப்படுகின்றது. தகுதிகாண் பருவத்திற்குள் (Probation period) தமிழ்த் தட்டச்சில் / சுருக்கெழுத்தில் கீழ் நிலைத் தகுதியாவது பெற்றாக வேண்டும். தமிழ்த் தட்டச்சுத் தகுதி பெறாவிட்டால் எழுத்தராகப் பதவி உயர்வு பெற முடியாது.

குறிப்பிட்ட கால அளவுக்குள் தமிழ்த் தட்டச்சிலும் சுருக்கெழுத்திலும் தேர்ச்சி பெறாவிடில் அவர்களது சம்பள உயர்வு நிறுத்தப்படும்.

மொழி பெயர்ப்பாளர்க்கு மதிப்பூதியம் வழங்கப்பட்டது. நல்ல தமிழில் குறிப்புகள் வரைவுகள் எழுதும் திறமை பெற்றவர்கட்குப் பணப் பரிசு வழங்கப்பட்டது. இப்படிப் பெறப்படும் பரிசு விவரம் அவரவர் பணிப்பதிவேட்டில் பதியப்பட்டது.

துறைத் தலைமை அலுவலகங்களில் தமிழ்த் திட்டம் முழுமையடைந்து விட்டது என்றே அரசாணை தெளிவுபடுத்துகிறது (ஆனால் 1996 இல் எங்கள் ஆய்வுக்குப் பின்னால் மேற்கண்ட 'முழுமை' எப்படி மூளியானது என்று தெரிந்தது)

எனவே ஒரு நம்பிக்கையின் அடிப்படையில் இந்த ஆணை பிறப்பிக்கப்பட்டதா அல்லது காலப்போக்கில் மெல்ல மெல்ல இந்த நிலை சீரழிந்து வேதாளம் பழைய படி முருங்கை மரத்திலே ஏறிவிட்டதா என்பதை ஆராய்ந்தாக வேண்டும்.

'பிழை நீக்கி எழுதும் முறை' எனும் நூலை எல்லா அலுவலகங்களும் வாங்கிக் கொள்ள வேண்டும்.

துறைகளை ஆய்வு செய்திட ஒரு தனி அலுவலர் மட்டும் இருந்த நிலையை மாற்றி மேலும் 9தனி அலுவலர்கள் அமர்த்தப்பட்டனர். இது நல்ல முன்னேற்றம்தான்.

அலுவலக முத்திரைகளில் (Rubber Stamps) அலுவலகத்தின் பெயர் தமிழில் இருந்தும் உள் வட்டத்தில் உள்ள திங்கட் பெயர் ஆங்கிலத்தில்தான் இருந்தது. இதுவும் தமிழிலேயே இருக்க வேண்டும்.

அரசுச் சார்பில் வெளியிடப்படும் படிவங்கள் யாவும் தமிழிலேயே அமைதல் வேண்டும்.

இவ்வளவு அரசாணைகள் பிறப்பித்தும் சில துறைகள் தொடர்ந்து ஆங்கிலத்தையே பயன்படுத்தி வந்தன. அதுமட்டுமன்றி அவை தமிழுக்கு மாறுவதிலிருந்து விதிவிலக்கும் கோரின.

நெடுஞ்சாலை, கிராமப் பணித்துறை மற்றும் தேசிய நெடுஞ்சாலைத் துறையைச் சார்ந்த அலுவலகங்கள் சிலவற்றில் தொழில்நுட்பம் காரணமாக ஆங்கிலம் தொடர்ந்திடவும், மருத்துவக் கல்வி தொடர்பான கலைச் சொற்கள், மருந்துகள், சிகிச்சைகள், இயந்திரங்கள் பற்றி ஆங்கிலத்தில்தான் எழுதிட இயலும் என்றும் கோரிக்கைகள் வைக்கப்பட்டன. இக்கோரிக்கைகள் அக்காலத்தில் நிராகரிக்கப்பட்டன என்பது முக்கிய செய்தியாகும்.

இந்த ஆட்சிக் காலத்தில் மிகவும் குறிப்பிடத்தக்க அரசாணை என்று ஒன்றைக் குறிப்பிடலாம்.

2.12.71 இல் வெளியிடப்பட்ட 2070 எண்ணுள்ள அரசாணை அது.

இந்த அரசாணை கல்வி (தமிழ் வளர்ச்சி)த் துறை அரசுச் செயலர் கா. திரவியம் அவர்களால் வெளியிடப்பட்டது.

12/63, 3/65, 9/69 ஆகிய காலங்களில் வெளிவந்த அரசாணைகளை மேற்கோள் காட்டியும் 24.2.70ஆம் நாளிட்ட ஆட்சிமொழிக் குழுச் செயலாளரின் கடிதத்தை ஒட்டியும் இந்த அரசாணை வெளிவருகின்றது.

'தமிழை எல்லாத் தேவைக்கும் பயன்படுத்த வேண்டும்; தலைமைச் செயலகத் துறைகளில் முழுத் தமிழ்த்திட்டம் செயற்படுத்தப்பட்டுள்ளது' இதில் சில இனங்கள் மட்டும் விதிவிலக்குப் பெற்றுள்ளன. அவற்றால் எந்த இடரும் இல்லை.

அவர்களே குறிப்பிட்டபடி ஓராண்டுக்குள் இதில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் குறித்து அனைவரும் அறிக்கை தரவேண்டும்.

தேவை கருதி அந்த அரசாணையை அப்படியே தந்துள்ளோம். (இயல் 19 - 'மடல் போக்குவரத்து' பார்க்கவும்)

இந்த அளவுக்கு முயற்சிகள் எடுத்தும், தேவையான அரசாணைகள் பல பிறப்பித்தும் எதிர்பார்த்த அளவிற்கு முன்னேற்றம் இல்லை என்பதை உணரலாம். அரசு ஆர்வம் காட்டுகிறது; உயர் அலுவலர்கள் ஆணை பிறப்பிக்கிறார்கள். ஆனால் அதைச் செயற்படுத்தும் இடத்தில் உள்ள பிற அலுவலர்கள் மனம் வைத்தால்தான் ஆணைகளின் சாரம் செயலுக்கு வரும் என்பதைக் கண் கூடாகக் காணலாம். போதிய முன்னேற்றம் இல்லை என்று அனைவரும் உணர வேண்டிய சூழ்நிலை நிலவியது; நிலவுகிறது; இன்றும் கூடத் தொடர்கிறது எனலாம்.

அப்படிப் பார்த்தால், 1968 முதல் 1973 க்குள் - ஐந்தாண்டுகட்குள் தமிழை முழு ஆட்சிமொழியாக்குவது அரசின் கொள்கை என்று அறிவித்தும், அண்ணாவே தீர்மானம் கொண்டு வந்தும் கலைஞர் முதல்வராக இருந்தும் 1973 இல் அல்ல 1975 வரையிலும் கூட வரைவுகள், கோப்புகள், அரசாணைகள் எல்லாம் தமிழுக்கு மாறிவிட வில்லை. கி.பி.2001 இலும் இதை எண்ணிப் பார்த்து உறுதி செய்திட முடியும்.

இந்த மனக்குறை கலைஞர்க்கும் இருந்ததால் 1996 இல் தமிழ் வளர்ச்சிக்கென்று தனி அமைச்சரை அமர்த்த வேண்டி வந்தது.



தேனி மாவட்டத்தில் தமிழ் வளர்ச்சித் துறை சார்பில் நடைபெற்ற ஆட்சி மொழிக்கருத்தரங்கில் அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசுகிறார். அருகில் மாவட்ட கலெக்டர் பெருமாள்சாமி அறவாழி, தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் ராஜேந்திரன், சட்டமன்ற உறுப்பினர்கள் மூக்கையா, ஆசையன், மாவட்ட வருவாய் அலுவலர் ராஜேந்திரன், பெரியகுளம் சார் ஆட்சியர் தர்மேந்திரபிரசாத் யாதவ் ஆகியோர் உள்ளனர்.

இயல் - ஏழு

# குடியரசுத் தலைவர் ஆட்சிக் காலம்

30.1.1976 அன்று தி.மு.க. ஆட்சிகலைக்கப்பட்டது. 'மிசா' சட்டம் நடைமுறையில் இருந்தது. நாடெங்கும் நெருக்கடிநிலை பிறப்பிக்கப்பட்டது.

மூவர் ஆளுநரின் ஆலோசகர்கள் எனும் பொறுப்பில் செயலாற்றினார்கள்.

1977 இல் 'மிசா' சட்டம் தளர்த்தப்பட்டுப் பொதுத்தேர்தல் நடந்து புரட்சித்தலைவர் ஆட்சிக்கு வரும் வரை 'மிசா'வை உள்ளடக்கிய கடுமையான ஆட்சிதான். இந்தக் காலகட்டத்தில் - ஒன்றே கால் ஆண்டில் - பிறப்பிக்கப்பட்ட அரசாணைகள் 6 மட்டுமே.

இதில் வேடிக்கை என்னவென்றால் 21.1.76 இல் தி.மு.க. ஆட்சிக் காலத்தில் - கலைக்கப்படுவதற்குப் பத்து நாள்கள் முன்புதான் ஓர் அரசாணை பிறப்பிக்கப்பட்டுள்ளது.

உயர் நீதிமன்றத்திற்குச் சார்நிலையாக உள்ள உரிமையியல் நீதிமன்றங்கள், குற்றவியல் நீதிமன்றங்கள், மேல்முறையீட்டுத் தீர்ப்பாயங்கள் அனைத்திலும் தமிழை நடைமுறைப்படுத்தவேண்டுமென்கிறது அந்த ஆணை.

ஆட்சி கலைக்கப்பட்டு குடியரசுத் தலைவர் ஆட்சி நடைபெறும் போது ஆலோசகர்கள் பிறப்பித்த ஆணை வியப்பாக உள்ளது.

'உயர்நீதி மன்றங்கள் அனைத்திலும் தமிழில் தீர்ப்புகளையும் ஆணைகளையும் வழங்குவதற்கான அறிக்கை தள்ளுபடி செய்யப்படுகிறது. அவற்றின் சட்டங்கள் யாவையும் சரிவரத் தமிழாக்கம் செய்யப்படாமையால் ஆணை தள்ளுபடி செய்யப்படுகிறது.'

ஆட்சிமொழிச் சட்டம் வந்து இருபதாண்டு கழித்து, இன்னும் சட்டங்கள் தமிழாக்கம் செய்யப்படவில்லை என்று அரசே துணிந்து கூறும் நிலை.

பொது மக்களிடமிருந்து வரும் கடிதங்களுக்குக் கண்டிப்பாகத் தமிழில்தான் ஆணைகள், அறிவிப்புகள் அளிக்கப்படவேண்டும் என்று மீண்டும் வலியுறுத்தப்படுகிறது.

நீதிமன்றங்கள் தொடர்பாக அதிரடியாக இப்படியோர் அறிவிப்பு வந்திருந்தாலும், பின்னர் படிப்படியாக ஓர் இணக்கமான சூழ்நிலை உருவாகியுள்ளது.

ஆட்சிமொழிச் சட்டத்தில் ஒரு திருத்தம் செய்து சார்நிலையில் உள்ள குற்றவியல் நீதிமன்றங்களில் தீர்ப்புகள், ஆணைகள் அனைத்தும் தமிழில் இருக்குமென ஓர் ஆணை மறுபடியும் பிறப்பிக்கப்பட்டது. இது மகிழ்ச்சியைத் தருகிறது.

## இயல் - எட்டு

# அ.இ.அ.தி.மு.க. ஆட்சிக்காலம்

1977 இல் (30.6.1977) ஆட்சிக்கு வந்த முதல்வர் புரட்சித்தலைவர் அவரது மறைவு காலம் வரை முதல்வராகவே (24.12.87) இருந்தார். அவரது முதல் ஆட்சி 18.2.80 வரை நடந்தது. (அவரது மறைவுக்குப்பின் ஜானகி எம்.ஜி.ஆர். 23 நாள் முதல்வராக இருந்தார். பின், குடியரசுத் தலைவர் ஆட்சி வந்தது)

இந்தக் காலகட்டத்தில் 64 அரசாணைகள் பிறப்பிக்கப்பட்டன. இவை புரட்சித்தலைவர் காலத்தவை என்றால் திருவாட்டி ஜானகி எம்.ஜி.ஆர். காலத்தில் ஒரே ஓர் ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது.

அறிஞர் அண்ணா காலம், கலைஞர் கருணாநிதி ஆட்சிக் காலத்துக்கு எந்த வகையிலும் குறைந்து விடாமல் புரட்சித்தலைவர் ஆட்சிக் காலத்தில் ஆட்சிமொழிச் செயலாக்கத்தில் பெரிதும் கவனம் செலுத்தப்பட்டது. புரட்சித்தலைவர் ஆட்சிக் காலத்துக்கு மட்டுமே சிறப்புச் சேர்க்கும் வகையில் சில புதிய ஆணைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன. புதிய கவனம் செலுத்தப்பட்டிருக்கிறது என்பதையும் நினைவிற் கொள்ள வேண்டும். 17.4.1984 இல் தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத் துறைக்குத் தனியாக ஒரு செயலாளர் அமர்த்தப்பட்டதும் இதில் சிறப்பாகும். தமிழ் அறிஞராகிய முனைவர் அவ்வை நடராசன் த.வ.ப. துறைச் செயலாளராக அமர்த்தப்பட்டார். பிறதுறைச் செயலாளர்கள் அனைவரும் இ.ஆ.ப. அலுவலர்கள் எனினும் த.வ.ப. துறைச் செயலர் மட்டும் இ.ஆ.ப. அலுவலர் அல்லாத தமிழறிஞராக இருந்தார் என்பதும் நினைவிற் கொள்ளத்தக்கது.

இக்கால கட்டத்தில் மூவாண்டு முனைப்புத் திட்டம் செயற்படுத்தப்படுவதற்கான பல ஆணைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன. வழக்கம் போல் தமிழில் தேர்ச்சி பெற்ற தட்டச்சர்/ சுருக்கெழுத்தாளர், வரைவுகள், குறிப்புகளைத் திறம்பட எழுதியோர் ஆகியோர்க்கான ஊக்கத்தொகை வழங்கப்பட்டுள்ளது.

ஆட்சிமொழிச் செயலாக்கம் பல துறைகட்கு விரிவுபடுத்தப்பட்டுள்ளது.

தமிழக அரசுப் பணிக்கு வந்து விட்டு, தமிழ் ஆட்சிமொழிச் சட்டப்படி தமிழில் அனைத்து நடவடிக்கைகளையும் மேற்கொள்ள வேண்டிய கட்டத்தில் தமிழில் சிலர் போதிய தேர்ச்சியே பெறாதவர்களாக இருந்திருக்கிறார்கள். இவர்களுக்காகப் பல அரசாணைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன.

அரசு மொழியாகிய தமிழில் போதிய திறன் இல்லாதவர்கள் தமிழகத் தேர்வாணைக் குழுவால் நடத்தப்படும் இரண்டாம் மொழித் தேர்வில் அவர்கள் பணியில் அமர்ந்த நாளிலிருந்து

நான்காண்டுகட்குள் தேர்ச்சி பெறாவிடில் அவர்களை அப்பணியிலிருந்து நீக்கிவிட வேண்டும் என முந்தைய அரசுகளில் ஆணை உள்ளது. ஆனால் யார் என்ன செய்தார்களோ தெரியவில்லை. புரட்சித்தலைவர் அவர்களுக்குத் தெரிந்து நடந்ததா தெரியாமல் நடந்ததா என்று தெரியவில்லை.

தேர்ச்சி பெறாதவர்களில் ஒரு சிலரையாவது வீட்டுக்கு அனுப்பத் தொடங்கியிருந்தால் பின்னால் ஏற்பட்ட சீரழிவுக்கு வாய்ப்பிருந்திருக்காது. ஆனால் பணி நீக்கம் செய்யப் படுவதற்கு மாறாக, அவர்களுக்கு மேலும் கால நீட்டிப்பு வழங்கப்பட்டுள்ளது. இது ஒரு பெரும் சறுக்கல் என்றே கருதுகிறேன்.

இந்த அளவோடு நிற்கவில்லை, மொழித் தேர்வில் தேர்ச்சி பெறாதவர்களை அரசிடமிருந்து ஆணை வரும் வரை பதவியிலிருந்து நீக்கிட வேண்டாமென்று நியமன அலுவலர்கட்குத் தடைவிதிக்கப்பட்டுள்ளது. காலவரம்பு நீட்டிப்புக் கொடுத்தும் தேர்ச்சி பெறாதவர்களைத் தக்கவைத்துக் கொள்ளும் தகாத முயற்சியாகவே இது தோன்றுகிறது. பிறகு மேலும் ஓராண்டு கால நீட்டிப்புச் செய்யப்பட்டுள்ளது. 1956 முதல் 1982 வரை 26 ஆண்டுகளாகத் தமிழ் ஆட்சிமொழித் திட்டம் செயற்பட்டும் இந்த நிலை உள்ளது என்பதைக் கவனிக்கவும்.

1984 இல் கடுமையான ஓர் அரசாணை வெளிவந்துள்ளது. தமிழில் தேர்ச்சி பெறாது, உள்ளாட்சி நிறுவனங்களில் பணியாற்றும் பணியாளர்கள் இரண்டாண்டு காலத்திற்குள் தமிழ் மொழித் தேர்வில் தேர்ச்சி பெறவேண்டும் எனவும் அவ்வாறு பெறாவிடில் பணியிலிருந்து நீக்கப்படுவர் என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது. இது ஒரு சரியான ஆணையாகும்.

அரசு நிதியுதவி பெறும் தனியார் பள்ளிகளிலும் (Aided Schools) சிறுபான்மையர் நடத்தும் பள்ளிகளிலும் (Minority Institutions) பணியாற்றும் அனைத்துப் பணியாளர்களும் தகுதிகாண் பருவம் முடிப்பதற்குள் தமிழில் போதிய அறிவு பெற இரண்டாம் மொழித் தேர்ச்சி பெறுதல் வேண்டும். நிர்வாகப் பொறுப்புகளை ஏற்க விரும்பாதவர் (அ) பதவி உயர்வு வேண்டாமென்பவர் விதிவிலக்குப் பெற்றுள்ளனர்.

இந்த வகையில் நல்ல கவனம் செலுத்தப்பட்டுள்ளது. எனினும் இதில் அரசு கடுமையாக நடந்து கொள்ளவில்லை. எங்கள் காலத்தில் ஒரு சிலர் நடவடிக்கைக்கு ஆளாயினர் என்பதையும் நினைவிற் கொள்வோம்.

தமிழக அரசுப் பணியில் இருக்கிறோம். தமிழ் ஆட்சிமொழியாக உள்ளது. எனவே தமிழில் போதிய தேர்ச்சி பெற்று வரைவுகள், குறிப்புகள், கோப்புகள் ஆகியவற்றைத் தமிழில் எழுதியாக வேண்டும் எனும் கட்டாய உணர்ச்சியைப் பெறாத சில அலுவலர்கள் இருக்கிறார்கள் என்பதையும் அவர்கள் அவர்களது மேலதிகாரிகளால் பாதுகாக்கப்படுகிறார்கள் என்பதையும் உணரலாம்.

முன்பு குற்றவியல் நீதிமன்றங்கட்கு அறிவிக்கப்பட்டது போல் தற்போது சார்நிலையில் உள்ள உரிமையியல் நீதிமன்றங்களில் தமிழ் ஆட்சிமொழி நடைமுறைப் படுத்தப்பட்டது.

கடிதப் போக்குவரத்து தமிழில் இருக்க வேண்டுமென்பது வலியுறுத்தப் பட்டுள்ளது. தேர்வு செய்யப்பட்ட துறைகளில் குறிப்பிட்ட சில இனங்களைத் தவிர மற்ற கடிதப் போக்குவரத்து முழுமையாகத் தமிழிலேயே இருக்கவேண்டும்.

அனைத்துக் கோப்புகளும் அதிகாரிகளின் கடிதப் போக்குவரத்தும் தமிழில்தான் இருக்கவேண்டுமென்று வலியுறுத்தப்பட்டுள்ளது. இதில் பெரிய சிறப்பு : கோப்புகள் தமிழில் இருக்க வேண்டுமென்று ஆணை பிறக்கப்பட்டது, புரட்சித்தலைவர் காலத்தில்தான்.

தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் தொடர்பாகவும் பல அரசாணைகள் பிறப்பிக்கப்பட்டன. அனைத்துச் சார்நிலை அலுவலகங்களிலும் ஆங்கிலத் தட்டச்சுகள் குறித்த காலத்தில் தமிழ்த் தட்டச்சுகளாக மாற்றப்படவேண்டும்.

நெடுஞ்சாலை (ம) ஊரகப் பணித்துறையில் - சார்நிலை அலுவலகங்களில் ஒரே ஓர் ஆங்கிலத் தட்டச்சு வைத்துக்கொள்ள அனுமதி.

ஒப்படைக்கப்படும் ஆங்கிலத் தட்டச்சுக்கு மாற்றாகத் தமிழ்த் தட்டச்சு வழங்கிட ஆணை (எவ்வளவு தட்டச்சுப் பொறிகள் வாங்கப்பட்டன - நிதி ஒதுக்கீடு எவ்வளவு என்று தெரியவில்லை; கலைஞர் காலத்தில் இது உச்சமடைந்தது) சார்பு அலுவலகங்களில் அனைத்தும் தமிழ்த் தட்டச்சுப் பொறியாக இருக்கவேண்டும். அரசுத் துறைத் தலைமை அலுவலகங்களில் 75% தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் இருக்கவேண்டும். ஆங்கிலத் தட்டச்சுப் பொறியை அதிகமாக வைத்திருப்போர் உடனடியாகத் தமிழில் தட்டச்சுப் பொறிகளை மாற்றிக் கொள்ளவேண்டும். தலைமைச் செயலகத்தில் 50% தமிழ்த்தட்டச்சுப் பொறிகள் இருக்க வேண்டும் (பிற்காலத்தில் - புரட்சித்தலைவி காலத்தில் இது 65% என உயர்த்தப்பட்டது)

விரல்விட்டு எண்ணக்கூடிய ஒன்றிரண்டு விதிவிலக்குகள் கூடுதலாக ஒன்றிரண்டு ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளுக்காக அளிக்கப்பட்டுள்ளன.

ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் மாதம் ஒரு மாவட்டம் என்ற அளவில், பெரிய அளவில் எங்கள் காலத்தில் நடைபெற்றன. இதற்கு வித்திட்டது புரட்சித்தலைவர் ஆட்சிக் காலம்தான்.

மாவட்டந்தோறும் ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் நடத்தி, இத்திட்ட நிறைவேற்றத்தில் ஏற்படும் இடர்ப்பாடுகள், குறைகள் ஆகியவற்றைக் கலந்தாய்வு செய்து அவற்றைக் களையத் தேவையான வழிவகைகள் காணலாம். (திரு. அரங்கநாயகம் அமைச்சராக இருந்த போது மதுரை மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கு - ஒரு கலந்துரையாடல் கூட்டமாகத்தான் நடைபெற்றது. நானும் அதில் கல்லூரி முதல்வர் - தமிழ்ப் பேராசிரியர் - தமிழியக்கத் தொண்டன் எனும் முறையில் அழைக்கப்பட்டிருந்தேன்).

மெட்ரிகுலேசன் தேர்வுப் பணிக்கான வேலைகளில் ஆங்கிலத்தைப் பயன்படுத்துதல் பற்றி

அரசுத் தேர்வுகள் இயக்குநர் தெரிவித்த கருத்தினை முழுதும் ஏற்காது மாணவர்களின் பெயர்ப் பட்டியல் மட்டும் தொடர்ந்து ஆங்கிலத்தில் இருந்து வரலாமென்றும் மற்ற அனைத்தும் தமிழ் - ஆங்கிலம் ஆகிய இருமொழிகளிலும் இருத்தல் வேண்டுமென்றும் ஆணை. இப்படி இப்போது (1985) அறிவித்திருந்தாலும், கணிப்பொறி மூலம் பட்டியல் உருவாக்குவதால் மெட்ரிகுலேசன், ஆங்கிலோ இந்தியப் பள்ளி, வேற்றுமொழி பேசும் சிறுபான்மைப் பள்ளி ஆகியவை தொடர்பான தேர்வுப் பணிகளை ஆங்கிலத்திலேயே நடத்தலாம் என அரசு விதிவிலக்கு அளித்துள்ளது. (1981)

புரட்சித்தலைவர் ஆட்சிக் காலத்தில் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த பல அரசாணைகளும் பிறப்பிக்கப்பட்டுள்ளன. 1977 இல் ஓர் அரசாணை:

மாநில, சார்நிலைப் பணிகளுக்கு ஆளெடுக்கும் போது தமிழில் தேர்ச்சி இருத்தல் வேண்டுமெனவும், தெரிவுசெய்த பணியாளர்களுக்குத் தமிழ் தெரியாத நிலையில் அவர்கள் பணியில் சேர்ந்த குறிப்பிட்ட காலத்திற்குள் தமிழில் இரண்டாம் நிலைத் தேர்வில் தேர்ச்சி பெற வேண்டுமென்ற நெறி முறைகளைத் தெளிவுறுத்தல் வேண்டுமெனவும் இந்த நெறிமுறைகள் இனி வருங்காலங்களில் கட்டாயமாகச் செயல்படுத்தப்படுமெனவும் ஆணை வழங்கப்பட்டுள்ளது.

இது ஓர் அழுத்தமான அரசாணை. இந்த அரசாணை கடுமையாகக் கடைப்பிடிக்கப் பட்டிருந்தாலே போதும்? கடைப்பிடிக்கப்பட்டதா? பின்னால் பார்ப்போம்.

## தமிழில் கையொப்பம்

21.6.1978 இல் பிறப்பிக்கப்பட்ட 1134 என்ற எண்ணுள்ள அரசாணை என்றென்றும் பாராட்டுக்குரியதாகும். ஆம்! அரசு ஊழியர்கள் அனைவரும் தமிழில்தான் கையொப்பமிடுதல் வேண்டும் என்று ஆணை பிறப்பிக்கப்பட்டது. சரியாகச் சொல்லப் போனால் 'தமிழில் மட்டுமே கையொப்பம் இடவேண்டும்' என்று அரசாணை சொல்கிறது. ஆனால் இந்த அரசாணை ஆங்கிலத்தில் மட்டுமே பிறப்பிக்கப்பட்டுள்ளது என்பது அதிகாரிகளின் 'இலட்சணம்' என்ன என்பதைக் காட்டும் கதை. 'All the Govt. officials should sign only in Tamil' என்கிறது ஆணை. (பின்னர் விரிவாகப் பார்ப்போம்)

தந்தை பெரியார் நூற்றாண்டு விழாவை ஒட்டி ஓர் அருமையான அரசாணை பிறப்பிக்கப்பட்டது. (1875/19.10.1978) தந்தை பெரியார் குறிப்பிட்ட எழுத்துச் சீர்திருத்தம் ஏற்கப்பட்டு நடைமுறைப்படுத்துவதற்கான வரலாற்றுச் சிறப்பு மிக்க அரசாணை பிறப்பிக்கப்பட்டது - ணா, ளை, - லை, -றா என்றும் ணை என்றும் இன்னும் சில எழுத்துகளுக்கான தெளிவோடும் அரசாணை அமைந்தது. 'ஐ - அய், ஔ - அவ்' என்று மாற்றம் செய்யப்பட்ட பகுதி மட்டும் பின்னர் பழையபடியே இருக்கலாம் என்று தெரிவிக்கப்பட்டது.

மூவாண்டு முனைப்புத் திட்டம் எனும் அரசாணையும் இக்காலத்தில்தான் பிறப்பிக்கப்பட்டது. (10.3.81) ஆனால் மூன்றாண்டென்ன? 15 ஆண்டுகளாகியும் திட்டம் நிறைவேறவில்லை என்பது வரலாறு.

திருவள்ளுவராண்டைப் பயன்படுத்த வேண்டுமென்று வலியுறுத்தி ஒரு சிறப்பாணை பிறப்பிக்கப்பட்டது. கிறித்தவ ஆண்டுக்கு நேரான தமிழாண்டு, திங்கள், நாள் மற்றும் திருவள்ளுவராண்டையும் பயன்டுத்த வேண்டுமென்று அரசு ஆணையிட்டது.

29.1.1982 இல் பிறப்பிக்கப்பட்ட 117 ஆம் எண் அரசாணை மிகவும் சிறப்பு வாய்ந்தது.

சாலை / தெருக்கள் பெயர்களைத் தமிழாக்கம் செய்யும்போதும் சாலைகளுக்குப் புதிய பெயர்கள் சூட்டும்போதும், அப்புதிய பெயர்கள் அரசின் ஒப்புதல் பெற்றபின், தமிழ்ப் பெயர்ப் பலகைகள் வைப்பதற்கு முன் தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கருத்தைப் பெற்று அவரால் தமிழாக்கம் செய்யப்பட்ட பெயர் கொண்ட பலகைகள் வைக்குமாறு தன் பொறுப்பிலுள்ள அனைத்து உள்ளாட்சிகளுக்கும் தக்க அறிவுரை வழங்கும்படி நகராட்சிகளின் நிர்வாக இயக்குநரும், ஊரக வளர்ச்சி இயக்குநரும், சென்னை மாநகராட்சி கோவை, மதுரை மாநகராட்சி ஆணையாளர்களும் கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

விளம்பரப் பலகைகளில் தமிழ் முதலிடம் பெற வேண்டும் என்பது குறித்துப் பிறப்பிக்கப்பட்ட அரசாணை வரலாற்று முத்திரை ஆகும். கடைகள் - நிறுவனங்கள் விதி 15 இன் படி இந்த அரசாணை: "பெயர்ப் பலகைகள் ஒவ்வொன்றும் தமிழில் அமைய வேண்டும்; பிற மொழிகளிலும் எழுதப்படுமாயின் முதலில் தமிழ், இரண்டாவது ஆங்கிலம் - அடுத்துப் பிறமொழி என அமைய வேண்டும்; ஒவ்வொன்றுக்கும் இடைவெளி 5:3:2 என்ற அளவில் அமைய வேண்டும். தமிழ் எழுத்துகள் சீர்திருத்த எழுத்துகளால் அமைதல் வேண்டும்.

இதில் 5:3:2 என்று அளந்து விளம்பரம் எழுதுவதில் உள்ள இடரினை மனத்திற்கொண்டு ஒரு சிறு திருத்தம் செய்யப்பட்டது. தமிழ் எழுத்துகள் பெரியவையாயும், பிறமொழி எழுத்துகள் சிறியவையாயும் அமைதல் வேண்டும் எனத் தெளிவு படுத்தப்பட்டது. நான் பொறுப்பேற்றிருந்த காலத்தின் வெற்றிக்கு இந்த அரசாணையே அடிப்படையாகும்.

எல்லாவற்றிலும் தமிழே இருக்க வேண்டுமெனும் அரசாணையும் குறிப்பிடத்தக்கது. (371/ 31.10.1986)

ஆட்சிமொழி முனைப்புத் திட்டத்தை விரிவுபடுத்தும் பொருட்டுத் தலைமைச் செயலகத் துறைகளிலும் அரசுச் சார்பு நிறுவனங்கள், கழகங்கள், வாரியங்கள், கூட்டுறவு இணையங்கள் போன்ற அனைத்திலும் தமிழ்த்திட்டத்தை உடனடியாகச் செயற்படுத்திட, வெளியிடப்படும் ஆணைகள், கடிதங்கள், அரசாணைகள் போன்ற எல்லா இனங்களிலும் தமிழில் நடவடிக்கை மேற்கொள்ளல், கடிதப் போக்குவரத்து மற்றும் இதர குறிப்புகள், பதிவேடுகளைப் பேணுவது போன்ற அனைத்தும் தமிழிலேயே இருத்தல் வேண்டுமென ஆணையிடப்படுகிறது.

அரசு அலுவலகங்களில் பெயர்ப் பலகைகள் தமிழில் அமைந்திட வேண்டுமெனும் அரசாணையும் பாராட்டுக்குரியதாகும். அரசுத் துறைத் தலைமை மற்றும் மாவட்ட அலுவலகங்களில்

5:3 எனும் அளவில் தமிழிலும் ஆங்கிலத்திலும் பெயர்ப்பலகை அமைபலாம். இவை தவிர ஏனைய அலுவலகங்களின் பெயர்ப் பலகைகள் தமிழில் மட்டும் அமைந்தால் போதுமானதாகும்.

இவ்வளவு பெருமுயற்சி எடுத்து ஆணைகள் பிறப்பிக்கப்பட்ட போதிலும் நம் வருத்தம் முழுமையாக நீங்கவில்லை.

"ஆட்சி மொழித் திட்டம் 1957 இல் தொடங்கப்பெற்று 25 ஆண்டுகளில் எதிர்பார்த்த முன்னேற்றம் விளைய வில்லை" என்கிறது ஓர் அரசாணை (2.6.1981)

எனவே, பல முதல்வர்கள், பல கல்வி அமைச்சர்கள், த.வ.ப. துறை அமைச்சர், பிற அமைச்சர்கள், ஒரு சில அலுவலர்கள் எவ்வளவுதான் ஆர்வமும் அக்கறையும் எடுத்துக் கொண்டாலும் கடிதங்களுக்கு விடை எழுதுவோர், தட்டச்சுச் செய்வோர், வரைவுகள், குறிப்புகள் வரையும் சார்புச் செயலர்கள் இவர்களை மேற்பார்வையிட்டுத் திருத்தும் பொறுப்பிலுள்ள மேலதிகாரிகள் கவனம் எடுத்துச் செயற்படாவிட்டால் தமிழ் ஆட்சி மொழித் திட்டம் அவ்வப்போது பள்ளத்தில் விழுந்து விழுந்துதான் எழும் என்பது கண்கூடு.

## இயல் - ஒன்பது

## குடியரசுத் தலைவர் ஆட்சி

திருவாட்டி ஜானகி எம்.ஜி.ஆரை முதல்வராகக் கொண்ட அ.தி.மு.க. ஆட்சி கலைக்கப்பட்டபின், (1988 சனவரி) 27.1.1989 இல் மீண்டும் தி.மு.க. ஆட்சி வரும்வரை குடியரசுத் தலைவர் ஆட்சி நடைபெற்றது.

இந்த ஓராண்டு காலத்தில் த.வ.ப. துறை சார்பில் எந்த ஓர் அரசாணையும் பிறப்பிக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இயல் - பத்து

# தி.மு.க. தேர்தல் அறிக்கையும் செயற்பாடுகளும்

1989 ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட தி.மு.க. தேர்தல் அறிக்கையில் தமிழ் மேம்பாட்டுத் திட்டம் எனும் தலைப்பிலும் உலக அளவில் தமிழ் மொழியைப் பரப்பிடும் முயற்சி எனும் தலைப்பிலும் சில பகுதிகள் வெளியிடப்பட்டுள்ளன.

தேர்தல் வாக்குறுதி 1989

தமிழ் மேம்பாட்டுத் திட்டம்

தமிழ்ப் பயிற்று மொழித் திட்டம் தி.மு.கழக ஆட்சியின் போது இளங்கலைப் பட்டப் படிப்பளவில் கொண்டு வரப்பட்டது. ஆனால் கடந்த பத்தாண்டுகளாக தி.மு.கழகம் விட்ட இடத்திலேயே இப்பயிற்று மொழித் திட்டம் நின்றுவிட்டது. மேனிலைக் கல்வியிலோ ஆய்வு நிலையிலோ தமிழ்ப் பயிற்று மொழித்திட்டம் தொடரப்படவில்லை. எனவே தமிழ்ப் பயிற்று மொழித் திட்டம் மிகவும் சிறப்பான நிலையில் முதுகலை, உயர்நிலை, ஆய்வுநிலை வரை விரைந்து செயல்படுத்தப்படும். இத்திட்டம் வெற்றிபெறக் கருவி நூல்கள் (Tools) ஆசிரியர்களுக்குச் சிறப்புப் பயிற்சி (Advance Level Training) போன்ற ஆக்கப்பணிகள் மேற்கொள்ளப்படும்.

உலக அளவில் தமிழ் மொழியைப் பரப்பும் முயற்சி

உலகத்தின் பல பகுதிகளில் தமிழ் மொழி பேசுவோர் பரந்து காணப்பட்டாலும் தமிழை அவர்கள் சிறப்பான முறையில் பயில்வதற்கு வாய்ப்பில்லாமல் இருக்கின்றார்கள், இவர்களின் ஆர்வத்தை நிறைவு செய்யும் வகையில் தமிழில் பாட நூல்கள், எளிய தமிழ் அகராதிகள், எளிய தமிழ் இலக்கணம் ஆகியவற்றைத் தமிழ் வல்லுநர்கள் ஒத்துழைப்புடன் அரசு வெளியிடும்.

தொன்மையான தமிழ் மொழி தற்காலச் சமூகவியல், அறிவியல் வளர்ச்சி நிலைகளுக்கேற்ப வளம் பெறுவதற்குரிய வழிநிலைகள் மேற்கொள்ளப்படும்.

உலகப் புகழ்பெற்ற நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்து மலிவு விலையில் வெளியிடப்படும்.

(இவற்றில் குறிப்பிடப்பட்டவற்றுள் இரண்டை மட்டும் கவனிக்கலாம்.)

"கழக ஆட்சியில் தொடங்கப்பட்டு இடையில் நிறுத்தப்பட்ட தமிழ்நாட்டு வரலாற்றினை எழுதி வெளியிடும் முயற்சி தொடரப்படும்.

மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் தலைமையில் தொடங்கப்பட்ட அகர முதலித் துறையில் இரண்டாவது, மூன்றாவது பகுதிகள் அச்சுக்குத் தயாராக இருந்த நிலையில் ஆட்சி கலைக்கப்பட்டு விட்டது. அதற்குப் புத்துயிர் கொடுத்துத் தொடர்ந்து 'அகர முதலி' வெளிவர ஏற்பாடு செய்யப்படும்."

இந்த வகையில் நான் பொறுப்பேற்றபின் மளமளவென்று நூல்கள் உருவாக்கப்பட்டு வெளியிடப் பட்டுள்ளன என்பதை உணர முடியும்.

வெளிவர வேண்டியவை மூன்று தொகுதிகள் மட்டுமே. விசய நகரப் பெருவேந்தர் காலம், ஆங்கிலேயர் ஆட்சிக் காலம், விடுதலைக்குப் பின் தமிழகம் (3.2.1969 வரை)

அடுத்து செ.சொ.பி. அகர முதலி பற்றியது.

('தமிழ்ப்பணி' நூலில் விரிவாய்ப் பேசுவோம்)

எனினும் இந்தத் தேர்தல் அறிக்கையில் 'தமிழ் ஆட்சிமொழி' பற்றி எந்தக் குறிப்பும் இல்லை.

TAMILNADU
PONGAL BUMPER DRAW
Rs 2 CRORES
2 கோடி

**லாட்டரியில் தமிழ்:**
**தமிழ்க்குடிமகன் கவனிக்க!**

தமிழுக்கு முக்கியத்துவம் வழங்க வேண்டும் என்று அமைச்சர் தமிழ்க்குடிமகன் மூச்சுக்கு முன்னூறு தரம் பேசியிருக்கிறார்! ஆனால், அவர் தமிழக அரசு நடத்தும் லாட்டரி சீட்டை பார்க்காமல் விட்டுவிட்டாரே?

பரிசு சீட்டில் தமிழைத் தேட வேண்டி உள்ளது. ஆங்கிலம் அட்டகாசமாக தெரிகிறது. ஆங்கிலம்தாம்பா அவசியம் என்று சொல்லாமல் சொல்லும் அரசு லாட்டரி சீட்டிலும் தமிழ்க்குடிமகன் தனது தமிழார்வத்தை நிலைநாட்டுவாரா?

ஆல்பர்ட், ஏழுகிணறு

# தி.மு.க. ஆட்சிக்காலம் (1989 - 91)

1989க்கும் 1991க்கும் இடையில் வெளியிடப்பட்ட அரசாணைகள் ஏழு.

27.6.1989இல் வெளியிடப்பட்ட அரசாணை எண்:182 புகழ் பெற்றதாகும். 'அரசாணைகள்' தலைப்பில் அதன் சாரம் பேசப்படுகிறது.

அனைத்தும் தமிழிலேயே வெளியிடப்பட வற்புறுத்துகிறது அந்த ஆணை.

தலைமைச் செயலக ஆய்வுக்காகக் குழு அமைப்பது குறித்து ஓர் அரசாணை பிறப்பிக்கப்பட்டது. ஆனால் குழு செயற்பட்டு, ஆய்வு செய்யவில்லை.

இந்த ஆட்சிக் காலத்தில் குறிப்பிடத்தக்க சிறப்பு என்னவென்றால் கடைகளிலும் நிறுவனங்களிலும் தமிழில் விளம்பரப் பலகை வைப்பது குறித்த ஆணைதான். இந்த ஆணைக்குப் பின்னணியில் நான் இருக்கிறேன். அதனைப் பின்னர் விளக்குவேன்.

விளம்பரப் பலகைகளில் பயன்படுத்தும் சொற்களைத் தொகுத்து வெளியிட ஒரு குழு அமைக்கப்பட்டது.

இதன் கதி குறித்தும் வேறோர் இடத்தில் விளக்கப்பட்டுள்ளது.

இதன் பின் 31.1.1991 முதல் 30.6.1991 வரை மறுபடியும் குடியரசுத் தலைவர் ஆட்சி. தமிழ் வளர்ச்சி தொடர்பாக எந்த ஆணையும் பிறப்பிக்கப்படவில்லை.

கல்வித்துறையில் இணைந்திருந்த த.வ.ப. துறை 'மந்த கதி'யில் நடைபெற்றது எனலாம்.

1991 தேர்தல் அறிக்கையில் கல்வி வளர்ச்சி, ஆசிரியர் நலன், மாணவர்களுக்குச் சலுகைகள், தமிழ்த் தொண்டு என்று தலைப்பிடப்பட்டுள்ளது. ஆனால் உட்பகுதியில் தமிழ்த் தொண்டு பற்றி எந்தக் குறிப்பும் இல்லை.

இத்தேர்தலில் தி.மு.கழகம் தோல்வியடைந்து அ.தி.மு.க. ஆட்சிக்கு வந்தது.

தமிழ் முரசு 28.10.99

**தமிழில் கையெழுத்து போடாத அரசு ஊழியர்களுக்கு தண்டனை**

**விருதுநகர் கருத்தரங்கில் அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை**

பயர்களை விட, வெளிநாட்டில் வாழ்பவர்கள் தமிழ் மொழி பற்றுமிக்கவர்களாக உள்ளனர். 1978-ம் ஆண்டு எம்ஜிஆர் அரசு ஊழியர்கள் தமிழில் கையெ

## இயல் - பன்னிரண்டு

## அ.இ.அ.தி.மு.க. ஆட்சிக்காலம் (1991 - 1996)

புரட்சித்தலைவியின் ஐந்தாண்டு கால ஆட்சியில் 15 அரசாணைகள் பிறப்பிக்கப் பட்டுள்ளன.

அனைத்து வகைகளிலும் தமிழ் ஆட்சி மொழியாகப் பயன்படுவதை ஊக்குவிக்கும் வகையில் பரிசளிப்புகள் - தொடர்ந்து ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் - தமிழ் வளர்ச்சி மன்றம் - புதுப்பிப்பு.

தலைமைச் செயலகத்தில் ஆய்வு மேற்கொள்ள, தலைமைச் செயலாளர் தலைமையில் தமிழ் ஆட்சிமொழித் திட்ட உயர்நிலைக் குழு (91 இறுதியிலும் இப்படியோர் அறிவிப்பு -95 இறுதியிலும் இப்படியோர் அறிவிப்பு - அறிவிப்புகள் என்பது கூடத் தவறு - ஆணைகள். ஆனால் தலைமைச் செயலகத் துறைகள் ஆய்வு செய்யப்படவில்லை)

தஞ்சையில் 1.1.95 இல் உலகத் தமிழ் மாநாடு - இது பல பணிகளுக்கான அறிவிப்பைப் பெற்றது. முதல்வர் அறிவித்திருந்தாலும் இது தொடர்பான அரசாணைகள் பிறப்பிக்க 15 மாதங்கள் ஆகியுள்ளன. அதிகாரிகளின் அக்கறையின்மை இதில் தெளிவாகப் புலப்படும்.

7.2.96 ஆம் நாளிட்ட ஆணை சிறப்பானதாகும். 'இன்றும் தமிழ்! என்றும் தமிழ்' என்ற எழுச்சி முழக்கத்தின் தொடர்பாய் மாண்புமிகு முதல்வர் தலைமையில் அனைத்து அரசுச் செயலாளர்களின் கூட்டத்தைக் கூட்டித் தமிழ் ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கத்தை விரைவுபடுத்தவும், மற்றும் தலைமைச் செயலகத்தில் 65% தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் இருக்க வேண்டுமெனவும் ஆணை.

15.3.1996 இல் மூன்று சிறப்பான ஆணைகள் பிறப்பிக்கப்பட்டன.

1. தமிழ் எழுத்துச் சீரமைப்பு - வல்லுநர் குழு.

2. மழலையர் கல்வி தொட்டு எல்லா நிலைகளிலும் தமிழ் மொழிக் கல்வியைக் கடைப்பிடித்தல் மற்றும் தமிழை மட்டுமே பயிற்று மொழியாகக் கொண்டு வருதல் - தொடர்பாக ஒரு குழு.

3. தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தை வலுப்படுத்தவும் செம்மையாக நிறைவேற்றவும் வழிவகைகளை வகுத்துக் கூற - வல்லுநர் குழு.

இந்த வகையில் அ.தி.மு.க. அரசு சரியான முயற்சிகளை மேற்கொண்டு எந்த அரசுக்கும் தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தில் மாறுபாடில்லை என்பதை உறுதி செய்துள்ளது.

## இயல் - பதின்மூன்று

## தி.மு.க. தேர்தல் அறிக்கை

1996 தேர்தலுக்கு முன் தி.மு.க. தன் தேர்தல் அறிக்கையை வெளியிட்டது. ஏனெனில் இந்தத் தேர்தல் வெற்றிக்குப் பின் என் பணி அமைந்தது.

தேர்தல் அறிக்கை இது.

தமிழ் மேம்பாட்டுத் திட்டம் - தேர்தல் அறிக்கை 1996

தமிழ்ப் பயிற்று மொழித் திட்டம் தி.மு.கழக ஆட்சியின்போது இளங்கலைப் பட்டப் படிப்பளவில் கொண்டுவரப்பட்டது. இத்திட்டம் மிகவும் சிறப்பான நிலையில் முதுகலை, உயர்நிலை, ஆய்வு நிலை வரை விரைந்து செயல்படுத்தப்படும்.

கழக ஆட்சியில் தொடங்கப்பட்டு இடையில் நிறுத்தப்பட்ட தமிழ்நாட்டு வரலாற்றினை எழுதி வெளியிடும் முயற்சி தொடங்கப்படும்.

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் தலைமையில் தொடங்கப்பட்ட அகர முதலித் துறை இரண்டாவது, மூன்றாவது பகுதிகள் அச்சுக்குத் தயாராக உள்ள நிலையில் கழக அரசு கலைக்கப்பட்டுவிட்டது. அதற்குப் புத்துயிர் கொடுத்துத் தொடர்ந்து "அகர முதலி" வெளிவர ஏற்பாடு செய்யப்படும்.

1956 இல் சட்டமாக்கப்பட்டு இதுவரை ஐம்பதுக்கும் மேற்பட்டஅரசாணைகள் எல்லா ஆட்சிக்காலத்திலும் பிறப்பிக்கப்பட்டும், தமிழ் முழுமையாக ஆட்சி மொழியாக வில்லை எனும் மனக்குறை உள்ளது. உயர் அதிகாரிகளையும், அலுவலக அரசு ஊழியர்களையும் ஒருங்கிணைத்து அனைத்து மட்டங்களிலும் ஒரு கால வரம்பு நிர்ணயித்து தமிழ் முழு ஆட்சி மொழியாகும் வகையில் ஆணை பிறப்பிக்கப்படும்.

கோவில்கள், நீதிமன்றங்கள் ஆகியவற்றிலும் தமிழைப் பயன்படுத்தி எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்கிற நிலையை உருவாக்கிட நடவடிக்கை மேற்கொள்ளப்படும்.

உலகத்தின் பல பகுதிகளில் தமிழ்மொழி பேசுவோர் பரந்து காணப்பட்டாலும் தமிழை, அவர்கள் சிறப்பான முறையில் பயில்வதற்கு வாய்ப்பில்லாமல் இருக்கிறார்கள். இவர்களின் ஆர்வத்தை நிறைவு செய்யும் வகையில் எளிய தமிழ் அகராதிகள், எளிய தமிழ் இலக்கணம் ஆகியவற்றைத் தமிழ் வல்லுநர்கள் ஒத்துழைப்புடன் அரசு வெளியிடும்.

தமிழகத்தில் கல்வி பயிலும் அனைவரும் மழலையர் பள்ளி முதல் ஐந்தாம் வகுப்பு வரை தமிழை ஒரு பாடமாகப் படிக்குமாறு வலியுறுத்தப்படும். மொழிச் சிறுபான்மையினரின்

உரிமைகளைப் பாதிக்காமல் அனைத்துப் பள்ளிகளிலும் தமிழுக்கு முதலிடம் அமையுமாறு கல்வித்திட்டம் வகுக்கப்படும்.

தமிழைப் பயிற்று மொழியாகக் கொண்டு படித்தோருக்கு அரசுப் பணிகளிலும், அரசுச் சார்புப் பணிகளிலும் முன்னுரிமை தரப்படும்.

## இயல் - பதினான்கு

## தி.மு.க. ஆட்சிக் காலம்

13.5.96 இல் ஆட்சி அமைந்தபோது, அதுவரை கல்வித் துறையிலேயே ஒரு பகுதியாக அமைந்து வந்த 'தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாட்டுத்துறை' தனி அமைச்சகமாக அமைக்கப்பட்டு அதற்கு என்னை அமைச்சர் பொறுப்பில் அமர்த்தினார்கள். இனி நான் எழுதப் போகும் செய்திகள் விரிவானவை என்பதால் அவை அனைத்தும் 'என்' ஆட்சிக் காலத்தில் நிகழ்ந்தவை என்பதால் தனித்தனித் தலைப்புகளில் தரப்பட்டுள்ளன.

**27-9-98**

# 'ஊதிய உயர்வில் காட்டும் ஆர்வம் தமிழ் ஆட்சிமொழி ஆணையில் இல்லையே'

## அரசு அலுவலர்கள் மீது தமிழ்க்குடிமகன் வருத்தம்

கரூர், செப். 27-

பொருட்களை கொடுத்துப் பழக்கி விட்டனர். புத்தகங்களை தூக்கி எறிந்துவிட்டு பொருட்களை மட்டும் எடுத்துக்கொள்கிறார்கள்.

## இயல் - பதினைந்து

# அரசாணைகள்

பேராயக் கட்சி ஆட்சிக் காலத்தில் தமிழை ஆட்சி மொழியாக்குவதில் எப்படிப்பட்ட நடைமுறைகள் இருந்தன என்று பார்த்தால் 1966 வரை தமிழில் அரசாணை பிறப்பிக்க வேண்டும் எனும் எண்ணம் கூட வரவில்லை.

1. பொதுத் துறையில் 23.3.1963 இல் வெளியிடப்பட்ட அரசாணை எண்:609

பின்வரும் அலுவலகங்களுக்கும் தமிழ்த் திட்டத்தை விரிவு படுத்துவது என முடிவு செய்யப்படுகிறது. ஆணையர், அரசுத் தேர்வுகள் இயக்ககம், உணவு உற்பத்தி, கண்காணிப்புப் பொறியாளர் அலுவலகம்; இதைக் கூடத் தமிழில் வெளியிட வேண்டும் எனும் எண்ணம் வரவில்லையே!

2. பொதுத் துறையில் 13.11.1963 இல் வெளியிடப்பட்ட அரசாணை எண்:1759

சென்னை ஆவணக் காப்பகம், தொல்லியல் துறையின் தனி அலுவலர் அலுவலகம், தொழில் நுட்பக் கல்வித்துறை இயக்குநர் அலுவலகம் போன்ற 6 துறைகளுக்குத் தமிழ்த் திட்டத்தை விரிவுபடுத்தும் அரசாணை இது.

3. பொதுத் துறை (தமிழ் வளர்ச்சி -1) யிலிருந்து 24.2.1966 இல் வெளியிடப்பட்ட அரசாணை எண்:453

இதில் தலைமைச் செயலகத்தில் உள்ள 9 துறைகளில் அனைத்துக் கடிதத் தொடர்பிலும் தமிழ் பயன்படுத்தப்பட வேண்டும் என்பது குறித்து விளக்கம் தரப்பட்டுள்ளது.

1. ஊரக வளர்ச்சி மற்றும் உள்ளாட்சித் துறை
2. வருவாய்த் துறை
3. கல்வி மற்றும் மக்கள் நல்வாழ்வுத் துறை
4. பொதுப் பணித் துறை
5. உணவுத் துறை
6. வேளாண்மைத் துறை
7. உள்துறை
8. தொழில் துறை, தொழிலாளர் நலத்துறை, கூட்டுறவுத் துறை
9. பொதுத் துறை

இந்த அரசாணையையும் தலைமைச் செயலக மேலதிகாரிகள் ஆங்கிலத்தில்தான் பிறப்பித்துள்ளனர்.

1. OFFICIAL LANGUAGE - Tamil - Partial scheme of Tamil correspondence - Introduction in the office of the Commissioner for Government Examinations and certain other offices with state - wide jurisdiction Notification under section 4 of Madras Official Language Act 1956 - Issues. (609/23.3.1963)

ORDER

The Government have decided to introduce the "Tamil Scheme" in easy stages on the lines laid down in the G.O. read in the following offices also:-

1. Office of the Commissioner for Government Examination, Madras
2. Office of the Superintending Engineer (Food Production) Madras.
3. Office of the Director of Settlements, Madras
4. Office of the Deputy Director of survey and Land Records, Madras, and
5. Office of the Assistant Director of Survey, Survey Office, Madras

2. OFFICIAL LANGUAGE - Tamil - Partial scheme of Tamil correspondence Introduction in the offices of certain Heads of Departments and certain offices of State - wide Jurisdiction - Notification under section 4 of the Madras Official Language Act, 1956 - Issued. (1759/13.11.1963)

ORDER

The Government have decided to introduce the "Tamil Scheme" in easy stages on the lines laid down in the G.O. read above in the following offices also:-

1. Office of the Forest Utilization Officer, Madras.
2. Office of the Director of Technical Education, Madras.
3. Office of the Accommodation Controller, Madras.
4. Office of the Special Officer for Archaeology, Madras.
5. Madras Record Office, Madras.

3. OFFICIAL LANGUAGE - Tamil Introduction in certain Departments of the Secretariat - First stage of Tamil Scheme - Notification - Issued. (453/24.2.1966)

ORDER

The following notification will be published in the Fort St. George Gazette:-

NOTIFICATION

In exercise of the power cenferred by Section 4 of the Madras Offical Language Act, 1956 (Madras Act XXXIX of 1956), the Governor of Madras hereby directs that, with effect on and from the official communication in the schedule below to any person other than. . . .

தமிழை முழுமையான ஆட்சி மொழியாக்க வேண்டியதன் இன்றியமையாமை குறித்து நான் கல்லூரியில் இருந்த போதே சிந்தித்து வந்தேன் அதனால்தான் 'வாழ்ந்து காட்டுங்கள்' என்ற நூலில் ஆட்சிமொழி பற்றி ஒரு கட்டுரை எழுதியுள்ளேன். இது 1991க்குப் பின் எழுதப்பட்டது.

"இன்று தமிழ்நாடு முழுவதும் 'எங்கும் தமிழ் - எதிலும் தமிழ்' எனும் முழக்கம் பலராலும் நிகழ்த்தப்படுகிறது. இதில் கட்சி வேறுபாடு இல்லை என்றே கூறலாம்.

உள்ளபடியே தமிழ் எல்லா மட்டத்திலும் முழு ஆட்சி மொழியாக விளங்க வேண்டும் என்பதே அனைவருடைய அவாவாகவும் உள்ளது. தமிழை ஆட்சிமொழியாகப் பயன்படுத்திய ஒரு கல்லூரி முதல்வராக, தமிழ் ஆட்சிமொழியாக வேண்டுமெனச் செயற்படும் தமிழக அரசு நடவடிக்கைகளில் பங்குகொண்ட சட்டப் பேரவைத் தலைவராக 'ஆட்சிமொழி' பற்றி ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்க விரும்பினேன். அதன்விளைவாக எழுந்ததே இக்கட்டுரை, இதில் எந்த அரசியல் கட்சிச் சார்பும் இல்லை. ஆனால் இயற்றப்பட்ட சட்டங்கள் செயற்படுத்தப்படாத நிலையும், தமிழ் மக்களின் மனப்போக்கும் இதில் புலப்படுத்தப்பட்டுள்ளன. நாம் என்ன செய்ய வேண்டும் என்ற குறிப்போடு இக்கட்டுரை நிறைவு பெறும். இந்த முன்னுரையோடு இப்போது செய்திகளை அலசுகிறோம்.

இதில் வேடிக்கையும் வியப்பும் என்னவென்றால் 1956இல் சட்டம் நிறைவேற்றப்பட்டுப் பல அரசாணைகளும் பிறப்பிக்கப்பட்டு 11 ஆண்டுகள் கழித்து அடுத்து வந்த ஆட்சி பிறப்பிக்கும் முதல் அரசாணையே தலைமைச் செயலகத்தில் முதற்கட்டம் செயற்படுத்தப்பட வேண்டும் என்பதுதான்.

பொதுமக்கள் தமிழில் எழுதும் விண்ணப்பங்களுக்குத் தமிழிலேயே விடை தரவேண்டும் எனும் அடிப்படை உணர்ச்சியே கூடத் தலைமைச் செயலகத்துள் வந்து சேரவில்லை. அதன் விளைவுதான் மேற்கண்ட அரசாணைகள்.

இது தொடர்பாக அடிக்கடி கலந்தாய்வுக் கூட்டங்களும் தலைமைச் செயலகத்தில் நடைபெற்றன.

தமிழை முழு ஆட்சிமொழியாக்கும் வகையில் 14.10.1969 இல் தலைமைச் செயலகத்தில் கலந்தாய்வுக் கூட்டம் நடைபெற்றுள்ளது. அதில் 1.4.1970 முதல் சட்டம் மற்றும் நிதித் துறையிலும் முதற்கட்டத்தைச் செயற்படுத்த ஆணை பிறப்பிக்கப்பட்டது.

2.12.1971இல் நடைபெற்ற கலந்தாய்வுக் கூட்டத்தில் நான்கு கட்டத்தின் முழுச் செயற்பாடும் நடைமுறைக்கு வரவேண்டும் என்று முடிவு செய்யப்பட்டு ஆணை பிறப்பிக்கப் பட்டது.

கண்டறிந்த உண்மைகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 01.03.63 | முதல் | 38 அலுவலகங்கள் |
| 2. | 23.3.63 | முதல் மேலும் | 5 அலுவலகங்கள் |
| 3. | 01.06.63 | முதல் மேலும் | 7 அலுவலகங்கள் |
| 4. | 01.12.63 | முதல் மேலும் | 6 அலுவலகங்கள் |

ஆக 56 துறை அலுவலகங்களில் 1963 ஆம் ஆண்டிலேயே தமிழ் ஆட்சி மொழியைப் பயன்படுத்தும் ஆணை பிறப்பிக்கப்பட்டும் அது செயற்படுத்தப்படவில்லை.

எடுத்துக்காட்டு:

பெயர்ப் பலகைகள் தமிழில் அமைய ஊர்வலம் நடத்துவதற்கான இசைவைத் தலைநகர்த் தமிழ்ச் சங்கம் கேட்டிருந்தது. அதற்கான இசைவு ஆங்கிலத்தில் தரப்பட்டுள்ளது. (13.1.90) அதாவது தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தின் முதல் கட்டமே செயற்படுத்தப்படவில்லை.

1963 இல் போடப்பட்ட ஆணை 1990 இலும் செயற்படுத்தப்படவில்லை

2. ஒவ்வொரு துறையும் ஆறு மாதத்துக்கொரு முறை 'தமிழ் ஆட்சி மொழிச் செயற்பாடு' குறித்து அறிக்கை தரவேண்டும். மேற்குறித்த 56இல் 19 துறைகள் மட்டுமே அரையாண்டு அறிக்கை தந்துள்ளன. இன்னும் பல துறைகள் அவற்றைப் பற்றிக் கவலைப் படவில்லை.

3. 1963 இல் முதற்கட்டத்தைச் செயல்படுத்தக் கோரிய ஆணையை ஏற்று அப்போதிருந்த இந்து சமய அறநிலையத்துறை ஆணையர் இரண்டாம் கட்டத்தையும் சேர்த்தே செயல்படுத்திவிட்டார்.

4. 1957 தொடங்கி 1962, 1971, 1983 இல் பதிப்பிக்கப்பட்ட ஆட்சிச் சொல் அகராதி மற்றும் துறைச் சொல் அகராதிகள் இருந்தும் பலர் தமிழில் எழுதவில்லை.

செய்ய வேண்டுவன

1. அரசு இதில் கடுமையாக இருந்தால் 6 மாதத்தில் தமிழ் முழு அளவில் ஆட்சிமொழியாக வாய்ப்புண்டு.

2. கையொப்பம், வருகைப் பதிவேடு, குறிப்புகள், கோப்புகள் அனைத்தும் தமிழில் பேணப்படுகின்றன. ஆளுநர், நடுவண் அரசு, பிற மாநிலங்கள், அயல் நாடுகள் ஆகியோர்க்கு அனுப்பப்படும் மற்றும் விலக்களிக்கப்பட்ட இனங்களில் மட்டுமே ஆங்கிலம் பயன்படுத்தப்படுகிறது.

3. விதிவிலக்கான துறையிலேயே செயற்படுத்த முடியும் போது விதிகளுக்குட்பட்ட துறைகளில் ஏன் செயற்படுத்த முடியாது? - முடியும்.

4. "மாண்புமிகு அமைச்சர்கள் அனைவரும் தமிழை ஆட்சி மொழியாக்குவதில் தக்க கவனம் செலுத்த வேண்டும்.

விதிவிலக்கு அளிக்கப்பட்ட கீழ்க்கண்ட இனங்களைத் தவிரப் பிற அனைத்திலும் கோப்புகள் தமிழில் பேணப்படுகின்றனவா என்பதைக் கவனிக்க வேண்டும். தமிழில் வைக்கப்படும் கோப்புகளில் மட்டுமே கையொப்பம் இடவேண்டும். தமிழில் வைக்கப்படாத கோப்புகளைத் திருப்பி அனுப்பிட வேண்டும்.

இதனை முழுமையாகவும், முறையாகவும் செயற்படுத்தத் தத்தம் துறைச் செயலாளர்கள் மற்றும் ஆணையாளர்களை வற்புறுத்த வேண்டும்.

வாய்ப்பு நேரும் போது, தலைமைச் செயலகத்தில் உள்ள தம் துறை சார்ந்த அலுவலகத்தையும், தமிழ் நாட்டில் சுற்றுப்பயணங்களின் போது தத்தம் அலுவலகப் பிரிவுகளையும் பார்வையிட்டுக் குறிப்பெழுதி அறிவுறுத்த வேண்டும்."

என்று அமைச்சர்கள் அனைவருக்கும் தெளிவான கட்டளை பிறப்பிக்கப்பட்டால் பயன் விளையும்.

அனைத்து மக்களையும் அரசாணைகளைக் கொண்டே ஆட்சி செலுத்தும் நாம், தமிழ் ஆட்சி மொழித் தொடர்பான செய்திகளை மட்டும் ஏன் சரியாகச் செயற்படுத்த வில்லை என்பது கருதிப் பார்ப்பதற்குரியது. உயர்மட்ட அலுவலர்கள் ஆர்வமும் அக்கறையும் எடுத்துக் கொள்ளாததாலும், தம் கீழுள்ள அலுவலர்களின் செயற்பாடுகளைக் கண்காணித்துச் சுட்டிக் காட்டாததாலுமே இக்குறை நேர்ந்துள்ளது.

தமிழ் உணர்வோடு ஆட்சியாளர்களும், அமைச்சர்களும், அரசு அலுவலர்களும் செயற்பட்டால் பொதுமக்கள் தாமாகவே முன்வந்து செயற்படுவர். தொடர் வண்டிக்கு முன்பதிவுச் சீட்டு, பதிவு செய்கிறோம். அந்த விண்ணப்பம் ஆங்கிலத்தில் மட்டுமே இருந்தபோது ஆங்கிலத்தில் நிரப்பினோம். ஆங்கிலத்திலும் தமிழிலும் உள்ள விண்ணப்பம் வந்ததும் என் கை தமிழில்தானே படிவத்தை நிரப்பும்?

எந்த ஆட்சியாளர் காலத்தில் இது நிறைவேறியது, அல்லது நிறைவேறவில்லை என்று ஆராய்வது பயனற்ற முயற்சி, மொத்தத்தில் 1956 இல் அடிக்கல் நாட்டியும் 36 ஆண்டுகளாகியும் கட்டிடம் முழுமையடையவில்லையே என்ற வருத்தம் மட்டும் ஏற்பட்டால் போதும்.

அரசு ஊழியர்க்குக் கோடிக்கணக்கில் அள்ளிக் கொடுத்திருக்கிறோம். அவர்கள் கோரிக்கையை ஏற்று ஆறு நாள் வேலையை 5 நாள் ஆக்கியுள்ளோம். விடுமுறைநாட்களுக்கோ பஞ்சமில்லை. அக்டோபர் 2 - காந்தியார் பிறந்த நாள், 3 - சனிக்கிழமை 4- ஞாயிறு 5 - ஆயுத பூசை, 6 - விசய தசமி, அக்டோபர் 1க்குப்பின் அக்டோபர் 7 தானே வேலை நாள்?

உரிமைகளைக் கொடுத்துவிட்டோம். கடமைகளை வற்புறுத்தி வேலை செய்ய வைப்பது நம் கடமை."

ஏக்கம் தீருமா? நோக்கம் நிறைவேறுமா?

இந்த ஆர்வம் இருந்ததால்தான் நான் சட்டப் பேரவைத் தலைவராக இருந்தபோதும் ஆட்சிமொழிச் செயலாக்கத்தில் அதிக அக்கறை காட்டினேன். அதனால்தான் பழைய அரசாணைகளை வரலாற்று ஆராய்ச்சி செய்ய வேண்டியதாயிற்று. நான் மேலே கூறிய மூன்று அரசாணைகளையும் 6.2.90 அன்றுதான் பெற்றுள்ளேன்.

எனவே 96 இல் ஆட்சிமொழி அமைச்சராக வந்தபின் தான் என்றில்லை; அதற்குப் பல ஆண்டுகாலத்திற்கு முன்பே இதில் கவனம் செலுத்தி வந்துள்ளேன் என்பதனைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

1993 இல் 'வாழ்ந்து காட்டுங்கள்' எனும் தலைப்பில் கட்டுரைகளின் தொகுப்பு நூல் வெளியிடப்பட்டது. நூலுக்குக் கலைஞர் அணிந்துரை வழங்கியிருக்கிறார்.

அதில் ஒரு கட்டுரை 'ஆட்சி மொழி - ஒரு பார்வை' என்பது

இக்கட்டுரையைப் படித்து முன்னுரை எழுதிய கலைஞர்தான் 1996 இல் அமைச்சரவை அமைகிறபோது ஆட்சிமொழியைச் செயற்படுத்தும் அமைச்சராகவே என்னை ஆக்கினார் என்பது வரலாறு. அப்போதே அவர் மனத்தில் அந்த எண்ணம் எழுந்திருக்கலாம்.

அப்போதே, 'தமிழ் உணர்வோடு ஆட்சியாளர்களும், அமைச்சர்களும் அரசு அலுவலர்களும் செயற்பட்டால் பொதுமக்கள் தாமாகவே முன்வந்து செயற்படுவர்' என்று நம்பிக்கை தெரிவித்திருக்கிறேன்.

நான் என்னென்ன செய்ய வேண்டுமென்று இந்தக் கட்டுரையில் தெரிவித்தேனோ அவற்றை யெல்லாம் நான் ஐந்தாண்டுக் காலத்தில் செயற்படுத்தினேனா என்பதுதான் கேள்வி. அந்தக் கேள்விக்கான விரிவான விடைதான் இந்த நூல்.

அரசாணைகள் பண்டைக் காலத்தில் எப்படி வெளியிடப்பட்டன என்பதைப் பார்த்தால் வியப்பாக இருக்கும்.

காலம் : முதலாம் இராசேந்திர சோழன், 24 ஆம் ஆட்சியாண்டு 10 ஆம் நாள்.

முகாம் : காஞ்சிபுரம்

திருமந்திர ஓலை நாயகம் (Steno) எழுதி முடிக்கிறார்.

ஓலை நாயகம் ஒப்பிட்டுப் பார்க்கிறார்

'ஒப்பிட்டுப் பார்த்துத் தந்த திட்டின்படியே வரியிலிட்டுக் கொள்க' - மற்றோர் அதிகாரியின் குறிப்பு இது.

உடன் கூட்டத்துக் கருமம் ஆராயும் அதிகாரி

நடுவிலிருக்கை அதிகாரி ஆகிய இருவரும் ஆணையை ஆய்ந்து சரியாக உள்ளது என்பர்.

'புரவுவரி திணைக்களம்'

'வரிப் பொத்தகக் கணக்கு

வரியிலீடு

பட்டோலை

முகவெட்டி' ஆகிய அனைவரும்

சரிபார்த்த பின் 'திருமுகம்' அனுப்பப்படும்

நாடுவகை செய்யும் அதிகாரி (Surveyor)

புரவுவரித் திணைக் களத்தை உடன் வைத்துக் கொண்டு

'அறையோலை' வெளியிடுகின்றார்.

அதில் உள்ள 'ஊருணிக்குளம்' ஏரிக்கு நீர் பாயும் 'சிற்றாறு' பேராறு, கோயில், திருமுற்றம் (சந்நதி) 'கன்றுமேய் பாழ்' 'ஏரி நீர்க் கோவை' களர், உவர் நீக்கி ஏரி நீர் பாய்ந்து ஏற்றம் இறைக்கும் 'இரு பூ விளையும் நிலம்' 'ஒரு பூ விளையும் நிலம்'

அரசனுக்குச் செலுத்தும் வரியாகிய 'கோரித் தொட்டுண்ணப்பாலது'

மேலும், 'இறை'

'இறையிலி'

பண்டாரம்

அடைகுடிகள்

உயர் அலுவலர் 'பெருந்தரம்'

பதிலி 'தலைமாறு'

ஆகிய சொற்களைப் பார்த்து வாயடைத்துப் போய் நிற்கிறேன்

இப்போது நமது 'மெத்தப் படித்த மேதாவிகள்' எப்படிக் குதறி எடுக்கிறார்கள் என்பதை எண்ணிப் பாருங்கள். 5 ஆம் வகுப்புப் பயின்ற ஓர் ஊராட்சி மன்றத் தலைவருக்கு ஆங்கிலத்தில் 'விவரம்' சொல்லும் அறிவாளிகளிடத்தில் 'தமிழ்' பட்டபாடு கொஞ்சமா? நஞ்சமா?

## ஓர் ஒப்பீடு

ஆட்சிமொழிச் செயலாக்கம் 1985 இல் எப்படியிருந்தது?

1997-98 இல் எப்படியிருந்தது? என்று பார்த்தால் வேறுபாடு விளங்கிவிடும். என்னுடைய முனைவர் பட்ட ஆய்வேடு "பத்தாண்டுத் தமிழ்க் கவிதைகள்." இதனை நூலாக வெளியிடுவதற்கு நிதியுதவி வேண்டித் தமிழ் வளர்ச்சி இயக்ககத்துக்கு விண்ணப்பித்தேன்.

விண்ணப்பித்த எட்டு மாதங்கள் கழித்து நிதியுதவி வழங்கப்பட்டது. இந்த நூலுக்காக 3023.50 வழங்கப்பட்டது. பிற்காலத்தில் கவிஞர் மீராவின் துணையுடன் நூலும் வெளியானது. 1999 வாக்கில் வானதி பதிப்பகம் இரண்டாவது பதிப்பாக வெளியிட்டது.

இதனை எழுதுவதற்கு முழுமையான காரணம் நூல் வெளியீடு பற்றிப் பேசுவதற்காக அன்று. இதற்கான ஆணை எப்படிப் பிறப்பிக்கப் பட்டது என்பதுதான் முக்கியம்.

அப்போது தமிழ்ப் பண்பாட்டுத் துறைச் செயலராக இருந்தவர் அவ்வை நடராசன். சிறந்த தமிழறிஞர். உரை வேந்தர் அவ்வை துரைசாமி பிள்ளையின் புதல்வர். பின்னாளில் தமிழ்ப் பல்கலைக் கழகத் துணை வேந்தர். இவர் கையொப்பமிட்டுத்தான் அரசாணை வெளியாகின்றது. மேலும் அவ்வை நடராசன் மொழிபெயர்ப்புத் துறை இயக்குநராகவும் இருந்தவர்.

எனவே அவர் தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தைச் செயலாக்க வேண்டுமென்று நினைத்திருந்தால் ஆணையைத் தமிழில் வெளியிட்டிருக்கலாம். ஒரு தடவை மொழிபெயர்த்திருந்தால் அதையே தொடர்ந்து பயன்படுத்தியிருக்கலாம். ஆனால் அதுபற்றிக் கருதவேயில்லை.

எனக்கு அளிக்கப்பட்ட ஆணையின் வடிவம் அப்படியே தரப்படுகிறது.

தமிழ் ஆட்சிமொழித்துறை மற்றும் தமிழ்ப்பண்பாட்டுத் துறையே அரசாணையைத் தமிழில் வெளியிடவில்லை. தமிழ் அறிஞர் செயலராக இருக்கும்போதே இது நடைபெறவில்லை (பிற்காலத்தில் செயலர்கள் அனைவரும் இ.ஆ.ப. அலுவலர்கள்)

இதில் இன்னொரு வியப்பும் அடங்கியுள்ளது. 1999இல் தமிழ்ச் சான்றோர் பேரவையின் ஒருங்கிணைப்பாளராக இருந்த சிலம்பொலி செல்லப்பன் தமிழைப் பயிற்று மொழியாக்கவும், வேறு சில கோரிக்கைகளை முன் வைத்தும் தமிழறிஞர்கள் சாகும் வரை உண்ணா நோன்பிருப்போமென அறிவித்தவர். இந்தப் போராட்டத்தை முன்னெடுத்துச் சென்றவரே இவர்தாம்.

'விடை பெறுகிறேன்' என்று உருக்கமாக அறிக்கையையும் விட்டவர்.

(கடைசியில் போராட்டக் குழுவை விட்டு விலகிவிட்டார் என்பது செய்தி)





ABSTRACT

TAMIL DEVELOPMENT - Financial assistance for publication of the book " பத்தாம் தமிழ்க் கவிதைகள் " written by Thiru மு. தமிழ்க் குடிமகன் Grant - Sanctioned.

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

TAMIL DEVELOPMENT-CULTURE DEPARTMENT

G.O.Ms.No.303

Dated 25.10.1985.
Thiruvalluvar Aandu 2016
Krothana Ippasi 9

Read:

1) G.O.Ms.No.2432, Education, Science and Technology Department dated 3.11.82.
2) From the Director of Tamil Development Letter No.84/888/84 dated 8.4.85.

ORDER:

The Director of Tamil Development has recommended the sanction of Financial assistance for the publication of the book entitled. " பத்தாம் தமிழ்க் கவிதைகள்" written by Thiru மு. தமிழ்க் குடிமகன் under rule 17 of the scheme

என் நூலுக்கு நிதியுதவி வழங்கப்பட்டபோது அதைப் பரிந்துரை செய்தவரும், ஆணையில் மேலொப்பமிட்டவரும் தமிழ் வளர்ச்சி இயக்குநர் தாம். அப்போது தமிழ் வளர்ச்சி இயக்குநராக இருந்தவர் சிலம்பொலி சு. செல்லப்பன்தான். 'சு.செ.' என்று ஆணையில் மேலொப்பம் இட்டுள்ளார்.

இவர்தான் பிற்காலத்தில் போராட்டக்குழுவிற்குத் தலைமை தாங்குகிறார்.

தாங்கள் பதவியில் இருந்தபோது, தமிழை ஆட்சி மொழியாக்குவதற்கான அரசாணைகள் இருந்தபோதிலும் அவ்வை நடராசனும் சிலம்பொலி சு. செல்லப்பனும் ஏன் அரசாணைகளைத் தமிழில் கொண்டுவரவில்லை?

இவ்வளவுக்கும் 2.12.1971 ஆம் நாளிலேயே அரசாணைகள் தமிழில் வரவேண்டும் என்று அரசாணை உள்ளது. (எண்.2070, கல்வித்துறை நாள்: 2.12.1971) இதன் சாரம்.

"அரசின் ஆணைகள் மற்றும் கடிதப் போக்குவரத்து ஆகியவை 1971 இல் அறிவிக்கப்பட்டவாறு விலக்களிக்கப்பட்ட இனங்களைத் தவிரப் பிற அனைத்து இனங்களிலும் தமிழில்தான் நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும்."

இவ்வளவிருந்தும் - தமிழறிஞர்களே பொறுப்பிலுள்ள அலுவலர்களாக இருந்தும் எனக்கு அனுப்பப்பட்ட அரசாணையில் என் பெயரும் நூற் பெயரும் மட்டும் தமிழில் உள்ளனவே தவிர ஆணை தமிழில் இல்லையே! காரணம் என்ன?

ஆனால் 1996 க்குப்பின் நிலைமை மாறியிருக்கிறதா இல்லையா?

1986 இல் வெளியிடப்பட்ட ஆணை என்ன சொல்கிறது?

"தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கருத்தினை ஏற்று ஆட்சிமொழி முனைப்புத் திட்டத்தை விரிவு படுத்தும் பொருட்டுத் தலைமைச் செயலகத் துறைகளிலும், அரசுச் சார்பு நிறுவனங்கள், கழகங்கள், வாரியங்கள், கூட்டுறவு இணையங்கள் போன்ற அனைத்திலும் தமிழ்த் திட்டத்தை உடனடியாகச் செயற்படுத்திடக் கீழ்க்காணும் வகையில் ஆணை பிறப்பிக்கப்படுகிறது.

கடிதப் போக்குவரத்து மற்றும் இதர குறிப்புகள்

கடிதப் போக்குவரத்தைப் பொறுத்தமட்டில் ஆங்கிலத்தில் ஒரு கடித வரைவினை எழுத வேண்டுவது இன்றியமையாததென்று கருதப்பட்டால் பொறுப்புள்ள ஒரு அலுவலரின் அனுமதியின்றி அதனை ஆங்கிலத்தில் எழுதக்கூடாது. அவ்வரைவு விதிவிலக்குப் பெற்ற இனத்தைச் சேர்ந்ததா என்பதை ஆராய்ந்து அந்த அலுவலர் அனுமதித்த பின்னரே ஆங்கில வரைவுகள் எழுதப்படலாம். இதைத் தவிர சுற்றாணைக் குறிப்புகள், குறிப்புக் கோப்பின் குறிப்புகள், நினைவூட்டுகள், ஒப்பளிப்புக் கடிதங்கள், இடைக்கால மறுமொழிகள், அசல் திருப்புகை முடிவுகள், அலுவல் சார்பற்ற குறிப்பாணை ஆகிய வரைவுகளுக்கும் தமிழையே பயன்டுத்தவேண்டும். ஆங்கிலத்தைத் தவிர்த்திட வேண்டும்.

பதிவேடுகள் பேணுவது :

பொதுவாகப் பதிவேடுகள் அனைத்தும் தமிழிலேயே பேணப்படலாம். அவற்றிற்கு விதிவிலக்கு அளிக்கப்படவில்லை. மாநிலக் கணக்காய்வாளரால் கணக்குத் தணிக்கைக்கு உட்பட்ட சில பதிவேடுகளில் மட்டும் ஆங்கிலம் பயன்படுத்தப்படலாம். இதைத் தவிர இதுவரையில் ஆங்கிலம் பயன்படுத்தப்பட்டு வந்த பதிவேடுகளை உடனடியாகத் தமிழுக்கு மாற்றலாம்.

தலைமைச் செயலகத்தைப் பொறுத்த மட்டில் தமிழைப் பயன்படுத்திட முனைப்பு முன்னேற்றம் குறித்து ஆய்வு செய்ய இந்திய ஆட்சிப் பணி (ஐ.ஏ.எஸ்.) நிலையில் உள்ள முதுநிலை உயர் அலுவலர் ஒருவரை அவ்வப்போது நியமனம் செய்து அவர் தம் மற்றப் பணிகளுடன் இவ்வாய்வுப் பணியையும் மேற்கொள்ளலாம். இந்த ஆய்வறிக்கையின் நகல்கள் தமிழ் வளர்ச்சி இயக்குநருக்கும் குறிக்கப்படலாம். இதன் தொடர்பான உரிய மேல் நடவடிக்கைகள் பொதுத்துறை மற்றும் பணியாளர் நிர்வாகச் சீர்திருத்த (ஆய்வு)த்துறை மேற்கொள்ளலாம். தமிழ் வளர்ச்சி ஆய்வு உதவி இயக்குநர்களின் ஆய்வறிக்கைகள் ஆயப்படும் அச்சார்நிலை நிறுவனங்கள் அதன் தலைமை அலுவலகங்களுக்கும், அதன் நகல் தமிழ் வளர்ச்சி இயக்குநருக்கும் தவறாமல் அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்ளலாம். தமிழ் வளர்ச்சி இயக்குநரின் ஆய்விற்குப் பின் நகல், தொடர்புடைய தலைமைச் செயலகத் தலைமைத்துறைக்கு அனுப்பி வைக்க வேண்டும். அரசின் சீரிய இத்திட்டத்தினை முனைந்து செவ்வனே நிறைவேற்றிட சம்பந்தப் பட்ட துறைத் தலைவர்கள் ஆவன செய்யக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

மேற்குறிப்பிட்டவாறு தமிழ்த் திட்டச் செயற்பாடானது, இவ்வாணை வெளியிடும் நாளிலிருந்து உடனடியாக தலைமைச் செயலகம், அரசு சார்பு நிறுவனங்கள், வாரியங்கள், அரசுக் கழகங்கள், கூட்டுறவு இணையங்கள், போன்ற அனைத்து நிறுவனங்களிலும் உடனடி நடைமுறைக்குக் கொண்டு வரப்படுகிறது எனவும் இத்திட்டம் இவ்வலுவலகங்களில் முழுமையாக நிறைவேற்றப்பட்டு, அவ்வாறு நிறைவேற்றியமைக்கான அறிக்கையை ஒவ்வொரு ஆண்டும் டிசம்பர் திங்கள் முதல் வாரத்தில் தமிழ் வளர்ச்சி இயக்குநருக்கும் அரசிற்கும் தவறாது அனுப்பப்பட வேண்டும் என்றும் அனைத்துத் துறை நிர்வாகத் தலைவர்கள் அறிவுறுத்தப்படுகிறார்கள். இம்முனைப்புத் திட்டத்தின் செயலாக்கத்தின் பொறுப்பு அந்நிர்வாகத் தலைவர்களையே முற்றிலுமாகச் சாரும் என்பதையும் சுட்டிக்காட்டப்படுகின்றது."

(அரசாணை (நிலை) எண்: 371, த.வ. மற்றும் பண்பாட்டுத் துறை நாள். 31.10.1986)

மேலும் 1989 இல் வெளியிடப்பட்ட ஆணை இது:

"சட்டத்தின் கீழ் பிறப்பிக்கப்படும் விதிகள், விதிமுறைகள், ஆணைகள் மற்றும் விதிவிலக்கினங்கள் தவிர ஏனைய ஆணைகள் தமிழிலேயே பிறப்பிக்கப்படவேண்டும். சட்டத்தின் கீழ்ப் பிறப்பிக்கப்படும் ஆணைகள், விதிகள், விதிமுறைகள் துணை விதிகளைப் பொறுத்தவரையில் ஆங்கிலத்தில் தொடர்ந்து ஆணைகள் வெளியிடப்படலாம், எனினும் அவ்வாறான நேர்வுகளில், ஆங்கிலத்துடன் தமிழுக்கும் நிகர்நிலை தந்து அவ்வாணைகளின் தமிழாக்கம் கூடிய விரைவில் வெளியிடப்பெற வேண்டுமென அரசு ஆணையிடுகிறது."

(அரசாணை (நிலை) எண்:182, த.வ. மற்றும் ப. துறை, 27.6.1989)

ஆனால் நான் பொறுப்பேற்றபின் இந்த அரசாணைகள் சரியாகக் கடைப்பிடிக்கப்படவில்லை என்பதைக் கண்டேன். எனவே எல்லாருக்கும் தெளிவுறுத்த வேண்டும் என்பதற்காக மீண்டும் ஓர் கடிதத்தை வெளியிட்டேன்.

18.9.1996 ஆம் நாளிட்ட அந்த மடலில் பின்வருமாறு தெளிவாகக் குறிப்பிட்டுள்ளோம்.

'பலதுறைகள் இவ்வாணைகளைக் கடைப்பிடிக்காமல் ஆங்கிலத்தில் மட்டுமே ஆணைகள் வெளியிடுகின்றன. எனவே, அனைத்து அரசுத் துறைச் செயலர்களும் தங்கள் துறைகளில் வெளியிடப்படும் அனைத்து ஆணைகளும் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளியிடுமாறு அறிவுறுத்தும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.'

இவ்வளவு தெளிவுபடுத்தியும் பல துறைகள் தமிழில் அரசாணைகள் வெளியிடுவதில்லை என்பதை அறிந்தேன். எனவே, பணியாளர் சீர்திருத்தத் துறை வாயிலாக, வெளியிடப்படும் அரசாணைகள் அனைத்தும் என் பார்வைக்கு அனுப்பப்பட வேண்டும் என்றும் ஒரு மடல் வரையப்பட்டது.

21.11.1997 ஆம் நாளிட்ட மடலில் இதனைக் காணலாம்.

நேர்முகக் கடித எண்.73706/எ/97-1, நாள். 21.11.1997

அன்புள்ள திரு. சுப்ரமணி,

பொருள்: அலுவலக நடைமுறை - அரசாணைகள் ஆங்கிலம் மற்றும் தமிழில் வெளியிட அறிவுரைகள் - வலியுறுத்தப்பட்டது - ஆய்வு செய்வது - தொடர்பாக.

பார்வை : அரசு கடித எண்.61146/எ/69-1. பணியாளர் மற்றும் நிருவாக சீர்திருத்தத் (எ) துறை, நாள்.18.9.96

பார்வையில் காணும் அரசு கடிதத்தில் அனைத்து அரசுத் துறைச் செயலாளர்களும் தங்கள் துறைகளில் வெளியிடப்படும் அனைத்து ஆணைகளும் (விதிவிலக்கினங்கள் தவிர) தமிழில் வெளியிடுமாறு கேட்டுக் கொள்ளப்பட்டனர்.

பல துறைகள் ஆங்கிலத்தில் மட்டுமே அரசாணைகளை வெளியிட்டுவிட்டுத் தமிழில் வெளியிடுவதில்லை எனத் தெரியவருகிறது. இது தமிழ் ஆட்சி மொழியைச் செயல்படுத்தும் விதிமுறைகளுக்கு முரணானதாகும். இதை ஆய்வு செய்யும் வகையில் 1997-98-ஆம் நிதியாண்டில் இதுவரையிலும் (அதாவது 1.4.97 முதல் இன்று வரை) உங்கள் துறையில் வெளியிடப்பட்ட அரசாணைகளின் தொகுப்பை உடனடியாக தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறைச் செயலரின் மூலமாக தமிழ் ஆட்சி மொழி தமிழ்ப் பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத் துறை அமைச்சர் அவர்களின் பார்வைக்கு அனுப்பி வைக்கக் கேட்டுக் கொள்கிறேன்."

மேலதிகாரிகள் எவ்வளவு அலட்சியப் போக்குடன் நடந்து கொள்கின்றனர் என்பதற்கு இஃதோர் எடுத்துக் காட்டு.

தமிழ் வளர்ச்சித் துறையின் சார்பில் 15.9.87 அன்று - அதிலும் 5 ஆண்டுக்குள் தமிழை ஆட்சிமொழியாக்குவோம் என்று 23.1.1968 இல் சூளுரைத்த அறிஞர் அண்ணாவின் பிறந்தநாள் அன்று - சூளுரைக்கு 19 ஆண்டுகட்குப் பின் - அவ்வை நடராசன் ஒப்பத்துடன் ஓர் அரசாணை வருகின்றது. (296/15.9.1987)

(பார்வைக்காக முதல் பக்கமும், கடைசிப் பக்கமும் தரப்பட்டுள்ளன)

தமிழ் வளர்ச்சித் துறையே ஆங்கிலத்தில் அரசாணை வெளியிடும்போது, பிறரை எப்படித் தட்டிக் கேட்க முடியும்? எண்ணிப் பாருங்கள்.

ஆனால் 1996க்குப்பின் வெளிவந்த அனைத்து அரசாணைகளும் தமிழில் வெளிவந்தனவே? எப்படி முடிந்தது? ஏன்? செய்தி மற்றும் சுற்றுலாத் துறைகூட (245/13.11.98) 4 பக்க அரசாணையைத் தமிழில் தருகின்றதே!

GOVERNMENT OF TAMIL NADU

ABSTRACT

Public Serkices - Tamil Nadu General Service - Directorate of Tamil Development - Temporary post of Assistant Director - Adhoc Rules - Re-Issued.

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

TAMIL DEVELOPMENT-CULTURE (TD.2) DEPARTMENT

G.O.Ms.No. 296 Dated: 15.9.1987

Thiruvalluvar Aandu 2018, Prabava, Aavani-30.

Read:

1. G.O.Ms.No.1097, Education, dt. 29.6.71
2. G.O.Ms.No.1648, Education, dt. 22.9.71
3. G.O.Ms.No.1212, Education, dt. 2.7.73
4. G.O.Ms.No.2684, Education, dt. 27.12.77
5. G.O.Ms.No.1949, Education, dt. 15.10.79
6. From the Director of Tamil Development Letter No. 149353/23-108, 3635/2/85, dt. 20.5.85 and 25.6.85

*****

7. Pay: There shall be paid to the holders of the posts, a monthly pay calculated in the scale of Rs.1340-75-1715-90-2435.

8. Saving: Nothing contained in these rules, shall adversely affect the persons holding the post of Assistant Director of Tamil Development on the date of issue of the rules.

(BY ORDER OF THE GOVERNOR)

AVVAI NATARAJAN
SECRETARY TO GOVERNMENT.

To

தமிழ்நாடு அரசு

சுருக்கம்

தீண்டாமை ஒழிப்பு - தீவிர பிரச்சாரம் மற்றும் விளம்பரம் மேற்கொள்ளுதல் - தமிழ்நாட்டில் தீண்டாமை ஒழிப்பு குறித்த பல்வேறு பிரச்சாரம் மற்றும் விளம்பரம் மேற்கொள்ள பல்வேறு ஏற்பாடுகளுக்கான செலவின மதிப்பீடுகள் - நிதி ஒதுக்கீட்டிற்கு ஒப்பளிப்பு வழங்க அனுமதி - ஆணை வெளியிடப்படுகிறது.

செய்தி மற்றும் சுற்றுலா (தி.தொ.)த்துறை

அரசாணை (நிலை) எண்.245 நாள் : 13.11.1998

ஆணை:

தமிழ்நாட்டில் தீண்டாமை ஒழிப்பு, மத நல்லிணக்கம் மற்றும் சமூக ஒற்றுமைக்காக மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் தலைமையில் 22.10.98 மற்றும் 26.10.98 ஆகிய நாள்களில் சென்னையில் அனைத்துக் கட்சித் தலைவர்கள் கூட்டம் நடைபெற்றது.

2. இக்கூட்டத்தில் எடுக்கப்பட்ட முடிவின் அடிப்படையில் தீண்டாமையை ஒழிப்பதற்காக தற்போது இருக்கக்கூடிய பல்வேறு மக்கள் தொடர்புச் சாதனங்களைக் கருத்தில் கொண்டு செய்தி - மக்கள் தொடர்புத்துறை வாயிலாகக் கீழ்க்காணும் வகையில் தீவிர பிரச்சாரம் மற்றும் விளம்பரப் பணிகள் மேற்கொள்ளப்பட வேண்டும் என முடிவு செய்யப்பட்டது.

1. தீண்டாமை ஒழிப்பு, மத நல்லிணக்கம், சமூக ஒற்றுமை, சாதி சமய ஊர்வலங்களால் ஏற்படும் பிரச்சினைகள், தீண்டாமையால் விளையும் தீமைகள், தீண்டாமை தடுப்புச் சட்டம் போன்றவை குறித்து நிகழ்ச்சிகள், நாடகங்கள், பாடல்கள் போன்ற வடிவங்களில் தயாரித்து அகில இந்திய வானொலி நிலையங்கள் மூலம் ஒலி பரப்புதல், உள்ளாட்சி அமைப்புகள் மூலம் கிராமங்களில் வானொலிப் பெட்டியை ஒலிபெருக்கி வசதியுடன் அமைத்து இந்நிகழ்ச்சிகள் அனைத்து மக்களையும் சென்றடையும் வகையில் மக்கள் நலப் பணியாளர்களை ஒருங்கிணைத்து நடவடிக்கை மேற்கொள்ளுதல்.

2. மேலும் ஒவ்வொரு நாளும் "இன்று ஒரு தகவல்" என்பது போல் "இன்று ஒரு வேண்டுகோள்" என்ற தலைப்பின் கீழ், பல்வேறு சமய, சமுதாய, அரசியல் தலைவர்களின் பதிவு செய்யப்பட்ட வேண்டுகோள்களை ஒலிபரப்புதல்.

3. திரைப்பட நடிகர்கள் உட்படப் பிரபலமானவர்களைக் கொண்டு சிறு குறும்படங்கள் (QUICKIES) தயாரித்து முக்கிய நிகழ்ச்சிகளின் ஒளிபரப்புக்கிடையில் விளம்பரம் செய்தல்.

4. தொலைக்காட்சி நிகழ்ச்சிகளுக்கு இடையே ஒளிபரப்பும் வகையில் மிகச்சிறு படங்கள் ஊடு வெளியீடாக (FILLERS) தயாரித்து இலவசமாக ஒளிபரப்பக் கோருதல்.

5. இவ்வாணை நிதித்துறையின் அ.சா.கு.எண்.706/எஸ்.எஸ்./98 நாள் 12.11.98 இன் இசைவுடன் வெளியிடப்படுகிறது.

எஸ். இராஜரெத்தினம்
அரசுச் செயலாளர்

ஏன்? கால்நடை பராமரிப்பு மற்றும் மீன்வளத் துறை கூட அரசு ஆணை (10/21.1.98) இல் ஆங்கிலத்தில் அரசாணையை வெளியிட்டுவிட்டு அதற்கு இணையாகத் தமிழிலும் வெளியிட்டுள்ளதே!

1.5.1982 இல் ஓர் அரசாணை (எண்.968/கல்வித்துறை) அரசுச் செயலர் செ. இராமதாசு பெயரால் வெளியானது. கடைசியில் அந்த ஆணை இப்படி முடிகின்றது.

''அரசால் வெளியிடப் பெறுகின்ற ஆணைகள் ஆங்கிலத்தில் அமைந்திருப்பது ஏற்புடையதாக அமையாது என்பதால் அரசு வெளியிடும் ஆணைகள் மற்றும் எல்லாக் கடிதப் போக்குவரத்துகளையும் தமிழிலேயே வெளியிட, தலைமைச் செயலகத் துறைகளின் செயலாளர்கள் தக்க துரித நடவடிக்கை மேற்கொள்ளக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்''

1956க்குப் பின் 26 ஆண்டுகள் கழித்து இந்த ஆணை - இப்போது என் முயற்சி என்ன என்பது குறித்தும் தலைமைச் செயலாளர் அளவில் எத்தகைய கண்டிப்பான கடிதம் வரையப்பட்டது என்பதையும் ஒரு பார்வை பாருங்கள்.

கடிதம் 60469/ஏ/98-1/ நாள் : 5.11.98

அனுப்புநர்

திரு.ஏ.பி. முத்துசாமி, இ.ஆ.ப.,

பெறுநர்
அனைத்து அரசுத் துறைச் செயலர்கள்
சென்னை - 600 009

ஐயா,

பொருள்: அலுவலக நடைமுறைகள் - அரசாணைகள் - தமிழில் வெளியிட அறிவுரைகள் - அரசாணைகள் அனுப்பிவைப்பது தொடர்பாக.

பார்வை : 1. அரசாணை(நிலை) எண்.371, தமிழ் வளர்ச்சி மற்றும் பண்பாட்டுத் துறை, நாள்.31.10.86

2. அரசாணை(நிலை) எண்.182, தமிழ் வளர்ச்சி மற்றும் பண்பாட்டுத் துறை நாள். 27.6.89

3. கடித எண்.61146/ஏ/96-1, பணியாளர் மற்றும் நிர்வாக சீர்திருத்தத் (ஏ) துறை, நாள்.18.9.96
4. பணியாளர் மற்றும் நிர்வாக சீர்திருத்தத் துறைச் செயலரின் நேர்முகக் கடித எண்.73706/ஏ/97-1, பணியாளர் மற்றும் நிர்வாக சீர்திருத்தத் துறை (ஏ) துறை, நாள்.21.11.97
5. தமிழ் ஆட்சி மொழி தமிழ்ப் பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சரின் நேர்முகக் கடிதம், நாள்: 20.7.98

பார்வை 1 முதல் பார்வை 4 வரையிலுள்ள ஆணைகள் மற்றும் கடிதங்களில் அனைத்து அரசுத் துறைச் செயலர்களும் தங்கள் துறைகளில் வெளியிடப்படும் அனைத்து ஆணைகள் மற்றும் கடிதப் போக்குவரத்துகள் தமிழில் வெளியிடுமாறு கேட்டுக்கொள்ளப்பட்டுள்ளனர். தலைமைச் செயலகத்தில் 4 துறைகள் தவிர மற்ற துறைகள் ஆங்கிலத்தில் மட்டுமே அரசாணைகள் வெளியிட்டுவிட்டுத் தமிழில் வெளியிடுவதில்லை எனக் குறிப்பிட்டு இது மிகவும் வருத்தத்திற்குரியது மட்டுமல்லாமல் மாண்புமிகு முதல்வர் அவர்களின் கவனத்திற்கும் நடவடிக்கைக்கும் கொண்டு செல்லப்படுகிறது என்று மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத் துறை அமைச்சர் அவர்கள் பார்வை 5இல் குறிப்பிட்டுள்ள நேர்முகக் கடிதத்தில் தெரிவித்துள்ளார்.

2. எனவே, ஆட்சிமொழித் திட்டத்தை முழுமையாகச் செயல்படுத்தும் பொருட்டு, அனைத்து அரசுத் துறைச் செயலர்களும் தங்கள் துறைகளில் வெளியிடப்படும் அனைத்து ஆணைகளும் ஒரு வேளை ஆங்கிலத்தில் அரசாணை வெளியிடவேண்டிய கட்டாயம் ஏற்பட்டால்கூட அதே அரசாணை தமிழில் சேர்த்து வெளியிடத்தக்க அறிவுரை வழங்கும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். மேலும், 1.4.97 முதல் ஒன்பது மாதங்களில் வெளியிடப்பட்ட அரசாணைகளின் தொகுப்பைத் தமிழ் வளர்ச்சி மற்றும் பண்பாட்டுத் துறைச் செயலர் மூலமாக தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் பார்வைக்கு அனுப்பிவைக்குமாறும், இனிமேல் வருகின்ற அரசாணைகள் தமிழில் கட்டாயம் வெளியிடப்படும் என்பதையும் உறுதி செய்யுமாறும் அனைத்துத் துறைச் செயலர்களும் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

தங்கள் உண்மையுள்ள
(அரசு தலைமைச் செயலாளருக்காக)

1956 - 1982 - 1998 இவற்றை ஒப்பிட்டுப் பார்த்தீர்களா?

இப்போது 2002 இல் என் ஆராய்ச்சி - 46 ஆண்டுகாலத்தின் நடைமுறைகள் பற்றிய ஆராய்ச்சி - தொடர்ந்து படியுங்கள்.

பேராயக் கட்சி (Congress) தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தைக் கொண்டுவந்தது. செயற்படுத்துவதற்கான முயற்சியை எல்லாம் செய்தது என்பதில் கருத்துவேறுபாடில்லை.

ஆனால் தமிழ் ஆட்சி மொழித் திட்டத்தைச் செயற்படுத்துவதற்கான எந்த அரசாணையும் தமிழில் வெளியிடப்படவில்லை. அனைத்து அரசாணைகளும் ஆங்கிலத்தில் மட்டுமே வெளியிடப்பட்டுள்ளன.

காமராசர் தமிழர் நலம் நாடுபவர் என்றாலும் சி. சுப்பிரமணியம் 'தமிழால் முடியும்' என்று ஓங்கிக் குரல் கொடுத்தாலும் அரசாணை பிறப்பிக்கும் உயர்மட்ட அலுவலர்கள் எதைப் பற்றியும் கவலைப்படவில்லை.

21.1.1957 இல் பிறப்பிக்கப்பட்ட அரசாணையிலிருந்து 20.12.1966 இல் வெளியிடப்பட்ட அரசாணை வரை அனைத்தும் ஆங்கிலத்தில் தான் - பத்தாண்டு காலத்தை எப்படி வீணடித்துள்ளார்கள் என்பதை உணரலாம். (இதன்படி வந்தவை 126 அரசாணைகள்)

அதன்பின் அறிஞர் அண்ணா அவர்கள் முதலமைச்சரான பிறகும் கூட அரசாணைகள் ஆங்கிலத்திலேயே வந்துள்ளன. யார் ஆட்சிக்கு வந்தாலும் தாங்கள் நினைத்ததைத்தான் செய்வோம் எனும் இ.ஆ.ப. அலுவலர்களின் அலட்சிய மனோபாவமே இதற்குக் காரணம்.

1. கால்நடைத் துறையில் குறிப்பிட்ட சில அலுவலகங்களில் தமிழைப் பயன்படுத்துவது குறித்து 771/28.3.1967
2. விதித் தொகுப்புகள் மொழிபெயர்த்தல் - மொழி பெயர்ப்பாளர்க்கு மதிப்பூதியம் உயர்த்தல் 772/28.3.1967
3. தமிழ்த் தட்டச்சர்கள் கட்டாயப் பணிக்கால அளவு - பொதுத்துறை குறிப்பாணை 29.3.67
4. தட்டச்சர்கள், சுருக்கெழுத்தாளர்கள் - தேர்ச்சி பெறுதல் - பொதுத்துறை குறிப்பாணை 4.4.67
5. தமிழில் போதிய தேர்ச்சி பெறாத அரசூழியர்கட்குப் பயிற்சி வகுப்புகள் நடத்துதல் - 1201/11.5.67
6. கல்வித்துறையில் குறிப்பிட்ட சில அலுவலகங்களில் தமிழை அறிமுகப்படுத்துதல் - 1577/10.7.67
7. பொ.ப.து. - மின்பொறியாளர் அலுவலகங்களில் அறிமுகப்படுத்துதல் - 1780/7.8.67
8. அரசு செயலகத் துறைகளில் தமிழை அறிமுகப்படுத்துதல் - கடிதப் போக்குவரத்துகளில் தமிழைப் பயன்படுத்துதல் - 1893/28.8.67

தமிழ் வளர்ச்சி தொடர்பான செய்திகளை அரசாணைகளாக வெளியிட நேரும்போது கூட - அறிஞர் அண்ணா அவர்கள் முதலமைச்சராகி எட்டு மாதங்கள் ஆகியும் கூட - பழக்கத்துக்கு அடிமைப் பட்டுவிட்ட அரசுத்துறைச் செயலாளர்கள் எந்த அரசாணையையும் தமிழில் வெளியிட வேண்டும் என்றே எண்ணவில்லை.

எல்லாத்துறைகளிலும் ஏறத்தாழ 3000 அரசாணைகள் வெளியிடப்பட்டும் அவை அனைத்தும் ஆங்கிலத்திலேயே வெளியிடப்பட்டன என்பதைச் சொல்லி அழ வேண்டியது என் கடமையாகும்.

எனக்குத் தெரிய முதலில் வெளிவந்த தமிழ் அரசாணை 11.9.1967 அன்றுதான். நல்லவேளை யாருக்கோ பாரதியார் நினைவு இருந்திருக்க வேண்டும். அவரது நினைவு நாளிலாவது தமிழில் அரசாணை வெளியிட வேண்டும் எனும் எண்ணம் வந்ததே என்பது குறித்து மகிழ்ச்சியடைகிறேன்.

பொது (தமிழ் வளர்ச்சி)த் துறை

அரசு ஆணை (நிலை) எண்: 2010, நாள். 11.9.1967

தலைமைச் செயலகத்தில் செய்தி - விளம்பரத்துறையில் கடிதப் போக்குவரத்தைத் தமிழில் தொடங்கிட நடவடிக்கை.

அதற்காக செப்டம்பர் 1967 இல் வெளியிடப்பட்ட எல்லாத்துறை அரசாணைகளும் தமிழில் வந்துவிட்டன என்று படு வேகமான முடிவுக்கு வந்துவிடக்கூடாது.

தமிழ்த் தொடர்பான இந்த அரசாணை மட்டும் தான் இப்படி. பிறதுறை அரசாணைகள் வழக்கம்போல் ஆங்கிலத்தில்தான்.

தமிழில் வெளியிடப்பட்ட அரசாணை குறித்து நாம் மகிழும் அதே நேரத்தில், நம் மகிழ்ச்சி அதிக நேரம் நீடிக்கவில்லை.

1967 நவம்பரில் மீண்டும் ஆங்கிலத்தில் அரசாணைகள்

1. இ.ஆ.ப. - இ.கா.ப. அலுவலர்க்குத் தமிழில் பயிற்சி 2422/17.11.67
2. தமிழ்நாடு அலுவல் விதிகள் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடுதல் 2527/30.11.67

இதற்கிடையில் 23.1.1968 அன்று சட்டமன்றத்தில் இருமொழிச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. கூடுதலாக, வரப்போகிற ஐந்தாண்டுகட்குள் (அதாவது 1973க்குள்) அரசு அலுவலகங்களில் - அனைத்துத் துறைகளிலும் தமிழை முழுமையான ஆட்சிமொழியாக்குவது என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

மக்கள் பிரதிநிதிகள் எல்லாம் ஒரு முகமாகக் குரல் கொடுத்தும் தமிழால் தமிழ் மக்களிடையே செல்வாக்குப் பெற்ற தி.மு.கழகம் ஆட்சியிலிருந்தும், அறிஞர் அண்ணாவே சட்டமன்றத்தில் தீர்மானம் நிறைவேற்றியிருந்தும் உயர்மட்டச் செயலாளர்களை இம்மியும் அசைக்க முடியவிலலை.

'பழக்கத்தால் மாடுகளும் செக்கைச் சுற்றும்' என்றாரே பாவேந்தர் அதைத்தான் நினைத்துக் கொள்ள வேண்டியுள்ளது.

1. 29.4.68 இல் ஓர் அரசாணை (எண்.987) வருகிறது - ஆங்கிலத்தில் அதிலும் பாவேந்தர் பிறந்தநாளன்று பிறப்பிக்கப்பட்ட அரசாணை.

கூட்டுறவுச் சங்க இணைப் பதிவாளர் அலுவலகங்களில் தமிழைப் பயன்படுத்தும் ஆணை இது.

2. தமிழ்த் தட்டச்சுப் பயில அரசுப் பணியாளர்களுக்கு வசதிகள் (குறிப்பாணை 3308/ 23.5.1968) இதுவும் ஆங்கிலத்தில்

ஆனால் 2.8.1968 இல் வெளியிடப்பட்ட அரசாணை எண்.1609 தமிழில் வெளியிடப்படுகிறது. அரசு செயலகத் துறைகளில் தமிழ்த்திட்டம் விரைவு படுத்தும் ஆணை இது.

அடுத்து, உதவி ஆட்சியாளர்கள் பயிற்சித்திட்டம் குறித்த அரசாணை ஆங்கிலத்தில் (1731/ 26.8.68); 13.9.68 ஆம் நாளிட்ட சுற்றறிக்கை தமிழில் வெளிவருகின்றது.

அடுத்து, தொடர்ந்து வரும் நான்கு அரசாணைகளும் ஆங்கிலத்தில்

1. பொறியியல் பணிமனைகளுக்கான அலுவலகங்களில் தமிழைப் பயன்படுத்துதல் (1886/20.9.68)
2. மீன்துறைப் பணியாளர் பயிற்சி நிலைய அலுவலகத்தில் தமிழ் அறிமுகம் (1887/ 20.9.68)
3. சென்னை ஆட்சிமொழிக் குழுவை மாற்றியமைத்தல் (2077/18.10.68)
4. ஆட்சிமொழிக்குழு உறுப்பினர் நியமனம் (குறிப்பாணை 13.11.68)

அடுத்து, கிராம வளர்ச்சி இயக்குநரது அலுவலகத்தில் தமிழ் அறிமுகம் - ஆணை தமிழில் வருகின்றது. (1 6.11.68) அடுத்து வரும் அரசாணைகள் மூன்றும் ஆங்கிலத்தில் வருகின்றன.

1. தட்டச்சர், சுருக்கெழுத்தர் திட்டம் நீட்டிப்பு (2276/23.11.68)
2. தமிழ் வளர்ச்சி, ஆராய்ச்சி மன்றத்தை மாற்றி அமைத்தல் குறித்த அரசாணை (2316/ 29.11.68)

அரசில் உள்ள தமிழ் வளர்ச்சி மன்றம் பற்றிய செய்தியைக் கூடத் தமிழில் தரவேண்டும் எனும் உணர்ச்சி தொடர்புடைய அலுவலர்கட்கு வரவில்லை. அந்த அளவுக்குத் தோல் மரத்துப் போய்விட்டது.

3. சிறுதொழில் நிறுவனத்தில் தமிழ் அறிமுகம் (2424/17.12.68)

அதற்கப்புறம் ஒரே ஓர் அரசாணை தமிழில் வெளிவருகிறது.

மாநிலப் போக்குவரத்து மேல் முறையீட்டு நீதிமன்ற அலுவலகத்தில் தமிழ்த் திட்டம் (2423/17.12.68)

அடுத்து வரும் நான்கு அரசாணைகளும் ஆங்கிலத்தில்

அன்பர்கள் இந்த இடத்தில் நன்றாகக் கவனிக்க வேண்டும். இப்போது அறிஞர் அண்ணாவின் ஆட்சி நடைபெறுகிறது. ஐந்தாண்டுகட்குள் தமிழை முழுமையான ஆட்சிமொழியாக்க வேண்டும் எனும் அண்ணாவின் தீர்மானத்தை அரசு அலுவலர்கள் எவ்வளவு அக்கறையோடு செயற்படுத்துகிறார்கள் என்பதை நன்றாகக் கவனிக்க வேண்டும்.

1. கூட்டங்கள் நடைபெறும்போது வழங்கப்படும் சிற்றுண்டிக்கான செலவினத்தை மேற்கொள்ள வகை செய்தல் (2446/18.12.68)

(மிக மிக எளிய பொருளை - உள்ளடக்கத்தைக் கொண்டு விளங்கும் இதைக்கூடத் தமிழில் வெளியிட மனம் வரவில்லையே!)

2. வேளாண்மை, பொதுப்பணித்துறைகளின் மாவட்ட அலுவலகங்களில் தமிழ் (695/27.4.69)

3. தேர்வாணையத்தால் நடத்தப்பெறும் தேர்வுகளில் தமிழைப் பயன்படுத்தல் (889/9.5.69)

4. மறை பொருள் கோப்புகள் - தமிழில் பெறுதல் (1061/6.6.69)

பின்னால் உள்ள மூன்று அரசாணைகளும் அண்ணாவுக்குப் பின் முதல்வராக வந்த கலைஞர் காலத்தில் வெளியிடப்பட்டவை என்பதை உணர வேண்டும். அரசு அலுவலர்கள் அண்ணாவையும் பொருட்படுத்தவில்லை. கலைஞரே முதல்வராக இருந்தும் கண்டுகொள்ளவில்லை.

அடுத்து, ஓர் ஆணை தமிழில் 115/16.6.69

துறைத் தலைமை அலுவலகங்களையும் சார்நிலை மற்றும் மாவட்ட நிலை வரையிலுள்ள அலுவலகங்களையும் பொது ஆய்வு செய்யும்போது பயன்படுத்தப்படும் வினாப்பட்டிகள் மற்றும் விடைகள் தமிழில் இருக்க வேண்டும்.

ஆனால் அடுத்துவருவது ஆங்கிலத்தில் 1597/29.8.69

தட்டச்சர்க்கு ரூ.50/- வழங்கும் திட்டம்.

அடுத்து வரும் ஆணை தமிழில் (1796/27.9.69)

ஆட்சிமொழித் திட்டத்தை விரைவாக நிறைவேற்றுதல்

பின்வரும் இரண்டு அரசாணைகளும் ஆங்கிலத்தில் உள்ளன.

1. தட்டச்சர், சுருக்கெழுத்தர்க்குத் தமிழ்த் தட்டச்சுப் பயிற்சி (1890/9.10.69)

2. சார்நிலையில் உள்ள உரிமையியல், குற்றவியல், தீர்ப்பாயங்களில் தமிழ் (2807/13.11.69)

ஓர் அரசாணையைத் தமிழில் வெளியிட்டு வழிகாட்ட முடியாதவர்கள், உரிமையியல் நீதிமன்றங்கள், குற்றவியல் நீதிமன்றங்களில் எல்லாம் தமிழ் மேலோங்க வேண்டும் என்று ஆணை பிறப்பிப்பது கேலிக் கூத்தானது மட்டுமன்று வெட்கத்துக்கும் உரியதாகும்.

இந்த நேரத்தில் தான் 3 திருக்குறட்பாக்களை நினைத்துக் கொள்ள வேண்டும்.

ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்
பேதையுள் பேதையார் இல்.

நன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்ற மாகும் இறைக்கு!

ஏதிலார் குற்றம்போல் தன்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு!

மாவட்டங்களில் உள்ள துறைத் தலைமை அலுவலகங்களில் த.வ. இயக்குநர் ஆய்வு செய்தல் குறித்த ஆணை தமிழில் (3218/23.12.69)

அதே துறையில் அடுத்து வெளியிடப்படும் ஆணை ஆங்கிலத்தில் (அரசு செயலகத் துறைகளில் தமிழ் - 3148/27.12.69)

1970 ஆம் ஆண்டில் தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம் தொடர்பாக 9.அரசாணைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன. இதில் 5 ஆணைகள் தமிழிலும் 4 ஆணைகள் ஆங்கிலத்திலும் வெளியிடப்பட்டுள்ளன.

கலைஞர் ஆட்சிக்காலம் இது; ஆனாலும் தமிழில் அனைத்து அரசாணைகளையும் வெளியிட வேண்டும் என்னும் மனநிலையோ, கட்டாயமோ அலுவலர்கட்குப் பிறக்கவில்லை.

ஆங்கிலம் சரிக்குச் சரியாக வருகிறது என்பதை வேதனையோடு சுட்டத்தான் வேண்டும்.

அரசு அலுவலகங்களில் தமிழ்ச் செயற்பாடு - தட்டச்சு வழங்குவதில் உள்ள கணக்கம் தவிர்த்தல் இரண்டும் தமிழில் - குறிப்பாணை 304/70-1/29.1.70 - குறிப்பாணை 466/69-6/13.2.70

சட்டம், நீதித்துறைகளில் தமிழைப் பயன்படுத்துதல் - ஆங்கிலத்தில் - 517/9.3.70

அடுத்து வரும் இரண்டும் தமிழில்

குறிப்பாணை 744/69-14/10.3.70 நிலையாணை 1472/27.6.70

காசோலைகள், பட்டியல்களில் தமிழில் கையொப்பமிடுதல் - தட்டச்சர்கள் கட்டாயத் தமிழ்த்தட்டச்சுத் தகுதிபெறுதல்

அடுத்து வரும் இரண்டு அரசாணைகள் ஆங்கிலத்தில்

தமிழில் சிறந்த வரைவுகளும் குறிப்புகளும் எழுதும் அரசு ஊழியர்களுக்குப் பணப் பரிசு (1620/14.7.70) தட்டச்சர்கள் தமிழ்த்தட்டச்சில் தேர்ச்சி பெறுதல் (1861/7.8.70)

ஆனால் 14.7.70 இல் வெளியிடப்பட்ட அரசாணையில் குறிப்பிட்ட அதே செய்தி குறித்து ஆட்சிமொழிக்குழுச் செயலாளர் எழுதிய கடிதம் தமிழில் வருகிறது. (2391/68-அ/31.8.70)

எனவே, எதையும் தமிழில் சொல்ல முடியவில்லை என்பதால் இந்த நிலை ஏற்படவில்லை சொல்ல முயலவில்லை - செக்குத்தனம் - எருமைத்தனம் - அடிமைத் தனம் - ஆங்கிலம் அறிந்தவர் எனும் மேதாவித்தனம் - 'தமிழ்தானே!' என்று அலட்சியம் காட்டும் அறிவிலித்தனம் - இவைதாம் காரணங்கள்.

7.8.70 இல் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்ட அரசாணையில் விதிவிலக்குக்காக ஆங்கிலத்திலேயே அரசாணை (2577/11.11.70)

தமிழ்வளர்ச்சி தொடர்பாகவே பாதிக்கிணறுதான் தாண்டியுள்ளோம் என்றால் பிற துறைகளில் கேட்கவே வேண்டியதில்லை. 1970இல் வெளியிடப்பட்ட 2600க்கும் மேற்பட்ட அரசாணைகளில் ஐந்து மட்டுமே தமிழில் என்றுதான் கொள்ள வேண்டும்.

1971 இல் 11 அரசாணைகள்; இவற்றில் 7 தமிழில் 4 ஆங்கிலத்தில்; ஓரளவு முன்னேற்றம் காணப்படுகின்றது.

1971 இல் முதல் மூன்று அரசாணைகள் தமிழில்.

1. அரசு அலுவலகங்களில் த.வ. துறைகளின் ஆய்வுக்கு வசதிகள் (657/3.3.71)

2. மாவட்ட அலுவலகங்களில் அரையாண்டு அறிக்கைகள் (2320/69-12/15.6.71)

3. துறைத் தலைமை அலுவலகங்களில் அரையாண்டு அறிக்கைகள் (4170/70-7/15.6.71)

அடுத்த இரண்டும் ஆங்கிலத்தில்

1. பணிப் பதிவேடுகளைத் தமிழில் பதியச் சொல்லி ஆங்கிலத்தில் ஆணை (1993/28.6.71)

2. மாநகர், நகராட்சி ஊழியர்களின் நல்ல வரைவுகளுக்குப் பரிசுகள் (1614/9.7.71)

த.வ.இ. எழுதிய கடிதம் தமிழில் வெளியானாலும், தொடர்ந்து வரும் அரசாணைகள் ஆங்கிலத்திலேயே உள்ளன.

நிதித்துறை அமைச்சகத் தட்டச்சுகள் (1668/24.9.71)

கருவூலக் கணக்குத் துறையில் தமிழ் (1868/30.11.71)

பின்னால் வந்த மூன்று அரசாணைகளும் தமிழில் வந்துள்ளன.

1. மண்டல அலுவலகங்களில் முழுத் தமிழ்த்திட்டம் (2070/2.12.71)

2. த.வ. இயக்ககத்தில் திட்டம் (2079/4.12.71)

3. நகர் மன்றம், ஊராட்சி ஒன்றியங்களின் கடிதத் தொடர்பு - தமிழில் (2790/22.12.71)

1971 இல் இருந்த ஓரளவு முன்னேற்றம் 1972 இல் பெரிதும் சரிந்து போய்விட்டது. 1972 இல் வெளியான 12 அரசாணைகளில் 8 ஆங்கிலத்தில், 4 மட்டுமே தமிழில். எனவே அரசு அலுவலர்கள் படிப்படியாகக் கூடத் தமிழை நோக்கி நகரவில்லை என்று தெரிகிறது. அதுமட்டுமன்றிச் சாண் ஏறி முழம் வழுக்கிய கதையாகவே தமிழ் ஆட்சி மொழித் திட்டத்தின் செயற்பாடு உள்ளது.

கலைஞர் முதல்வராக, நாவலர் கல்வி அமைச்சராக, இருந்தும் இதுதான் நிலை.

1. மாவட்ட நிலை அலுவலர் நியமனம் (29/7.1.72)

2. ஆட்சி மொழித் திட்டத்தின் இறுதி நிலையைச் செயற்படுத்துவது (99619/91-1/4.2.72)

3. தமிழில் குறிப்புகளும் வரைவுகளும் எழுதிடப் பயிற்சி (4353/74/ஆ4/18.3.72)

4. ஆட்சிமொழிக்குழு புனரமைப்பு (482/6.4.72)

மேற்கண்ட நான்கு மட்டுமே தமிழில் வெளிவந்துள்ளன.

ஆங்கிலத்தில் வந்தவை.

1. தட்டச்சர், கால அளவுக்குள் தேர்ச்சி பெறுதல். (3825/70-1/4.1.72)

2. கருவூலக் கணக்குத் துறையில் தமிழ் வரைவுகள் அறிமுகம் (91/24.1.72)

3. மேற்படி துறையில் தட்டச்சர்களின் தமிழ்த் தேர்ச்சி (115/24.1.72)

4. அரசுத் தட்டச்சர்களுக்கு ரூ.50/- திட்டம் நீட்டிப்பு (188/9.2.72)

5. சிறந்த வரைவுகள் எழுதுவார்க்கு ரொக்கப் பரிசு (29131/72-2/29.4.72)

6. தமிழில் வரைவு எழுதும் பயிற்சி / மதிப்பூதியம் (1395/31.8.72)

7. கருவூலக் கணக்குத் துறை - தணிக்கை ஆணைகள் தமிழில் பிறப்பித்தல் (62759/தவ/72-3/23.10.72)

8. ரொக்கப்பரிசு வழங்கும் திட்டம் ஏற்பு (1996/19.12.72)

1973 இல் பிறப்பிக்கப்பட்டவை : 9

அதில் முதல் இரண்டு மட்டும் ஆங்கிலத்தில்; தொடர்ந்து வரும் ஏழும் தமிழில் - இது நல்ல முன்னேற்றம் என்று கருதலாம்.

1. தமிழில் பெறப்பட்ட தணிக்கைத் தடைகளுக்குத் தமிழில் விடை தருதல் - (15.1.73)

இதில் வியப்பு - தணிக்கைத் தடை தமிழில் வருகிறது - விடைகள் தமிழில் வரவேண்டும் - இப்படிச் செய்யுங்கள் என்று ஆங்கிலத்தில் சொல்ல வேண்டுமாம்.

2. சிறந்த வரைவுகட்கு ரொக்கப்பரிசு (5.3.73)

தமிழில் சிறந்த வரைவுகளைப் பாராட்டி ரொக்கப்பரிசு தருவோம் என்று அரசாணை பிறப்பிக்கும் அலுவலர் அப்படிப் பிறப்பிக்கும் வரைவைத் தமிழில் தரவேண்டும் என்று எண்ணவில்லையே!

தொடர்ந்து வரும் ஏழு ஆணைகள் தமிழில் -

1. கருவூல முத்திரைகளை - தமிழில் பொறித்தல் (175/27.3.73) 2) முழுத் தமிழ்த் திட்டம் (26.9.73) 3) தமிழ்த்திட்டம் செயற்படுதல் குறித்த படிவங்கள் (17.10.73) 4) மின்வாரியம், வீட்டு வசதி வாரியம், தேர்வாணையத்துக்கு விரிவுபடுத்தல் (19.11.73) 5) த.வ.இ. அலுவலர்கள் ஆய்விற்கு எடுத்துக்கொள்ள வேண்டிய அலுவலகங்கள் 6) தணிக்கை அறிக்கைகள் தமிழில் எழுதுவது (1.12.73) 7) சிறப்புச் சொல் துணை அகராதிகள் - அரசு அச்சகத்தில் அச்சிடல் (2738/19.12.73)

1974 இல் பிறப்பிக்கப்பட்ட ஆறில் நான்கு தமிழில் - இரண்டு ஆங்கிலத்தில்

1. இ.ஆ.ப. அலுவலர்க்குத் தமிழ்த்திட்டப் பயிற்சி (110/22.1.74)

2. தணிக்கை அறிக்கை தமிழில் (19.5.74)

3. நல்ல வரைவு எழுதுவோர் திறனைப் பணிப் பதிவேட்டில் பதிதல் (567/3.6.74)

4. குற்ற வேதியியல் ஆய்வகத்தில் தமிழ் (5.7.74)

அரசுப் பணியாளர்களுக்குப் பணப் பரிசு (5.7.74) மற்றும்

மொழிச் சிறுபான்மையருக்கு விதிவிலக்கு ஆகிய இரண்டும் ஆங்கிலத்தில்

1975 ஆம் ஆண்டு நெருக்கடி நிலைக் காலம்: 'மிசா'ச்சட்டம் இருந்த காலம். கலைஞர் ஆட்சியில் இருந்தாலும் தமிழ் சார்ந்த பணிகள் முடக்கப்பட்டிருந்தன என்றே கருத வேண்டியுள்ளது.

1975இல் தமிழ்ச் சார்பில் இரண்டே இரண்டு அரசாணைகள்; இரண்டுமே ஆங்கிலத்தில் - 'தமிழ்' அரசாணை அறவே தவிர்க்கப்பட்ட காலம் இது.

1. விற்பனைவரி மேல் முறையீட்டுத் தீர்ப்பாயம் (20/4.1.75)

2. சிறப்பாகத் தமிழ்பேசும் அலுவலர்களுக்குச் சான்றிதழ் (2018/16.12.75)

1976 ஆம் ஆண்டு சனவரி 30 ஆம் நாள் கலைஞர் ஆட்சி கலைக்கப்பெற்றது. அந்த ஆண்டில் வெளிவந்த ஏழு அரசாணைகளில் ஒன்றே ஒன்று மட்டும் தமிழில். மீதி அனைத்தும் ஆங்கிலத்தில்.

பொதுமக்களுக்கும், ஆங்கிலம் அறியாதோருக்கும் அனுப்பப்படும் அறிவிப்புகள் தமிழில் - (19.10.76)

ஆங்கிலத்தில் ஆறு

1. பொது விதி 12 திருத்தம் (36/5.1.76)

2. குடிமையியல் நீதிமன்றத் தீர்ப்புகள், ஆணைகள் தமிழில் (10/21.1.76)

3. அதையே தள்ளுபடி செய்து (50/24.3.76)

ஏற்கெனவே உயர்நீதிமன்றத்திற்குக் கீழ் நிலையில் உள்ள உரிமையியல் நீதிமன்றங்கள், குற்றவியல் நீதிமன்றங்கள், தீர்ப்பாயங்கள் முதலியவற்றில் சாட்சியங்கள் அனைத்தையும் தமிழில் பதிந்திட வேண்டும் என்று ஆணை பிறப்பிக்கப் பட்டது. தொடர்ந்து கலைஞர் அரசு 21.1.76 அன்று சட்டத்துறை வாயிலாக மேற்கண்ட நீதிமன்றங்களில் தீர்ப்புகளையும் ஆணைகளையும் தமிழில் வழங்கலாம் என ஆணை பிறப்பித்துள்ளது. இதனையடுத்து ஆட்சி

கலைக்கப்பட்டு, குடியரசுத் தலைவர் ஆட்சி வந்துவிட்டதால் மேற்கண்ட ஆணைக்கு நேர்ந்த கதியைப் பார்க்கவேண்டும்.

தமிழ்நாடு வழக்கறிஞர்கள் சங்கம் மேற்கண்ட ஆணையைத் திரும்பப் பெறுமாறு தீர்மானம் நிறைவேற்றியிருந்தது.

குடியரசுத் தலைவர் ஆட்சியினை நடத்திய இ.ஆ.ப. அலுவலர்கள் மேற்கண்ட ஆணையை முடக்கி நிறுத்திவிட்டார்கள். அதற்கு அவர்கள் கூறும் காரணம் பல்வேறு சட்டங்களுக்கான அதிகார பூர்வமான மொழி பெயர்ப்பு நூல்கள் தற்பொழுது இல்லை என்பதாகும்.

C.C.P, I.P.C Evidence Act ஆகியவை தமிழில் மொழிபெயர்க்கப்படவில்லை என்று கூறி, மேற்கண்ட ஆணையை முடக்கி வைத்துவிட்டார்கள்.

4. உள்ளாட்சி நீதித் தணிக்கை அறிக்கை - தமிழில் (1157/21.8.76)

5. தமிழ் ஆட்சிமொழித் திருத்தச் சட்டம் நடைமுறைக்கு வரும் நாள் (191/13.11.76)

6. பொதுவிதி 12 - விளக்கங்கள் (105/8.12.76)

ஏற்கெனவே 24.3.76 அன்று, நிறுத்தி வைக்கப்பட்ட 'நீதி மன்றத்தில் தமிழ்' என்பதில், குற்றவியல் நீதி மன்றங்களில் மட்டும் 14.11.76 முதல் தமிழில் தீர்ப்பு வழங்கலாம் என்று ஆணை பிறப்பிக்கப்பட்டது.

1977 இல் முற்பகுதியில் குடியரசுத் தலைவர் ஆட்சியும் பிற்பகுதியில் புரட்சித்தலைவர் ஆட்சியும் நடைபெற்றன.

இதில் வெளியிடப்பட்ட ஆணைகள் இரண்டுதான். இரண்டுமே ஆங்கிலத்தில்தான்.

1. த.வ.இ., மொ.பெ. துறை அலுவலர்களை வரையறுத்தல் (61/28.2.77)

2. இரண்டாம் மொழித் தேர்வில் தேர்ச்சி பெறுதல் (1292/25.10.77)

1978 இல் 9 அரசாணைகள் வெளிவந்துள்ளன. ஆறு ஆங்கிலத்தில் மூன்று மட்டும் தமிழில்

1. இரண்டாம் மொழித் தேர்வில் தேர்வு பெறுதல் (9.1.78)

2. பணியாளர்கட்கு ரொக்கப் பரிசு (397/25.2.78)

3. ரொக்கப்பரிசு (781/26.4.78)

4. தமிழில் கையொப்பமிடுதல் - புகழ்பெற்ற அரசாணை இதுதான் (1134/21.6.1978)

ஆனால் இந்த அரசாணையைத் தமிழில் வெளியிட வேண்டும் எனும் எண்ணம் வரவில்லை.

'All the Government officials shall sign only in Tamil' என்று ஆங்கிலத்தில் வலியுறுத்தப்படுகிறது.

1978இல் போடப்பட்டுள்ள அரசாணையைத் தமிழக அரசு ஊழியர்கள் 1998 இல் எப்படிச் செயற்படுத்தியுள்ளார்கள் என்பதை ஆராய்ந்து பார்த்தால் நீங்கள் அயர்ந்து போவீர்கள் (தலைமைச் செயலக ஆய்வில் பார்க்கலாம்)

5. ரொக்கப்பரிசு (12.9.78)

6. மையமாநில அரசு விதிகள் - தமிழில் மொழிபெயர்த்தல் (182/26.10.78)

தமிழில் வெளிவந்த மூன்று

1. தமிழில் தேர்ச்சி பெறாத அரசு ஊழியர்கள் (347/5.3.78)

2. பெரியார் தந்த எழுத்துச் சீர்திருத்தம் (1875/19.10.78)

புரட்சித்தலைவர் காலத்தில் ஏற்கப்பட்ட எழுத்துச் சீர்திருத்தம் இன்று முழுமையாகக் கடைப் பிடிக்கப்படுகிறது. புகழ் பெற்ற இந்த அரசாணைக்காக புரட்சித் தலைவர் என்றென்றும் பாராட்டுக்குரியவராகிறார்.

3. ஒவ்வொரு துறையிலும் தொடர்பு அலுவலர் அமர்த்தம் (பற்றாளர்) (1979/14.11.1978)

1979 இல் வெளியிடப்பட்ட இரண்டு அரசாணைகளும் தமிழில் உள்ளன.

1. பெரியார் மேற்கொண்ட தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் ஏற்றுக் கொள்ளல் (23.5.1979)

2. ஆட்சிமொழிக்குழு புனரமைப்பு (327/28.2.79)

இக்குழுவில் கல்வி அமைச்சர், சிலம்புச் செல்வர் ம.பொ.சி., தமிழ்நாடு ஆட்சிமொழிச் சட்ட ஆணையத்தின் தலைவர் எஸ். மகாராஜன், தமிழறிஞர் மே.வீ. வேணுகோபாலப் பிள்ளை ஆகியோர் இருந்துள்ளனர்.

இவர்களது பதவிக்காலம் 28.2.1982 வரை இருந்துள்ளது.

இவர்கள் எந்த அளவுக்கு வெற்றி கண்டனர் என்பது தெரியவில்லை.

1996-2001 இல் என் ஆய்வின் போது கண்ட உண்மைகளைப் பார்த்தால் மேற்கண்ட குழு எந்த வகையிலும் வெற்றி பெறுமாறு அரசு ஊழியர்கள் விட்டிருக்க மாட்டார்கள் என்றே உறுதியாக நம்புகிறேன்.

1980 இல் 3 அரசாணைகளும் தமிழில் வெளிவந்துள்ளன.

1. நூலக ஆணைக்குழு ஊழியர்க்கும் பணப் பரிசு (434/4.3.80)

2. அரசுப் பணியாளர் பயிற்சி நிறுவனத்தில் தமிழ் (1344/19.7.80)

3. அரசுப் பணியாளர் - தேர்வு நடத்துதல் - பதிவேடுகள் (1690/26.8.80)

1981 இல் ஆறு அரசாணைகளும் தமிழில் வந்துள்ளன.

1. கிறித்தவ ஆண்டுடன் திருவள்ளுவராண்டு, தமிழ் மாதம் பயன்படுத்திட ஆணை. (91/3.2.81)

தமிழகப் புலவர் குழுவின் வேண்டுகோளை ஏற்று ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது. புரட்சித்தலைவர் ஆட்சிக் காலத்தில் இதுபோன்ற முத்திரை பதித்த ஆணைகள் பல வெளிவந்துள்ளன.

2. ஆட்சிமொழி முனைப்புத் திட்டம் - விழா நடத்துதல் (432/10.3.81)

3. தமிழ்த்தேர்வில் வெற்றி பெறாதோரைப் பணியில் நீட்டிக்க உறுதி (10.4.81)

4. நூலக ஆணைக்குழு அலுவலகங்களிலும் ஆய்வு (2077/16.9.81)

5. அகராதிகள் அரசு அச்சகத்தில் அச்சிட (2401/30.10.81)

6. அரசுத் தேர்வுகள் இயக்ககம் - விதி விலக்கு (2540/20.10.81)

அரசுத் தேர்வுகள் இயக்ககம் அனைத்துச் செய்திகளையும் கணிப்பொறி வழி அனுப்பவேண்டியிருப்பதால் ஆங்கிலத்திலேயே தங்கள் நடவடிக்கையை மேற்கொள்ளவும், மெட்ரிகுலேசன் முதலிய பள்ளிகளோடு கடிதத் தொடர்பு ஆங்கிலத்திலேயே வைத்துக் கொள்ளவும் விதிவிலக்குப் பெற்றுள்ளது.

மெட்ரிகுலேசன் பள்ளிகள் தான் ஆங்கிலப் பயிற்றுமொழியைப் பிடித்துத் தொங்குகின்றன என்றில்லை. அரசுத் துறையும் அவர்களோடு தமிழில் கடிதத் தொடர்பு கொள்ள விரும்பவில்லை; அவர்களது மட்டமான இந்தக் கருத்தினை அரசும் ஏற்றுள்ளது வியப்பளிக்கிறது.

1982 இல் வெளியான 13 அரசாணைகளில் இரண்டு மட்டும் ஆங்கிலம். அதிலும் சட்டத்துறையும், தொழிலாளர் நலத் துறையும் வெளியிட்ட ஆணைகள்.

பிற 11ம் தமிழில் உள்ளபடியால் மகிழ்ச்சியுடன் பாராட்ட வேண்டியுள்ளது.

1. உரிமையியல் நீதி மன்றங்களில் தமிழில் தீர்ப்பு வழங்கிட அனுமதி

2. கடைகள் மற்றும் நிறுவனங்களின் பெயர்ப்பலகைகளில் மேலே தமிழும் அடுத்து ஆங்கிலமும் தொடர்ந்து பிற மொழியும் 5:3:2 என்ற அளவில் இடம் பெற வேண்டும் எனும் புகழ் பெற்ற ஆணை இது.

என்றாலும் இந்த ஆணையும் ஆங்கிலத்தில் இருப்பதுதான் வருந்தத் தக்கது.

எஞ்சியுள்ள 11 ஆணைகள்.

1. திட்டத்தைச் சரிவரச் செயற்படுத்தாத அரசு ஊழியர்கள் மீது நடவடிக்கை (24/6.1.82)
2. சாலைகள், தெருக்கள் பெயரிடுதல் (117/29.1.82)
3. தமிழில் தேர்ச்சி பெறாதோரைப் பணியில் நீட்டித்தல் (23.2.82)
4. தமிழில் தேர்ச்சி பெறாதோரைப் பணியில் நீட்டித்தல் (4.5.82)
5. அரசு உயர்நீதிமன்றம் மடல் தொடர்பு (4.5.82)
6. மூவாண்டு முனைப்பு விழா (968/21.5.82)
7. சட்டத்துறை விதிகளைத் தமிழில் தருவது (1141/8.6.82)
8. தமிழ் மொழிபெயர்ப்பாளர்க்கு மதிப்பூதியம் (1234/15.6.82)
9. மூவாண்டு முனைப்புத்திட்டம் செயற்படுத்தல் (13.8.82)
10. மூவாண்டு முனைப்புத் திட்டம் செயற்படுத்தல் - கால நிர்ணயம் செய்தல் (19.8.82)
11. ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகள் திரும்பப் பெறுதல் (2748/27.12.82)

27.12.1956 இல் தான் தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் வந்தது. 26 ஆண்டு கழித்துத் தான் ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளைத் திரும்பப் பெற்றுக் கொண்டுதமிழ்த் தட்டச்சுப் பொறிகளை வழங்கிட ஆணை பிறப்பிக்கப்பட்டது.

ஆனாலும் இந்த ஆணையையாவது அரசுச் செயலாளர்களும், துறைத் தலைமை அலுவலர்களும், மாவட்ட ஆட்சித் தலைவர்களும் மதித்தார்களா என்றால் இல்லை.

கி.பி.2000த்தில் - அதாவது 44 ஆண்டு கழிந்தும் தமிழ்த் தட்டச்சுப் பொறியைப் பெறுவதில் அலுவலர்களின் மெத்தனம் தனியே விளக்கப்பட்டுள்ளது.

1983 இல் ஆறு அரசாணைகள்.

பணியாளர் சீர்திருத்தத் துறையும் தொழிலாளர் துறையும் அரசாணைகளை ஆங்கிலத்தில் தந்துள்ளன. (12.10.83/3312/29.12.83)

மாவட்ட அலுவலக நடைமுறை நூல் பற்றியும், கடைகளில் பெயர்ப்பலகைகள் பற்றியும் வெளியான அரசாணைகள் இவை. எஞ்சியவை கல்வித்துறையாலும் பொதுத்துறையாலும் வெளியிடப்பட்டவை. இவை நான்குமே தமிழில் உள்ளன.

1. துறைகளால் அளிக்கப்படும் தமிழாக்கம் (719/13.4.1983)

2. தேர்வு செய்யப்பட்ட துறைகளில் தமிழை முழுமைப்படுத்தல் (29.4.83)

3. வங்கியியல் நடவடிக்கைகளைக் கவனிக்கும் நிறுவனங்களில் தமிழ்த்திட்டம் (858/7.5.83)

4. தமிழில் அனுப்பப் பெறும் கருத்துருக்கள் மீது செயலகத்துறைகள் தமிழில் நடவடிக்கை மேற்கொள்ளுதல் (19.12.83)

1984 இல் வெளியான ஐந்து அரசாணைகளும் தமிழில் வெளிவந்துள்ளன. புரட்சித்தலைவர் ஆட்சிக் காலத்தில் அரசாணைகளைத் தமிழில் வெளியிட வேண்டும் எனும் எண்ணம் வலிமையாகவே இருந்தது.

1. அரசு அலுவலகங்களில் ஆய்வு - ஆய்வுப் படிவங்கள் அச்சிடல் (33/9.1.84)

2. ஆட்சிமொழிக் கருத்தரங்கம் நடத்துதல் (34/11.1.84)

1984 முதல் 1989 வரை ஆய்வு செய்ததில் ஐந்து ஆண்டுகளில் 15 கருத்தரங்குகள் நடைபெற்றன என அறிய முடிகிறது. ஆனால் 1996 முதல் 2001 முடிய ஐந்து ஆண்டுகளில் 34 கருத்தரங்குகள் நடைபெற்றுள்ளன.

3. தமிழ்ச் சுருக்கெழுத்தாளர்களை ஊக்குவித்தல் (132/8.2.84)

4. தட்டச்சர்க்கு ஒட்டு மொத்தத் தொகை ரூ.50/- (595/18.5.84)

5. இரண்டாம் மொழித் தேர்வில் தேர்ச்சி பெறாதோர் (751/18.5.84)

1985 ஆம் ஆண்டில் வெளியான ஆறு அரசாணைகளும் தமிழில் வெளிவந்துள்ளமை பாராட்டிற்குரியது.

1. நெடுஞ்சாலைத் துறையில் ஆங்கிலத் தட்டச்சு வைத்து கொள்ள அனுமதி (26/7.1.85)

2. மெட்ரிகுலேசன் தேர்வுப் பணிக்கான வேலைகளில் தமிழ் பயன்படுத்தல் (99/7.2.85)

3. தேர்வாணையம் நடத்தும் இரண்டாம் மொழித் தேர்வின் தரத்தை உயர்த்துதல் (226/6.3.85)

4. படைவீரர் நலஇயக்குநர் அலுவலகம் ஆங்கிலம் - தமிழ்த் தட்டச்சுகள் (1048/4.6.85)

5. வணிகவரி, அறநிலையத்துறை தீர்ப்பாய ஆணைகள் தமிழில் (568/28.6.85)

6. தட்டச்சு மாற்றம் (881/20.11.85)

1986 இல் வெளியான ஆறு அரசாணைகளும் தமிழில்தான்.

1. தமிழ் வளர்ச்சித்துறையின் இசைவு பெற்றே ஆங்கிலத் தட்டச்சை வழங்கலாம். (9/9.1.1986)

தமிழ் வளர்ச்சி மற்றும் பண்பாட்டுத்துறை தனியாகப் பிரிக்கப்பட்டபின், அதன் சார்பில் இந்த அரசாணை வெளியிடப்பட்டுள்ளது.

2. வேளாண்மை வருமான வரி - ஒரே ஓர் ஆங்கிலத் தட்டச்சைப் பயன்படுத்தல் (199/ 24.8.86)

3. 14 மாவட்டங்களில் ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் நடத்துதல் (54/5.3.86)

4. சில அலுவலகங்களில் தமிழ்த்தட்டச்சுடன் இணையாக ஆங்கிலத் தட்டச்சுகள் பெற்றுக்கொள்ள அனுமதி (593/9.6.86)

5. மாநகராட்சி, கழகங்கள், வாரியங்களுக்கும் தமிழ்த்திட்டம் விரிவுபடுத்தல் (371/ 31.10.86)

6. வரிவிதிப்பு ஆணைகள் தமிழில் எழுதுதல் (4.11.86)

1987 இல் வெளியான ஏழு அரசாணைகளும் தமிழில். அந்த வகையில் பார்த்தால் கல்வி மற்றும் தமிழ் வளர்ச்சித் துறைகளில் ஆணைகள் தமிழிலேயே வருமாறு கவனமாகப் பார்த்துக் கொள்ளப்பட்டது என்றே கூறலாம்.

1. செய்தி மக்கள் தொடர்புத் துறைக்கு ஆங்கிலத் தட்டச்சுப்பொறி (34/3.2.1987)

2. தமிழ்ச் சுருக்கெழுத்தை ஊக்கப்படுத்தல் (12.6.87)

3. பரிசுக் கேடயம் வழங்குதல் (251/31.7.87)

4. உதவி பெறும் பள்ளிகள் - தமிழ்த் தேர்வில் தேர்ச்சி (1585/6.10.87)

5. அரசு அலுவலகங்களில் பெயர்ப்பலகை (349/14.10.87)

6. உதவி இயக்குநர்கள் பணி (374/4.11.87)

7. அனைத்தும் தமிழில் (20/30.11.87)

1988 - குடியரசுத் தலைவர் ஆட்சி நடந்த காலம். எனவே தமிழில் போதுமான கவனம் செலுத்தப்பட்டிருக்கும் என்று சொல்ல முடியாது. இந்த ஆண்டில் இரண்டே ஆணைகள். இரண்டும் தமிழில்.

1. தலைமைச் செயலகத்துறை - தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் (9/13.1.88)

2. தலைமைச் செயலகத்தில் ஆய்வு செய்தல் (211/27.6.88)

89 ஆம் ஆண்டில் தி.மு.க. ஆட்சி நடைபெற்றது.

வெளியிடப்பட்ட ஐந்து அரசாணைகளும் தமிழில் வந்துள்ளன.

1. ஆய்வு அறிக்கையில் காணப்படும் குறைகள் நீக்கிட அறிவுரை (13.3.89)

2. ஆங்கிலத்தில் அரசாணைகள் வெளியிடப்பட நேர்ந்தால் அதன் தமிழாக்கத்தையும் வெளியிட அறிவுறுத்தல் (182/27.8.89)

இது ஒரு புகழ் பெற்ற அரசாணை.

"தமிழ்நாடு அரசு தலைமைச் செயலகத்துறைகள் வெளியிடும் அரசாணைகள் தற்போது ஆங்கிலத்தில் வெளியிடும் வழக்கம் உள்ளது" ஆணையின் முதல் வாக்கியமே இதுதான்.

1968இல், 1970இல், 1971இல், 1986இல் பலமுறை தெளிவாக அறிவுறுத்தியும் மேல்நிலை அலுவலர்கள் அவற்றைப் பொருட்படுத்தவே இல்லை என்பதைத்தான் இந்த அரசாணையின் முதல் வாக்கியம் கூறுகிறது. சரி! இந்த ஆணையையாவது இவர்கள் மதித்தார்களா என்றால் அதுவும் இல்லை.

1998 இல் போக்குவரத்துத் துறையின் அவல நிலை தனியே சுட்டப்பட்டுள்ளது.

3. மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தாருக்குப் பாராட்டு (210/6.7.89)

4. விதிவிலக்கினங்களுக்குத் திருத்தம் (31.7.89)

5. ஆர்வமுடைய அரசுப் பணியாளர்களுக்குப் பாராட்டும் பரிசும் (371/31.10.89)

இப்போது இத்துறை கல்வி அமைச்சர் க. அன்பழகன் கீழ் இருந்தது.

1990 ஆம் ஆண்டில் ஒரே ஆணை தமிழில் வெளியிடப்பட்டுள்ளது.

கடைப் பெயர்ப் பலகைகளில் சரியான தமிழ்ச் சொற்களை எழுதிவைத்தல். (291/19.12.90)

இந்த ஆணை வருவதற்கு என் வலியுறுத்தலும் துணையும் ஒரு காரணம். தொடர்களை அமைத்துக் கொடுத்ததில் என் பங்கு உள்ளது. ஓர் ஆட்சி முடிந்து மற்றோர் ஆட்சி தொடங்கும்போது குழு உறுப்பினர்கள் சிலரோ பலரோ மாற்றப்படலாம். ஆனால் திட்டமே கைவிடப்படுவதில்லை.

ஆனால் இதற்கான கோப்பு அப்போதைய கல்வி அமைச்சர் இராம. வீரப்பனுக்குச் சென்றபோது "அவசியமில்லை" என்று எழுதி இந்தத் திட்டத்தையே ஒழித்துவிட்டார். அப்போது செயலாளராக இருந்த அவ்வை நடராசன் "கோப்பு முற்றாக்கப்பட்டது" என்று மூடுவிழாவே நடத்திவிட்டார்.

அதன் பிறகு 1996 இல் நான் பொறுப்பேற்ற பிறகுதான் புதிய குழு உருவாக்கப்பட்டு 515 சொற்களின் பட்டியல் தொகுக்கப்பட்டு நூலாகவும் வெளியிடப்பட்டது.

1991 சனவரியில் தி.மு.க. ஆட்சி கலைக்கப்பட்டது 1991 பிற்பகுதியில் அ.தி.மு.க. ஆட்சி நடைபெற்றது. இராம. வீரப்பன், பொன்னுசாமி ஆகியோர் கல்வி அமைச்சர்களாக இருந்தனர்.

1991 இல் ஒரே ஓர் அரசாணை - தமிழில் ஆர்வமுள்ள அரசு ஊழியர்கட்கு ஊக்கப்பரிசு (240/12.12.91)

1992 இல் ஒரே ஓர் அரசாணை - தமிழில் ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் நடத்துதல் (244/ 9.12.92)

1993 இல் இரண்டு அரசாணைகள் தமிழில்

1. தமிழ்த் தட்டச்சுப் பயன்பாடு (68/4.5.93)
2. ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் (4/21.7.93)

1994, 1995 க்குப்பின் த.வ. துறையில் அனைத்து அரசாணைகளும் தமிழிலேயே வந்துவிட்டன.

புரட்சித்தலைவர் காலத்தில் தொடங்கிய இந்த முழுநிலை புரட்சித்தலைவி, கலைஞர் காலத்திலும் தொடர்ந்து வந்து விட்டது.

1994 இல் 4 அரசாணைகள்.

1. தமிழ் வளர்ச்சி மன்றம் - புனர் அமைப்பு (3/10.1.94)
2. த.வ. மன்றத் தலைவராக நிதியமைச்சர் (65/21.3.94)
3. ஆட்சி மொழிக் கருத்தரங்குகள் (2/24.6.94)
4. அரசுப் பணியாளர்க்கு ஊக்கப்பரிசு (27.6.94)

1995 இல் இரண்டு அரசாணைகள்

1. த.வ. மன்றம் - புதிய உறுப்பினர் நியமனம் (182/12.7.95)
2. ஆய்வு செய்ய ஆலோசனைக்குழு (258/18.10.95)

1996 இல் புரட்சித்தலைவி ஆட்சி நடைபெற்ற காலத்தில் சில குழுக்கள் அமைக்கப்பட்டன. ஐந்து அரசாணைகளும் வெளியிடப்பட்டன.

1. முதல்வர் தலைமையில் அரசுச் செயலாளர்கள் கூட்டம் - ஆட்சி மொழிச் செயலாக்கம் (49/7.2.96)

2. ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் (1/13.3.96)

3. எழுத்துச் சீரமைப்புக்கு வல்லுநர் குழு (73/15.3.96)

4. தமிழை அனைத்து நிலைகளிலும் கட்டாய மொழியாக்கிட - குழு (74/15.3.96)

5. ஆட்சிமொழித் திட்டத்தை வலுப்படுத்தக் குழு (76/18.3.96)

13.5.96 இல் கலைஞர் ஆட்சியில் த.வ.ப. துறை தனித்துறையாகப் பிரிக்கப்பட்டது.

1. அமைச்சர்கள், செயலாளர்கள் அனைவரும் தமிழிலேயே கையொப்பமிட வேண்டும். (24.5.96)

ஆட்சிப் பொறுப்பேற்றவுடன் நடைபெற்ற முதல் அமைச்சரவைக் கூட்டத்தில் இந்த வேண்டுகோளை முன் வைத்தேன். 1978 ஆம் ஆண்டே ஆணை பிறப்பித்தும் பலர் பின்பற்றவில்லை என்று சுட்டிக் காட்டினேன். முதல்வரும் அதனை ஏற்று உடனே அனைவரும் இதனைச் செயற்படுத்த வேண்டும் என்று ஆணை பிறப்பித்தார்.

2. வணிகச் சொற்பட்டியல் உருவாக்கக் குழு (150/16.7.96)

இது குறித்து ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளேன். 'அவசியமில்லை' எனும் அமைச்சர் குறிப்புடன் செயலரால் முற்றாக்கப்பட்ட கோப்பினை மீண்டும் புதுப்பித்தேன். அதன்படி ஒரு குழு அமைக்கப்பட்டது. விரிவு வேறோர் இடத்தில்.

இதுவரை 1956 முதல் 1996 வரை தமிழ் வளர்ச்சி தொடர்பாகப் பிறப்பிக்கப்பட்ட அரசாணைகள் குறித்துப் பார்த்தோம்.

1996இல் என் பொறுப்புக்குப்பின்தான் த.வ.துறை அல்லாத பிற துறைகளில் (63 அரசுத் துறைகள் - 31 அரசுச் செயலர்கள்) அரசாணைகளைத் தமிழில் வெளியிடுவதற்கான கவனம் செலுத்தப்பட்டது.

அதே நேரத்தில் 1996 முதல் 2001 வரையில் தமிழ் வளர்ச்சித் துறையில் பிறப்பிக்கப்பட்ட அரசாணைகள் பற்றிய விவரம் தெரிந்திருக்க வேண்டும்.

அது இதுதான்.

## தமிழ் வளர்ச்சித்துறை

| | | |
|---|---|---|
| 13.5.1996 முதல் 31.3.2001 வரை வெளிவந்த அரசாணைகள் | - | 118 |
| நிர்வாகம் தொடர்பானவை | - | 43 |
| அகவை முதிர்ந்த தமிழறிஞர்களுக்கு நிதியுதவி | - | 7 |

| | | |
|---|---|---|
| மொழிக்காவலர் / எல்லைக் காவலர் நிதியுதவி தொடர்பாக | - | 8 |
| நூல்களுக்குப் பரிசு வழங்கல் தொடர்பாக | - | 7 |
| நூல்களுக்கு நிதியுதவி வழங்குதல் தொடர்பாக | - | 19 |
| ஆட்சிமொழிச் செயலாக்கம் தொடர்பாக | - | 34 |

## பிறதுறைகளில் தமிழில் அரசாணைகள் பிறப்பிக்கும் ஏற்பாடு

(முதல்வர்க்கு அனுப்பப்பட்ட மடலின் சாரம்)

1956 ஆம் ஆண்டுச் சட்டத்திலேயே அரசாணைகள் தமிழில் இருக்கவேண்டும் என்று வற்புறுத்தப்பட்டுள்ளது. 1971 ஆம் ஆண்டில் தி.மு.க. அரசு பிறப்பித்த அரசாணையில் (எண்.2070 - நாள் 2.12.71) விலக்களிக்கப்பட்ட இனங்களைத் தவிர, பிற அனைத்து இனங்களிலும் தமிழில்தான் நடவடிக்கைகள், மேற்கொள்ள வேண்டும் என்று ஆணைகள் வெளியிடப்பட்டுள்ளன. மேலும், 1986 ஆம் ஆண்டில் அ.தி.மு.க. ஆட்சியில் எண்.371 இன்படி, இது மீண்டும் வலியுறுத்தப்பட்டுள்ளது.

1989இல் தி.மு.க. ஆட்சியில் அரசாணைகள் அனைத்தும் தமிழில் வரவேண்டும் என்றும், தலைமைச் செயலகத் துறைகள் ஆங்கிலத்தில் ஆணைகள் வெளியிட வேண்டும் என்ற கட்டாயம் ஏற்பட்டால், ஒரே நேரத்தில் தமிழிலும் அரசாணை சேர்த்து வழங்கப்படவேண்டும் என்றும் அரசாணை உள்ளது (எண்.182, நாள்: 27.6.89). ஆனால், தலைமைச் செயலகத்தில் பலர் அதைப் பொருட்படுத்தவேயில்லை.

இப்போது த.வ.ப. துறை தனியாக இயங்கத் தொடங்கிய பிறகு, 18.9.96 ஆம் நாள் பணியாளர் மற்றும் நிருவாக சீர்திருத்தத்துறைச் செயலாளர் திரு. பி.எஸ்.பாண்டியன், இ.ஆ.ப., அவர்கள் அனைத்து அரசுத்துறைச் செயலாளர்களுக்கும் ஒரு மடல் எழுதியுள்ளார். அதில் பழைய அரசாணைகளை மேற்கோள் காட்டியபின், இறுதியாகப் பின்வருமாறு கூறுகிறார்:-

> "ஆனால், பல துறைகள் இவ்வாணைகளைக் கடைப்பிடிக்காமல் ஆங்கிலத்தில் மட்டுமே ஆணைகள் வெளியிடுகின்றன. எனவே, அனைத்து அரசுத்துறைச் செயலர்களும் தங்கள் துறைகளில் வெளியிடப்படும் அனைத்து ஆணைகளும் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளியிடுமாறு அறிவுறுத்தும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்."

இவரது மடல் ஏற்கெனவே காட்டப்பட்டுள்ளது.

ஊர்தி ஓட்டுநர்கள், எளிய கல்வி அறிவு படைத்தவர்கள்; அவர்கள் தொடர்பாக வெளியிடப்படும் ஆணைகள் ஆங்கிலத்தில் உள்ளதாக 'தமிழ்நாடு அரசுத்துறை ஊர்தி ஓட்டுநர்கள் சங்கம்' கூறியுள்ளது. கல்வித்துறையிலிருந்தே 7.2.97, 4.3.97 ஆகிய நாள்களில் வெளிவந்துள்ள ஆணைகள் ஆங்கிலத்தில்தான் உள்ளன.

காந்தியடிகள் மறைந்த நாளில் தீண்டாமை எதிர்ப்பு உறுதிமொழி எடுப்பது குறித்த பொதுத்துறைச் சுற்றறிக்கை (நாள்:9.1.97) ஆங்கிலத்தில்தான் உள்ளது. 20.5.97 இல் வன்முறை எதிர்ப்பு நாளுக்காகப் பொதுத்துறை வெளியிட்ட சுற்றறிக்கை ஆங்கிலத்தில் மட்டுமே உள்ளது.

MARTYRS' DAY

MOST IMMEDIATE

GOVERNMENT OF TAMILNADU

U.O. Note No. 51999/G1.I/97-17,

PUBLIC (GENERAL.I) DEPARTMENT, SECRETARIAT, CHENNAI - 9.

Dated :15.1.98

Sub: Martyrs's Day 1998 - Taking of pledge against untouchability in Secretariat on 29.1.98 - Participation of Ministers - Regarding.

It has been decided to take the pledge against untouchability at 11.00 A.M. on 29.1.98 in the Secretariat at the Military Parade Ground in Fort St. George. The Honourable Chief Minister will administer the pledge against untouchability in Tamil. Other Ministers, Officers and the staff of the Secretariat will be participating.

2. The Special/Senior Personal Assistants to the Hon'ble Ministers may be requested to keep the Hon'ble Minister informed of the occasion.

S. RAMASUNDARAM
SECRETARY TO GOVERNMENT

ANTI-TERRORISM DAY

MOST IMMEDIATE

GOVERNMENT OF TAMILNADU

U.O. Note No. 17788/G1.I/97-6

Sub : Observance of Anti - Terrorism Day on 20.5.97 in the Military Parade Ground, Western side of the Secretariat Main Buildings as 21st May will be local holiday for Chennai, Anna and M.G.R.Districts.

2. The Senior Personal Assistants to Ministers may be requested to place the above information before the Ministers.

S.KARUTHIAH PANDIAN
DEPUTY SECRETARY TO GOVERNMENT

கொடுஞ்செயல் எதிர்ப்பு நாள் உறுதி மொழி (இது மட்டும் தமிழில் உள்ளது)

இதன் செயற்பாட்டின் உண்மை நிலை குறித்து அறிய 1997-இல் அனைத்துத் துறைகளிலும் வெளியிடப்பட்ட அரசாணைகள் பட்டியலை வேண்டினோம். சில துறைகள் மட்டுமே புள்ளி விவரங்களைத் தந்துள்ளன.

| வ.எண். | துறை | தமிழில் | ஆங்கிலத்தில் |
|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) |
| 1. | தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத்துறை | | |
| 2. | அறநிலையத்துறை | அனைத்தும் தமிழில் | |
| 3. | ஆதி திராவிடர் மற்றும் பழங்குடியினர் நலத்துறை | 70 | .. |
| 4. | சட்டத்துறை | 29 | .. |
| 5. | பொதுத்துறை | 64 | .. |
| 6. | மக்கள் நல்வாழ்வு மற்றும் குடும்ப நலத்துறை | 100 | 477 |
| 7. | கால்நடை பராமரிப்பு மற்றும் மீன்வளத்துறை | 56 | 240 |
| 8. | தொழிலாளர் மற்றும் வேலைவாய்ப்புத்துறை | 463 | 1844 |
| 9. | திட்டம் மற்றும் வளர்ச்சித்துறை | 39 | 78 |
| 10. | பணியாளர் மற்றும் நிருவாக சீர்திருத்தத்துறை | 20 | 104 |
| 11. | சுற்றுப்புறச் சூழல் மற்றும் வனத்துறை | 46 | 121 |
| 12. | செய்தி மற்றும் சுற்றுலாத்துறை | 296 | 621 |
| | (ஆணைகள் பெறப்படவில்லை அனுப்புவதாகத் தெரிவித்துள்ளனர்) | | |
| 13. | போக்குவரத்துத்துறை | 7 | 147 |
| 14. | உள்துறை | 61 | 242 |
| 15. | வணிகவரித்துறை | 46 | 36 |
| 16. | பள்ளிக் கல்வித்துறை | 350 | 644 |

(ஆணைகள் பெறப்படவில்லை)

| | | | |
|---|---|---|---|
| 17. | போக்குவரத்துத்துறை | 1 | 562 |
| 18. | நகராட்சி நிர்வாகம் - குடிநீர் வடிகால் துறை | 678 | 544 |

இது தொடர்பாக நடவடிக்கை எடுக்குமாறு 18.11.97 ஆம் நாளன்று நானே தலைமைச் செயலர்க்கு ஒரு நேர்முகக் கடிதம் வரைந்தேன்.

18.11.97 தி.பி.2028/கார்த்திகை 3

தலைமைச் செயலர் பார்வைக்கு,

தலைமைச் செயலகத்திலிருந்து வெளியிடப்படும் அரசாணைகள் அனைத்தும் தமிழில் இருக்க வேண்டும் என்று ஏற்கெனவே வெளியிடப்பட்ட அரசாணைகள் கூறுகின்றன. தேவைப்படும் நேர்வுகளில் மட்டும் ஆங்கிலத்திலும் அரசாணைகள் வெளியிடப்படலாம் என்று உள்ளது. ஆனால், பல துறைகள் ஆங்கிலத்தில் மட்டுமே அரசாணைகளை வெளியிட்டுவிட்டு, தமிழில் வெளியிடுவதில்லை என்று திட்டவட்டமாகத் தெரிகின்றது. இது தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தின் விதிமுறைகளுக்கு முரணானதாகும். இதை ஆய்வு செய்யும் வகையில் 1997-98 ஆம் நிதியாண்டில் இதுவரையிலும் வெளியிடப்பட்ட அரசாணைகளின் தொகுப்பை உடனடியாகத் தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறைச் செயலரின் மூலமாக அமைச்சரின் பார்வைக்கு அனுப்பிவைக்குமாறு பணிப்பீர்கள் என்று நம்புகிறேன்.

அன்புடன்

மு. தமிழ்க்குடிமகன்

என் கருத்தினை ஏற்றும், குறைபாடுகளைச் சுட்டிக்காட்டியும் பணியாளர் மற்றும் நிருவாக சீர்திருத்தத்துறைச் செயலாளர் திரு. பெ. பாசுகரதாசு 21.11.97 ஆம் நாளன்று அனைவர்க்கும் ஒரு மடல் எழுதியுள்ளார்.

இவ்வளவு முயற்சி மேற்கொண்டும், பொதுத்துறையிலிருந்து ஒரு மடல் ஆங்கிலத்தில் எனக்கே அனுப்பப்பட்டது. 10.12.97 இல் இது குறித்துத் தலைமைச் செயலாளர்க்கு எழுதினேன் நேரில் சந்தித்து, குறை களைய உறுதி தெரிவித்தனர்.

10.12.1997 தி.பி.2028/கார்த்திகை 25

அன்புக்குரிய தலைமைச் செயலாளர் பார்வைக்கு

அன்புடையீர்,

ஆட்சிமொழிச் சட்டம் - அதனைச் செயற்படுத்தும் வகையில் கடந்த 40 ஆண்டுகளாக வெளியிடப்பட்ட 100க்கும் மேற்பட்ட அரசாணைகள் ஆகியவை பற்றித் தலைமைச் செயலகத்தில் உள்ள பல அலுவலர்கள் கவனம் செலுத்தியதாகவே தெரியவில்லை. இது குறித்துப் பொதுத்துறைச்

செயலாளருக்கு எழுதிய மடலின் படி ஒன்றினைத் தங்கள் கருத்துக்கு அனுப்பியுள்ளேன். இது குறித்துத் தங்கள் கருத்தை அறிந்தபின் மேற்கொண்டு என்ன நடவடிக்கை எடுக்கலாம் என்று முடிவு செய்ய ஒரு வாய்ப்பாக இருக்கும்.

அன்புடன் ,

மு. தமிழ்க்குடிமகன்

விளைவுகள்

1. திருவாட்டி செயந்தி (அரசுச் செயலர், கைத்தறி மற்றும் கதர்த்துறை) என் மடலை மேற்கோள் காட்டி, தன் துறையில் பணியாற்றும் அனைவர்க்கும் ஒரு சுற்றறிக்கை அனுப்பியுள்ளார்.

2. திரு. தேவேந்திரநாத் சாரங்கி (அரசுச் செயலர், போக்குவரத்துத்துறை) தன் துறையின் நிலை குறித்து மடல் எழுதியுள்ளார்.

3. உள்துறைச் செயலர் திரு. இரா. பூரணலிங்கம், இ.ஆ.ப. தன் துறையில் முழுமையாகச் செயல்படுத்துவதாக உறுதியளித்துள்ளார்.

1.4.97 முதல் 31.12.97 முடிய உள்ள 9 மாத காலத்தில் போக்குவரத்துத் துறையில் வெளியிடப்பட்ட அரசாணைகள் 563. இதில் தமிழில் வெளியிடப்பட்ட அரசாணை ஒன்றே ஒன்றுதான். தமிழ் எந்த அளவுக்குப் புறக்கணிக்கப்பட்டுள்ளது என்பதை இதில் உணர முடியும். ஆனால், அவரது துறையினர் ஏற்கெனவே கொடுத்த புள்ளி விவரத்துக்கும் இவரது செய்திக்கும் முரண்பாடு உள்ளது.

இத்துறையின் அமைச்சர் தெய்வசிகாமணி எனும் தன் இயற் பெயரைப் பொன்முடி என்று வைத்துக் கொண்டவர்

மாண்புமிகு முதல்வர் அவர்களது பார்வைக்கும் முடிவுக்கும்

1. தமிழ் வளர்ச்சித் துறையின் வேண்டுகோளுக்கு எந்த மதிப்பும் இல்லை.

2. தாங்கள் வெளியிடும் அரசாணைகளைத் தமிழில் பிறப்பிக்க முன் வராத துறைகளின் மீது என்ன நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று மாண்புமிகு முதல்வர் அவர்கள்தான் முடிவு செய்ய வேண்டும்.

3. தங்கள் வழிகாட்டுதலுக்காகக் காத்திருக்கிறது - தமிழ் வளர்ச்சித்துறை.

பணிவுடன் படைக்கும்

மு. தமிழ்க்குடிமகன்

தொடர்ந்து இந்த அவல நிலை நீடிப்பதனால் தலைமைச் செயலாளர்க்கு 20.7.98 அன்று நேர்முக மடல் வரைந்தேன்.

20.7.1998 தி.பி.2029/ஆடி 4

அன்புக்குரிய தலைமைச்செயலாளர்

திரு. ஏ.பி. முத்துசாமி,

பொருள் : அலுவலக நடைமுறைகள் - அரசாணைகள் - தமிழில் வெளியிட அறிவுரைகள் - அரசாணைகள் அனுப்பி வைப்பது - தொடர்பாக.

அரசாணைகள் அனைத்தும் தமிழில் வெளிவர வேண்டும் என்று 1957 ஆம் ஆண்டிலிருந்து அரசாணைகள் மூலம் வலியுறுத்தப்பட்டிருப்பதைத் தாங்கள் அறிவீர்கள். ஒருவேளை ஆங்கிலத்தில் அரசாணை வெளியிட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டால்கூட அதே அரசாணை தமிழில் சேர்த்து வெளியிடப்பட வேண்டும் என்பது நீண்டகாலமாக அரசாணைகளால் வலியுறுத்தப்பட்டுள்ளது.

ஆனால், இவ்வளவு காலமாகியும் இதற்கென்று ஒரு தனித்துறை இயங்கி, தக்க முயற்சிகளையும் மேற்கொண்ட பிறகும், தலைமைச் செயலகத்தில் 4 துறைகள் தவிர எஞ்சிய 27 துறைகளிலும் இந்த நடைமுறை பின்பற்றப்படவில்லை. இது மிகவும் வருத்தத்திற்குரியது மட்டுமன்று; இது மாண்புமிகு முதல்வர் அவர்களின் கவனத்திற்கும் நடவடிக்கைக்கும் கொண்டு செல்லப்படுகிறது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். அதிலும் 1.4.97 முதல் 31.12.97 முடிய வெளியிடப்பட்ட அரசாணைகளின் தொகுப்பை - எங்களுடைய பார்வைக்கும், ஆய்வுக்கும் அனுப்பி வைக்க வேண்டும் என்று கேட்டும், 15 துறைகளைத் தவிர ஏனைய துறைகள் இவற்றை அனுப்பி வைக்கவும் இல்லை.

இதுகுறித்துக் கடுமையாக நடவடிக்கை எடுத்தாலன்றி நிலைமை மாறப்போவதில்லை என்றே கருதுகிறேன். தமிழக அரசு தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தை முழுமையாகச் செயற்படுத்தவில்லை என்று வெளியில் ஆர்ப்பாட்டங்கள் நடைபெறுகின்றன. 31 தமிழ் அமைப்புகள் கூடி ஒரு பேரணியும் நடத்தியுள்ளன. இவ்வளவுக்குப் பின்னும், தலைமைச் செயலகம் ஆட்சிமொழித் திட்டத்தை முழுமையாகச் செயற்படுத்த முனையவில்லை என்பதே இப்போதுள்ள உண்மையாகும்.

எனவே, இந்நிலை குறித்து அனைத்துத் துறைச் செயலாளர்களுக்கும் நானே ஒரு கடிதம் எழுதியுள்ளேன். தாங்களும், ஒரு சுற்றறிக்கை வாயிலாக இதனை வற்புறுத்துமாறு வேண்டுகிறேன். மேலும், 1.4.97 முதல் ஒன்பது மாதங்களில் வெளியிடப்பட்ட அரசாணைகளை உடன் அனுப்பி வைக்கவும், இனிமேல் வருகின்ற அரசாணைகள் தமிழில் கட்டாயம் வெளியிடப்படும் என்பதை உறுதி செய்யவும் ஆவன செய்ய வேண்டுகிறேன்.

அன்புடன்

மு. தமிழ்க்குடிமகன்

பெறுநர்

திரு. ஏ.பி. முத்துசாமி, இ.ஆ.ப.,
தலைமைச் செயலாளர்,

என் நடவடிக்கை

அரசாணைகள் தமிழில் பிறப்பிக்கப்படவேண்டும் என்று 1986 இல் ஓர் அரசாணை. 1989 இல் நினைவூட்டல் அரசாணை. நாங்கள் பொறுப்பேற்றபின் அனைவர்க்கும் தெளிபடுத்தி 19.9.96 அன்று ஒரு கடிதம். மீண்டும் 21.11.97 இல் கடிதம். இவ்வளவு செய்தும் பெரிய மாற்றம் எதுவும் ஏற்படவில்லை. இந்நிலை குறித்து அமைச்சரவைக் கூட்டத்திலேயே பேசினோம். உடனே கவனிக்குமாறு முதல்வர் தலைமைச் செயலாளர்க்கு ஆணையிட்டார். நானும் 29.7.98 இல் தலைமைச் செயலருக்கு ஒரு நேர்முக மடல் வரைந்தேன்.

தலைமைச் செயலர் 5.11.98 இல் அனைத்து அரசுத் துறைச் செயலர்களுக்கும் ஒரு கடிதம் அனுப்பினார் (60496/ச/98) (முன்னரே தரப்பட்டுள்ளது.

அதில் தமிழில் கட்டாயம் அரசாணை வெளியிட்டாக வேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறார்.

மேலும் நானும் 1.4.97 முதல் ஒன்பது மாதங்கள் வெளியிடப்பட்ட எல்லாத் துறைகளின் அரசாணைகளையும் வரவழைத்துப் பார்த்தேன். மிக மோசமான நிலையையே காண முடிந்தது. அதன்பிறகுதான் நேரடி நடவடிக்கையில் இறங்க வேண்டியிருந்தது.

1989-90 ஆம் ஆண்டு நிதிநிலை அறிக்கையிலேயே பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

"தலைமைச் செயலக ஆணைகள் ஆங்கிலத்தில் மாத்திரம் வெளியிடப்படுகின்றன. இனி, தமிழ், ஆங்கிலம் இரண்டிலும் வெளியிட மிகுவிரைவில் நடவடிக்கை எடுக்கப்படும்".

ஆனால் யாரும் இதைப் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை.

1996மே 13க்குப்பின் எடுக்கப்பட்ட முயற்சியையும் விடுக்கப்பட்ட அரசாணைகள், த.செ. கடிதங்கள் ஆகியவற்றையும் இப்போது பார்க்கலாம்.

இந்த முயற்சிகள் எந்த அளவு வெற்றிபெற்றன - அரசச் செயலாளர்கள் எந்த அளவுக்கு முனைப்புக் காட்டினர் - வரைவுகளும் குறிப்புகளும் வரைவோர் எந்த அளவுக்கு இன்னும் மழுங்கத் தனமாகவே இருந்தனர் என்பதனைத் 'தலைமைச் செயலகத்தில் ஆய்வு' எனும் தலைப்பில் காணலாம்.

இது தொடர்பாக என் துறை எனக்கு அனுப்பிய குறிப்பின் மறு பகுதியை இங்குத் தருகிறேன்.

ஏற்கெனவே தரப்பட்டவையோடு எஞ்சியவை

| (1) | (2) | (3) | (4) |
|---|---|---|---|
| 19. | கூட்டுறவு, உணவு (மற்றும்) நுகர்வோர் பாதுகாப்புத்துறை | 296 | 896 |
| 20. | எரிசக்தித் துறை | 1 | 53 |
| 21. | வேளாண்மைத்துறை | 31 | 324 |
| 22. | ஊரகத் துறை | 48 | (தனியாக அனுப்பப்படும்) |
| 23. | பொதுப்பணித்துறை (தமிழ் மட்டும் பெறப்பட்டுள்ளது) | 29 | . . |
| 24. | தமிழ்வளர்ச்சி - பண்பாடு (மற்றும்) அறநிலையத்துறை | 218 | . . |
| 25. | பிற்பட்டோர் நலத்துறை | 18 | 105 |

சிறுதொழில் துறை, வருவாய்த்துறை, வீட்டுவசதித்துறை, மதுவிலக்குத்துறை ஆகிய நான்கு துறைகளும் விரைவில் அரசாணைகள் அனுப்ப நடவடிக்கை மேற்கொண்டுள்ளதாகத் தெரிவித்துள்ளன. அத்துடன் துறைகள் தோறும் பொறுப்பு அலுவலர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர்.

எனக்கு, இது தொடர்பாக, வேளாண்மைத் துறை, கூட்டுறவு, உணவு (ம) நுகர்வோர் பாதுகாப்புத் துறை, பள்ளிக் கல்வித்துறை ஆகிய மூன்று துறைகள் 'சுற்றாணைக்குறிப்பு' அனுப்பியுள்ளன.

இதுவரையில் 21 துறைகளிலிருந்து மட்டும் அரசாணைகள் பெறப்பட்டுள்ளன. எஞ்சிய ஏழு துறைகளிலிருந்து அரசாணைகள் பெறப் பற்றாளர்கள் நிலையில் நினைவூட்டப்பட்டனர்.

தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறை.

ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் நலத்துறை

சட்டத்துறை ஆகியவை மட்டுமே தமிழில் அரசாணைகளை முழுமையாக வெளியிட்டுள்ளன. ஆதிதிராவிடர் நலத்துறைச் செயலர் கிறித்துதாசு காந்தி, இ.ஆ.ப. சட்டத்துறைச் செயலர் ஏ.கே. இராசன் (தற்போது நீதியரசர்) ஆகியோரின் பொறுப்புணர்ச்சியை எண்ணி மகிழ்கிறேன்.

ஒரு சில துறைகளில் எப்படியெல்லாம் வரைதுறையில்லாமல் தமிழ் ஆட்சிமொழி பற்றிய சிந்தனையே இல்லாமல் - அவற்றுக்கும் அரசாணைகள் உள்ளன என்ற கவலையே இல்லாமல் ஆங்கிலம் கோலோச்சியிருப்பதைச் சில எடுத்துக் காட்டுகள் வாயிலாகக் காட்டலாம்.

(1)

GOVERNMENT OF TAMIL NADU

ABSTRACT

SCHOOLS - Recognized and Aided Minority Schools - Assessment of grant for schools opened/upgraded upto 1-4-92 Orders-Issued. SCHOOL EDUCATION (D1) DEPARTMENT

G.O. Ns. No.317 Dated:25.07.97

1. From the President Tamilnadu Catholic Educational Association, Chennai -14 representation No.148/94/TARCEAN/Dated 21-12-94 and 27-1-96
2. From the Director of School Education Rc. No.1960/G2/95 Dated. 29-08-96
3. From the Director of School Education 96118/WG/96 Dated 22.10.96
4. Resolution of the United Minorities forum dated 7.6.97 and 24.6.97
5. From the Director of Elementary Education D.O. letter No. 22934/E.A./96 Dated 16.12.96 and 4.7.96

(2)

GOVERNMENT OF TAMILNADU

ABSTRACT

Establishment - TamilNadu Administrative Tribunal - Supply of Four (English) Typewriters free of cost - Orders issued.

PERSONNEL AND ADMINSTRATIVE REFORMS (SAT) DEPARTMENT

G.O. MS.No.267

Dated : 5.11.1997 20 Ippasi, Eswara Thiruvalluvar Aandu 2028

READ.

1. G.O. M.s. No. 362, Personnel and administrative Reforms (SAT) Department, dated, 21.4.1987

2. G.O. M.s. No. 128, Personnel and administrative Reforms (SAT) Department, dated 2.3.1988

3. G.O.M.s. No.15, Personnel and administrative Reforms (SAT) Department, dated 23.6.1994

4. G.O.M.s.No.262, Personnel and administrative Reforms(SAT) Department, dated 7.8.1995

(3)

GOVERNMENT OF TAMILNADU

Sub: MINISTERS - Pulavar Senguttuvan, Minister for Animal Husbandry - Resumed official work - Intimated - Regarding.

Ref: G.O. Ms. No.1370, Public (Special.B) Department, dated 28.10.1997

All departments of Sectrariat may be informed that Pulavar Senguttuvan, Minister for Animal Husbandry, has resumed his official work with effect from 02.01.1997 F.N. after taking medical treatment.

(4)

U.O.Note No. 56499

Public (Cco.) Department,

Secretariat, Chennai - 9, Dated 9.12.1997

Sub: Loans and advances - Grant of Festival advances for the celebration of Ramzan 1998 - Application - Called for.

The Members of Public Department who desire to draw festival advance for the ensuing RAMZAN 1998 are requested to send their applications in the prescribed form to the public (Cco.) Department on or before 20-12-1998. They are also informed that irrespective of their religion, they are eligible to draw only one festival advance for any of the listed festivals of their choice in a Calender Year.

(5)

LEGISLATIVE ASSEMBLY SECRETARIAT

Letter No.21938/96-15, T.N.L.A.S. (Bills.I) Dated 1912.1997

From

Thiru G. ANEES AHMED, M.A., B.G.L.,
UNDER SECRETARY

To

The Works Manager
Government central Press
Chennai - 600 079

Sub: Tamil Nadu Legislative Assembly - Change of City address of Thiru K. Ravi Shankar,M.L.A., Intimated.

Ref : Letter dated 19.12.1997 form Thiru K. RaviShankar, M.L.A.,

(6)

GOVERNMENT OF TAMIL NADU

ABSTRACT

VISITS - Visit of High Personages - Protocol Manual - Courtesies and Facilities to be shown to the cabinet Ministers and Ministers of state of the Government of India, Ministers of Other State Government and the Speaker of Lok Sabha - Chapter, 4 Section (b) (iii) and (iv) - Revised and Re- issued.

PUBLIC (PROTOCOL. II) DEPARTMENT

G.O.Ms. No.1624 Dated:22.12.1997

Read:

ORDER:

Instructions regarding the courtesies and facilities to be shown to the Cabinet Ministers and Ministers of State of the Government of India. Ministers of Other State Government and Speaker of Lok Sabha during their visits to Districts are contained in Chapter 4 section a(i) (ii)b (iii) (iv) of the Protocol Manual issued by the Government of Tami Nadu.

(7)

MOST IMMEDIATE

FOR SPECIAL ATTENTION

Government of Tamil Nadu

Public (moter vehicles, II) Department

U.O. Note No. 3420/MV.II/97-8, Dated 24th December 1997

Sub : Motor Vehicles - Controlling of Automobile Pollution in Chennai - Pollution check to Secretariat vehicles - regarding.

Ref : 1) Govt.letter No.3428/NV.II/97-1, Public (MV.II) Department, dated 5.11.1997

2) Public (MV.II) Department U.O.Note NO.3420/M.V.II/97-5 Dated 23.12.1997

The attention of the departments of Secretariat may be drawn to the references cited. The departments of Secretariat may be in formed that the office of the Transport Commissioner has made arrangements for conducting the Pollution check at the Secretariat Service Station to the Secretariat vehicles by the Automobile Association of South India, Chennai on 27th and 28th December 1997.

(8)

Letter No.17748/G1.I/97-26

PUBLIC (GENERAL. I) DEPARTMENT

SECRETARIAT, CHENNAI - 600 009

Dated: 11.5.98

From

Thiru S. Karuthiah Panidan, I.A.S.,

Deputy Secretary to Government.

To

The Senior Personal Assistants to all Ministers.

Sir,

Sub : Collector's and Police Officers' Conference to be held on 5.6.98 and 6.6.98 Regarding.

I am to inform that the next Conference of Collectors and Police Officers will be held at the Conference Hall in the 10th Floor of the Namakkal Kavignar Maaligai, Secretariat on 5.6.98 and 6.6.98. All Ministers will be attending the Conference on 5.6.98 and 6.6.98. Due to limited accommodation in the Conference Hall, it may kindly be ensured that the personal staff of the Hon'ble Ministers do not go with the Ministers in the lift to the Conference Hall.

(9)

Public Service - Animal Husbandry Department - Dr. P.Lakshmanan, formerly Manager (Feed), Tamil Nadu Poultry Development Corporation Ltd., Nandanam now Assistant Director (Animal Husbandry) Saidapet placed under suspension - Orders - Issued.

ANIMAL HUSBANDRY & FISHERIES (AH.I) DEPARTMENT

G.O.Ms. No.129 Dated : 12.6.1998

ORDER :

WHEREAS on enquiry into certain grave charges against Dr. P. Lakshmanan, formerly Manager (Feed), Tamil Nadu Poultry Development Corporation Ltd., Nandanam, now Assistant Director (Animal Husbandry) Saidapet, is contemplated.

(10)

GOVERNMENT OF TAMIL NADU

Handlooms, Handicrafts, Textiles and Khadi (E1) Department.

G.O.Ms.No.200 Dated : 21.7.98

(Vegudhaanya, Aadi 5, Thiruvalluvar Aandu 2029)

Handloom Industries - National Co-operative Development Co-operation - Tamil Nadu Handloom weavers Co-operative Society Limited (co-optex) - Renovation of 2 Showrooms at Coonoor and Gulburga - Loan of Rs.9,28,000/- Sanctioned.

Read:

1. From Managing Director, Co-optex, lr.No.Q/Building/95, dt.6.1.96 and 6.11.96, addressed to the Director of Handlooms & Textiles.

2. Director of Handlooms and Textiles' lr. No.21889/95/II3, dt.19.12.96

3. Government lr.No.9592/D2/97-3, 23.9.97

4. From the Managing Director, National Co-operative Development Co-operation, lr.No.NCDC: 4-14/96 - Text (HLM) 288, dt.

5. From the Managing Director, Co-optex, Lr.Re.Q/4929/98, dt.1.4.98

ஆனால் எங்கள் நேரடிக் கவனம் பயனளிக்கத்தொடங்கி விட்டது என்பதனையும் காண முடியும்.

இது தொடர்பாக, பொதுத் துறைச் செயலாளர் 'பாருகி' தந்த அறிவிப்பைப் பாருங்கள்.

(1)

நேர்முகக் கடித எண்.34888/98-1, நாள்:8.9.1998

மதிப்பிற்குரிய ஐயா,

பொருள் : அலுவலக நடைமுறைகள் மற்றும் அரசாணைகள் தமிழில் வெளியிட அறிவுரைகள் - அரசாணைகள் அனுப்பி வைப்பது தொடர்பாக.

பார்வை : தங்கள் நேர்முகக் கடிதம் நாள்: 17.7.1998

பார்வையில் காணும் தங்களது கடிதத்தில் கண்டுள்ள அறிவுரையின்படி தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தை முழுமையாகச் செயற்படுத்தும் விதமாகக் கோப்புகள் அனைத்தும் தமிழிலேயே கையாளப்படல் வேண்டும் என்றும், அரசாணைகள் அலுவலக நடைமுறைகள் மற்றும் அனைத்து கடிதப்போக்குவரத்துகளும் இனிமேல் முழுமையாகத் தமிழிலேயே வெளியிடப்படல் வேண்டும் என்றும், துறைக்குத் தரும் விண்ணப்பங்கள் அனைத்தும் தமிழில் கையொப்பமிட்டுத் தமிழில்தான் கொடுக்கப்படவேண்டும் என்றும் இத்துறையின் அனைத்து அலுவலர்கள் மற்றும் பணியாளர்களுக்கும் அலுவலக ஆணை எண்.25 பொது (நிர்வாகம் - 3) த்துறை, நாள்.17.8.98 (நகல்

இணைக்கப்பட்டுள்ளது) மூலமாக அறிவுரைகள் வழங்கப்பட்டுள்ளன என்பதைத் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

2. மேலும் இத்துறையில் 1.4.97 முதல் 31.12.97 முடிய தமிழில் வெளியிடப்பட்டுள்ள அரசாணைகளின் தொகுப்பு ஏற்கெனவே இத்துறையின் அலுவல் சார்பற்ற குறிப்பு எண்.55937/ஏ/97-1, நாள்.16.6.98 மற்றும் 3.7.98ல் தமிழ் வளர்ச்சி மற்றும் பண்பாட்டுத்துறைக்கு அனுப்பப்பட்டுள்ளது என்பதையும், ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டுள்ள ஆணைகளின் தொகுப்பு விரைவில் அனுப்பி வைக்கப்படும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

மிக்க மரியாதையுடன்
தங்கள் அன்புள்ள,
எம்.எப். பாரூகி

பெறுநர்

மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க்குடிமகன், எம்.ஏ., பி.எச்டி.,

(2)

அலுவலக ஆணை எண் : 25
பொது (நிர்வாகம் -3) த்துறை
தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

பொருள் : நிர்வாகம் - பொதுத்துறை - அரசாணைகள், கடிதங்கள் மற்றும், கோப்புகள் அனைத்தும் முழுமையாகத் தமிழிலேயே இருத்தல் வேண்டும் என ஆணைகள் வெளியிடப்பட்டுள்ளன.

பார்வை : மாண்புமிகு முனைவர். மு. தமிழ்க்குடிமகன், தமிழ் ஆட்சிமொழி, பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் நேர்முகக் கடித எண் நாள் 17.7.98

அரசாணைகள் அனைத்தும் தமிழில் வெளிவர வேண்டும், ஒருவேளை ஆங்கிலத்தில் அரசாணை வெளியிட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டால் கூட அதே அரசாணை தமிழில் சேர்த்து வெளியிடப்பட வேண்டும் என்று நீண்டகாலமாக அரசாணையால் வலியுறுத்தப்பட்ட போதிலும், இவ்வளவு காலமாகியும் அதற்கென்று ஒரு தனித்துறை இயங்கி, தக்க முயற்சிகளையும் மேற்கொண்ட பிறகும், தலைமைச் செயலகத்தில் 4 துறைகள் தவிர எஞ்சிய 27 துறைகளிலும் இந்த நடைமுறை பின்பற்றப்படவில்லை என்றும், இது மிகவும் வருத்தத்திற்குரியது மட்டுமன்று;

இது மாண்புமிகு முதல்வர் அவர்களின் கவனத்திற்கும் நடவடிக்கைக்கும் கொண்டு செல்லப்படுகிறது என்பதையும் குறிப்பிட்டு இனிமேல் வருகின்ற அரசாணைகள் தமிழில் கட்டாயம் வெளியிடப்படும் என்பதை உறுதி செய்ய வேண்டுமென்றும், மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் இத்துறைச் செயலருக்கு அனுப்பிய நேர்முகக் கடிதத்தில் ஆணையிட்டுள்ளார்கள்.

2. இந்நிலையில், இத்துறையிலுள்ள அனைத்து அலுவலர்களுக்கும் கீழ்க்கண்டவாறு ஆணைகள் வழங்கப்படுகின்றன.

அ. அரசு ஆணைகள், அலுவலக நடைமுறைகள், கடிதப் போக்குவரத்துகள் முதலியன அனைத்தும் கண்டிப்பாக இனிமேல் முழுமையாகத் தமிழிலேயே வெளியிடப்படுதல் வேண்டும். ஒருவேளை ஆங்கிலத்தில் வெளியிடப்பட வேண்டிய கட்டாயம் ஏற்படின் ஆங்கிலத்துடன் அதே அரசாணை / கடிதங்கள் தமிழிலும் சேர்த்து வெளியிடப்படல் வேண்டும்.

ஆ. கோப்புகளும் தமிழிலேயே கையாளப்படல் வேண்டும்.

இ. இத்துறையிலுள்ள அலுவலர்கள் / பணியாளர்கள் சம்பந்தப்பட்ட நிர்வாகத் துறைகளுக்குக் கொடுக்கும் விண்ணப்பங்கள் அனைத்தும் இனிமேல் தமிழிலேயே கொடுக்க வேண்டும். மேலும் தமிழில் தான் கையொப்பமிட வேண்டும். தவறினால் அவ்விண்ணப்பங்கள் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டா.

ஈ. பார்வையில் கண்ட கடிதத்தில் கண்டுள்ள மாண்புமிகு அமைச்சர் அவர்களின் உணர்வுகளை / ஆணைகளைக் கருத்திற் கொண்டு அவர்களின் அறிவுரைகள், ஆணைகள் முழுவதுமாக நடைமுறைப்படுத்தப்படவேண்டும்.

3. மேற்கண்ட ஆணைகளை இத்துறை அலுவலர்கள் / பணியாளர்கள் அனைவரும் கண்டிப்பாக கடைப்பிடித்து அவ்வண்ணமே செயல்பட வேண்டும். தவறினால் கடுமையான ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும் என அறிவிக்கப்படுகிறது.

எம்.எ.்ப். பாருகி
அரசுச் செயலாளர்

பெறுநர்

அனைத்து அலுவலர்கள்
அனைத்து பிரிவு அலுவலர்கள்/
உதவிப்பிரிவு அலுவலர்கள் மற்றும் பணியாளர்கள்

முதலமைச்சர் அலுவலகம்,

முதலமைச்சரின் தனிப்பிரிவு, சென்னை -9

அமைச்சர்களின் நேர்முக உதவியாளர்கள்

அனைத்துப் பிரிவுகள்

நகல் : - தமிழ் வளர்ச்சிப் பண்பாட்டுத்துறை, சென்னை - 9

(3)

மாவட்ட ஆட்சித் தலைவர்கள் மாநாட்டில் அமைச்சர்கள் கலந்து கொள்வதற்கான அறிவிப்பைத் தமிழில் காணலாம்.

கடித எண். 46524/ பொது.1/68-61 நாள் : 4.11.98

அனுப்புநர்

திரு எம்.எ.ஃப். ஃபாருகி, இ.ஆ.ப.

அரசு செயலாளர்

பெறுநர்

மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி , தமிழ்ப் பண்பாடு,

இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள்

சென்னை - 600 009

ஐயா,

பொருள் : 7.11.98 ஆம் தேதியன்று நடைபெற உள்ள மாவட்ட ஆட்சித் தலைவர்கள் மாநாடு - சம்பந்தமானது

மாவட்ட ஆட்சித் தலைவர்கள் மாநாடு வரும் 7.11.98 (சனிக்கிழமை) அன்று காலை 9.30 மணிக்குத் தொடங்கி, தலைமைச் செயலக நாமக்கல் கவிஞர் மாளிகையில் அமைந்துள்ள மாநாட்டுக் கூடத்தில் மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் தலைமையில் நடைபெறவுள்ளது. 7.11.98 ஆம் தேதியன்று நடைபெறும் மாநாட்டில் தாங்கள் கலந்து கொள்ளுமாறு அன்புடன் வேண்டுகிறேன்.

2. மேற்கண்ட மாநாட்டிற்கான பொருள் நிரல் மற்றும் குறிப்புகள் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளன.

தங்கள் உண்மையுள்ள

எம்.எ.ஃப். பாருகி

ஒரே நேரத்தில் தமிழிலும், ஆங்கிலத்திலும் வந்துள்ள அறிவிப்பினையும் காணலாம். தலைமைச் செயலாளர் 7.12.98 இல் பிறப்பித்த குறிப்பு இது.

(4)

GOVERNMENT OF TAMILNADU

PERSONNEL AND ADMINISTRATIVE REFORMS (A) DEPARTMENT STANDING ORDER No.19 THE CHIEF MINISTER OF GOVERNMENT OF TAMILNADU, DATED:7.12.98

Under sub-rule (4) of rule 35 of the Tamil Nadu Government Business Rules, 1978, the Chief Minister of Tamil Nadu hereby makes the following amendment to Chief Minister's Standing Order No.2 Personnel and Administrative Reforms(A) Department, dated the 9th January 1992

(5)

தமிழ்நாடு அரசு

பணியாளர் மற்றும் நிர்வாக சீர்திருத்த (ஏ) துறை

தமிழ்நாடு முதலமைச்சரின் நிலை ஆணை எண்.19 நாள் : 7.12.98

1978ஆம் ஆண்டு தமிழ்நாடு அரசு அலுவல் விதிகளின் விதி 35, துணை விதி 4-ன்படி, 1992ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 9ஆம் நாளிட்ட பணியாளர் மற்றும் நிர்வாகச் சீர்திருத்தத் (ஏ) துறையின், தமிழ்நாடு முதலமைச்சரின் நிலை ஆணை எண்.2-க்குக் கீழ்க்கண்டவாறு திருத்தம் வெளியிட தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் ஆணையிடுகிறார்கள்:"

நமது அண்டை மாநிலத்தின் நிலை என்ன என்பதையும் பார்ப்போம்.

கர்நாடக மாநிலத்தில் கன்னட மொழியை ஆட்சிமொழியாக்குவதில் கடுமையான கண்டிப்புக் காட்டப்படுகிறது.

நிர்வாகத்தில் கன்னட மொழியைப் பயன்படுத்தாதவர்கள் மீது கடும் நடவடிக்கை எடுக்கப்படும் என்று கர்நாடக அரசு எச்சரித்துள்ளது. துணை முதல்வர் சித்தாராமையாவின் சுற்றறிக்கையை, கன்னட மொழிவளர்ச்சித் துறையின் தலைவர் பேராசிரியர் சந்திரசேகர் பாட்டீல் நேற்று பத்திரிகையாளர்கள் கூட்டத்தில் வெளியிட்டார்.

இது குறித்து சந்திரசேகர் பாட்டீல் கூறியதாவது:

கர்நாடக மாநிலத்தில் உள்ள உயர் அதிகாரிகள் பலர் இன்னும் ஆங்கிலத்தைப் பயன்படுத்தி வருவது வருந்தத்தக்கது. மாநிலத்தில் கன்னட மொழியைத்தான் பயன்படுத்த

வேண்டும். அண்டை மாநிலங்கள் எல்லாம் அவரவர் மொழியிலேயே நிர்வாகத்தை நடத்தி வருகின்றனர். கன்னட மொழியை ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ்., அதிகாரிகள் பயன்படுத்துகிறார்களா என்று கண்காணிக்கப்படுவர்."

இவ்வாறு சந்திர சேகர் கூறினார்.

இதற்கிடையில், "ஆங்கிலத்தில் அனுப்பப்படும் கோப்புகள் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கே திருப்பி அனுப்பப்படும். அவற்றை மறுநாளே கன்னட மொழியில் அனுப்ப வேண்டும், என்று துணை முதல்வர் சித்தாராமையா திட்டவட்டமாகக் கூறியுள்ளார்."

நடைமுறையில் ஆட்சிமொழிச் செயலாக்கம் குறித்து மட்டுமின்றி, கோப்புகளும் கன்னடமொழியில் இருக்க வேண்டும் என்று துணை முதல்வர் கண்டிப்பாகக் கூறியிருப்பதை உணர முடிகின்றது.

ஆனால் இங்கோ எளிய சுற்றறிக்கைகள் கூடத் தமிழில் வரவில்லை. பணிசேர் அறிக்கைகள், வெறும் அறிவிப்புகள் கூடத் தமிழில் வரவில்லை என்பது கருதத்தக்கது.

அதிலும் தமிழ்ப் பேராசிரியராகிய கல்வி அமைச்சர் துறையில் பல அரசாணைகள் ஆங்கிலத்திலேயே தொடர்ந்து வந்து கொண்டிருக்கின்றன.

எந்தத் துறை பிறருக்குக் கற்றுக் கொடுக்கவேண்டுமோ அந்தத் துறைதான் அரசாணைகளைத் தமிழில் வெளியிடுவதில்லை. இப்படிப் பல குறைபாடுகட்கு இடையில்தான் எங்கள் பணியை நடத்த வேண்டியிருந்தது.

20.11.96 'ஆசிரியர் பேரணி' இதழ் தரும் செய்தி

GOVERNMENT OF TAMILNADU

Abstract

Education - Science and Technology Department - Part II Schemes for 1996-97- Sanction of 100 additional posts of Secondary Grade Teachers-Sanctioned.

Education, Science and Technology (L1) Department

G.O.Ms. No.632 Dated : 9.9.96

Read : From the Director of Elementary Education Letter Rc.No.14660/EC1/95 dated 28.6.95

Order:

Government has fixed the Target for the additional enrolment of students as 10.50 lakhs during the eighth five-year plan period. Accordingly, it is proposed to enroll 0.85 lakhs pupils additionally under the age group 6 to 11 and 1.25 lakhs pupils under the age 11 to 14 respectively every year during the plan period. Accordingly, it is proposed to create 100 Secondary Grade Posts on the basis of Teachers and pupil ratio under Part-II scheme for the year 1996-97. The government accepts the above proposal.

2. Accordingly, the Government sanctions 100 (one hundred only) additional temporary posts of Secondary Grade Teachers for a period of one year 1996-97 in the scale of pay of Rs.1200-30-1560-40-2040 plus Dearness Allowances and other Allowances at the rate admissible from time to be utilized in 100 primary schools.

S.P. Elangovan
Secretary to Government

GOVERNMENT OF TAMIL NADU

Abstract

Education, Science and Technology Department - Part II Schemes for 1996-97 Sanction of 21 posts of Tamil Pandits (B.Ed. Grade) for Middle Schools - Sanctioned.

EDUCATION - SCIENCE, AND TECHNOLOGY (L1) DEPARTMENT

G.O.Ms. No.930 Dated: 9.9.96

Read: From the Director of Elementary Education Letter Rc.No.14660/EC3/95 dated 24.5.96

Order:

The policy of the government is to appoint a Tamil Pandit (B.T. Grade) either as Headmaster or as Tamil Pandit to teach the middle school sections. Language skills have to be developed by the pupils to understand and grasp the content of the textbook and to enrich their knowledge by extra reading. **Tamil, the official language of Tamil Nadu** has to be imparted by qualified hands at the upper middle section so that their interest and skill in the language will be enriched at the early age and hence it is proposed to create 21 posts of Tamil Pandits (B.Ed. Grade) for Middle schools under Part II Schemes for the year 1996-97. The government accepts the above proposal.

2. Sanction is accorded for the creation of 21 temporary posts (Twenty-one only) of Tamil Pandits (B.Ed. Grade) for a period of one year with effect from the date of employment in the scale of pay Rs.1400-40-1600-50-2300-6-2600 plus Dearness Aloowance and other Allowance at the rates admissible from time to time. The above post will be distributed by the Director of Elementary Education among the District Educational Officers for allotment to the nearly middle schools in an equitable manner.

S.P. Elangovan

Secretary to Government

தமிழ், தமிழ்நாட்டின் ஆட்சிமொழி என்பதைக் குறிப்பிட்டுவிட்டு, ஆங்கிலத்தில் ஆணை வெளியிட்டுள்ளார்கள்.

GOVERNMENT OF TAMIL NADU

Abstract

Education, Science and Technology Department-Part II Schemes for 1996-97 - upgradation of 25 posts of Secondary Grade Teachers into B.T. Grade Headmasters in Middle Schools Orders-Sanctioned.

EDUCATION, SCIENCE AND TECHNOLOGY (L1) DEPARTMENT

G.O.No. 631 Dated : 9.9.96

Read : From the Director of Elementary Education Letter Rc.No.14660/EC3/95dated 24.5.96

Order:

The government sanction the upgradation of 25 (Twenty five only) posts of Secondary Grade Teachers in to B.T. Grade Headmasters for a period of one year from the date of appointment; scale of pay of 1640-60-2600-75-2900 plus Dearness Allowance and other allowance at the rates admissible from time to time. The above posts will be distributed by the Director of Elementary Education among the District Education officers for allotment to the needy middle schools in an equitable manner.

S.P. Elangovan

Secretary to Government

கல்வித்துறையில் வெளியாகி வரும் அரசாணைகளை வலிந்து எடுத்துக்காட்டுவதாக யாரும் கருதக்கூடாது. அதனால் 'ஆசிரியர் பேரணி' எனும் இதழில் (5.7.1998) வெளியாகியுள்ள, பள்ளிக் கல்வித் துறை சார்ந்த அரசாணைகளை மேற்கோள் காட்டியிருக்கிறேன். ஒப்பிட்டுக் காட்டியிருக்கின்றேன்.

தமிழில் AEEO அலுவலர் கணக்குத் தணிக்கை செய்ய அலுவலர்கள் நியமன ஆணை.

பள்ளிக் கல்வி (ஆர்.1) துறை

அரசாணை நிலை எண். 179 நாள் : 3.6.1998

தொடக்கக் கல்வி இயக்குநர், சென்னை - கடிதம்

ந.க.எண். 3059/ஈசி3/98 நாள்: 16.3.98

ஆணை:

அரசாங்க நலன் பாதுகாக்கப்படவேண்டும் என்ற பெரு நோக்கத்துடன் உதவித் தொடக்கக்கல்வி அலுவலகங்களின் கணக்குகளை தணிக்கை செய்ய தனியாக ஒரு தணிக்கைப் பிரிவு தோற்றுவிப்பது அவசியமாகிறது. அதற்கு தொடக்கக் கல்வி இயக்குநர் தகுந்த கருத்துருவினை அரசுக்கு சமர்ப்பித்துள்ளார்." * * *

இந்த ஆணை தமிழில் வெளிவந்துள்ளது. இதனை வெளியிட்டவர் பள்ளிக் கல்வித் துறையின் அரசுச் செயலாளர் எம்.ஏ. கௌரிசங்கர் ஆவார்.

ஆனால் அதற்கு அடுத்த நாள் ஓர் அரசாணை வெளியாகின்றது. அதே துறை; அதே செயலாளர் பெயரில் அரசாணை நிலை எண்.191 நாள் 4.6.1998

ஆனால் அந்த அரசாணை ஆங்கிலத்தில் வெளியிடப்படுகிறது.

School Education (SL) Department

G.O. Ms. No.191 Dated : 4.6.98

Read: From the Director of Elementary Education, Chennai - 6 No.31899/EC3/97 dated 19.3.98

2. The government have carefully examined the proposal of the Director of Elementary Education and decided to accept it. Sanction is, therefore, accorded for the creation of 25 temporary posts (Twenty five only) of Tamil Pandits (B.Ed., grade) for a period of one year with effect from the date of employment, in the scale of pay of Rs.1400-40-1600-50-2300-60-2600 plus Dearness allowence and other Allowances at the rates admissible from time to

time. The above post will be distributed by the Director of Elementry Education to the needy Middle Schools having a strength more than 300 students in attendance in 6,7,8 classes. The Government also sanction a sum of Rs.13.15 lakhs (Rupees thirteen lakhs and fifteen thousand) for this purpose as recurring expenditure for the year 1998-99.

M.A. Gowrishankar
Secretary to Government

இதில் ஒரு பெரிய வியப்பு என்னவென்றால் நடுநிலைப் பள்ளிகளில் தமிழாசிரியர் நியமனம் குறித்த அரசாணை இது. தமிழாசிரியர் நியமனம் குறித்த செய்தியைக் கூடத் தமிழில் வெளியிடவில்லை. வெளியிட முடியவில்லை. வெளியிட மனம் வரவில்லை; அதிலும் தமிழ்ப் பேராசிரியரின் துறையில் தமிழாசிரியர் நியமனம் குறித்த ஆணை தமிழில் வரவில்லை.

இப்போது எண்ணிப் பாருங்கள்; நம் அலுவலர்களின் சித்துவிளையாட்டு எப்படியிருக்கிறது என்று தெரியும். அரசாணைகளைத் தமிழில் வெளியிட வேண்டும் எனக் கண்டிப்புக் காட்டப்பட்டபோது பல துறைகள் அரசாணைகள், கடிதங்கள், சுற்றாணைக் குறிப்பு ஆகியவற்றைத் தமிழில் எழுதி வெளியிட்டன. சில துறைகளில், தேவைப்படும் நேர்வுகளில் ஆங்கிலத்திலும் வெளியிடலாம் என்பதனை மனத்திற் கொண்டும் அரசாணைகள் வெளியிடப்பட்டுள்ளன.

எடுத்துக் காட்டாக சில துறைகளில் வெளிவந்த அரசாணை, குறிப்பு, கடிதம் ஆகியவை இணைக்கப்பட்டுள்ளன.

ந.கோ.115088/நீ.ம. 3/96

உள் (நீதிமன்றங்கள். 3) துறை

தமிழ்நாடு அரசு பின்னேற்பு; சுற்றோட்டக் குறிப்பு

பொருள் : நீதிமன்றங்கள் - நீதிமன்றங்களில் மிகவும் பழுதடைந்த நிலையிலுள்ள மேசை, நாற்காலி முதலிய மரச்சாமான்களுக்கு பதிலாக புதிய மரச்சாமான்கள் ரூ.25 லட்சம் செலவில் வாங்குவது - பின்னேற்பு சுற்றோட்டக் குறிப்பில் ஆணை வேண்டுதல்.

செப்டம்பர் திங்கள் 1994ஆம் ஆண்டு மாநிலத்தில் உள்ள நீதி மன்றங்களில் மிகவும் பழுதடைந்த நிலையிலுள்ள மேசை, நாற்காலி போன்ற மரச்சாமான்களுக்குப் பதிலாக புதிய மரச்சாமான்கள் வாங்குவதற்கு ரூ.1.93 கோடி செலவிற்கான செயற்குறிப்பினை சென்னை உயர்நீதிமன்றம் அனுப்பியது.

GOVERNMENT OF TAMIL NADU

Abstract

Judiciary - Replacement of rickety furniture in courts in the state - Expenditure - Sanctioned - orders - Issued.

HOME (COURTS. III) DEPARTMENT

G.O.Ms. No.1752 Dated:20.11.1996

1. G.O.Ms.No.895, Home, dated 19.6.95
2. G.O.Ms.No.1227, Home, dated 3.9.96

வனப்பாதுகாப்பு - பணியாளர்கள் எண்ணிக்கை மற்றும் உள் கட்டமைப்பு வசதிகளை உயர்த்தி சந்தனக் கட்டைகள் கடத்தலைக் கட்டுப்படுத்த செலவினங்கள் - ஒப்புதல் வழங்க ஆணை வெளியிடப்படுகிறது.

சுற்றுப்புறம் மற்றும் வனத் (வனம்-4) துறை

அரசு ஆணை (நிலை)எண்.320 நாள்: 23.12.1996

படிக்கவும் : முதன்மை வனத்துறைத் தலைவரின் கடித எண்.ச2/41095/96, நாள் 7.8.96 மற்றும் 10.10.96

ஆணை:

சந்தனக் கட்டைகள் விலை உயர்வின் காரணமாக சந்தனமரக் கடத்தல் ஒரு தொழிலாக ஆகிவிட்டது. சந்தனக் கடத்தல் செய்வதன் மூலம் சீக்கிரமாகவும், சுலபமாகவும், பணம் சம்பாதிக்க வழி உள்ளது. கடத்தல்காரர்கள் நவீன சக்தி வாய்ந்த ஆயுதங்களையும், விரைவாகச் செல்லும் வாகனங்களையும் உபயோகிப்பதால், வன அலுவலர்களுக்கு பாதுகாப்பு வேலை கடுமையாக உள்ளது. குறைந்த அளவு வசதிகளான ஈப்பு, கம்பியில்லாத் தொடர்பு மற்றும் ஆயுதங்களை உபயோகித்து அதிக அளவு பாதுகாப்பு கொடுக்கின்றனர். அதே நேரத்தில், பணியாளர்கள் எண்ணிக்கையையும், உள்ளமைப்பு வசதியையும் உயர்த்தி சந்தனக் கடத்தலைக் கட்டுப்படுத்த வேண்டும்.

உள் (சிறை2) துறை

பின்னேற்பு - சுற்றோட்டக் குறிப்பு

பொருள் : சிறைத் துறை - பாளையங்கோட்டை மத்திய சிறை மற்றும் வேலூர் மகளிர் தனிச்சிறை ஆகியவற்றில் 8 மணி நேர பணித்திட்டம் தொடங்க 41 இரண்டாம் நிலை காவலர் பணியிடங்கள் ஏற்படுத்த ஆணை வெளியிடுதல்.

12.5.98 அன்று சட்டப்பேரவையில் சிறைத்துறை தொடர்பான மானியக்கோரிக்கை மீது நடைபெற்ற விவாதத்தின் போது பதிலளித்து பேசிய சட்ட அமைச்சர் அவர்கள் பாளையங்கோட்டை, புதுக்கோட்டை, பெண்களுக்கான தனிச்சிறை ஆகியவற்றிற்கு 8 மணி நேர வேலைத்திட்டம் அமுலாக்கப்படும் என்று அறிவித்திருந்தார்கள். * * *

அண்ணா மறுமலர்ச்சித் திட்டம் கூடுதல் நிதி ஒதுக்கீடாக 1997-98 ஆம் ஆண்டிற்கு ரூபாய்.50/- (ரூபாய் ஐம்பது கோடி) ஒதுக்குதல் - ஆணை வெளியிடப்படுகிறது.

ஊரக வளர்ச்சி (ஓஊவதி-1) துறை

அரசாணை (நிலை) எண்.271 நாள் : 29.8.97

அரசாணை (நிலை) எண்.149 ஊ.வ.துறை, நாள் : 8.5.97

பார்வையில் குறிப்பிட்டுள்ள ஆணையில் அண்ணா மறுமலர்ச்சித் திட்டச் செயலாக்கத்திற்கான ஆணை வெளியிடப்பட்டது. கிராமப் பகுதிகளில் செயல்படுத்தப்படும் திட்டங்களை ஒருங்கிணைத்து கிராமத்திற்கு தேவையான அனைத்து வசதிகளையும் அளிப்பதுதான் இத்திட்டத்தின் நோக்கமாகும். * * *

நமக்கு நாமே திட்டம் - கூடுதல் நிதி ஒதுக்கீடு ரூபாய் 5 கோடி (ரூபாய் ஐந்து கோடி மட்டும்) ஒதுக்குதல் - ஆணை வெளியிடப்படுகிறது.

ஊரக வளர்ச்சி (ஓஊவதி-1) துறை

அரசாணை (நிலை) எண்.270 நாள் : 29.8.97

படிக்க : ஊரக வளர்ச்சித் துறையின் கடித எண்.26314/ஓஊவதி-1/97-1, நாள் : 29.6.97

ஆணை :

'நமக்கு நாமே திட்டம்' மனுநீதி திட்ட நடைமுறையில் இடைக்காலத்தில் ஏற்பட்ட தொய்வைப் போக்கி, சீரமைத்து, மக்கள் நமக்கு நாமே என்ற உணர்வின் அடிப்படையில் தங்கள் தேவைகளை நிறைவு செய்து கொள்ள முன்வரும் மனப்பான்மையை வளர்த்திடும் நிலைக்கு வழிகோல இந்நிதி ஆண்டில் வரவு-செலவு திட்டத்தில் அறிவிக்கப்பட்ட திட்டமாகும். பார்வையில் குறிப்பிட்டுள்ள கடிதத்தில் "நமக்கு நாமே திட்டம்" செயலாக்கத்திற்காக வழிகாட்டி நெறிமுறைகள் வெளியிடப்பட்டன. ஊரகப் பகுதிகளில் செயல்முறையில் இருக்கும் பல்வேறு திட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்பட்ட நிதியைப் பயன்படுத்தி பொதுமக்களின் பங்கேற்பினையும் சேர்த்து இத்திட்டம் செயல்படுத்த உத்தேசிக்கப்பட்டிருந்தது.

* நமக்கு நாமே திட்டம் - கூடுதல் நிதி ரூபாய் 5 (ஐந்து) கோடியை மாவட்ட வாரியாக பிரித்து வழங்குதல் - ஆணை வெளியிடப்படுகிறது.

ஊரக வளர்ச்சி (ஓஊவதி-1) துறை

அரசு ஆணை (நிலை) எண்.305 நாள் : 14.10.97

படிக்க : 1) அரசாணை நிலை எண். 270/ஊவ (ஓஊவதி-1) துறை நாள். 29.8.97

2) ஊரக வளர்ச்சி இயக்குநரது கடித எண்.52985/95பி.எச்-1, நாள்.11.9.97

ஆணை:

"நமக்கு நாமே திட்டத்தினை" 1997-98 ஆம் ஆண்டிற்கு சீரிய முறையில் செயலாக்கவும், இந் நிதி ஆண்டில் பார்வை ஒன்றில் குறிப்பிட்டுள்ள அரசாணையில் ரூபாய் 5,00,00,000/- (ரூபாய் ஐந்து கோடி மட்டும்) ஒதுக்கப்பட்டு ஆணை பிறப்பிக்கப்பட்டது.

*அமைச்சர்கள் - திரு. என்.கே.கே.பெரியசாமி, கைத்தறித்துறை அமைச்சர், வெளிநாட்டுப் பயணம் - கைத்தறித்துறை அமைச்சரின் அலுவல்கள் - ஒதுக்கீடு - ஆணை வெளியிடப்படுகிறது.

பொது (சிறப்பு-ஆ) த்துறை

அரசு (நிலை) ஆணை எண்.1339 நாள் : 21.10.1997

படிக்கவும் : 1. அரசு (நிலை) ஆணை எண்.483, பொது (சிறப்பு-ஆ) த் துறை, நாள்.13.5.1996

2. அரசு (நிலை) ஆணை எண்.484, பொது(சிறப்பு-ஆ)த்துறை, நாள்.13.5.1996

3. அரசு (நிலை) ஆணை எண்.646, பொது (சிறப்பு -ஆ)த் துறை, நாள்.11.6.1997

4. அரசு (நிலை) ஆணை எண்.943, பொது (சிறப்பு-ஆ)த்துறை, நாள்.2.8.1997

ஆணை :

திரு. என்.கே.கே. பெரியசாமி, கைத்தறித்துறை அமைச்சர் அவர்கள் 3.11.1997 முதல் 22.11.1997 வரை (இரண்டு நாட்களும் உள்ளிட்டது) 20 நாட்கள் வெளிநாடு செல்வதால் அவர் திரும்பி வரும் வரை அவர் கவனித்து வந்த அலுவல்களை, திரு. துரைமுருகன், பொதுப்பணித்துறை அமைச்சர் அவர்கள் தான் வகிக்கும் இலாக்காக்களோடு கூடுதலாக ஏற்றுக் கொள்ள, இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் விதிமுறை 166ன் உட்கூறு (3)ன் கீழ் தமிழக ஆளுநரால் ஆணை பிறப்பிக்கப்படுகிறது.

*அமைச்சர்கள் - திரு ஆலடி அருணா, சட்ட அமைச்சர் - சட்ட அமைச்சரின் அலுவல்கள் - ஒதுக்கீடு - ஆணை வெளியிடப்படுகிறது.

பொது (சிறப்பு-ஆ) த்துறை

அரசு (நிலை) ஆணை எண்.1345 நாள்: 22.10.1997

படிக்கவும் : 1. அரசு (நிலை)ஆணை எண்.483, பொது(சிறப்பு-ஆ)த்துறை, நாள்.13.5.96

2. அரசு(நிலை)ஆணை எண்.484, பொது(சிறப்பு-ஆ)த்துறை, நாள்.13.5.96

3. அரசு (நிலை)ஆணை எண்.646, பொது(சிறப்பு-ஆ)த்துறை, நாள்.11.6.97

4. அரசு (நிலை)ஆணை எண்.943, பொது(சிறப்பு-ஆ)த்துறை, நாள்.2.8.97

திரு ஆலடி அருணா, சட்ட அமைச்சர் அவர்கள் மருத்துவ சிகிச்சை முடிந்து மீண்டும் பணியேற்கும் வரை அவர் கவனித்து வந்த இலாக்காக்களை திரு.இரகுமான்கான், தொழிலாளர் நல அமைச்சர் அவர்கள், தான் வகிக்கும் இலாக்காக்களோடு கூடுதலாக, தற்காலிகமாக ஏற்றுக்கொள்ள இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் விதிமுறை 166ன் உட்கூறு(3) கீழ் தமிழக ஆளுநரால் ஆணை பிறப்பிக்கப்படுகிறது.

பொது(அரசியல் ஓய்வூதியம்.2.) துறை

பொருள் : ஓய்வூதியம் - விடுதலைப் போராட்ட வீரர்கள் ஓய்வூதியம் மத்திய அரசு விடுதலைப் போராட்ட வீரர்களுக்கு உயர்த்திய ஓய்வூதியத்திற்கு இணையாக மாநில அரசு விடுதலைப் போராட்ட வீரர்கள் ஓய்வூதியம் உயர்த்தி ஆணை வெளியிடப்பட்டது - தொடர்பாக.

பார்வை : அரசு நிலை ஆணை எண்.1243, பொது (அரசியல் ஓய்வூதியம்,2) துறை, நாள் 8.10.97

இக்கோப்பு மத்திய அரசு விடுதலைப் போராட்ட வீரர்களுக்கு உயர்த்திய ஓய்வூதியத்திற்கு இணையாக மாநில அரசு விடுதலைப் போராட்ட வீரர்களுக்கு உயர்த்தி வழங்கப்பட்டது குறித்ததாகும்.

தொழிலாளர் (ம) வேலைவாய்ப்பு (எஸ்1) த்துறை

கருக்கக் குறிப்பு

இக்கோப்பு, வேலைவாய்ப்பு மற்றும் பயிற்சித்துறை பயிற்சிப்பிரிவில் உலக வங்கி நிதியுதவி திட்டத்தின் கீழ் துவங்கப்பட்ட தொடரும் தொழிற்பயிற்சி திட்டங்கட்கு 1997-98 ஆம் ஆண்டிற்கு நிதி ஒதுக்கீடு பற்றி ஆணைகள் கோரும் வேலைவாய்ப்பு மற்றும் பயிற்சித்துறை ஆணையரின் கருத்துரு பற்றியதாகும்.

உள்(காவல்.14) துறை

காவல்: சென்னை நகரம் - நீதிமன்றங்கள் மற்றும் உயர்நீதிமன்ற வளாகங்களில் பாதுகாப்பு அளிக்க - கூடுதல் பணியாளர்கள் நியமிக்கப்பட்டது - தொடர்பாக.

சமீபத்தில் நீதிமன்ற வளாகங்களில் நீதிபதிகள் தாக்குதலுக்கு உள்ளாவதும், சிறைக் கைதிகள் தாக்கப்படுவதும் மற்றும் சிறைக் கைதிகளைத் தப்புவிப்பதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படுவது போன்ற விரும்பத்தகாத நிகழ்ச்சிகள் அவ்வப்போது நடைபெறுவதைத் தடுக்கும் வகையில் தகுந்த பாதுகாப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ள கூடுதல் பணியாளர்களை நியமிக்கக் கோரும் காவல் துறை இயக்குநரின் செயற்குறிப்பினை ஏற்று, அதற்காக தேவைப்படும் 441 கூடுதல் பணியாளர்களை, ஏற்கெனவே அரசால் ஏற்பளிக்கப்பட்ட 10,000 காவலர்களைக் கொண்டும் மற்றும் இதரப் பணியாளர்களை தற்போது இருக்கின்ற பணியாளர்களைக் கொண்டும் பயன்படுத்திக் கொள்ளுமாறும் அரசு ஆணை எண்.1579, உள்துறை, நாள்.1.11.97ல் ஆணையிடப்பட்டது.

GOVERNMENT OF TAMILNADU

Abstract

Police - Chennai City Police - Creation of Security Wing in all the courts of Chennai City - Sanction of staff etc. - Orders - Issued.

HOME (POL.XIV) DEPARTMENT

G.O.Ms.No.1810 Dated : 15.12.97

Read:

1. G.O.,Ms.No.1579/ dated 31.10.97
2. From the Additional Director General of Police & Commissioner of Police, Chennai, D.O.Lr.Ro.No. Estt.I(4)/24/146428/95, dated.5.11.97
3. From the Director General of Police, Chennai Lr.Rc.No.149024/RA4(2)/96, dated.6.11.97

அரசாணைகள் வாயிலாகச் சில உண்மைகளும் தெரிந்து விடுகின்றன. பேராயக் கட்சி ஆட்சிக் காலத்தில் "அரசுப் பணியாளர்கள் தமிழ் அறிந்தவர்களாக இருக்க வேண்டும் என்ற அடிப்படையில் ஆணைகள் பிறப்பிக்கப்பட்டன." (3341/30.11.57) (204/24.1.1958)

தமிழே தெரியாமல் தமிழக அரசு அலுவலகங்களில் பணியாற்றி வருபவர்கள் என்ன சொன்னார்களோ தெரியவில்லை; 814 ஆம் அரசாணை வாயிலாக 12.3.59 அன்று மேற்கண்ட அரசாணைகள் விலக்கிக் கொள்ளப்பட்டன.

இனிமேல், புதிதாகப் பணியில் அமர்த்தப் படுவோர் மட்டும் தமிழறிந்தவர்களாக இருக்கவேண்டும் எனும் அடிப்படையில் திருத்தம் செய்யப்பட்டது.

இந்த ஆணைகள், தமிழ் தெரியாமலேயே தமிழக அரசு அலுவலராக 58 அகவை வரை பணியாற்றி, தமிழ் ஆட்சி மொழிச் சட்டந்தைக் குப்பையில் எறிந்துவிட்டு, வரைவுகள் குறிப்புகள் எல்லாவற்றையும் ஆங்கிலத்திலேயே எழுதிக் காலத்தை ஓட்டிவிடலாம் எனும் அளவுக்குச் சூழ்நிலையை உண்டாக்கி விட்டன.

ஒரு புள்ளி விவரம் நினைவில் இருக்கட்டும்.

25.1.1967 முதல் 12.5.96 வரை தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறை சார்பில் 30 ஆண்டுகளில் 308 அரசாணைகளும், மடல்களும் வெளியிடப்பட்டுள்ளன. 13.5.96க்குப்பின் 31.3.2001 வரை மட்டுமே 142 அரசாணைகளும் மடல்களும் வெளியிடப்பட்டுள்ளன.

ஆட்சிமொழியைத் தமிழில் கொண்டு வருவதற்காக ஆட்சிமொழிக் குழு ஒன்று அமைக்கப்பட்டது. அதற்காகப் பிறப்பிக்கப்பட்ட முதல் அரசாணையே ஆங்கிலத்தில் உள்ளது. மிக எளிய செய்தியைக் கூடத் தமிழில் தரவேண்டும் எனும் எண்ணம் வரவில்லை. (எண்.193 நாள் 21.1.57) 1966ஆம் ஆண்டு வரை வெளிவந்த அரசாணைகள் அனைத்தும் ஆங்கிலத்திலேயே உள்ளன என்பதையும் கருதவேண்டும்

தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் பணியமர்த்த ஆணையே 1983 இல் ஆங்கிலத்தில்தான் உள்ளது.

அரசாணைகளை முழுமையாக அலசி ஆராய்ந்தபோது மிகப் பெரிய குறைபாடு இருப்பது கண்டறியப்பட்டது. தமிழ் வளர்ச்சித் துறை சார்பில் வெளியிடப்படும் அரசாணை கூடத் தமிழில் வருவதில்லை என்ற மோசமான நிலையை வைத்துக் கொண்டுதான் எங்கள் பணியைத் தொடங்கவேண்டியிருந்தது.

6 மாத காலம் பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டபின் 27.11.1996 அன்று தலைமைச் செயலாளர்க்கு ஒரு மடல் எழுதினேன். அதன் படி இது.

அன்புக்குரிய தலைமைச் செயலாளர் அவர்களுக்கு,

நமது அரசால் பிறப்பிக்கப்படும் ஒவ்வோர் அரசாணையும் தமிழில் இருக்கவேண்டும் என்று

ஏற்கெனவே அரசாணைகள் மூலம் உறுதிப்படுத்தியிருக்கிறோம். கடந்த கால அரசாணைகள் இரண்டை நான் தங்களிடம் சுட்டிக் காட்டியபோது, அதனடிப்படையில் தாங்களே இது குறித்து ஓர் அரசாணை வெளியிட்டுள்ளீர்கள். அப்படியிருந்தும் தலைமைச் செயலகத்தின் பல்வேறு துறைச் செயலாளர்கள் இதைக் கடைப்பிடித்ததாகத் தெரியவில்லை.

எடுத்துக்காட்டாக, உள்ளாட்சித் துறை அமைச்சர் மாண்புமிகு கோ.சி. மணி அவர்கள் தன் துறையில் அனைத்துக் கோப்புகளும் தமிழிலேயே இருக்க வேண்டும் என்று ஏற்கெனவே வலியுறுத்தியுள்ளார். ஏறத்தாழ 11/2 இலட்சம் உறுப்பினர்கள் உள்ளாட்சித் துறையில் பொறுப்பேற்றுள்ளார்கள். அவர்களில் மிகப் பெரும்பாலோர் தமிழ் மட்டுமே அறிந்தவர்கள். பாமர மக்களின் பிரதிநிதிகள். ஆனால் அவர்களுக்குப் படித்துக்காட்டப்பட்ட அரசாணைகள் பல ஆங்கிலத்தில் உள்ளன. இது குறித்துக் கோவையில் உள்ளாட்சி உறுப்பினர்களே கடும் எதிர்ப்பைத் தெரிவித்துள்ளார்கள். இதற்கான செய்தித்தாள் நறுக்குகள் இணைக்கப்பட்டுள்ளன. இந்தப் போக்கினை இப்போதாவது தடுத்து நிறுத்த முடியுமா என்பதைத் தெரிவிக்கவும். வேறு வழியில்லையென்றால் இதனை மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வர வேண்டியது தவிர்க்க முடியாததாகிவிடும்.

இது குறித்து எடுக்கப்படும் நடவடிக்கையை எனக்குத் தெரிவிப்பீர்கள் என நம்புகிறேன்.

அன்புடன்
மு. தமிழ்க்குடிமகன்

இது தொடக்க கால முயற்சி

12.11.99 அன்று 'தினமணியில்' வந்த செய்தி இது.

தமிழ் அரசாணை : முதல்வருக்கு நன்றி

சென்னை. நவ.11-

தமிழகத்தில் முதன்முறையாக தமிழில் அரசாணை வெளிவர உறுதுணையாக இருந்த முதல்வர் கருணாநிதி, அமைச்சர் மு. தமிழ்க்குடிமகன் ஆகியோருக்கு தமிழ்நாடு முதுநிலைப் பட்டதாரி ஆசிரியர் கழகம் நன்றி தெரிவித்துள்ளது.

இச் சங்கத்தின் சென்னை மாவட்ட அமைப்பு சார்பில் செவ்வாய்க்கிழமை மாநிலத் தலைமையிடச் செயலர்ரெ.விஜயகுமார், மாவட்டத் தலைவர் இரா.எத்திராஜுலு, மாவட்டச் செயலர், கு. பூபாலன் ஆகியோர் அமைச்சர் மு. தமிழ்க்குடிமகனை நேரில் சந்தித்து நன்றி தெரிவித்தனர்.

இனிவரும் அரசாணைகள் அனைத்தும் தமிழில் வெளியிட அவர்கள் வேண்டுகோள் விடுத்தனர். அதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருவதாக அமைச்சர் தெரிவித்தார்.

இது பிற்கால வளர்ச்சி

நாள் போடாமல் ஒரு மடல் என்றாலும் அதன் உள்ளடக்கம் எங்களுக்கு உண்மை நிலையை உணர்த்துவதாகவே உள்ளது.

நாங்களும் எவ்வளவு முயன்றாலும் நிலைமை மாறாது என்கின்றார் தோழர்.

மாண்புமிகு அமைச்சர் ஐயா அவர்களுக்கு எனது வணக்கம்.

இப்பவும் நமது கல்வி அமைச்சர், அவர்கள் டெல்லியில் நடந்த அமைச்சர்கள் கூட்டத்தில் பேசும்போது, 30 ஆண்டுகளாக தமிழகத்தில் இருமொழிக் கொள்கைதான் உள்ளது என்று பெருமையாகக் கூறியுள்ளார். ஆனால் உண்மையில் ஒரு மொழி (ஆங்கிலம்) மட்டுமே ஆட்சிமொழியாக உள்ளது என்பதுதான் உண்மை.

ஏனென்றால் அரசு வெளியிடும் எந்த ஆணையிலாவது தமிழ் உண்டா? இல்லையே! அப்படி இருக்க இருமொழியில் முதல்மொழி ஆங்கிலம் மட்டுமே நம்மை ஆளும் மொழியாக உள்ளது. அதேசமயம் டெல்லியில் இந்தி மொழி நல்ல ஆட்சி மொழியாக வளர்ந்துள்ளது. என்ன காரணம்? தங்கள் ஆட்சியில் தமிழுக்கு முதன்மை இல்லை. கலைஞர் இருந்தாலும் சரி, தமிழ்க்குடிமகன் இருந்தாலும், தமிழ்நாட்டை தமிழில் ஆளமுடியாது என்பது நன்கு மக்கள் உணருகின்றனர். இந்த அவலம் போக்க முடியுமா உங்களால்? முயன்று பாருங்கள்.

தங்கள் உண்மையுள்ள தொண்டன்
தில்லை வாணன்

என்றாலும், பெருமளவுக்கு மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன என்பதனை யாரும் மறுக்க முடியாது.

அந்த அளவில், எங்கள் பணி எப்படி அமைந்திருந்தது என்பதனை அடுத்த செய்தியில் காணலாம்.

அரசாணைகளைத் தமிழில் வெளியிடுவதில் எந்த அளவு முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்பதற்கு 16/10/99ஆம் நாளிட்ட 'தினமலர்' இதழில் வெளிவந்துள்ள செய்தியே போதுமான சான்றாகும். தலைப்பிலிருந்து முழுமையான செய்தியையும் படித்தால் நிதித்துறை வரலாறே தெரிந்துவிடும்.

தமிழக நிதித்துறை வரலாற்றில் தமிழில் வெளியாகிய முதல் அரசாணை

திருநெல்வேலி அக்.26-

தமிழக நிதித்துறை வரலாற்றில் முதன்முதலாக தமிழில் அரசு உத்தரவு வெளியாகி உள்ளது. அரசு ஊழியர்களுக்கு சம்பள உயர்வு குறித்து வந்துள்ள அந்த உத்தரவு மூலம் கடைநிலை ஊழியர்களும் அதனை எளிதில் படித்து பயன்பெறும் வகையில் அமைந்துள்ளது.

தமிழகத்தில் தி.மு.க., ஆட்சிக்கு வந்தவுடன் எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்கிற வகையில் தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தை நடைமுறைப்படுத்துவதில் தீவிர கவனம் செலுத்தி வருகிறது. தற்போது அதில் படிப்படியான வெற்றியும் அரசுக்கு கிடைத்து வருகிறது. அரசு ஊழியர்கள் அனைவரும் தமிழில் தான் கட்டாயம் கையெழுத்து போட வேண்டும் என்று அரசு உத்தரவிட்டது. ஒவ்வொரு துறையில் இருந்தும் மக்களின் கோரிக்கைகளுக்கு அனுப்பப்படும் பதில் கடிதங்கள் கட்டாயம் தமிழில்தான் இருக்க வேண்டும் என்று அரசு உத்தரவிட்டது. ஆனால் இதில் முழுமையான முன்னேற்றம் இல்லாவிட்டாலும், ஒரு சில துறைகளில் மட்டும் இந்த உத்தரவு கண்டிப்புடன் பின்பற்றப்படுகிறது.

இதற்கிடையில் கையெழுத்துக்கு முன்பு போடப்படும் இன்சியலும் தமிழில்தான் இருக்க வேண்டும் என்று அரசு கண்டிப்பான உத்தரவு பிறப்பித்ததை தொடர்ந்து அரசு ஊழியர்கள் தற்போது பெரும்பாலானவர்கள் இந்த உத்தரவை செயல்படுத்தி வருகின்றனர். தமிழ் ஆட்சி மொழிச் சட்டம் 1956ஆம் ஆண்டு கொண்டுவரப்பட்டது. இதில் நிதித்துறை மற்றும் சட்டத்துறையில் மட்டும் இந்த சட்டம் 1970ஆம் ஆண்டு கொண்டுவரப்பட்டாலும் அதன் செயலாக்கம் என்னவோ பெயரளவில் தான் இருந்து வந்தது. ஆனால் தி.மு.க., கடந்த 89ஆம் ஆண்டு ஆட்சிக்கு வந்தவுடன் தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தை தீவிரமாக அமல்படுத்துவதில் முயற்சிகள் மேற்கொண்டது. ஆனால் தி.மு.க., ஆட்சி இரண்டு ஆண்டுகள் தான் நீடித்தது. அதன் பிறகு தமிழ் ஆட்சி மொழித் திட்டத்தில் தடங்கல் ஏற்பட்டது.

அதன் பிறகு மீண்டும் 96ஆம் ஆண்டு தி.மு.க., ஆட்சிக்கு வந்தவுடன் தமிழ் வளர்ச்சிக்கு என்று தனி அமைச்சர் ஒருவரை நியமித்து ஆட்சி மொழி திட்டத்தை சிறப்பாக செயல்படுத்த நடவடிக்கை மேற்கொண்டது. அரசு ஆணைகள் தமிழில்தான் வெளியிடப்பட வேண்டும். கடைகளில் பெயர்ப் பலகைகள் தமிழில்தான் எழுதப்பட வேண்டும் என்பது போன்ற அதிரடி நடவடிக்கையில் ஈடுபட்டதுடன், முதல் கட்டமாக தமிழக அரசு தலைமைச் செயலகத்தில் துறை வாரியாக ஆய்வு நடத்தியது.

தலைமைச் செயலகத்தில் இருந்த ஆங்கில தட்டச்சுகளுக்கு பதிலாக தமிழ் தட்டச்சுகள் அதிகம் பயன்படுத்தப்பட்டன. நிதி மற்றும் சட்டத்துறைகளில் மட்டும் தமிழில் அரசு ஆணைகள் வெளியிடுவதில் சிரமம் இருப்பதாக கூறப்பட்டது. இதையடுத்து சிரமம் உள்ள உத்தரவுகளை மட்டும் ஆங்கிலத்திலும் மற்றவற்றை தமிழிலும் உத்தரவுகளாக வெளியிடுமாறு அரசு சம்பந்தப்பட்ட துறைகளுக்கு ஆலோசனைகள் வழங்கியது.

அதே சமயம் இடையூறு இல்லாத உத்தரவுகளை தமிழில் தான் வெளியிட வேண்டும் என்று அரசு நிதி மற்றும் சட்டத்துறைக்கு கண்டிப்பான உத்தரவை பிறப்பித்தது. அரசின் இந்த உத்தரவை தொடர்ந்து தற்போது நிதித்துறை வரலாற்றில் முதல் முதலாக தமிழில் அரசாணை ஒன்று வெளியிடப்பட்டுள்ளது. ஆங்கிலேயர் ஆட்சி காலத்திலேயே நிதித்துறை தனியாக செயல்பட்டு வந்துள்ளது. அந்த அளவிற்கு மிகப் பழமையான இந்த துறையில் முதல் முதலாக தமிழில் ஒரு அரசாணை வெளிவருவது என்பது பாராட்டத்தக்க நடவடிக்கை தான்.

தமிழக அரசு ஊழியர்களுக்கு தற்போது 32 சதவீதமாக இருந்த அகவிலைப்படியை 37 சதவீதமாக உயர்த்தி அரசு உத்தரவிட்டது. நிதித்துறையில் இருந்து பிறப்பிக்கப்பட்டுள்ள இந்த உத்தரவு தான் தற்போது தமிழில் வெளியாகி இருக்கிறது. பொதுவாக இந்த உத்தரவு முழுவதும் ஆங்கிலத்தில் தான் இருக்கும். இதனால் சாதாரண கடைநிலை ஊழியருக்கு தங்களது சம்பளத்தில் எவ்வளவு உயர்ந்திருக்கிறது; எந்த காலத்தில் இருந்து அவை கிடைக்கும் ; ரொக்கமாக எவ்வளவு கிடைக்கும்; வருங்கால வைப்புநிதி கணக்கில் எவ்வளவு சேர்ப்பார்கள் என்ற விபரத்தை எல்லாம் அவரால் அறிந்து கொள்ள இயலாது. பிறரிடம் கேட்டுத்தான் தெரிந்து கொள்ள முடியும். தற்போது புதிய தமிழ் ஆணை மூலம் அவர்கள் தாங்களாகவே எல்லாவற்றையும் அறிந்து கொள்ளும் வசதி ஏற்பட்டிருக்கிறது.

பொதுவாக நிதித்துறை ஒரு அரசில் உள்ள முக்கியமான துறையாகும். பணப்பட்டுவாடா முழுவதும் இங்கு தான் இருப்பதால் இந்தத் துறை பிரதான துறையாக இருக்கிறது. இந்தத் துறையில் இருந்துதான் பெரும்பாலான துறைகளுக்கு அவ்வப்போது தகவல்கள் மற்றும் முக்கியமுடிவுகள் தெரிவிக்கப்படுகிறது. அது போன்ற தகவல் அனைத்தும் இனிமேல் தமிழில் கிடைக்கும்போது பெரும்பாலான அரசு ஊழியர்கள் அதனை எளிதில் புரிந்து கொண்டு எல்லோருக்கும் தெரிவிக்க இதன் மூலம் நல்ல வசதி ஏற்படும் என்று அரசு அதிகாரிகள் தரப்பில் தெரிவிக்கப்படுகிறது.

தமிழக முதல்வர் கருணாநிதியின் நேரடி நடவடிக்கை மூலம் முதல் முதலாக நிதித்துறையில் தமிழ் ஆணையை வெளியிட்ட பெருமையை அரசின் நிதித்துறை செயலாளர் ராஜாராமன் பெற்றிருக்கிறார். தமிழக அரசின் இந்த உத்தரவு பாராட்டுக்குரிய உத்தரவு என்று அரசு ஊழியர்கள் மற்றும் அதிகாரிகள் தரப்பில் தெரிவிக்கப்பட்டது."

அரசாணைகள் பற்றி அலசி ஆராய்ந்தோம்

இனி, அடுத்ததைப் பார்ப்போம்.

இயல் - பதினாறு

# கோப்புகள்

ஓர் அரசின் இறுதி முடிவுகள் யாவும் கோப்பு வடிவத்தில்தான் நிறைவு பெறும். ஓர் அமைச்சரோ அல்லது அதற்கும் மேலாக ஒரு முதலமைச்சரோ முடிவுகளை எழுதிய பின் அதன் அடிப்படையில்தான் அரசாணைகள் பிறப்பிக்கப்படும். நாட்டின் அனைத்துப் பணிகளும் அப்புறம்தான் தொடங்கும்.

ஏற்கெனவே 'அரசாணைகள்' எனும் பகுதியில் கல்வெட்டில் உள்ள தமிழாட்சி பற்றிக் குறிப்பிட்டிருந்தேன். கி.பி.1600 இல் கிழக்கிந்தியக் குழுமம் வந்தபிறகுதான் ஆங்கிலம் நமக்கு அறிமுகம். மெக்காலே கல்வித்திட்டம் செயற்படுத்தப்பட்ட பின்தான் நாமெல்லாம் எழுத்தர்களானோம், வரைவுகளையும் குறிப்புகளையும் வரையக் கற்றுக்கொண்டோம்.

1947 இல் இந்தியா விடுதலை பெற்று 1956 இல் தமிழ்நாடு தனிமாநிலமாகி, 23.1.57 முதல் 'தமிழில்தான் ஆட்சி' என்று சட்டப்படி சொல்லியும் இன்னும் பல அலுவலர்கள் வரைவுகளையோ, குறிப்புகளையோ தமிழில் எழுதுவதில்லை. கோப்புகள் கமுக்கத் தன்மை (Confidential) வாய்ந்தவையாகலின் தமிழ் வளர்ச்சி இயக்குநரோ, த.வ. துறைச் செயலாளரோ துறையின் நடவடிக்கையை 'ஆட்சிமொழிச் செயலாக்கம்' எனும் கோணத்தில் ஆய்வு செய்யும்போதும் கோப்புகளைப் பார்வையிடுவதில்லை. ஆனால் அமைச்சர் எனும் முறையில் நான் பல கோப்புகளைப் பார்க்க வாய்ப்புப் பெற்றவன். பிறதுறைக் கோப்புகளும் தேவைப்பட்ட நேர்வுகளில் த.வ. துறை அமைச்சரின் ஒப்புதலைப் பெறும் வகையில் எனக்கு அனுப்பப்படும். அப்போது அந்தக் கோப்புகள் தமிழில் எழுதப்பட்டனவா இல்லையா என்பது தெரிந்துவிடும்.

கீழ் மட்டத்தில் ஒருவர் - பிரிவு அலுவலரோ சார்புச் செயலரோ கோப்பினைத் தமிழில் உருவாக்கினாலும் மேலதிகாரிகள் தங்களுக்கு அதுபோன்று எழுத முடியாது என்பதாலும், அல்லது தங்கள் மேதாவித்தனத்தைக் காட்டும் வகையிலும் ஆங்கிலத்தில் எழுதுவதுண்டு. சிலநேரம் தமிழில் எழுத முன்வருபவர்களையும் 'அன்பாக' மிரட்டி ஆங்கிலத்தில் எழுதிக் கொண்டுவர வைத்து விடுகிறார்கள்.

6.3.97 இல் வெளிவந்த (மதுரைமணி) குறிப்பினை அப்படியே தருகிறேன்.

தமிழில் குறிப்பு எழுத அதிகாரிகளுக்கு சிரமம்

மதுரை மாவட்ட ஆட்சியர் அலுவலக வளாகத்தில் தமிழ் எண் நாட்காட்டி வெளியிடும் விழா மாவட்ட வருவாய் அலுவலர் இரா. சுடலைக் கண்ணன் தலைமையில் நடைபெற்றது.

தலைமையுரையில் வருவாய் அலுவலர் இரா. சுடலைக் கண்ணன் பேசியதாவது:-

"வட மாநிலங்களைச் சேர்ந்தவர்கள் தமிழகத்தில் மாவட்ட ஆட்சியாளர்களாகப் பணிபுரிகின்ற நேரங்களில் மாவட்ட ஆட்சியாளர்களுக்கும் கோப்புகளின் தன்மை புரிய வேண்டும் என்ற காரணத்திற்காக கோப்புகளை ஆங்கிலத்தில் வைப்பதுண்டு. ஆங்கிலத்தில் குறிப்புகளை எழுதி, எழுதிப் பழக்கப்பட்ட காரணத்தால் தற்போது தமிழில் குறிப்பு எழுத முடியவில்லை. தமிழில் உள்ள ஒவ்வொரு சொல்லுக்கும் ஆழமான கருத்துக்கள் உண்டு. சிறப்பான தமிழ் மொழியை தாய்மொழியாக நாம் பெற்றுள்ளோம். தமிழை வளர்க்காவிட்டாலும் தமிழ் அழியாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். அந்த அடிப்படையில் தான் தற்போது தமிழ் எண்நாட்காட்டி வெளியிடப்பட்டுள்ளது."

எல்லா மாநிலங்களிலும் அந்தந்த வட்டாரமொழிக்குத் தொடர்பில்லாத பல இ.ஆ.ப. அலுவலர்கள் பணிக்கு வந்து விடுவார்கள். இது தவிர்க்க முடியாதது. எடுத்துக்காட்டாக திரு. இரெ. பாலகிருட்டிணன், இ.ஆ.ப. தமிழில் எழுதி வெற்றிபெற்றவர். ஒரிசா மாநிலத்தில் சுற்றுலாத் துறைச் செயலராக இருப்பவர். அவர் அங்கு கோப்பில் ஒரிய மொழியில்தான் எழுதுகிறார்.

ஆனால் நம் தமிழ்நாட்டில் மட்டும் கட்டுப்பாடோ கண்டிப்போ இல்லாததால் இன்றும் பல இ.ஆ.ப.வினர் ஆங்கிலத்திலேயே கோப்புகளை உருவாக்கி வருகின்றனர்.

தமிழ்நாட்டுக்கு ஒதுக்கப்பட்ட இ.ஆ.ப. அலுவலர்கள் 332 பேர் என்றால் 2001 இறுதியில் உள்ள நிலவரப்படி தமிழ்நாட்டைச் சேர்ந்த இ.ஆ.ப. அலுவலர்கள் 193 பேர். பிறமாநிலங்களைச் சேர்ந்த, தமிழைத் தாய்மொழியாகக் கொள்ளாதவர்கள் 139 பேர். இவர்களில் சில பேர் தமிழ்நாட்டில் பணியாற்றுகிறோம் என்பதை உணர்ந்து, தமிழ்தான் ஆட்சிமொழி என்பதை உணர்ந்து தமிழில் பேச, எழுதப் பழகியவர்கள். ஒரு சிலர் தமிழில் பணி மேற்கொள்ள விடாப்பிடியாகவும் உள்ளவர்கள். எனவே அவர்களால் எந்த இடரும் இல்லை. ஆனால் பெரும்பாலோர் இந்த எண்ணமே இல்லாதவர்கள் தொலைக்காட்சிகளுக்கு இவர்கள் நேர்காணல் கொடுக்கும்போதும் ஆங்கிலத்தில். கோப்புகள் வரைவுகள், பல நேரங்களில் அரசாணைகள் எல்லாம் ஆங்கிலத்திலேயே வருமாறு பார்த்துக் கொள்கிறார்கள்.

இவர்களால்தான் பெருமளவு பாதிப்பு உள்ளது என்பது மறுக்க முடியாத உண்மை.

ஆனால் தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட எல்லாருமே தமிழில் எல்லாம் இருக்க வேண்டும் எனும் எண்ணம் உள்ளவர்களா என்றால் அப்படியே இதை உறுதி செய்யமுடியாது. 10% அதாவது குறைந்தது 20 பேராவது தமிழை அலட்சியப்படுத்திவிட்டு, ஆங்கில மோகம் கொண்டு அலைபவர்கள்தான்.

எனவே பல கோப்புகள் இன்றும் ஆங்கிலத்திலேயே வருவது இதனால்தான்.

எனக்குத் தெரிய புரட்சித்தலைவர் காலத்தில் அவருக்குச் செல்லும் எல்லாக் கோப்புகளும் தமிழில் இருந்தன என்று அறிகிறேன். 1996-2001க்கிடையில் கலைஞர் ஒரு கோப்பில் பின்வருமாறு எழுதினார்.

"கோப்புகள் இன்னும் ஆங்கிலத்திலேயே வருவதை நிறுத்தலாமே" என்றார்.

இவ்வாறு ஒரு முதல்வர் தமிழில் எழுதிய குறிப்பினைத் தலைமைச் செயலாளர் அனைத்துச் செயலாளர்க்கும் சுற்றாணைக்குறிப்பாக அனுப்பியுள்ளார். வேடிக்கை என்னவென்றால் அவர் அந்தச் சின்னக் குறிப்பைக் கூடத் தமிழில் தரவில்லை. இதுதான் நிலை

ஒரு கோப்பு எப்படி உருவாகின்றது என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டுத் தரவிரும்புகிறேன்.

வருவாய்த்துறையினரும் அறநிலையத்துறையினரும் கையொப்பமிட வேண்டிய ஒரு கோப்பு.

வேலூர் மாவட்டத்தில் ஒரு நில எடுப்புப் பற்றியது. இந்தக் கோப்பு தொடங்கப்பட்டது தமிழில்; மாவட்ட ஆட்சித்தலைவர் குறிப்பெழுதிக் கையொப்பமிடுகின்றவரை தமிழிலேயே உருவாகின்றது. அப்போதிருந்த மாவட்ட ஆட்சித்தலைவர் டேவிதார் தமிழில் ஒப்பமிட்டுத் தமிழிலேயே உருவான கோப்பினைத் தலைமைச் செயலகத்துக்கு அனுப்பி வைக்கின்றார். ஆனால் தலைமைச் செயலகம் வந்ததும் தமிழ் ஆங்கிலமாக மாறுகிறது. கீழே இருக்கின்ற சார்நிலை அலுவலர்கள் ஏன் இதைச் செய்கின்றனர்? நில ஒப்படைப்புப் பற்றிய முழு விவரங்களும் ஏற்கெனவே வந்த குறிப்புகளில் அடங்கியுள்ளன. அதில் வருவாய்த் துறைச் செயலர், வருவாய்த்துறை அமைச்சர், கோயில் தொடர்பானது என்பதால் அ.நி.துறை அமைச்சர் ஆகியோர் ஒப்பமிடவேண்டும். இந்தத் திருவிளையாடலைப் புரிந்தது யார்? அன்பர்கள் கவனத்துக்காக இதை எழுதுகின்றேன். கோப்பின் உட்பகுதியை வெளியிடுவது முறையன்று என்பதால் கமுக்கத்தை வெளியிடாத இரண்டு பத்திகளை மட்டும் தருகிறேன்.

This file relates to the propsed acquisition of 1.37.0 hect. of dry lands in S.No.450 belonging to A.M. Adi Kesava Perumal Temple through private negotiation. The Govt. have already ordered in letter. Ms.No.66. BC&MBCW Dept.dated 4.8.97 to acquire the land through private negotiation.

2. The Collector of Vellore has sent the proposals through DMBC& DNC and he has sent the advance copy to Govt. now.

வருவாய்த்துறை அமைச்சர் வரை ஆங்கிலத்தில் வந்த கோப்பு அ.நி. துறை அமைச்சருக்கு (எனக்கு) வரும்போது தமிழில் வருகின்றது. இதுதான் வேண்டாமென்பது. எனக்கு எழுதும் குறிப்பினைத் தமிழில் எழுத முடியும் என்றால் அதே தலைமைச் செயலகத்தில் வருவாய்த் துறையில் ஏன் எழுத முடியாது?

(2) திருவண்ணாமலை அருணாசலேசுவரர் திருக்கோயில் மற்றும் ஆசிரமம் ஆகியவற்றின் தனித் தன்மையைப் பாதுகாப்பது குறித்த கோப்பு அறநிலையத்துறையிலிருந்து வந்துள்ளது. (கோப்பு எண். 8586/ஆர்/96)

இது குறித்துச் செயலாளர் எழுதிய 11 பக்கக் குறிப்பும் ஆங்கிலத்திலேயே உள்ளது. தலைமைச் செயலாளருக்குக் கோப்புப் போனபோது, குறிப்பின் மொழிபெயர்ப்பும் ஆய்வறிக்கையும் தமிழில் வைக்கப்படவேண்டும் என்று தலைமைச் செயலாளர் எழுதியுள்ளார். அதன்பிறகுதான் தமிழில் குறிப்புகள் வரையப்பட்டுள்ளன. இதில் வியப்பு என்னவென்றால் இது குறித்து மடல் எழுதிய 'இரங்கபாசியம்' என்பவர் தமிழில்தான் எழுதியுள்ளார். எனவே, கோப்புகள் இன்னும் ஆங்கிலத்தில்தான் உருவாக்கப்படுகின்றன என்பது வெளிப்படையான உண்மை.

இதுதான் கோப்புகளின் நிலை. நான் கண்டிப்பாக இருப்பேன்; ஆங்கிலத்தில் வந்தால் திருப்பி அனுப்பி விடுவேன் எனும் எண்ணம் வருகிற போது தமிழ் வருகிறது. வருவாய்த் துறைச் செயலர் ஆங்கிலத்தில் வருவதையே விரும்புகிறார் என்பதாலோ, வருவாய்த்துறை அமைச்சர் ஆங்கிலத்தில் வந்தால் சினந்து கொள்ளமாட்டார் என்பதாலோ 'ஆங்கிலம்' மேலோங்குகிறது. ஆனால் தமிழ்க்குடிமகன் நினைவு வந்ததும் 'தமிழ்' தானே வருகிறது.

இதிலிருந்து தெரிவது என்ன? அரசு அலுவலர்கள் நினைத்தால் எந்தக் கோப்பினையும் தமிழில் உருவாக்க முடியும்! ஆனால் அவர்களில் பலர் நினைக்கவில்லை.

பல துறைகளில் இன்று வரை கோப்புகள் தமிழில் எழுதப்படுவதில்லை. பிற நாடுகள், பிற மாநிலங்கள், உச்சநீதிமன்றம் போன்று விதிவிலக்குப் பெறும் இனங்கள் தவிரப் பிற அனைத்து நேர்வுகளிலும் கோப்புகள் தமிழில்தான் பேணப்படவேண்டும் என ஆணையே உள்ளது. ஆனால் பல துறை அலுவலர்கள் இதைப் பொருட்படுத்துவதே இல்லை.

அறநிலையத் துறையிலேயே இந்த நிலை நேர்ந்துள்ளது. அறநிலையத் துறையில் கூடுதல் ஆணையர் நியமிப்பது பற்றிய கோப்பு இது. இதில் பெரிய தொழில்நுட்பச் சொல்லாட்சி ஏதுமில்லை. ஆனாலும் மிக எளிய இந்தச் செய்தியைக் கூடத் தமிழில் சொல்ல முன்வரவில்லை.

அதன் பின் பணியாளர் சீர்திருத்தத் துறை, அறநிலையத்துறை, பணியாளர் சீர்திருத்தத் துறை என்று கோப்பு 'ஆங்கிலத்திலேயே' நடமாடுகிறது. அரசின் சட்டங்கள், அரசாணைகள் ஆகியவை அரசுத் துறைகளாலேயே மதிக்கப்படுவதில்லை என்பதற்கு இவை எடுத்துக்காட்டுகள்.

அதன்பின் நான் பொறுப்பேற்றபின் அறநிலையத் துறைக் கோப்புகள் அனைத்தும் தமிழில் வெளிவந்தன.

## இயல் - பதினேழு

## தமிழில் கையொப்பமிடுதல்

1956 இல் தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் வந்துவிட்டது. 23.1.1957 முதல் ஆளுநர் ஒப்பந்துடன் நடைமுறைக்கு வந்துவிட்டது. இது பன்னிரண்டு இலட்சத்து அறுபத்திரண்டாயிரம் அரசு ஊழியர்கள் அனைவர்க்கும் தெரியும்.

நான் முன்பே குறிப்பட்டபடி, தமிழை எப்படி ஆட்சிமொழியாக்குவது என்பதற்காகப் பிறப்பிக்கப்பட்ட ஆணைகள் 1966 வரை ஆங்கிலத்திலேயே வருகின்றன. அவற்றைத் தமிழில் எழுத வேண்டும் எனும் எண்ணம் யாருக்கும் வரவில்லை. ஆணைகளைத் தமிழில் எழுதாதவர்களா தமிழில் கையொப்பமிடப் போகிறார்கள்?

1967 இல் அண்ணா ஆட்சி 1969 முதல் 1975 வரை கலைஞர் ஆட்சி, 1976 'மிசா' ஆட்சி, 1977 இல் புரட்சித்தலைவர் ஆட்சி; அண்ணா ஆட்சி, கலைஞர் ஆட்சியிலும் இது கருதப்படவில்லை.

தமிழ்நாட்டில் - தமிழ் மாநிலத்தில் - தமிழ் ஆட்சிமொழியாகச் சட்டப்படி அறிவிக்கப்பட்டு 20.ஆண்டுகளாகியும் மிகப் பலர் ஆங்கிலத்திலேயே கையொப்பமிட்டு வந்தனர். ஆனால் 1978 இல் புரட்சித்தலைவர் காலத்தில் அவரது கவனத்துக்கு இது கொண்டு செல்லப்பட்டபின், யாரோ ஒரு தமிழ் உணர்வுள்ள செயலாளரும் இதில் உறுதியாக இருந்தபின் 21.6.1978 (எண்1134) இல் ஓர் அரசாணை பிறப்பிக்கப்படுகிறது.

G.O. Ms. No.1134, dated 21.6.1978 Education (TD) Department, Government of Tamilnadu.

ABSTRACT

Official Language - Introduction of Tamil in Government Offices - Signing of names by Government Servants in Tamil - Notification - Issued.

Read :

1) From the Director of Tamil Development letter No.15887/76/A3, dated 14.10.76

2) From the Director of Tamil Development letter No.1655/77/A3, dated 15.3.77

3) From the Director of Tamil Development letter No.1655/77/A3, dated 16.6.77

The following Notification will be published in the Tamilnadu Government Gazette:

NOTIFICATION

In Exercise of the power conferred by section 4 of the Tamilnadu Official Language Act, 1956 (Tamilnadu Act XXXIX of 1956) the Governor of Tamilnadu hereby directs that with effect on and from the 21st June 1978 all Government Servants working under the administrative control, of the Government of Tamilnadu shall sign their names only in Tamil in all case excepting those referred to in para 4 of Government Order Miscellaneous No.2070, Education (Tamil Development), dated the 2nd December 1971.

C.G. RANGABASHYAM,
Commissioner & Secretary To Govt.

அரசாணையை ஆங்கிலத்தில் வெளியிட்டிருக்கிறீர்களே, தமிழில் உள்ள அரசாணையைத் தந்திருக்கலாமே என்று நீங்கள் கேட்பது என் காதில் விழுகிறது. தமிழில் அரசாணை வெளியிட்டிருந்தால் அல்லவா நான் அதைத் தருவதற்கு?

தமிழில் கையொப்பமிடுங்கள் என்பதற்கான அரசாணை ஆங்கிலத்தில் வருகிறது.

'All Govt. Officials should sign only in Tamil'

அடடா! என்ன அழுத்தம். அனைவரும் தமிழில் மட்டும் கையொப்பமிடவேண்டுமாம். ஆனால் அப்படி அழுத்திச் சொல்கிற அரசுச் செயலாளர் அதைத் தமிழில் சொல்லமாட்டாராம்? 'தமிழில்தான் கையொப்பம்' எனும் அரசாணையிலாவது தமிழில் கையொப்பமிட்டிருக்கிறார்களா?

தமிழில்தான் பேசவேண்டும் என்று கட்டாயப்படுத்தும் ஒருவர் 'you must speak only in Tamil' என்று சொல்வதைப் போன்றதுதான் இதுவும்.

அரசுச் செயலாளர்கள் - அரசு அலுவலர்கள் யாருக்கோ போடுவது போல் ஓர் அரசாணையைப் பிறப்பித்து விட்டுத் தாங்கள் பின்பற்றாத ஓர் இரட்டை நிலை இருந்ததை - எந்த அரசாணைக்கும் கட்டுப்படாத ஒரு தான்தோன்றித்தனம் இருந்ததைக் காணலாம்.

நான் பொறுப்பேற்ற பிறகு பல மேடைகளில் பேசியாகிவிட்டது. இது குறித்து, அமைச்சரவையிலேயே எடுத்துச் சொன்னேன். முதல்வர் 'அனைத்து அமைச்சர்களும் இனித் தமிழில்தான் கையொப்பமிடவேண்டும்' என்று கூறினார். முதல்வரே தெரிவித்துவிட்டார்; அமைச்சர்கள் அதைப் பின்பற்றினார்கள் என்றே கூறலாம்.

இது குறித்து நானும் தொடர்ந்து வலியுறுத்திவந்தேன்.

(9.5.97 மாலை மலரில் வந்த செய்தி)

அதை அப்படியே பார்த்துக் கொள்ளுங்கள். கடும் எச்சரிக்கை விடுத்துள்ளேன். என் பேச்சு இதுதான்.

ஈரோட்டில் ஆட்சிமொழிக் கருத்தரங்கு - அமைச்சர் தமிழ்க்குடிமகன் கடும் எச்சரிக்கை - தமிழில் கையெழுத்து போடாவிட்டால் நடவடிக்கை

ஈரோடு, மே.9-

தமிழில் கையெழுத்துப் போடாவிட்டால் கடும் நடவடிக்கை எடுக்கப்படும் என்று அதிகாரிகளுக்கு அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை விடுத்துள்ளார்.

தமிழ்நாட்டில் உள்ள அதிகாரிகள் இனித் தமிழில் தான் கையெழுத்துப் போடவேண்டும். அவ்வாறு போடாத அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்கப்படும். அப்படித் தமிழில் கையெழுத்து போடாமல் இருந்தால் எந்த அலுவலகத்தில் இருந்து வந்தது என்பதை எனக்குத் தெரியப்படுத்துங்கள். நிச்சயம் நடவடிக்கை எடுக்கப்படும்.

(25.11.99 மாலைமலர் இதழில் வெளிவந்த செய்தி)

தாளில் வந்ததை ஒரு பார்வை பாருங்கள். பேச்சின் பகுதி இதோ:

"அரசு ஊழியர்கள் அனைவரும் கண்டிப்பாகத் தமிழில் கையெழுத்திடவேண்டும். அமைச்சர்களும் தமிழில் கையெழுத்திடவேண்டும் என்று ஏற்கெனவே முதல்வர் கூறி உள்ளார்."

(11.1.2000 இந்தியன் எக்சுபிரசு இதழில் வந்த செய்தி)

பெரம்பலூர் மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கில் பேசியதை அந்த இதழ் சுட்டிக் காட்டுகிறது.

**SIGN IN TAMIL OR FACE THE MUSIC : MINISTER**

Tiruchi Jan 10 - The Government would take action against officials who signed in languages other than Tamil, Minister for Tamil Language and Culture M. Tamilkudimagan has said.

நடவடிக்கை எடுப்போம் என இவ்வளவு கடுமையாக இருந்தும், எச்சரிக்கை செய்தும் பல அரசு ஊழியர்கள் செவி சாய்க்கவில்லை.

சார்நிலை அலுவலகங்கள், மாவட்ட ஆட்சியர் அலுவலகம், தலைமைச் செயலகத் துறைகளை ஆய்வு செய்தபோது எவ்வளவு பேர் தமிழில் கையொப்பமிடாமல் ஏமாற்றிக் கொண்டிருந்தனர் என்பதை அறிய முடிந்தது. அந்தந்தத் தலைப்பில் வரும் கட்டுரைகளில் அந்த விவரங்களைக் காணலாம்.

28.10.99 ஆம் நாளிட்ட "தினமலர்", "தமிழ் முரசு" இதழ்களில் நான் விருதுநகர் ஆட்சிமொழிக் கருத்தரங்கில் பேசிய செய்திகள் வந்துள்ளன.

தமிழில் கையெழுத்துப் போடவேண்டும் என்று ஆணை இருக்கிறது. ஆனால் தமிழில் கையெழுத்துப் போடக்கூட சிலரை வலியப் பிடித்துக் கையெழுத்துப் போட வைக்க வேண்டியிருக்கிறது.

அரசு ஊழியர்கள் கடைப்பிடிப்பார்களா?

நீங்கள் வாங்குகிற ஊதியம், பதவி உயர்வு, ஓய்வூதியம் ஆகியவை அரசு ஆணை பிறப்பித்துத் தான் நடக்கிறது. ஆனால் தமிழில் கையெழுத்துப் போடவேண்டும் என்ற அரசு ஆணையை ஏன் பின்பற்ற மறுக்கிறீர்கள்? தமிழ் அவ்வளவு இளக்காரமாகவா போய்விட்டது? நாம் போலித்தனமான வாழ்க்கை நடத்துகிறோம்.

அரசு ஆணையை மீறுபவர்களுக்குக் கண்டனம், பதவி இறக்கம், கூடுதல் ஊதியத்தை வெட்டுதல், பணி நீக்கம் ஆகிய 4 வகையான தண்டனைகள் உண்டு. நாங்கள் இதுவரை கை வைக்கவில்லை. வைத்தால் என்ன தவறு? (நவம்பர், 2003 இல் மேற்கண்ட தண்டனைகள் 999 அரசு ஊழியர்கட்கு வழங்கப்பட்டுள்ளது என்பதை உணரவும்)

எவ்வளவோ கடுமையாகப் பேசியுள்ளேன்.

"1978 ஆம் ஆண்டு புரட்சித்தலைவர், அரசு ஊழியர்கள் தமிழில் கையெழுத்துப் போடவேண்டும் என்று அரசாணை கொண்டு வந்தார். ஆனால் ஊழியர்கள் மாறவில்லை.

அரசாணை மீறுபவர்களுக்கு 4 தண்டனை உண்டு. அரசு ஊழியர்கள் இனியும் தமிழில் எழுதுவதைக் கடைப்பிடிக்காவிட்டால் தண்டனை கொடுக்கத் தயங்க மாட்டோம்."

இது அரசு ஊழியர்கள் நிலை; அரசுக்கு மடல் எழுதும் பொதுமக்களாவது பொறுப்போடு நடந்து கொண்டார்களா? என்றால் இல்லை.

சதாசிவம் சதானந்தம் என்பவர் தமிழில் சிறந்த நூலை (அவரே சொல்லிக் கொள்வது) எழுதியிருக்கிறாராம். அதனை வெளியிட, தமிழ் வளர்ச்சித் துறை நிதியுதவி வழங்க முடியுமா என்று அறிய விழைகின்றார். மடலையோ எனக்குத்தான் எழுதுகிறார். எல்லாம் எழுதிவிட்டு,

கையொப்பத்தை மட்டும் ஆங்கிலத்தில் போட்டுள்ளார். எனக்கு எப்படியிருந்திருக்கும் என்று சிந்தித்துப் பாருங்கள். அது மட்டுமன்று. அவரது முகவரி தருகிறார்.

பாரதி புரத்தில், பாரதிதாசன் வீதியில் குடியிருக்கிறார். கேட்கும் போதே எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறது. 'சர்வேயர் காலனி'யில் 'மார்ஷல் ஸ்ட்ரீ'டில் குடியிருக்காமல் அவரது இல்லம் இருக்கும் பகுதியே மகிழ்வைத் தருகிறது.

ஆனால் அதிலும் எண்:20 என்று போடாமல் 'நெ.20' என்று போடுகிறார்.

தமிழில் கையொப்பமிட முடியாத தறுதலைகள் எல்லாம் தமிழில் நூல் எழுதி நாட்டுக்கு வழிகாட்டுகிறார்களாம்.

அந்த மடல் இதுதான்.

மாண்புமிகு அமைச்சர்,
தமிழ் வளர்ச்சித்துறை
சென்னை - 600 009

ஐயா,

பொருள் : சிறந்த தமிழ் நூல்களை வெளியிட பொருளுதவி கோருதல் - சம்பந்தமாக.

சதாசிவம் சதானந்தமாகிய நான், தங்களுடைய கனிவான கவனத்திற்கு பணிவுடனே கொணர்வது யாதெனில், என்னால் எழுதப்பட்ட கல்வித்துறைகளும் அவற்றின் விரிவுகளும் என்ற நூலை வெளியிட பொருளுதவி யாதேனும் பெற இயலுமா என விழைகின்றேன்.

இந்நூலாவது கல்வித்துறைகளிலுள்ள படிப்புக்களைப் பற்றிய விரிவான தமிழ் ஆங்கில வரைவிலக்கணங்களை உள்ளடக்கியது. இந்நூலிற்கு அணிந்துரை முனைவர் சதாசிவம் அவர்கள், (இயக்குநர், உயிரியல் மூலக்கூற்று ஆய்வியற்துறை கோவை, கால்நடை அறிவியல் கல்லூரி) வழங்கியுள்ளார். தங்கள் பார்வைக்கு அணிந்துரை, நூலின் பொருள் (நகல்) ஆகியவற்றை இணைத்தனுப்புகிறேன். தயவு கொண்டு இந்த அரிய நூல் வெளிவந்து தமிழுலகிற்கு கிடைக்க ஆவன செய்யுமாறு பணிவோடு வேண்டிக் கொள்கிறேன்.

இப்படிக்கு தங்கள் பணிவுள்ள,
(Sadanantham)

அனுப்புநர்

ச.சதானந்தம், நெ.20, பாரதிதாசன் வீதி,
பாரதிபுரம், பாண்டிச்சேரி - 605 011

இதுவரைக்கும் குறிப்பாக உணர்த்தி வந்தேன். இப்போது வெளிப்படையாகச் சொல்ல வேண்டியதாகிவிட்டது. அண்ணாமலைப் பல்கலைக் கழகம் - திராவிட இயக்கக் கோட்பாடுகளை வளர்த்த இடம் - தமிழிசையை மேலோங்கச் செய்த இடம் - நாவலர், பேராசிரியர், கி.வீரமணி, பழ. நெடுமாறன், மதியழகன் போன்ற எத்தனையோ பேரை உருவாக்கிய இடம்.

அந்தப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறையில் மிகப் பெரும் பேரறிஞர்கள் எல்லாம் பணியாற்றியிருக்கிறார்கள். பண்டிதமணி, அ. சிதம்பரநாதனார், கோ.சுப்பிரமணிய பிள்ளை, வ.சுப. மாணிக்கம், ஞா. தேவநேயப் பாவாணர் போன்ற பலரது அறிவாற்றலையும் பெற்று வளர்ந்த கழகம். அதே தமிழ்த்துறையில் 1996 ஆம் ஆண்டில் பத்துத் தமிழறிஞர்கள் பணியாற்றுகின்றனர். இவர்களுக்குச் சம்பளம் 1996 ஜுன் மாதத்தில் உள்ளபடி 17467 மேல் எல்லை. 10846 கீழ் எல்லை. மற்ற எல்லோரும் பல ஆயிரங்களைச் சம்பளமாகப் பெறுபவர்கள். இவர்கள் பணியாற்றுவது அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அதிலும் புகழ் பெற்ற தமிழ்த்துறையில்; இவர்களின் மாதாந்திரச் சம்பளப் பட்டியலைப் பார்க்க நேர்ந்தது. பார்த்ததும், அதிர்ந்து போனேன். அடடா! என்ன தமிழ்ப் பற்று! தமிழை வளர்க்கும் - தமிழைப் பிறர்க்குக் கற்பிக்கும் தமிழ்த்துறை! அந்தப் பத்துப்பேரில் எட்டுப்பேர் ஆங்கிலத்தில் கையொப்பமிட்டுள்ளனர். இரண்டே பேர்தான் தமிழில் கையொப்பமிட்டவர்கள்; ஒருவர் முனைவர் ஆறு அழகப்பன், மற்றொருவர் பேராசிரியை மு. வள்ளியம்மை. என்ன ஆயிற்று மற்றவர்களுக்கு!

'ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும்' என்ற திருக்குறள் தான் நினைவுக்கு வந்தது.

இவர்கள் தமிழையும் கெடுத்து, அண்ணாமலை அரசரின் பெயரையும் கெடுத்து விட்டார்கள். ஆங்கிலத்தில்தான் கையொப்பமிட வேண்டும் என்று எவரும் கட்டாயப் படுத்தவில்லை. அப்படியானால் இரண்டு பேராசிரியர்கள் மட்டும் எப்படித் தமிழில் போட முடிந்தது? தமிழ்ப் பேராசிரியர்களே இவ்வளவு போலிகளாக இருக்கும் போது எங்குப் போய் முட்டிக் கொள்வது?

1996-2001 அமைச்சரவையில் இருந்தவர்களில் அதிகமான அளவில் வெளிநாடு சென்று வந்தவன் நான். அருள் கூர்ந்து என் கடவுச் சீட்டைப் (Passport) பாருங்கள். தமிழில்தான் கையொப்பமிட்டுள்ளேன். எந்த வெளிநாட்டுத் தூதரகமும் இதனை மறுக்கவில்லையே! எந்த வெளிநாட்டுக்காரனும் இதைக் கேட்கவில்லையே! அண்மையில் சீனா சென்ற போதும் எந்த இடரும் இல்லையே!



A N N A M A L A I U N I V E R S I T Y PAGE: 32

ACQUITANCE ROLL FOR THE MONTH OF MAY 1996

DEPARTMENT OF TAMIL

| TOKEN NO | NAME | GROSS EARNINGS RS. P | SIGNATURE |
|---|---|---|---|
| 195 | ANANDANATARAJAN A | 14816.00 | |
| 189 | ALAGAPPAN AR. | 16372.00 | |
| 197 | THANJARAJU P. | 13886.00 | |
| 195 | PALANIAPPAN AL. | 14045.00 | |
| 198 | CHANDRASEKARAN J. | 12629.00 | |

தமிழிலேயே கையொப்பமிட்டுவிட்டு உலகமெலாம் ஒருவன் சுற்றிவர முடியுமென்றால், உள்ளூரிலேயே சுற்றி வரும் இவர்களுக்கு என்னகேடு வந்தது? வயிற்றுப் பிழைப்புக்காகத் தமிழ் படித்து விட்டுவந்த இவர்களைத் தமிழ்த்தாய் மன்னிப்பாளாக!

கரூரில் பல்வேறு அரசு நிகழ்ச்சிகளில் பங்கு பெறும் போது கூட, அரசு ஊழியர்கள் தமிழில்தான் கையொப்பமிடவேண்டும் எனக் கண்டிப்புக் காட்டியுள்ளேன். (மாலை முரசு 3.7.98)

அரசு ஊழியர்கள் தமிழில்தான் கையெழுத்திடவேண்டும் - அமைச்சர் தமிழ்க்குடிமகன் கண்டிப்பு

கரூர், ஜுலை, 3-

அரசு ஊழியர்கள் தமிழில் தான் கையெழுத்திட வேண்டுமென்று அமைச்சர் தமிழக்குடிமகன் கூறினார்.'

நான் எவ்வளவோ கண்டிப்புக் காட்டி விட்டேன். இந்தக் கண்டிப்பு செய்தித் தாள்களின் வாயிலாக அனைவர்க்கும் தெரிவிக்கப்பட்டுள்ளது. தமிழ் வளர்ச்சிச் செயலர் மற்றும் இயக்குநர் நடத்திய மாவட்ட அலுவலக ஆய்வுகளிலும் கண்டிப்புக் காட்டப்பட்டுள்ளது. தமிழ் அமைப்புகளும் அரசு அலுவலர்கள் தமிழில் கையொப்பமிடவேண்டும் என வலியுறுத்தி உள்ளன. தமிழியக்கக் கூட்டம் தஞ்சையில் நடைபெற்றது. அதன் தீர்மானங்களைப் படியுங்கள்.

"தமிழியக்கத் தலைமைப் பொதுக்குழுக் கூட்டம் தஞ்சையில் பேராசிரியர் பி. விருத்தாசலம் தலைமையில் நடைபெற்றது. தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து 50க்கும் மேற்பட்ட தமிழ் அறிஞர்கள் கலந்துகொண்டனர். இக்கூட்டத்தில் பல்வேறு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. தமிழியக்கத்தின் தலைவராக இதுவரை பொறுப்பிலிருந்த டாக்டர் தமிழ்க்குடிமகனைத் தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத் துறை அமைச்சராக்கிய தமிழக முதல்வரைப் பாராட்டித் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தமிழில் கையெழுத்திட மறுக்கும் அரசு அலுவலர்களைப் பணி நீக்கம் செய்ய வேண்டும்.

ஐந்தாம் வகுப்பு வரையுள்ள பள்ளிகளில் தமிழாசிரியர் ஒருவரையும், நடுநிலைப் பள்ளிகளில் தமிழாசிரியர்கள் இருவரையும் பணியில் அமர்த்த வேண்டும். தமிழில் பிஎச்.டி., பட்டம் பெற்றவர்களைக் கல்லூரிகளிலும், எம்.'பில் பட்டம் பெற்றவர்களைப் பள்ளிகளிலும் கூடுதலாகப் பணியில் அமர்த்த வேண்டும். தமிழ்ப் பயிற்று மொழி வழியாகப் படிக்கும் மாணவர்களுக்கும், புலவர், எம்.ஏ., ஆகிய தமிழ் இலக்கியம் படிக்கும் மாணவர்களுக்கும் தேவையான பாடநூல்களை வாங்கித் தரும் பொறுப்பைத் தமிழக அரசே ஏற்க வேண்டும்."

நான் ஏற்கெனவே தலைவராக இருந்து நடத்திய தமிழியக்கம். அதன் தீர்மானம் இது.

தினமணி (12.6.1996) தினமலர் (12.6.96) செய்தித்தாள்களில் வந்ததைப் பல அரசு ஊழியர்கள் பார்க்காமல் இருந்திருக்க மாட்டார்கள்.

3.7.1996 ஆம் நாளிட்ட தினகரன் இதழில் வந்த செய்தியை அப்படியே தருகிறேன்.

"சென்னை மாநகராட்சி தனி அதிகாரியை தலைநகர் தமிழ்ச் சங்க செயலாளர் புலவர் த. சுந்தரராசன், பொருளாளர் முத்து எத்திராசன், துணைத் தலைவர் புலவர் ப. சாத்தன், முனைவர் மலையமான், மா. தமிழ்ச் செல்வன், ம. கணபதி ஆகியோர் சந்தித்துப் பேசினர்.

தமிழில் கையொப்பம்

தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தை மாநகராட்சியின் அனைத்து நிலைப் பதிவேடுகள். குறிப்பேடுகள், குறிப்புகள், அலுவலகங்களுக்கான கடித தொடர்புகள் அனைத்திலும் தமிழில் நிறைவேற்ற வேண்டியும், குறிப்பாக மாநகராட்சி ஆசிரியர் வருகைப் பதிவேடுகள், மாணவர் வருகைப் பதிவேடுகள், சுற்றறிக்கை மற்றும் அனைத்து நிலை நடவடிக்கைகளும் தமிழில் அமைந்திடவும், மாநகராட்சி ஆசிரியர்கள் - மாநகராட்சி ஊழியர்கள் அனைவரும் தமிழிலேயே கையொப்பம் இடவும் வற்புறுத்தினர்."

மாநகராட்சியில் அதற்குப் பிறகு மேயராகத் திரு. மு.க. ஸ்டாலின் வருகிறார். உண்மையில் மாநகராட்சி அலுவலர்கள் தங்கள் போக்குகளை மாற்றிக் கொண்டு விட்டார்களா?

நீங்கள்தான் ஆய்ந்து விடை சொல்ல வேண்டும்.

## இயல் - பதினெட்டு

# தமிழ்த் தட்டச்சுப் பொறி

தமிழ்த் தட்டச்சுப் பொறிகளுக்கு நீண்ட வரலாறு உண்டு. 1956 இல் ஆட்சிமொழிச் சட்டம் நிறைவேறிய பின் இது தொடர்பாக மிகுந்த கவனம் செலுத்தப்பட்டிருக்கிறது. தமிழில் தட்டச்சுச் செய்பவர்களை உருவாக்கவும், ஊக்குவிக்கவும், அலுவலகங்களில் போதுமான தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைக் கொண்டு வரவும் அதிகமாகவே காலம் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. அந்தந்த ஆட்சிக்காலத்தில் வெளியான அரசாணைகளில் தமிழ்த் தட்டச்சுக்காக என்ன செய்தார்கள் என்பதனை ஆங்காங்கே விளக்கியுள்ளேன்.

1996இல் நாங்கள் பொறுப்பேற்றபோது எல்லாரும் தமிழ்த் தட்டச்சுச் செய்யத் தெரிந்தவர்களாகவே இருந்தார்கள். எனவே அதிலே குறையில்லை. ஆனால் ஆங்கிலத்தில்தான் அதிகமான பக்கங்கள் தட்டச்சுச் செய்யப்பட்டன. இதுகுறித்து 'தலைமைச் செயலக ஆய்வு' எனும் தலைப்பில் விரிவாகப் பார்க்கலாம்.

எனவே, 1996க்குப் பின் தமிழ்த் தட்டச்சுப் பொறிகளை வாங்கவும், இவற்றை வழங்கவும் நாங்கள் எடுத்துக்கொண்ட முயற்சியை மட்டும் இங்குப் பேசலாம்.

96-97 வரவு செலவுத் திட்டத்திலேயே இதுகுறித்து அறிவிக்கப்பட்டது.

"தமிழைப் பல்வேறு முனையிலும் வளர்த்திட இவ்வரசு முன்வந்துள்ளது. அதற்காகவே தனிக்கவனம் செலுத்தித் தமிழை வளர்க்கத் தனி அமைச்சகம் உருவாக்கப்பட்டுள்ளது. வெகு விரைவில் தமிழ் முழு ஆட்சிமொழியாக விளங்க ஆவன செய்யப்படும். 1956இல் இயற்றப்பட்ட ஆட்சிமொழிச் சட்டம், பல அரசாணைகள் பிறப்பிக்கப்பட்டும் முழுமையாக நிறைவேறவில்லை எனும் ஆதங்கத்தைப் போக்கும் வகையிலும், தலைமைச் செயலகத்திலிருந்து இப்பணி தொடங்கும் வகையிலும், முதல்கட்டமாக தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் 500 வழங்கிட இந்த அரசு முன் வந்துள்ளது."

13.12.96 அன்று 100 தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் எழுது பொருள் துறைக்கு வழங்கப்பட்டன.

இதனை ஒரு சிறிய தொடக்க விழாவாக வைக்க வேண்டும் என்று விரும்பியதால் முதல்வர் அறையிலேயே இந்த விழா நடைபெற்றது. 16.12.96 அன்று எழுது பொருள் அச்சுத்துறையிலிருநது 6 (ஆறு) தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் பெறப்பட்டன. மாண்புமிகு முதல்வர் அவர்கள் இந்த ஆறு தட்டச்சுகளையும் தமிழ் ஆட்சிமொழி மற்றும் பண்பாட்டுத்துறை அமைச்சர் முன்னிலையில் கீழ்க்கண்ட ஆறு துறைச் செயலர்களிடம் அளித்தார்கள்.

| | | |
|---|---|---|
| 1. | பொதுத்துறை | 1 |
| 2. | பணியாளர் மற்றும் நிர்வாக சீர்திருத்தத்துறை | 1 |
| 3. | நிதித்துறை | 1 |
| 4. | வருவாய்த்துறை | 1 |
| 5. | சமூக நலத்துறை | 1 |
| 6. | வணிக வரித்துறை | 1 |
| | மொத்தம் | 6 |

அனைவருக்கும் ஒரே அளவுள்ள தட்டச்சுப் பொறிகளை வழங்காமல் மூன்று அளவுகளில் அவை வழங்கப்பட்டன. சில நேரம் பெரிய படிவங்களைத் தட்டச்சுச் செய்ய நேரும். சில நேரங்களில் ஒரு சிறிய மடற்கட்டில் தட்டச்சுச் செய்ய நேரும்.

எனவே பல்வேறு வசதிகளைக் கருத்தில் கொண்டு தலைமைச் செயலகத்தில் உள்ள 31 துறைகளிலும் 482 தட்டச்சுப் பொறிகள் எப்படிப் பிரித்து வழங்கப்பட்டன என்பதைக் காணலாம்.

அரசாணை (நிலை) எண். 194, தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை, நாள் : 2.9.96

தலைமைச் செயலகத் துறைகளுக்கு வழங்குவதற்கான வெவ்வேறு அளவுகள் உள்ள தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் விவரம்

| | துறையின் பெயர் | வழங்கப்பட வேண்டிய தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் | சிற்றளவு Foolscap Size | சாதாரண அளவு Brief Size | பேரளவு Policy Size |
|---|---|---|---|---|---|
| 1. | தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறை | - - | - - | - - | - - |
| 2. | பணியாளர் மற்றும் நிர்வாக சீர்திருத்தத் துறை | 25 | 15 | 5 | 5 |
| 3. | கல்வி, அறிவியல் மற்றும் தொழில் நுட்பத் துறை | 19 | 10 | 6 | 3 |
| 4. | திட்டம் மற்றும் வளர்ச்சித் துறை | 8 | 4 | 2 | 2 |
| 5. | சட்டத் துறை | 21 | 3 | 16 | 2 |
| 6. | சட்டப் பேரவைத் துறை | 15 | 3 | 10 | 2 |
| 7. | கால்நடை பராமரிப்புத் துறை | 11 | 3 | 4 | 4 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 8. | செய்தி சுற்றுலாத் துறை | 7 | 3 | 3 | 1 |
| 9. | வேளாண்மைத் துறை | 27 | 7 | 12 | 8 |
| 10. | வருவாய்த்துறை | 13 | 7 | 4 | 2 |
| 11. | போக்குவரத்துத்துறை | 7 | 3 | 2 | 2 |
| 12. | உள் துறை | 35 | 15 | 10 | 10 |
| 13. | பொதுத்துறை | 53 | 20 | 20 | 13 |
| 14. | தொழில் துறை | 10 | 3 | 4 | 3 |
| 15. | கூட்டுறவு, உணவு மற்றும் நுகர்வோர் பாதுகாப்புத் துறை | 13 | 6 | 4 | 3 |
| 16. | நிதித்துறை | 44 | - - | 39 | 5 |
| 17. | நலவாழ்வு மற்றும் குடும்பநலத்துறை | 18 | 12 | 6 | - - |
| 18. | பொதுப்பணித்துறை | 22 | 9 | 9 | 4 |
| 19. | சிறு தொழில் துறை | 6 | 2 | 2 | 2 |
| 20. | தொழிலாளர் மற்றும் வேலைவாய்ப்புத் துறை | 18 | 6 | 8 | 4 |
| 21. | மதுவிலக்கு (ம) ஆயத்தீர்வைத்துறை | 9 | 2 | 4 | 3 |
| 22. | வீட்டுவசதி-நகர மேம்பாட்டுத்துறை | 14 | 4 | 9 | 1 |
| 23. | சுற்றுச் சூழல் மற்றும் வனத்துறை | 16 | 2 | 10 | 4 |
| 24. | நகராட்சி நிர்வாகம் மற்றும் குடிநீர் வழங்கல் துறை | 10 | 6 | 2 | 2 |
| 25. | வணிகவரி மற்றும் அறநிலையத்துறை | 15 | - - | 12 | 3 |
| 26. | ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் நலத்துறை | 14 | 8 | 4 | 2 |
| 27. | எரிசக்தித்துறை | 3 | - - | 2 | 1 |
| 28. | கைத்தறி, கைவினை, துணி நூல் மற்றும் கதர்த்துறை | 2 | 1 | - - | 1 |
| 29. | சமூகநலம் மற்றும் சத்துணவுத் திட்டத்துறை | 6 | - - | 4 | 2 |
| 30. | பிற்பட்ட வகுப்பினர் மற்றும் மிகவும் பிற்பட்ட வகுப்பினர் துறை | 5 | 2 | 2 | 1 |
| 31. | ஊரக வளர்ச்சித் துறை | 16 | 6 | 5 | 5 |

அதற்குள் ஒரு சிறு காட்சி (A Flash Back). தட்டச்சுப் பொறிகளை வாங்கியளித்த இ.ஆ.ப. அலுவலர்கள் நிலை குறித்தது இது.

32 மின்னணுத் தட்டச்சு உட்பட 500 தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் வாங்க உருபா 50/- இலட்சம் ஒதுக்கப்பட்டது. (96-97 வரவு செலவுத் திட்டம்) தமிழ்த்துறை 2.9.96 அன்று அரசாணை எண் 194ஐ வெளியிட்டது

இதனைச் செயற்படுத்தும் சீலா பாலகிருட்டிணன், இ.ஆ.ப. (எழுதுபொருள் அச்சுத் துறை இயக்குநர்) இது தொடர்பாக ஒப்பந்தப்புள்ளி கோரி எடுத்த நடவடிக்கை குறித்து 'ஆங்கிலத்தில்' அறிக்கை தந்துள்ளார். கையொப்பமும் ஆங்கிலத்திலேயே இட்டுள்ளார். மடல் Sy. No.J1 /11027/ 96 நாள் : 8.11.96

தொடர்ந்து பொறுப்பேற்ற ந. முருகன், இ.ஆ.ப. ஒரு மடலை ஆங்கிலத்திலேயே எழுதியுள்ளார். நாள் : 17.12.1996. கையொப்பமும் ஆங்கிலத்தில் இட்டுள்ளார். மூன் று மாதமாகியும் பணி முடியவில்லை என்பதற்காக நானே தொடர்ந்து தொலைபேசியில் முடுக்கி வந்தேன். அது குறித்து அவரே எழுதியுள்ளார்.

(Since the process was taking much time and the Hon'ble Minister for Tamil Development was repeatedly asking for the purchase . . . . . )

12.11.96இல் குழு அமைக்கப்படுவது குறித்து எழுதப்பட்ட அறிக்கையும் ஆங்கிலத்தில்தான் உள்ளது.

பிறகு 22.12.96 இல் நிதித்துறை எழுதிய குறிப்புகளும், செய்தி, சுற்றுலாத் துறைச் செயலர் எழுதிய குறிப்பும் ஆங்கிலத்தில் உள்ளன.

'The Hon'ble Minister (Tamil Development) spoke to me, regarding this and pointed out the delay in the procurement of these equipments'

என்று துரை. சுந்தரேசன் கைப்படக் குறிப்பெழுதி, கையொப்பத்தையும் ஆங்கிலத்திலேயே போட்டுள்ளார்.

துரை. சுந்தரேசன் பற்றிய ஒரு குறிப்பையும் இங்கே தருவது நல்லது. மற்றவர்களை விட இவர் மிகுதியான தமிழ் ஆர்வம் உடையவர் (என்று கருதுகின்றேன்)

இவர் 9 நூல்களைத் தமிழில் எழுதியிருக்கிறார். இதை யாரும் நம்ப மாட்டார்கள். எனினும் விவரம் என் கையில் உள்ளது. அதிலும் 'தமிழ் ஆட்சிமொழி - ஒரு வரலாற்று நோக்கு' எனும் நூல் தமிழநாடு அரசின் பரிசு பெற்றது. 'தமிழ் ஆட்சிமொழி - ஒரு வரலாற்று நோக்கு' - "மாநாடுகள், இதழ்கள்" எனும் மற்றொரு நூலையும் எழுதியுள்ளார். அவரே எழுதுகிறார் :

"சட்டமன்றத்தில் பிரதிபலித்த கருத்துகளோடும் , மாநாடுகளிலும் பத்திரிகை வாயிலாகவும் வெளிவந்த செய்திகளின் அடிப்படையிலும் தயாரிக்கப்பட்ட என்னுடைய முதல் நூலும், இப்பொழுது

கொடுக்கப்பட இருக்கின்ற நூலும் தவிர, ஆட்சிமொழி பற்றிய தற்போதைய நிலைமையையும், எதிர்காலத்தில் செய்ய வேண்டிய பணிகளையும் பற்றிய என் கணிப்பை அடுத்த நூலாகக் கொண்டு வர எண்ணியுள்ளேன்" என்கிறார்.

அவரே மற்றோர் நூலில் எழுதுகிறார்.

"அரசாங்க அலுவலகங்களில் தமிழைப் புகுத்த புதிய முயற்சிகளும், நோக்கமும் 1969-70க்குப் பிறகு எடுத்துக் கொண்டிருப்பார்கள் என்றே தோன்றுகிறது. 1956 முதற்கொண்டு, 1970 ஆம் ஆண்டு வரையிலான 15 ஆண்டுக் காலத்தில் ஏற்பட்ட முன்னேற்றத்தை அவ்வளவு சிறப்பானதாகவோ, வேகமானதாகவோ கருத முடியாது. அரசாங்கக் கடிதப் போக்குவரத்தும், சட்ட திட்டங்களைத் தமிழில் கொண்டு வருவதும் தனியாக இதற்கென்றே ஏற்பட்ட துறையின் வேலையாகும் என்பது போலத்தான், மற்ற எல்லாத் துறைகளும் எண்ணுவது போலத் தோன்றுகிறது. கடிதப் போக்குவரத்தை விரைவுபடுத்துவதும், அலுவலகக் குறிப்புகள், ஆய்வுகள், ஆணையிடுதல் முதலிய எல்லாச் செயல்களையும் ஒவ்வொரு துறையும் எப்படித் தங்களுடைய நியாயமான, சொந்த, சட்டப்பூர்வமான வேலையாகக் கருதுகிறார்களோ, அதே போன்று, தமிழ்ப்படுத்துவதையும் தங்களுக்குள்ளாகவே செயல்படுத்த முனைந்தால் ஒழிய, இம்முயற்சி வெற்றி அடையாது; நிலையான பயனைத் தராது"

இவ்வளவு விரிவாக எந்த இ.ஆ.ப. அலுவலரும் 'தமிழ் ஆட்சிமொழி' பற்றிச் சிந்திக்கவில்லை.

ஆனால் நான் தமிழ் ஆட்சிமொழியைச் செயற்படுத்துவதற்கென்றே அமைச்சராக அமர்த்தப்பட்டும், எனக்கு வரும் கோப்பிலேயே 'ஆங்கில'த்தில் குறிப்பெழுதியுள்ளார்.

'பேசுவது மானம்; இடை, பேணுவது காமம்' என்பானே கம்பன்.

அதுதான் இது.

தமிழ் ஆட்சி மொழி பற்றி இரண்டு நூல்களை எழுதிவிட்டு, தான் தமிழைத் தொடுவதில்லை என்று காட்டுகின்ற இவர்களை என்ன சொல்வது?

எவரையோ வைத்துக் கருத்துகளை நூலாகத் தொகுத்துத் தன் பெயரால் நூலை வெளியிட்டவரே தவிர, இவர் அந்தக் கருத்துடையவர் என்று சொல்வதற்கு வாய்ப்பில்லையே! என்ன கொடுமை?

தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தையோ, ஆட்சிமொழித் தொடர்பான ஆணைகளையோ செயற்படுத்த வேண்டும் எனும் எண்ணம் இவர்களுக்கு அறவே இல்லை.

ஆங்கில வல்லாண்மை மனப்பாங்கும், ஆங்கிலக் கல்வியால் ஏற்பட்ட மேட்டிமையும் இவர்களிடத்தில் நீக்கமற நிறைந்துள்ளன.

8.1.97 அன்றும் 28.1.97 அன்றும் தமிழ் வளர்ச்சித் துறைச் செயலாளர் தலைமைச் செயலாளர், துறைகளின் செயலாளர்களுக்கு நேர்முகக் கடிதம் அனுப்பினார். அதன்படி அவர்களிடம் மிகையாக உள்ள ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளை ஒப்படைத்துவிட்டு, தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைப் பெற்றுக்கொள்ள வேண்டும். 31.3.97 வரை 14 துறைகள்தான் முழுமையாகப் பெற்றுக் கொண்டிருக்கின்றன. மீதியுள்ள 17 துறைகள் முழுமையாகப் பெறவில்லை.

வை. பழனிச்சாமி, இ.ஆ.ப., அரசுச் செயலாளர், தமிழ் வளர்ச்சி -பண்பாட்டுத்துறை (தவ 2-1)

நே.மு.கடித எண். 8963/தவ2-1/96-6 நாள் 8.1.97

அன்பார்ந்த திரு,

பொருள் : தமிழ் வளர்ச்சி - தட்டச்சு - தலைமைச் செயலகத் துறைகளின் பயன்பாட்டுக்கெனப் போதிய அளவு தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் வழங்குதல்.

பார்வை :

1. அரசாணை (நிலை) எண்.49 தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறை, நாள். 7.2.96
2. அரசாணை (நிலை) எண்.194, தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை, நாள்.2.9.96
3. அரசு எழுதுபொருள் அச்சுத் துறை இயக்குநரின் நே.மு.கடித எண்.பி1/22205/96, நாள்.31.12.96

தமிழ் ஆட்சி மொழித் திட்டத்தைச் செம்மையாகச் செயற்படுத்த வேண்டும் என்ற நோக்கத்துடனும், தலைமைச் செயலகத் துறைகள் ஒவ்வொன்றிலும் உள்ள மொத்த தட்டச்சுப் பொறிகளில் 65% அளவுக்கு குறையாமல் தமிழ்த் தட்டச்சுப் பொறிகளாக இருத்தல் வேண்டும் என்ற அரசின் ஆணை அடிப்படையிலும், தலைமைச் செயலகத் துறைகளின் பயன்பாட்டுக்கென 500 தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் வாங்கி வழங்க பார்வை 2ல் கண்ட அரசாணையில் ஆணை வெளியிடப்பட்டது.

2. அவ்வரசாணையின்படி அரசு எழுதுபொருள் அச்சுத் துறையில் புதிய தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் வாங்கப்பட்டுள்ளன. அவ்வாணையில் இணைப்பில் குறிப்பிடப்பட்டுள்ள தேவைப் பட்டியலின் படி (நகல் இணைக்கப்பட்டுள்ளது) தங்கள் துறையில் மிகையாக உள்ள ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளை அரசு எழுதுபொருள் அச்சுத் துறையில் உடனே ஒப்படைத்து அதற்கு ஈடான புதிய தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைப் பெற்றுக்கொள்ளுமாறு தங்களைக் கனிவுடன் கேட்டுக் கொள்கிறேன். இது குறித்து எடுத்த நடவடிக்கைகளின் விவரத்தினைத் தெரிவிக்குமாறும் கேட்டுக் கொள்கிறேன்.

தங்கள் அன்புள்ள,

* * *

வை. பழனிச்சாமி, இ.ஆ.ப., தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் (தவ2-1)துறை,
அரசுச் செயலாளர்

நே.மு.கடித எண்.8963/தவ2-1/96-6 நாள் 8.1.97

அன்பார்ந்த திரு.

பொருள் : தமிழ் வளர்ச்சி - தட்டச்சு - தலைமைச் செயலகத் துறைகளின் பயன்பாட்டுக்கெனப் போதிய அளவு தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் வழங்குதல்.

பார்வை : எனது நே.மு.கடித எண்.8963/தவ2-1/96.6 தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை நாள் 8.1.97

பார்வையில் குறிப்பிட்டுள்ள நேர்முகக் கடிதத்தில் தங்களைக் கேட்டுக் கொண்டபடி, தங்கள் துறையில் மிகையாக உள்ள ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளை அரசு எழுதுபொருள் அச்சுத் துறையில் ஒப்படைத்து அதற்கு ஈடாகப் புதிய தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் பெறப்பட்டுவிட்டனவா என்பதைத் தெரிவிக்குமாறும், இன்னமும் இது குறித்து நடவடிக்கை எடுக்காமல் இருந்தால் 7.2.97க்குள் உடனடியாக நடவடிக்கை எடுத்துத் தகவலைத் தெரிவிக்குமாறும் தங்களைக் கனிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

தங்கள் அன்புள்ள,

* * *

உடனடியாக இந்தத் தட்டச்சுப் பொறிகளை எடுத்துக்கொள்ளச் சொல்லி நானே பல அமைச்சர்களிடம் சொன்னேன். நானே பல இ.ஆ.ப. அலுவலர்களிடம் தொலைபேசியில் பேசினேன். மிகச் சிலர் உடனே எடுத்துக்கொண்டனர். சிலர் மிகவும் தயங்கி எடுத்தனர். அதிலும் அரைகுறையாக - 18 எடுக்க வேண்டுமென்றால் 9 ஐ எடுப்பது, சிலர் என்னிடமே தெரிவித்தனர் - 'தமிழ்த் தட்டச்சுப் பொறியை எடுத்துக் கொள்கிறோம். ஆனால் ஆங்கிலத் தட்டச்சுப் பொறியையும் தொடர்ந்து நாங்களே வைத்துக்கொள்கிறோம்' என்றார்கள். இது எப்படிப்பட்ட முரண்?

பணியாளர் (ம) நிர்வாக சீர்திருத்தத்துறை, உள்துறை, பொதுத் துறை, நீதித்துறை போன்றவற்றில் அதிக அளவிலான ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகள் பயன்படுத்தப்பட்டு வந்தன என்ற உண்மையைக் காணலாம். இவை அனைத்துக்கும் அமைச்சர் மாண்புமிகு முதலமைச்சர்தான். இத்துறைகள் எவ்வளவு காலம் ஏமாற்றி வந்தன என்பதையும் இதன் மூலம் கண்டறியலாம்.

பொதுத்துறை, நிதித்துறை, உள்துறை ஆகியவற்றுக்குத் 'தமிழ் ஆட்சிமொழி' என்ற எண்ணம் கிஞ்சிற்றாவது இருந்திருக்குமா? இல்லை என்றுதான் இந்த நிலை காட்டுகிறது.

இந்த நேரத்தில் கோத்ரெஜ் நிறுவனம் ஓர் அருமையான பணியைச் செய்தது.

தமிழ், ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளிலும் தட்டச்சுச் செய்யும் வகையில் 'இருமொழி மின்னியல் தட்டச்சுப் பொறி'யை உருவாக்கி அளித்தது.

"தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறை மானியக் கோரிக்கை மீதான விவாதத்திற்குப் பதிலளிக்கையில் அமைச்சர் கூறியதாவது :

ஆட்சிமொழிச் சட்டம் 1956 இல் வந்தாலும் 40ஆண்டு காலமாக முறைப்படி செயல்படுத்தவில்லை என்ற ஆதங்கம் உண்டு. சென்ற ஆண்டு 500 தமிழ்த் தட்டச்சுகள் வாங்கப் பட்டன. இவை அனைத்தும் தலைமைச் செயலகத்தில் வைக்கப்பட்டன. தற்போது மேலும் 500 தமிழ்த் தட்டச்சுகள் வாங்கப்படும்.

ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளின் விசைப்பலகைகளைத் தமிழாக மாற்றம் செய்ய ரூ.10 இலட்சம் செலவிடப்படும்"

இது சட்டப் பேரவையில் மானியக் கோரிக்கையின் போது பேசிய பேச்சு. ஆக, முதல் இரண்டு ஆண்டுகளிலேயே ஏறத்தாழ 1000 தமிழ்த் தட்டச்சுப் பொறிகளை வாங்கிடத் தமிழக அரசு உருபா.90/- இலட்சம் ஒதுக்கீடு செய்தது என்பது வரலாறு. இதுவரையில் தமிழ்த் தட்டச்சுகள் இந்த அளவு வாங்கப்பட்டதுமில்லை, இவ்வளவு தொகை இதற்காக ஒதுக்கப்படவுமில்லை.

இந்தத் தட்டச்சுப் பொறிகள் எப்படி வழங்கப்பட்டன; அரசு அலுவலர்கள் எவ்வாறு ஒத்துழைத்தனர் என்பதை அடுத்து வரும் செய்திகளிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

எங்கள் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் தந்த ஒரு செய்தி இங்கு கவனத்திற் கொள்ளற் குரியது. (மக்கள் செய்தி 1.4.97)

தமிழில் எழுத உத்தரவு; ஆனாலும் ஆங்கிலமே தொடரும் அவலம்

அரசுத் துறைகளில் இன்னும் ஆங்கில ஆதிக்கமே மேலோங்கியுள்ளது. மருத்துவமனைகளில் மருத்துவர்கள் ஆங்கிலத்திலேயே எழுதுகின்றனர். தமிழில் கையொப்பம் இடவேண்டும் என ஆணை இருந்தும் அரசு அலுவலர்கள் ஆங்கிலத்தில் கையொப்பம் இடுகின்றனர்.

தாம்பரம் காசநோய் நீக்கு மருத்துவமனையில் நான்கு தட்டச்சர்கள் உள்ளனர். இவர்கள் எல்லோருக்கும் தமிழ்த் தட்டச்சு தெரியும். மருத்துவமனையில் மூன்று தமிழ்த் தட்டச்சு இயந்திரமும், ஒரு ஆங்கிலத் தட்டச்சு இயந்திரமும் உள்ளன. இந்த நான்கு தட்டச்சரும் கடந்த ஆண்டு 11370 பக்கங்கள் தட்டச்சு செய்து உள்ளனர். இதில் தமிழ்த் தட்டச்சு செய்தது 6016 பக்கங்கள் மட்டுமே என்பது காஞ்சிபுரம் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் 20.1.97 அன்று ஆய்வு செய்தபோது தெரிய வந்தது. மீண்டும் 27.2.97 அன்று உதவி இயக்குநர் ஆய்வு செய்தபோது தட்டச்சு செய்த மொத்த பக்கங்கள் 3632. இதில் 2328 பக்கங்கள் தமிழ்த் தட்டச்சு செய்யப்பட்டுள்ளது."

மூன்று தமிழ்த் தட்டச்சு இருந்தும் 6016 பக்கங்கள் தட்டச்சுச் செய்துள்ளனர். ஆனால் ஒரே ஓர் ஆங்கிலத் தட்டச்சை வைத்துக்கொண்டு 5354 பக்கங்கள் தட்டச்சுச் செய்துள்ளனர். எனவே சட்டப்படி 75 விழுக்காடு தமிழ்த் தட்டச்சுகள் இருந்தும் ஓர் அலுவலகம் ஆங்கிலத்திலான நடவடிக்கைகளைக் குறைத்துக் கொள்ளவில்லை.

'தாம்பரம் காசநோய் நீக்கு மருத்துவமனை' பிற மாநிலங்கட்கோ, நடுவண் அரசுக்கோ நேரடியாக எழுதும் தேவையுள்ளதா என்றால் இல்லை. இவர்கள் தொடர்பெல்லாம் தமிழ் நாட்டுக்குள் தான். அப்புறம் ஏன் இந்த நிலை? எண்ணிப்பாருங்கள்.

மற்றோர் எடுத்துக்காட்டு. ஒரு மாவட்ட ஆட்சியாளர் அலுவலகத்தை எடுத்துக்கொண்டு பார்க்கலாம். தமிழ் ஆட்சி மொழிச் சட்டம் இயற்றப்பட்ட பின் பல அரசாணைகளும் அதன் தொடர்பாகப் பிறப்பிக்கப்பட்ட பின் இத்திட்டத்தைச் செயற்படுத்த (சோதனை முறையில் ) ஒரே ஒரு மாவட்டம் தேர்ந்தெடுக்கப்பட்டது. அதுதான் திருச்சிராப்பள்ளி மாவட்டம். பிற்காலத்தில் பெரும்பிடுகு முத்தரையர் மாவட்டம் எனும் பெயரைப் பெற்று, 'சாதிக் கலவரங்கள்' நடைபெற்றதை ஒட்டி அனைத்துத் தலைவர்களின் பெயர்களும் (தி.மு.க. ஆட்சிக் காலத்தில்) நீக்கப்பட்டபோது இந்த மாவட்டமும் மறுபடி திருச்சிராப்பள்ளி மாவட்டமாகவே ஆகிவிட்டது.

இராசாசி காலத்திலிருந்து இந்த மாவட்டத்தில் தமிழ் ஆட்சி மொழித் திட்டம் செயற்பட்டு வருகிறது. ஆட்சிச் சொற்காவலர் கீ. இராமலிங்கனார் இங்கு நகராட்சி ஆணையராக இருந்து, ஏராளமான ஆட்சிச் சொற்களை உருவாக்கிப் புழக்கத்திற்குக் கொண்டு வந்தார். அவர் காலத்தில் எழுதப்பட்ட அழகான தமிழ்ப் பெயர்களை நானே கண்ணால் பார்த்தவன். (1956 முதல் 1960 வரை திருச்சியில் கல்லூரியில் படித்தேன்)

அப்படியிருந்தும் 1996 இல் எந்த 'இலட்சணத்தில்' இருக்கிறது பாருங்கள். ஆட்சிக்கு வருவதற்கு முன்பும், வந்த பின்பும் கூட ஒரே நிலைதான்; கடைநிலை.

முறைப்படி தமிழ்த் தட்டச்சு இன்னும் அதிகமாக இருக்க வேண்டும். வரைவுகள் தட்டச்சுச் செய்யப்பட்ட பக்க அளவுகளை ஒப்பீட்டுப் பாருங்கள்.

சனவரி 96இல் (அ.தி.மு.க. ஆட்சிக் காலம்) தமிழில் 1807 பக்கங்கள் என்றால் ஆங்கிலத்தில் 1132 பக்கங்கள். 40 ஆண்டுகளாக இந்த முன்னோடி மாவட்டம் காட்டிய முன்னேற்றத்தைப் பார்த்தீர்களா!

சரி! நாங்கள் ஆட்சிக்கு வந்துவிட்டோம்! தமிழ் ஆட்சி மொழி வேகமாகச் செயற்படும் காலம் இது. திருச்சி மாவட்ட அலுவலர்கள் அப்போதாவது திருந்தியிருக்கிறார்களா?

அக்டோபர் 96 இல் தமிழில் 1088 பக்கங்கள் என்றால் ஆங்கிலத்தில் 824 பக்கங்கள்.

'இவர் திருந்தவில்லை; மனம் வருந்தவில்லை;

அரசாணைகள் எவற்றையும் மதிக்கவில்லை. . .

மாவட்ட ஆட்சியர் அலுவலகம்

திருச்சிராப்பள்ளி மாவட்டம்

| | | |
|---|---|---|
| 1. தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் | - | 3 |
| 2. ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகள் | - | 3 |
| மொத்தம் | - | 6 |

வரப் பெற்ற வரைவுகள்

| திங்கள் | தமிழ் | ஆங்கிலம் |
|---|---|---|
| 1. சனவரி '96 | 1807 | 1132 |
| 2. பிப்ரவரி '96 | 701 | 436 |
| 3. மார்ச் '96 | 674 | 800 |
| 4. ஏப்ரல் '96 | 1230 | 439 |
| 5. மே '96 | 666 | 457 |
| 6. சூன் '96 | 1392 | 690 |
| 7. சூலை '96 | 1212 | 781 |
| 8. ஆகச்டு '96 | 867 | 608 |
| 9. செப்டம்பர் '96 | 1022 | 801 |
| 10. அக்டோபர் '96 | 1088 | 824 |

இதற்கிடையில் தலைமைச் செயலாளரே அனைத்துச் செயலாளர்கட்கும் ஒரு சுற்றறிக்கை விடுத்தார். 31.3.97க்குள் அனைவரும் தமிழ்த் தட்டச்சுப் பொறிகளை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று. ஆனாலும் இன்னும் சிலர் அசையவில்லை. இதுவரை 352 தட்டச்சுப் பொறிகள் தான் எடுக்கப்பட்டுள்ளன. (31.3.98 வரை) எடுக்காதவர்கள் பட்டியல் இதுதான்.

| | துறையின் பெயர் | ஒப்பளிப்புச் செய்யப்பட்ட எண்ணிக்கை | இதுவரை பெற்றுக் கொண்டது | இன்னும் பெறப்படாமல் உள்ளவை |
|---|---|---|---|---|
| 1. | பணியாளர் மற்றும் நிர்வாக சீர்திருத்தத்துறை | 25 | 12 | 13 |
| 2. | செய்தி (ம) சுற்றுலாத்துறை | 7 | 6 | 1 |
| 3. | பொதுத் துறை | 53 | 15 | 38 |
| 4. | தொழில் துறை | 10 | 6 | 4 |
| 5. | நிதித்துறை | 44 | 17 | 27 |
| 6. | பொதுப்பணித்துறை | 22 | 4 | 18 |
| 7. | தொழிலாளர் மற்றும் வேலைவாய்ப்புத் துறை | 18 | 12 | 6 |
| 8. | மதுவிலக்கு மற்றும் ஆயத் தீர்வைத் துறை | 9 | 4 | 5 |
| 9. | எரிசக்தித் துறை | 3 | - - | 3 |
| 10. | சமூக நலம் மற்றும் சத்துணவுத் துறை | 6 | 5 | 1 |
| | | | | 116 |

இவ்வளவுக்கும் 16.12.96 அன்று மாண்புமிகு முதல்வர் அவர்களே ஆறுதுறைச் செயலர்கட்கு நேரடியாகத் தட்டச்சுப் பொறிகளை வழங்கினார். செய்தித் தாள்களில் இதுவே விளம்பரமானது.

இதற்கிடையில் 97-98 ஆம் ஆண்டுக்கான வரவு-செலவுத் திட்டத்தில் மேலும் 500 தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் வாங்கிட உருபா 40 இலட்சம் ஒதுக்கப்பட்டது. எடுக்கப்பட்ட 500 ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளின் விசைப் பலகையை மட்டும் மாற்றித் தமிழ் விசைப் பலகையாக (Key Board) மாற்றிட உருபா 5 இலட்சம் ஒதுக்கப்பட்டது. இவை மாவட்ட ஆட்சியர் அலுவலகம், மற்றும் சார்நிலை அலுவலகங்களுக்குக் கொண்டு செல்லப்பட வேண்டும்.

இப்போது பகிர்மானப் பட்டியல் அணியமாக உள்ளது. எழுது பொருள் துறை இவற்றை வாங்கியதும் உடனே பகிர்ந்தளிக்கப்படும். இது தொடர்பான ஆணையையும் இங்கே பார்க்கலாம். (அரசாணை 299 நாள்.16.12.97)

தமிழ் நாடு அரசு

சுருக்கம்

தமிழ் வளர்ச்சி - தலைமைச் செயலகத் துறைகள், துறைத் தலைமை அலுவலகங்கள் - சார்நிலை அலுவலகங்களிடமிருந்து நல்ல முறையில் பெறப்படும் 500-க்கும் மேற்பட்ட ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளின் விசைப்பலகைகளை தமிழ்த் தட்டச்சுப் பொறிகளுக்குரிய விசைப்பலகைகளாக மாற்றுதல் - செலவினம் - அரசு ஒப்பளிப்பு - ஆணை - வெளியிடப்படுகிறது.

தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் (த.வ.2.1) துறை

அரசாணை (நிலை) எண்.229 நாள் : 16.12.97

படிக்க :-

அரசாணை (நிலை) எண்.49, தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத்துறை, நாள் 7.2.96

ஆணை :-

துறைத் தலைமை அலுவலகங்கள் மற்றும் சார்நிலை அலுவலகங்களில் 100 சதவீதம் தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம் செயல்படுத்தப்படுகின்றது. பார்வையில் குறிப்பிடப்பட்டுள்ள அரசாணையில் தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தினை விரைவுபடுத்தும் வகையில், தலைமைச் செயலகத் துறைகளிலும் தமிழ்த் தட்டச்சுப் பொறிகளின் எண்ணிக்கையை 65 சதவீதம் அளவுக்கு உயர்த்தி ஆணையிடப்பட்டுள்ளது. ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தின்படி தட்டச்சுப் பொறிகள் மாற்றம் செய்யப் பெறுவதால் தலைமைச் செயலகத் துறைகள், துறைத் தலைமை அலுவலகங்கள், சார்நிலை அலுவலகங்களிடமிருந்து நல்ல நிலையில் பெறப்படும் 500க்கும் மேற்பட்ட ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளின் விசைப்பலகைகள் (Key Board) தமிழ்த் தட்டச்சுப் பொறிகளுக்குரிய விசைப்பலகைகளாக எழுதுபொருள் அச்சுத்துறை வாயிலாக மாற்றம் செய்வது குறித்து அரசு நன்கு ஆராய்ந்து, புதிய தட்டச்சுப் பொறிகளை வாங்குவதற்கு ஆகும் செலவினை கருத்தில் கொண்டு மேலும் 10 ஆண்டுகள் பயன்படக் கூடிய ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளின் விசைப்பலகைகள் தமிழ்த் தட்டச்சுப் பொறிகளுக்குரிய விசைப்பலகைகளாக மாற்றம் செய்து மீண்டும் அரசு அலுவலகங்களில் பயன்படுத்தும்படி அரசு ஆணையிடுகின்றது. எழுதுபொருள் மற்றும் அச்சுத்துறை வாயிலாக மாற்றம் செய்வதற்கு ஏதுவாக உருபா 5 இலட்சத்துக்கு (உருபா ஐந்து இலட்சம் மட்டும்) அரசு ஒப்பளிப்பு செய்து ஆணையிடுகிறது,"

8.9.97 வரை 347 தட்டச்சுப் பொறிகள் மட்டுமே துறைச் செயலாளர்களால் பெறப்பட்டுள்ளன. வாங்கியவற்றில் எடுக்கப்படாமல் மீதம் இருந்தவை : 135 தட்டச்சுப்பொறிகள், அரசுச் செயலாளர்கள்

அதிலும் குறிப்பாக, பணியாளர் மற்றும் நிர்வாக சீர்திருத்தத் துறை, பொதுத்துறை, தொழில்துறை, நிதித்துறை, மதுவிலக்கு மற்றும் ஆயத்தீர்வைத் துறை ஆகிய ஐந்தும் மாண்புமிகு முதல்வர் அவர்களின் கைவசம் உள்ள துறைகள் என்பதை மீண்டும் கவனத்தில் கொள்ளவேண்டும்.

12.12.97 அன்று எங்கள் துறைச் செயலாளர் த.இரா. சீனிவாசன் தமிழ்த் தட்டச்சுப் பொறிகளை இன்னும் எடுத்துக் கொள்ளாத செயலாளர்கட்கெல்லாம் மடல் எழுதினார். அந்த மடல் இதுதான்.

திரு. த.ரா. சீனிவாசன், இ.ஆ.ப.
அரசுச் செயலாளர்
தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் (தவ 2-1) துறை

நேர்முகக் கடித எண்.8963/தவ 2-1/96-13 நாள் 12.12.97

பொருள் : தமிழ் வளர்ச்சி - தட்டச்சு - தலைமைச் செயலகத் துறைகளின் பயன்பாட்டுக்குப் போதிய அளவு தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் வாங்குதல்.

பார்வை : 1) அரசாணை (நிலை) எண்.49, த.வ.ப.துறை நாள்.7.2.96

2) அரசாணை (நிலை) எண்.194, த.வ.ப.துறை, நாள்.2.9.96

3) எனது நே.மு.க.எண்.8963.தவ 2-1/96 நாள் 8.1.97 மற்றும் 28.1.97

4) அரசு தலைமைச் செயலாளர் அவர்களின் நே.மு.க.எண்.8963/தவ 2-1 நாள் 12.3.97

5) எனது நே.மு.க.எண்.8963/தவ 2-1/96 நாள்.13.5.97 மற்றும் 24.4.97

தங்கள் துறையில் இன்னமும் பெறப்படாமல் உள்ள தமிழ்த் தட்டச்சுப் பொறிகளின் (ஆங்கில தட்டச்சுப் பொறிகளுக்குப் பதிலாக) பட்டியல் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது. அவற்றினை இம்மாத இறுதிக்குள் எழுதுபொருள் அச்சுத்துறை இயக்குநரிடமிருந்து பெற்றுப் பின்னர் தகவல் தெரிவிக்குமாறு தங்களை அன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

தங்கள் அன்புள்ள
(ஒப்பம்)

பெறுநர்

திரு. பெ. பாஸ்கரதாஸ், இ.ஆ.ப.,
அரசுச் செயலாளர், பணியாளர் மற்றும் நிர்வாக
சீர்திருத்தத்துறை,

திரு. எஸ். ராஜரத்தினம், இ.ஆ.ப,
செய்தி மற்றும் சுற்றுலாத்துறை,

திரு. சு. இராமசுந்தரம், இ.ஆ.ப.,
பொதுத்துறை

திரு. எம்.எஸ். ஸ்ரீனிவாசன், இ.ஆ.ப.,
தொழில் துறை

திரு. பி.வி. ராஜாராமன், இ.ஆ.ப.,
நிதித்துறை

திரு. என்.பி. குப்தா, இ.ஆ.ப.,
பொதுப்பணித்துறை

திரு. தேவேந்திரநாத் சாரங்கி, இ.ஆ.ப.,
தொழிலாளர் மற்றும் வேலைவாய்ப்புத் துறை

திரு. ஆர். பூர்ணலிங்கம், இ.ஆ.ப.,
மதுவிலக்கு மற்றும் ஆயத்தீர்வைத் துறை

திரு. கே. தர்மராஜன், இ.ஆ.ப.,
வணிகவரி மற்றும் அறநிலையத் துறை

திருமதி. சூசன் மாத்யூ, இ.ஆ.ப.,
எரிசக்தித் துறை

திருமதி. லட்சுமி ப்ரானேஸ், இ.ஆ.ப.,
சமூக நலம் மற்றும் சத்துணவுத் துறை

எந்தெந்த இ.ஆ.ப. அலுவலர்கள் விரைந்து செயல்படவில்லை என்பதைப் பட்டியலிலிருந்து கண்டறியலாம்.

ஏற்கெனவே தலைமைச் செயலகத் துறைகளில் 304 தமிழ்த் தட்டச்சுபொறிகளும், 872 ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளும் இருந்தன. இதுதான் 13.5.96 ஆம் நாளில் இருந்த நிலைமை எங்கள் முயற்சிக்குப் பின்னால் 12.12.97 அன்று உள்ள நிலவரப்படி 666 தமிழ்த் தட்டச்சுப் பொறிகளும் 510 ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளும் இருந்தன. இப்படி மாற்றம் செய்ததில் எங்கள் அயராத உழைப்பும், ஓரளவு அதட்டலும், அடிக்கடி நினைவூட்டலும் இருந்தன என்பதை யாரும் மறுக்கமுடியாது.

16.12.97 அன்று மற்றோர் அரசாணை பிறப்பிக்கப்பட்டது.

90 இலட்சம் ஒதுக்கி, 1000 தமிழ்த் தட்டச்சுப் பொறிகளை வாங்கி வைத்து, அனைத்து அலுவலகங்களும் 75 விழுக்காடு எனும் அளவில் தமிழ்த்தட்டச்சுகளைப் பெற்றுக் கொள்ள வேண்டும் என்று தெரிவிக்கப்பட்டது. இது தொடர்பாக, தமிழ் வளர்ச்சி இயக்குநர் ச. நாகராசன் 23.9.98 அன்று அனுப்பிய அறிக்கையை அப்படியே படியுங்கள்.

"துறைத்தலைமை அலுவலகங்கள், மாவட்டாட்சியர் அலுவலகங்கள் ஆகியவற்றிற்கு விதிமுறைப்படி போதிய அளவில் தமிழ்த் தட்டச்சுகள் வழங்கப்பட நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. 25 சதவீதத்துக்கு மேல் கூடுதலாக உள்ள ஆங்கிலத் தட்டச்சுகளை ஒப்படைத்துவிட்டு அவற்றிற்கீடாகத் தமிழ்த் தட்டச்சுகள் வழங்கப்படவேண்டும் என்பதால் அலுவலகங்களில் தற்போதுள்ள தட்டச்சுகளின் மொத்த எண்ணிக்கை, தமிழ் ஆங்கிலத் தட்டச்சுகளின் எண்ணிக்கை விவரம் வேண்டப்பெற்றது. பெறப்பட்ட விவரங்களின் படி 25 சதவீதத்துக்கு கூடுதலாக ஆங்கிலத்

தட்டச்சுகள் உள்ள அலுவலகங்களுக்கு அவற்றை ஒப்படைத்துவிட்டுத் தமிழ்த் தட்டச்சுகளைப் பெற்றுக்கொள்ளுமாறு தெரிவித்து 27.5.98இல் நேர்முகக் கடிதம் அனுப்பப்பட்டுள்ளது. 3.8.98இல் நினைவூட்டுக் கடிதமும் அனுப்பப்பட்டுள்ளது. இதனைத் தொடர்ந்து, உரிய, அலுவலகங்களுடன் தொலைபேசியில் தொடர்பு கொண்டும் உடன் தமிழ்த் தட்டச்சுகளைப் பெற்றுக்கொள்ளுமாறு வலியுறுத்தப்படுகிறது.

இதுவரை துறைத் தலைமை அலுவலகங்களில் 10 அலுவலகங்கள் 40 தமிழ்த் தட்டச்சுகளைப் பெற்றுக்கொண்டுள்ளன. மாவட்டாட்சியர் அலுவலகங்களில் 4 அலுவலகங்கள் 7 தமிழ்த் தட்டச்சுகளைப் பெற்றுக் கொண்டுள்ளன. தமிழ்த் தட்டச்சுகளை உடனடியாகப் பெற்றுக் கொள்ள நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளதாகப் பல அலுவலகங்களில் தெரிவித்துள்ளனர். அனைத்து அலுவலகங்களும் பெற்றுக் கொள்ளும் வகையில் தொடர்ந்து நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன.

துறைத் தலைமை அலுவலகங்கள் / மாவட்டாட்சியர் அலுவலகங்கள்
தமிழ்த் தட்டச்சுகள் வழங்கல்

| விவரம் | துறைத் தலைமை அலுவலகங்கள் | மாவட்ட ஆட்சியர் அலுவலகம் | தட்டச்சுகளின் எண்ணிக்கை: துறைத் தலைமை அலுவலகங்கள் | தட்டச்சுகளின் எண்ணிக்கை: மாவட்ட ஆட்சியர் அலுவலகம் |
|---|---|---|---|---|
| 1. மொத்த அலுவலகங்கள் | 110 | 29 | - - | - - |
| 2. 75% உள்ளவை (தமிழ்த் தட்டச்சு) | 25 | 6 | - - | - - |
| 3. மிகுதியாக ஆங்கிலத் தட்டச்சு உள்ளவை | 85 | 23 | 289 | 41 |
| 4. இதுவரை தமிழ்த் தட்டச்சுகளைப் பெற்றுக்கொண்ட அலுவலகம் | 10 | 4 | 40 | 7 |

துறைத்தலைமை / மாவட்ட ஆட்சியர் அலுவலகங்கள்

இதுவரை தமிழ்த் தட்டச்சுப்பொறிகள் பெற்றுக்கொண்டுள்ள அலுவலகங்கள்

| | | தட்டச்சு எண்ணிக்கை |
|---|---|---|
| 1. | ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் நல இயக்ககம் | 1 |
| 2. | தலைமைப் பொறியாளர் கட்டடம் (பொ.ப.துறை) சென்னை - 5 | 1 |
| 3. | மாவட்ட ஆட்சித் தலைவர், ஈரோடு | 1 |
| 4. | மாவட்ட ஆட்சித் தலைவர், நாகப்பட்டினம் | 1 |
| 5. | மாவட்ட ஆட்சித் தலைவர், சேலம் | 3 |
| 6. | மாவட்ட ஆட்சித் தலைவர், தஞ்சாவூர் | 2 |
| 7. | முதன்மை ஆணையர் & வருவாய் நிருவாக ஆணையர் | 4 |
| 8. | தலைமைப் பொறியாளர், கிழக்குக் கடற்கரைச்சாலை மற்றும் கிராமச் சாலைகள், சென்னை - 25 | 2 |
| 9. | இயக்குநர், நெடுஞ்சாலை மற்றும் ஊரகப் பணித்துறை | 2 |
| 10. | ஆணையர், வணிகவரித் துறை | 12 |
| 11. | தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணையம் | 2 |
| 12. | நெடுஞ்சாலை ஆராய்ச்சி நிலையம் | 1 |
| 13. | மருத்துவம் மற்றும் ஊரக நலப்பணிகள் | 9 |
| 14. | மருத்துவக் கல்வி | 6 |
| | மொத்தம் | 47 |

இவ்வளவு முயற்சி எடுத்தும் இன்னும் 75 துறைத் தலைமை அலுவலகங்களும் 19 மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களும் 283 தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைப் பெற்றுக் கொள்ள வேண்டியுள்ளது.

பெற்றுக்கொண்ட அலுவலகங்கள் பெயர்ப் பட்டியலும் இங்குத் தரப்பட்டுள்ளது. அலுவலர்கள் எவ்வளவு மெத்தனம் காட்டுகிறார்கள் என்பதை எண்ணிப் பாருங்கள்.

எடுத்துக்கொள்ளப்படாத இந்த 283 தமிழ்த் தட்டச்சுப் பொறிகளுக்கான முழு விளக்கமும் அடுத்த பட்டியலில் உள்ளது.

தட்டச்சுக்களின் எண்ணிக்கை விவரங்கள்

| அலுவலகம் | இதுவரை விவரங்கள் அனுப்பிய அலுவலகங்கள் | வழங்கப்பெற வேண்டிய தமிழ்த் தட்டச்சுகள் |
|---|---|---|
| 1 | 2 | 3 |
| துறைத் தலைமை அலுவலகங்கள் | 89 | 244 |
| மாவட்ட ஆட்சியர் அலுவலகங்கள் | 24 | 39 |
| மொத்தம் | | 283 |

துறைத்தலைமை அலுவலகங்கள்

வழங்கப் பெறவேண்டிய தமிழ்த் தட்டச்சுகளின் விவரம்

| தொடர் எண். | அலுவலகத்தின் பெயர் | இருப்பிலுள்ள தட்டச்சுகள் | | | அரசாணைப்படி இருக்க வேண்டிய தட்டச்சுகள் | | வழங்கப் பெறவேண்டிய தமிழ்த் தட்டச்சுகள் |
|---|---|---|---|---|---|---|---|
| | | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் | தமிழ் | ஆங்கிலம் | |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) |
| 1. | எய்ட்ஸ் திட்டக்குழு | 2 | 6 | 8 | 6 | 2 | 4 |
| 2. | ஆவணக்காப்பகம், வரலாற்று ஆராய்ச்சித் துறை | 7 | 8 | 15 | 11 | 4 | 4 |
| 3. | பால்கூட்டுறவுச் சங்கங்களின் கூட்டுறவுத்துறை | 2 | 2 | 4 | 3 | 1 | 1 |
| 4. | அறிவியல் - தொழில் நுட்பவியல் துறை | 1 | 4 | 5 | 4 | 1 | 3 |
| 5. | மருந்துக் கட்டுப்பாட்டுத் துறை | 3 | 6 | 9 | 7 | 2 | 4 |
| 6. | தொழில்நுட்பக் கல்வித் துறை | 20 | 12 | 32 | 24 | 8 | 4 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 7. தலைமை மின் ஆய்வாளர் அலுவலகம் | 2 | 5 | 7 | 5 | 2 | 3 |
| 8. தடய அறிவியல் துறை | 8 | 12 | 20 | 15 | 5 | 7 |
| 9. தோட்டக்கலை இயக்ககம் | 4 | 5 | 9 | 7 | 2 | 3 |
| 10. இந்திய மருத்துவம் - ஓமியோபதித்துறை | 9 | 5 | 14 | 10 | 4 | 1 |
| 11. நீரியல் ஆய்வு நிறுவனம் | 2 | 2 | 4 | 3 | 1 | 1 |
| 12. தொழிலாளர் துறை ஆணையர் | 17 | 11 | 28 | 21 | 7 | 4 |
| 13. அரசு அருங்காட்சியகம் | 1 | 2 | 3 | 2 | 1 | 1 |
| 14. தேசிய நெடுஞ்சாலைத் துறை (45) | 3 | 4 | 7 | 5 | 2 | 2 |
| 15. பொது நூலக இயக்ககம் | 2 | 2 | 4 | 3 | 1 | 1 |
| 16. தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணையம் | 19 | 9 | 28 | 21 | 7 | 2 |
| 17. தமிழ்நாடு பரிசுச்சீட்டுத்துறை | 2 | 2 | 4 | 3 | 1 | 1 |
| 18 சிறுசேமிப்புத்துறை | 1 | 4 | 5 | 4 | 1 | 3 |
| 19. மாநிலத் தேர்தல் ஆணையம் | 5 | 6 | 11 | 8 | 3 | 3 |
| 20. ஆசிரியர் ஆள் எடுப்பு வாரியம் | 2 | 3 | 5 | 4 | 1 | 2 |
| 21. போக்குவரத்துத்துறை | 11 | 14 | 25 | 19 | 6 | 8 |
| 22. முதன்மை ஆணையர் - வருவாய் நிருவாக ஆணையர் | 28 | 15 | 43 | 32 | 11 | 4 |
| 23. மதிப்பீடு, செயல்முறை ஆராய்ச்சித் துறை | 1 | 9 | 10 | 7 | 3 | 6 |
| 24. வனத்துறைத் தலைவர், சமூகக் காடுகள் | 3 | 3 | 6 | 4 | 2 | 1 |
| 25. ஒழுங்கு நடவடிக்கை ஆணையர் | 1 | 2 | 3 | 2 | 1 | 1 |
| 26. எழுதுபொருள் அச்சுத் துறை | 13 | 10 | 23 | 17 | 6 | 4 |
| 27. ஊனமுற்றோர் மறுவாழ்வுத்துறை | 5 | 4 | 9 | 7 | 2 | 2 |
| 28. நீரியல், நீர்நிலையியல் துறை | 1 | 3 | 4 | 3 | 1 | 2 |
| 29. தொடக்கக் கல்வி இயக்ககம் | 9 | 4 | 13 | 10 | 3 | 1 |
| 30. பொதுப்பணித்துறை நீர்வள ஆதார அமைப்பு (திட்ட உருவாக்கம்) | 3 | 2 | 5 | 4 | 1 | 1 |
| 31. மருத்துவக் கல்வி இயக்ககம் | 25 | 17 | 42 | 31 | 11 | 6 |
| 32. தமிழ்நாடு ஒருங்கிணைந்த ஊட்டச்சத்து திட்டம் | 4 | 12 | 16 | 12 | 4 | 8 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 33. தமிழ்நாடு மாநில சுகாதார போக்குவரத்துத்துறை | 2 | 6 | 8 | 6 | 2 | 4 |
| 34. ஆதிதிராவிடர் பழங்குடியினர் நலத்துறை | 13 | 6 | 19 | 14 | 5 | 1 |
| 35. வேளாண்மை விற்பனைத் துறை | 4 | 3 | 7 | 5 | 2 | 1 |
| 36. சிறைத்துறை | 9 | 6 | 15 | 11 | 4 | 2 |
| 37. புவியியல் மற்றும் சுரங்கத்துறை | 2 | 7 | 9 | 7 | 2 | 5 |
| 38. மாநில நுகர்வோர் குறைதீர் ஆணையம் | 1 | 2 | 3 | 2 | 1 | 1 |
| 39. தேசிய மாணவர் படை இயக்கம் | 1 | 5 | 6 | 4 | 2 | 3 |
| 40. நகர் ஊரமைப்பு இயக்ககம் | 11 | 10 | 21 | 16 | 5 | 5 |
| 41. பொதுப்பணித்துறை (கட்டடம்) | 10 | 7 | 17 | 13 | 4 | 3 |
| 42. வேலைவாய்ப்பு பயிற்சித் துறை | 18 | 12 | 30 | 22 | 8 | 4 |
| 43. டானிடா நலத்திட்ட இயக்ககம் | 2 | 4 | 6 | 4 | 2 | 2 |
| 44. பள்ளிக் கல்வி இயக்ககம் | 27 | 16 | 43 | 32 | 11 | 5 |
| 45. காவல் துறை இயக்ககம் | 29 | 16 | 45 | 34 | 11 | 5 |
| 46. பொதுப்பணித்துறை (பொது) | 6 | 9 | 15 | 11 | 4 | 5 |
| 47. ஊரக வளர்ச்சித்துறை | 16 | 14 | 30 | 22 | 8 | 6 |
| 48. வேளாண்மைத்துறை | 58 | 25 | 83 | 72 | 11 | 14 |
| 49. பிற்படுத்தப்பட்டோர் வகுப்பினர் ஆணையம் | 2 | 2 | 4 | 3 | 1 | 1 |
| 50. இந்து சமய அறநிலையத்துறை | 22 | 12 | 34 | 25 | 9 | 3 |
| 51. சமூக நலம் மற்றும் சத்துணவுத் துறை | 9 | 11 | 20 | 15 | 5 | 6 |
| 52. நகராட்சி நிருவாக ஆணையர் | 12 | 19 | 31 | 23 | 8 | 11 |
| 53. நெடுஞ்சாலை மற்றும் ஊரகப் பணித்துறை, கிழக்குக் கடற்கரைச் சாலை & கிராமச்சாலைகள் | 3 | 4 | 7 | 5 | 2 | 2 |
| 54. பொதுப்பணித்துறை, நீர்வள ஆதார அமைப்பு | 3 | 5 | 8 | 6 | 2 | 3 |
| 55. கைத்தறி மற்றும் துணிநூல் இயக்ககம் | 12 | 6 | 18 | 13 | 5 | 1 |
| 56. நெடுஞ்சாலை ஆராய்ச்சி நிலையம் | 2 | 2 | 4 | 3 | 1 | 1 |
| 57. கருவூலக் கணக்குத் துறை | 5 | 9 | 14 | 10 | 4 | 5 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 58. தேசிய நெடுஞ்சாலைத்துறை | 2 | 8 | 10 | 8 | 2 | 6 |
| 59. தொழில் வணிக இயக்குநர் | 26 | 31 | 57 | 43 | 14 | 17 |
| 60. நெடுஞ்சாலை ஊரகப்பணித்துறை | 16 | 8 | 24 | 18 | 6 | 2 |
| 61. நிலநிர்வாக ஆணையர் அலுவலகம் | 14 | 15 | 29 | 22 | 7 | 8 |
| 62. காவேரி தொழில் நுட்பக்குழு | - | 7 | 7 | 5 | 2 | 5 |
| 63. மருத்துவம் மற்றும் ஊரக நலப்பணிகள் இயக்ககம் | 26 | 21 | 47 | 35 | 12 | 9 |
| | | | | | | 244 |

## மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களுக்கு வழங்கப் பெற வேண்டிய தமிழ்த் தட்டச்சுகளின் விவரம்

| தொடர் எண். | அலுவலகத்தின் பெயர் | இருப்பிலுள்ள தட்டச்சுகள் | | | அரசாணைப்படி இருக்க வேண்டிய தட்டச்சுகள் | | வழங்கப் பெறவேண்டிய தமிழ் தட்டச்சுகள் |
|---|---|---|---|---|---|---|---|
| | | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் | தமிழ் | ஆங்கிலம் | |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) |
| 1. | விழுப்புரம் | 11 | 9 | 20 | 15 | 5 | 4 |
| 2. | தஞ்சாவூர் | 8 | 6 | 14 | 8 | 6 | 2 |
| 3. | நாகப்பட்டினம் | 7 | 4 | 11 | 8 | 3 | 1 |
| 4. | புதுக்கோட்டை | 8 | 4 | 12 | 9 | 3 | 1 |
| 5. | சிவகங்கை | 9 | 4 | 13 | 10 | 3 | 1 |
| 6. | இராமநாதபுரம் | 8 | 10 | 18 | 13 | 5 | 5 |
| 7. | தூத்துக்குடி | 7 | 5 | 12 | 9 | 3 | 2 |
| 8. | விருதுநகர் | 9 | 5 | 14 | 10 | 4 | 1 |
| 9. | தேனி | | | | | | |
| 10. | திண்டுக்கல் | 8 | 5 | 15 | 10 | 3 | 2 |
| 11. | கரூர் | 3 | 4 | 7 | 5 | 2 | 2 |
| 12. | சேலம் | 18 | 10 | 28 | 21 | 7 | 3 |
| 13. | தருமபுரி | 10 | 5 | 15 | 11 | 4 | 1 |
| 14. | வேலூர் | 4 | 5 | 9 | 7 | 2 | 3 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 15. காஞ்சிபுரம் | 9 | 4 | 13 | 10 | 3 | 1 |
| 16. கோயம்புத்தூர் | 4 | 3 | 7 | 5 | 2 | 1 |
| 17. ஈரோடு | 9 | 5 | 14 | 10 | 4 | 1 |
| 18. திருச்சிராப்பள்ளி | 11 | 10 | 21 | 15 | 6 | 4 |
| 19. பெரம்பலூர் | 3 | 3 | 6 | 4 | 2 | 1 |
| | | | | | | 39 |

இவ்வளவுக்கும் பின்னால் 29.10.1998 அன்று நானே எல்லா அமைச்சர்களுக்கும் நேர்முக மடல் வரைந்துள்ளேன்.

பிறதுறைகளுக்கான மடல்கள் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன. எப்போதுமே தமிழைப் புறக்கணிப்பதில் - கல்வித் துறைதான் முன்னிற்கும். அதுவும் தமிழ்ப் பேராசிரியரை அமைச்சராகக் கொண்ட கல்வித்துறையில் எட்டுத் துறைத் தலைமை அலுவலகங்களில் 25 தட்டச்சுப் பொறிகள் எடுக்கப்படாமலேயே உள்ளன. பள்ளிகளோடு தொடர்புடைய செய்திகளை அனுப்ப வேண்டிய பள்ளிக்கல்வி இயக்குநரும் தமிழ்த் தட்டச்சுகளை எடுப்பதிலும் பயன்படுத்துவதிலும் ஆர்வம் காட்டவில்லை என்றால் யாரிடம் போய் முட்டிக் கொள்வது?

வேறு சில அமைச்சர்களுக்கும் இதே போன்ற மடல்களை எழுதினேன்.

தி.பி. 2029/ ஐப்பசி 13 29.10.1998

பெறுநர்

மாண்புமிகு கல்வியமைச்சர் அவர்கள்,
தலைமைச் செயலகம்

அன்புக்குரிய அண்ணன் அவர்களுக்கு,

வணக்கம்!

தலைமைச் செயலகத்தைத் தொடர்ந்து துறைத் தலைமை அலுவலகங்களுக்கு தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் வழங்குவதற்காக அறிவிப்புக் கொடுக்கப்பட்டுள்ளது. ஒவ்வோர் அலுவலகத்திலும் 75 விழுக்காடு தமிழ்த் தட்டச்சுப் பொறிகளும், 25 விழுக்காடு ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளும் இருக்கவேண்டும் என்பது அரசு ஆணை.

இதனைத் தெளிவுபடுத்தி ஒவ்வொரு துறைத் தலைமை அலுவலருக்கும் 27.5.98 அன்று நேர்முகக் கடிதம் அனுப்பப்பட்டுள்ளது. 3.8.98இல் நினைவூட்டுக் கடிதமும் அனுப்பப்பட்டுள்ளது. மேலும், தொலைபேசி வாயிலாகவும் தெரிவிக்கப்பட்டுள்ளது. எனினும், தங்கள் துறையின் கீழுள்ள கீழ்க்கண்ட அலுவலகங்கள் இதனைப் பொருட்படுத்துவதாகத் தெரியவில்லை. தக்க நடவடிக்கை எடுக்குமாறு வேண்டுகிறேன்.

| வ.எண் | துறையின் பெயர் | எடுக்கவேண்டிய தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் |
|---|---|---|
| (1) | (2) | (3) |
| 1. | ஆவணக்காப்பகம் - வரலாற்று ஆராய்ச்சித்துறை | 4 |
| 2. | அறிவியல் தொழில்நுட்பத் துறை | 3 |
| 3. | தொழில்நுட்பக் கல்வித்துறை | 4 |
| 4. | பொது நூலக இயக்ககம் | 1 |
| 5. | தொடக்கக் கல்வி இயக்ககம் | 1 |
| 6. | பள்ளிக் கல்வி இயக்ககம் | 5 |
| 7. | தமிழ்நாடு மாநில விளையாட்டு வளர்ச்சிக் கழகம் | 4 |
| 8. | தேசிய மாணவர் படை இயக்ககம் | 3 |

தங்கள் அன்புள்ள,

(மு. தமிழ்க்குடிமகன்)

துறைத் தலைமை மற்றும் மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களில் 75% தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் இருக்க வேண்டும் என்பது விதியாகும் :

அதன்படியான புள்ளி விவரத்தைப் பாருங்கள் :

21.11.98 நிலவரப்படி 71 துறைத் தலைமை அலுவலகங்களும் 19 மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களும் உரிய தமிழ்த்தட்டச்சுப் பொறிகளை எடுத்துக் கொள்ளவில்லை.

இன்னும் மிகுதியாக உள்ள ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகள் 239+34=273 ஆகும்.

அரசு நிதி ஒதுக்கி, அச்சு எழுதுபொருள் துறை அவற்றை வாங்கி வைத்தும், அவற்றைத் தங்கள் அலுவலகத்திற்கு எடுத்துச் செல்ல வலிக்கிறது பலருக்கு. எனினும் ஆர்வத்தோடு பெற்றுக் கொண்டவர்களைப் பாராட்டியே ஆகவேண்டும்.

29.10.98 அன்று நானே செயலகத் துறைகளின் மெத்தனப் போக்கைச் சுட்டிக் காட்டி, முதல்வர் அவர்கட்கு ஒரு மடல் எழுதினேன்.

29.10.1998, தி.பி.2029/ஐப்பசி 13.

மாண்புமிகு முதல்வர் அவர்கள் பார்வைக்கு

பெருந்தகையீர்,

பொருள் : நட்டச்சு - தலைமைச் செயலகத் துறைகளுக்கு ஆங்கிலத் தட்டச்சுகள் பெற்றுக்கொண்டு புதிய தமிழ்த் தட்டச்சுகள் வழங்கப்பட்ட விவரங்கள் அளிப்பது - தொடர்பாக.

பார்வை : 2.9.96 ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை அரசாணை (நிலை) எண்.194

தலைமைச் செயலகத்திலும், மாநிலம் முழுவதிலுமுள்ள துறைத் தலைமை அலுவலகங்களிலும் போதுமான தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் இல்லாத காரணத்தினால்தான் கோப்புகளும், வரைவுகளும், பொதுமக்களுக்கான விடைகளும் ஆங்கிலத்திலேயே தொடர வேண்டிய நிலை இருந்ததாக உணரப்பட்டது. அதனடிப்படையில் 1996-97ஆம் ஆண்டில் தமிழ்த் தட்டச்சுப் பொறிகளுக்காக உரு.50 இலட்சமும், 1997-98ஆம் ஆண்டில் மேலும் உரு.40 இலட்சமும், ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளின் விசைப்பலகையைத் தமிழில் மாற்றுவதற்கு உரு.5 இலட்சமும் தாங்கள் வழங்கியுள்ளீர்கள்.

2.9.96 இல் அரசாணை பிறப்பிப்பட்டும், 31.8.98 வரை இன்னும் சில துறைகள் ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளை ஒப்படைத்துவிட்டு, தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைப் பெற்றுக்கொள்ளாமல் இருக்கின்றார்கள்.

11.12.98 அன்று த.வ. இயக்குநர் எழுதிய மடலில் அப்போதைய நிலை தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.

ஏற்கெனவே 57 தட்டச்சுப் பொறிகள் எடுக்கப்பட்டிருந்தன. தற்போது 81 எடுக்கப்பட்டுள்ளன. இன்னும் 54 துறைகள் 202 தட்டச்சுப் பொறிகளைப் பெறவேண்டும். மேலும், 15 மாவட்ட ஆட்சியர் அலுவலகங்கள் 31 தட்டச்சுப் பொறிகளைப் பெறவேண்டும். 9 அலுவலகங்கள் தங்கள் துறைகளில் உள்ள தட்டச்சுப் பொறிகளின் விவரங்களையே தெரிவிக்கவில்லை."

கடைசியாக 31.3.1999 அன்று உள்ள நிலவரப்படி 10 துறைகளிலிருந்து 101 தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் இன்னும் பெறப்படாமல் இருந்தன.

ஏறத்தாழ 1000 தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் வாங்கப்பட்டும், அதற்காக உருபா 95 இலட்சம் நிதி ஒதுக்கப்பட்டும் இந்த நிலை. முதல்வர் வரை கவனத்திற்குக் கொண்டு செல்லப்பட்டும் இந்தப் பணி முற்றாக நிறைவேறவில்லை என்பதையே இங்குக் குறிப்பிட்டாக வேண்டும். மேலும், தமிழ்த் தட்டச்சுப் பொறிகளை உரியவர்களிடம் ஒப்படைக்க நாங்கள் எவ்வளவு கடும் முயற்சி எடுத்துக் கொண்டுள்ளோம் என்பதையும் இங்கே தெளிவு படுத்தியிருக்கிறோம்.

மறுபடியும் 16.7.99 அன்று எவரெவர் தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைப் பயன்படுத்துகின்றனர் என்று அறிய விரும்பினேன். அது தொடர்பாக 19.7.99 அன்று இணைச் செயலாளர் ஒரு குறிப்பினை என் பார்வைக்கு அனுப்பியுள்ளார். இம்முறை விவரங்களை எழுதுபொருள் - அச்சுத் துறையிலிருந்தே பெற்றுக் கொண்டோம். அப்போதுதானே எத்தனை தட்டச்சுப் பொறிகள் எடுக்கப் பட்டுள்ளன என்று தெரியும்?

மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களில் 1998 வாக்கில் 34 தமிழ்த் தட்டச்சுகள் வழங்கப்படவேண்டும் என்ற விவரத்தைப் பார்த்தோம். இப்போது 99இல் உள்ள நிலைமை 13 தட்டச்சுப் பொறிகள்தான் எடுத்துக் கொள்ளப்படவேண்டும் என்றுள்ளது. முன்னேற்றம் தான். ஆனால் இதற்கு நாங்கள் எவ்வளவு முயற்சி எடுத்துக் கொள்ள நேர்ந்துள்ளது என்பதை எண்ணிப் பாருங்கள்!

இவ்வளவு கவன மூட்டியும் விழுப்புரம் மாவட்டம் (ஆட்சி மொழிச் செயலாக்கத்தில் ஆர்வம் காட்டிய பொன்முடியின் தொகுதி - மாவட்டம் - இந்த இலட்சணத்தில் உள்ளது) செயற்படவே இல்லை. ஆட்சிமொழியைச் செயலாக்க முனைந்த முதல் மாவட்டம் என்று பெயர் பெற்ற திருச்சி மாவட்டம் இப்போதும் காதறுந்தபோன கடைசி மாவட்டமாக உள்ளது. அடடா! நம் அலுவலர்கள் எல்லாரையும் தூக்கிச் சாப்பிட்டு விடுவார்கள். இந்த உண்மையைத் தான் இங்கு காண முடிகிறது.

இந்தக் குறிப்புகள் என்னிடம் வந்தபின் 3.8.99 அன்று நானே விழுப்புரம் மற்றும் திருச்சி மாவட்ட ஆட்சியர்களுக்குத் தொலைபேசியில் தெரிவித்தேன்.

மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களுக்கு வழங்கப்பெற வேண்டிய தமிழ்த் தட்டச்சுக்களின் விவரம்

| தொடர் எண் | அலுவலகத்தின் பெயர் | வழங்கப்பெற வேண்டிய தட்டச்சுகள் | பெற்றுக்கொண்ட தட்டச்சுகளின் எண்ணிக்கை | நிலுவை |
|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) |
| 1. | கோயம்புத்தூர் | 1 | - | 1 |
| 2. | தருமபுரி | 1 | - | 1 |
| 3. | திருச்சிராப்பள்ளி | 4 | - | 4 |
| 4. | விழுப்புரம் | 4 | - | 4 |
| 5. | காஞ்சிபுரம் | 1 | - | 1 |
| 6. | சிவகங்கை | 2 | - | 1 |
| 7. | விருதுநகர் | 1 | - | 1 |
| | | | 26 | 13 |

மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களுக்கு இதுவரை வழங்கப்பட்ட தமிழ்த் தட்டச்சுகள் - 26

சில துறைகள் ஆங்கிலத்தை விட்டால் தங்களுக்கு வாழ்வே இல்லை என்று கருதுகின்ற நிலை. வணிகவரித் துறை தனக்குரிய ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகள் சிலவற்றை ஒப்படைத்துவிட்டு, தமிழ்த் தட்டச்சுப் பொறிகளை எடுக்குமாறு கேட்கப்பட்டபோது கீழ்க்கண்டவாறு எழுதுகிறது. (4 பொறிகள் தான்)

"மற்ற துறைகளைப் போலல்லாமல் இத்துறையில் பெரும்பாலான அலுவல் பணிகள் ஆங்கிலத்தில் செய்யவேண்டிய நிலையில் இருப்பதைக் கவனத்தில் கொண்டு பார்த்தால், ஆங்கிலத் தட்டச்சுகளைச் சரண் செய்யும் நிலையில் இத்துறை இல்லை" என்றே எழுதுகிறது.

தமிழ்த் தட்டச்சுப் பொறிகளுக்காக ஏறத்தாழ ஒரு கோடி உருபா வரை செலவிட்டது அரசு. 1000 தட்டச்சுக்கு மேல் வாங்கியும் வைத்துள்ளோம். தலைமைச் செயலகத் துறைகட்கும், துறைத் தலைமை அலுவலகங்கட்கும் எத்தனை எத்தனை பொறிகள் என்று தெளிவுபடுத்திச் சொல்லிவிட்டோம். ஆணை பிறப்பித்தோம். நினைவூட்டி விட்டோம். ஆனாலும் சிலர் அசைந்து கொடுக்கவில்லை. 51 துறைத் தலைமை அலுவலகங்களில் 133 தட்டச்சுப் பொறிகள் எடுத்துக் கொள்ளப்படவில்லை.

இன்று என்ன நிலை என்று தெரியவில்லை. இதற்கு மேலும் ஓர் அமைச்சர் என்ன முயற்சி எடுத்துக் கொள்ளமுடியும்?

இதற்கிடையில் நிதித்துறை பாதியில் - சரியாக நேரத்தில் இடக்குச் செய்யும். அதையும் சமாளித்து நிதியைப் பெற வேண்டும். அது தொடர்பாக, தலைமைச் செயலர்க்கு நான் எழுதிய மடலைப் பாருங்கள். எங்கள் முயற்சியும் போராட்டமும் தெரியும். யாரோடெல்லாம் நாங்கள் போராட வேண்டியுள்ளது என்பதும் புரியும்.

மடல் இதுதான். 17.11.1997, தி.பி.2028/கார்த்திகை 2

தலைமைச் செயலர் பார்வைக்கு;

இந்த ஆண்டு வரவு செலவுத் திட்டத்தின் போது தங்கள் முன்னிலையிலும், நிதிச் செயலர் முன்னிலையிலும் மாண்புமிகு முதல்வர் அவர்களின் ஒப்புதல் பெற்றுச் சில திட்டங்கள் அவையில் அறிவிக்கப்பட்டன.

மாவட்ட அலுவலகங்களுக்கும், சார்நிலை அலுவலகங்களுக்கும் தமிழ்த் தட்டச்சுப் பொறி வழங்க உரு.40 இலட்சம் ஒதுக்கப்படும் என அறிவிக்கப்பட்டது.

ஆனால் இது குறித்து நிதித் துறைக்குக் கோப்பு போனபோது இதை 1998-99 ஆம் ஆண்டிற்குக் கொண்டு செல்லலாம் என்று நிதித் துறையின் பிரிவு அலுவலர்களும், சார்புச் செயலர்,

துணைச் செயலரும் முடிவு செய்கிறார்கள். மாண்புமிகு முதல்வர் அவர்களே ஒப்புக் கொண்டாலும் அமைச்சரே சட்டமன்றத்தில் அறிவித்தாலும் அதை நிறைவேற்றுவதும், தமிழை வளர்ப்பது எப்படி என்பதை முடிவு செய்வதும் இவர்கள் கையில்தான் உள்ளது என்று தெரிகிறது.

அதன் பின் எங்கள் துறைச் செயலர் குறிப்பு எழுதியபிறகு இந்த ஆண்டுக்குப் பாதியும், அடுத்த ஆண்டுக்குப் பாதியுமென்று நிதித் துறை முடிவு செய்கிறது. இந்தப் போக்கில் போனால் எங்களால் எதுவும் செய்ய இயலாது என்றே கருதுகிறேன். இது குறித்துத் தக்க நடவடிக்கை எடுப்பீர்கள் என்று நம்புகிறேன். கோப்பு தங்கள் பார்வைக்கு அனுப்பப்பட்டுள்ளது.

அன்புடன்,

மு. தமிழ்க்குடிமகன்

## தமிழ்க்குடிமகன் கவனிப்பாரா?




அரசு பஸ் ஒன்றில் உள்ள இந்த ஆங்கில வாசகத்தைப் பாருங்க. "ஈஸ்ட் கோஸ்ட் எக்ஸ்பிரஸ்" என்று எழுதப்பட்டுள்ளது. நிதித்துறையில் கூட தமிழில் அரசு ஆணை வெளியிட்டுக் காலரைத் தூக்கி விட்டுக் கொள்ளும் தமிழக அரசு," கிழக்குக் கடற்கரை விரைவுப் பேருந்து" என்று தமிழில் எழுதி இந்த வாசகத்தை ஒட்டச் செய்து இருக்கலாமே!

## இயல் - பத்தொன்பது
## மடல் போக்குவரத்து

அரசு அலுவலர்கள் எழுதும் மடல்கள் தமிழில் எழுதப்படவேண்டும் என்பதைப் பல இடங்களில் வலியுறுத்தியுள்ளோம்.

9.5.97 இல் ஈரோட்டில் நடைபெற்ற ஆட்சிமொழிக் கருத்தரங்கில் பெரிதும் வலியுறுத்தப்பட்டுள்ளது. (25.5.97 முரசொலி)

**அரசு அலுவலகங்களில் அனைத்துத் தரப்பிலும் தமிழில் கடிதம் எழுதுவதைக் கடைப்பிடிக்க வேண்டும் - அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேச்சு**

ஈரோடு, மே.25

அரசு அலுவலகங்களில் அனைத்துத் தரப்பிலும் தமிழில் கடிதம் எழுதுவதைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று பெரியார் மாவட்டத்தில் நடைபெற்ற ஆட்சிமொழிக் கருத்தரங்கில் பேசிய அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் குறிப்பிட்டார்.

அவர் பேசியதாவது :-

ஆட்சிமொழிக் கருத்தரங்கு நடத்துவதில் தமிழ் வளர்ச்சித்துறை பெருமை அடைகிறது. தமிழ் வளர்ச்சி தொடர்பாக, கடந்த ஓர் ஆண்டாகப் பணிகள் செய்து வருகிறோம். பழமையான மொழிகளில் பல இன்று பேச்சு வழக்கில் இல்லை. எழுத்து வடிவில் மட்டுமே உள்ளன. அவற்றில் தமிழ் மட்டுமே இன்றும் நிலை பெற்று விளங்கி வருகிறது. 2500 ஆண்டுகளுக்கு முன்பே தொல்காப்பியத்தில் பல சொற்களுக்கு இலக்கணம் தந்த மொழி தமிழைத் தவிர வேறேதும் இல்லை.

தமிழ் வளர்ச்சித் துறை என்பது ஓலைச்சுவடிகளை மட்டும் ஆராய்வது என்பது இல்லை. இணையம் (இண்டர்நெட்) வரை இந்தத் துறை செல்லும். இணையம் தொடர்பான மாநாடு சிங்கப்பூரில் நடைபெறவுள்ளது. அதைத் தொடங்கி வைக்கிற பெருமை தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சருக்குக் கிடைத்துள்ளது.

முன்னோர்கள் உருவாக்கிய பல்லாயிரக்கணக்கான ஓலைச் சுவடிகள் பதிப்பிக்கப்படாமல் உள்ளன. அவற்றைப் பயன்படுத்த நாம் இன்னும் முன்வரவில்லை. முன்னோர் புதையலை வைத்துச் சென்றால் பயன்படுத்தாமல் விட்டு விடுவீர்களா? இதைத்தான் பாவேந்தர் "ஏணி பெற்றும் ஏறாத எந்தமிழர்" என்று குறிப்பிட்டார்.

பொதுமக்கள் தமிழில் எழுதும் கடிதங்களுக்கு அரசில் உள்ளோர் தமிழில் தான் பதில் எழுத வேண்டும் என்ற அரசாணை போடப்பட்டும் இன்றளவும் அது முழுமையாக நடைமுறைப்படுத்தப்படுவது கிடையாது. இது ஏற்றுக் கொள்ள முடியாதது. அரசுப் பணியில் உள்ளவர்கள் தமிழில் பெறப்படும் கடிதங்களுக்குத் தமிழில்தான் பதில் தரவேண்டும் என்று அரசாணை உள்ளது. தமிழில் பதில் எழுதவில்லை எனில் அரசாணையை மீறிய குற்றமாகும்.

தலைமைச் செயலகத்தில் வெளி மாநிலங்கள், வெளிநாடுகள், உச்ச நீதிமன்றத்துக்கு எழுதும் கடிதங்களுக்கு விதிவிலக்கு அளிக்கப்பட்டுள்ளது. மற்றவை தமிழிலேயே இருக்க வேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டுள்ளது. தமிழகத்தில் தமிழில் கையெழுத்துப் போடவேண்டும் தமிழில் கடிதம் எழுதவேண்டும் என்பதற்கு அரசாணை தேவையா? இது கேவலம் அல்லவா? எனவே அரசு பதில் கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுதியிருப்பது தெரிய வந்தால் நகலுடன் அனுப்பி வையுங்கள்.

நான் தமிழில் எழுத வேண்டும் என்பதைக் கேலிப் பேச்சு பேசுகின்றனர். நம்மைப் பெற்ற தாய் அழகில்லை என்றால் கேவலமாகப் பேசுவீர்களா? தமிழ் நமக்கு அழகான தாயல்லவா? ஜெர்மனியில் இரண்டாம் உலகப் போரின் போது 85 சதவீத தொழிற்சாலைகள் அழிந்தன. ஆனால் அதன் பின்னர் அந்த நாடு பெற்ற வளர்ச்சியால் இன்று வல்லரசு நாடுகளுள் ஒன்றாகத் திகழ்கிறது.

பிறமொழியாளர்கள் விட்டுச் சென்ற சொற்கள் இன்னமும் மாறாத நிலை உள்ளது. ஆங்கிலப் பயிற்சி என்பது கலை. என்னால் ஒரு மணி நேரம் ஆங்கிலம் பேச இயலும், கதைகளைச் சுவைக்க முடியும். ஆனால் என் உயிர் மூச்சு தமிழ். அது நைந்தால் நான் நைவேன். அரசுப் பணியில் தலைமையிடங்களிலிருந்து கடிதங்கள் தமிழில் வருவதில்லை என்று கூறினர். இது உண்மைதான். கீழ் தள, மேல் மட்ட அதிகாரிகள் அனைத்துத் தரப்பினரும் கடைப்பிடிக்க வேண்டும். இந்த நடை முறையைக் கடைப்பிடிப்பதால் கீழ்மட்டத்தினர் தண்டிக்கப்பட்டால் நாங்கள் பார்த்துக் கொண்டிருக்க மாட்டோம். பிற நாடுகளில் ஆங்கிலமொழி ஆதிக்கத்தை ஒதுக்கிவிட்டனர். உங்களைத் தமிழில் கடின சொற்களைப் பயன்படுத்துங்கள் என்று கூறவில்லை. எளிய தமிழில் எழுதுங்கள் என்றுதான் வலியுறுத்துகிறோம்.

இவ்வாறு அமைச்சர் பேசினார்.

இது தொடர்பாக விரிவான ஓர் அறிக்கை உருவாக்கப்பட்டு மாண்புமிகு முதல்வர் அவர்கள் கவனத்திற்குக் கொண்டு செல்லப்பட்டது.

19.8.1998 அன்று இந்த மடல் அளிக்கப்பட்டது.

தமிழில் விடை எழுதாமை

ஆட்சி மொழிச் சட்டத்தைச் செயற்படுத்தும் வகையில் பிறப்பிக்கப்பட்ட அரசாணைகளில் அதைச் செயற்படுத்திட நான்கு கட்டங்கள் தேவை என வகை பிரிக்கப்பட்டது. (1963 இல்)

முதற்கட்டமே பொதுமக்கள் தமிழில் எழுதும் மடல்களுக்கு அரசு அலுவலர்கள் தமிழில் விடை எழுத வேண்டும் என்பதுதான்.

முதல் கட்டம்

1. பொதுமக்களிடமிருந்து தமிழில் வரும் மடல்களுக்குத் தமிழிலேயே விடை எழுத வேண்டும்.

2. அவை பற்றிய குறிப்புகளும் தமிழிலேயே இருத்தல் வேண்டும்

3. துறைத் தலைமை அலுவலகங்களிலிருந்து மக்களுக்கு அனுப்பப்படும் மடல்கள் தமிழில் இருத்தல் வேண்டும்.

செயற்படுத்தும் காலம்

1. இந்த முதல் நிலை 1.3.1963 முதல் செயற்படுத்தப்படவேண்டும்

2. இதற்கென்று 26.12.1962 முதல் தமிழில் எழுதுவதற்கான பயிற்சியும் ஏற்பாடு செய்யப்பட்டது.

3. முதல் நிலையை மூன்று ஆண்டுகட்குள் முழுமையாக நிறைவேற்ற (அதாவது 1.3.1966க்குள்) வேண்டும்.

4. குறிப்பிடத்தக்க 38 அரசு அலுவலகங்களில் இது செயற்படுத்தப்பட வேண்டும்.

5. 38 அலுவலகங்கட்கும் 56 தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் வழங்கப்பட்டன.

1963 இல் தொடங்கி 1966க்குள் செயற்படுத்தப்பட வேண்டிய முதல் நிலையே பல அலுவலர்களால் இன்றும் கடைப்பிடிக்கப் படவில்லை.

1. தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியம் (TWAD)

ஒரு பேரூராட்சிக்கு எழுதிய மடலில் ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளது. பொதுமக்களோடு தொடர்புடைய இந்தச் செய்தியில் அரசாணை பிறப்பிக்கப்பட்டு 34 ஆண்டுகளாகியும் அதைப் பொருட்படுத்தாத நிலையுள்ளது.

அதேபோல சென்னை. வடக்குப் பகுதி வணிக வரித்துறைத் துணை ஆணையர் அலுவலகத்திலிருந்து எளிய நிலை வணிகர்கள் அடங்கிய, பெரும்பாலும் தமிழ் மட்டுமே தெரிந்த 'தமிழ்நாடு உணவு தானிய வியாபாரிகள் சங்கத்திற்கு' ஆங்கிலத்தில்தான் மடல் போகிறது.

ஏற்கெனவே இப்படி எழுதியதற்கு நேரில் கண்டனம் தெரிவித்தும் அவர்கள் அதைப் பொருட்படுத்தவில்லை. 2.7.96 மற்றும் 6.8.96 ஆம் நாளில் வணிக வரித் துறை எழுதிய மடல்களுக்குக் கண்டனம் தெரிவிக்கப்பட்டுள்ளது.

சுட்டிக்காட்டியும் திருத்திக் கொள்ளாமல் 34 ஆண்டுகளாகத் தமிழ் ஆட்சி மொழி ஆணையை ஒதுக்கித் தொடர்ந்து தவறு செய்யும் அலுவலர் மீது 'அரசாணை' மீறிய குற்றத்திற்காக நடவடிக்கை எடுத்தாலன்றி இந்த நிலை மாறாது என்றே கருதுகின்றேன்.

அலுவலகங்களில் தமிழ்த் திட்டச் செயற்பாடு

தமிழ்நாட்டில் பல அலுவலகங்களில் அதிலும் குறிப்பாக இ.ஆ.ப., அலுவலர்கள் உள்ள துறைத் தலைமை அலுவலகங்களில் தமிழ்ப் பயன்பாடு மிகவும் குறைவாக உள்ளது.

சென்னையிலுள்ள நகராட்சி மேலாண்மை இயக்குநர் அலுவலகத்தில் ஆய்வு செய்தபோது கண்ட உண்மைகளைத் தமிழ் வளர்ச்சி இயக்குநர் பின்வருமாறு தந்துள்ளார்.

"நகராட்சி நிருவாகத் துறைத் தலைவர் திரு. சான்வத்ராம். இ.ஆ.ப., அவர்களுக்குத் தமிழ் மொழியில் போதிய தேர்ச்சி இல்லாத காரணத்தால் அவருடைய பார்வைக்கும், ஒப்புதலுக்கும் ஆணைக்கும் அனுப்பப்படும் கோப்புகளில் அலுவலகக் குறிப்புகள், வரைவுகள் யாவும் ஆங்கிலத்தில் அமைந்துள்ளன. சார்நிலை அலுவலர்களுக்கு எழுதப்படும் நேர்முக மடல்கள் யாவும் ஆங்கிலத்தில் அமைவதால் அச் சார்நிலை அலுவலர்களின் மறுமொழிகளும் ஆங்கிலத்திலேயே உள்ளன. தவிர, சார்நிலை அலுவலர்கள் மாற்றம் தொடர்பான கருத்துகள் அரசுக்கு நேர்முக மடல் வாயிலாக ஆங்கிலத்தில் அனுப்பப்படுகின்றன.

ஆய்வின்போது மேற்குறித்த அலுவலகத்தினர் அளித்துள்ள புள்ளி விவரங்களின்படி "ஆய்வுக்கு முந்தைய அரையாண்டில் இவ்வலுவலகத்திலிருந்து அனுப்பப்பட்ட 39,569 மடல்களில் 22,985 மடல்கள் ஆங்கிலத்தில் சென்றுள்ளன. இவ்வலுவலகத்தில் 12 தமிழ்த் தட்டச்சுகளும். 19 ஆங்கிலத் தட்டச்சுகளும் உள்ளன. அரசாணைப்படி துறைத் தலைமை அலுவலகங்களில் உள்ள மொத்தத் தட்டச்சுகளில் 75% அளவில் தமிழ்த் தட்டச்சுகள் இருக்க வேண்டும். இதன்படி இவ்வலுவலகத்தில் 23 தமிழ்த் தட்டச்சுகள் இருக்க வேண்டும். ஆய்வுக்கு முந்தைய அரையாண்டில் இவ்வலுவலகத்தில் தட்டச்சுச் செய்யப்பட்ட 53,553 பக்கங்களில் 31,602 பக்கங்கள் ஆங்கிலத்திலுள்ளன.

மேற்குறித்த நிலை இவ்வலுவலகத்தில் தமிழ்த் திட்டத்தில் முன்னேற்றம் முழுமையடைய வாய்ப்பு அளிப்பதாக அமையவில்லை என்பதையும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்" என்று ஆய்வுக் குறிப்புத் தரப்பட்டுள்ளது.

பொதுமக்களிடமிருந்து தமிழில் வரும் மடல்களுக்குத் தமிழிலேயே விடை எழுதவேண்டும் என்பது 13.2.1963 ஆம் நாளன்று அரசாணையின் மூலம் உறுதி செய்யப்பட்டது.

ஆனால், 1998 ஆண்டில் கூட அது கடைப்பிடிக்கப்படவில்லை என்பதுதான் வேதனைக்குரியது.

27.6.1969 ஆம் நாள் ஆணையில் தி.மு.க. ஆட்சிக்காலத்தில் இரண்டு, மூன்று, நான்காம் நிலைகளும் செயற்படுத்தப்படவேண்டும் என்று தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

இரண்டாம் நிலை

(அ) துறைத் தலைமை மற்றும் மண்டல அலுவலகங்கள் இப்பொழுது குறிப்பிட்ட சில பொருள்களில் மட்டுமே தங்கள் சார் நிலை அலுவலகங்களோடு தமிழில் மடல் போக்குவரவு நடத்துகின்றன. இனி, பொதுவாக உள்ள சில விதிவிலக்குகளுக்குட்பட்டு, எல்லாப் பொருள்களிலுமே தமிழைப் பயன்படுத்துமாறு ஆணையிடலாம்.

மூன்றாம் நிலை

(ஆ) சார்நிலை அலுவலகங்களுடனும், மாவட்ட அலுவலகங்களுடனும் தமிழில் தொடர்பு கொள்ளும்போது பிற துறைத் தலைவர்களுடனும் தொடர்பு கொள்வது கடினமாக இராது. மேலும், இவ்வாறு செய்தால் தமிழின் பயன் கணிசமான அளவுக்குப் பெருகும். ஆகையால், இப்பொழுதே துறைத் தலைவர்கள் ஒருவருக்கொருவர் மடல் தொடர்பு கொள்ளும்போதும் தமிழையே பயன்படுத்த வேண்டும் என்னும் மூன்றாவது நிலையையும் செயற்படுத்தலாம்.

இதன்படி பிறப்பிக்கப்பட்ட ஆணைகள்:-

(அ) துறைத் தலைமை மற்றும் மண்டல அலுவலகங்கள் தங்கள் சார் நிலை அலுவலகங்களோடும், மாவட்ட அலுவலகங்களோடும், கீழே குறிப்பிடப்பெற்றுள்ள விதி விலக்குகளுக்கு உட்பட்டு, எல்லாப் பொருள்களிலும் தமிழிலேயே மடல் போக்குவரத்து நடத்த வேண்டும்.

(ஆ) திட்டத்தின் மூன்றாம் நிலையையும் இப்பொழுதே செயற்படுத்தித் துறைத் தலைமை மற்றும் மண்டல அலுவலகங்கள் ஒன்றுக்கொன்று தொடர்புகொள்ளும்போது எல்லாப் பொருள்களிலும் தமிழிலேயே மடல் போக்குவரவு நடத்த வேண்டும்.

விதி விலக்குகள் : -

(1) மாநிலக் கணக்காய்வுத் தலைவர், கருவூலக் கணக்கு அலுவலர், சம்பளக் கணக்கு அலுவலர் ஆகியோருக்கு எழுதப் பெறும் மடல்களும் அவர்களுக்கு அனுப்பப்பெறும் சம்பளப் பட்டியல், பயணப்பட்டியல், சில்லறைச் செலவுப் பட்டியல் போன்ற கணக்குத் தொடர்பான பொருள்களும்.

(2) மைய அரசு அலுவலகங்கள் பிற மாநிலங்களிலுள்ள அலுவலகங்கள், நீதி மன்றங்கள் ஆகியவைகளுக்கு எழுதப்பெறும் மடல்கள்.

(3) மேல்முறையீட்டுக்குட்பட்ட சட்டத் தொடர்பான ஆணைகள்.

(4) அதிகத் தொழில் நுட்பம் வாய்ந்த பொருள்கள்.

2.12.1971 ஆம் நாளில் (எண்.2070) தி.மு.க. ஆட்சியில் தலைமைச் செயலகத்தில் தமிழை ஆட்சிமொழியாக்கும் (நான்காவது நிலைக்கான) ஆணை பிறப்பிக்கப்பட்டது.

அது இதுதான்:

(1) அரசாணை நிலை எண் 3148 பொது (தமிழ் வளர்ச்சி-1) த் துறை 27.12.69இல் தலைமைச் செயலகத்தில் நிதி, சட்டம், சட்டமன்றம் ஆகிய துறைகள் நீங்கலாக மற்ற எல்லாத் துறைகளிலும் சில விலக்குகளுடன் எல்லாத் தேவைகளுக்கும் தமிழையே பயன்படுத்த வேண்டுமென்று அரசு ஆணை பிறப்பித்துள்ளது. இவ்வாறு தலைமைச் செயலகத் துறைகளில் முழுத் தமிழ்த் திட்டம் செயற்படுத்தப்பட்டுள்ளதால் துறைத் தலைமை அலுவலகங்கள் மற்றும் மண்டல அலுவலகங்கள் அனுப்புகின்ற மடல்களின் தொடர் நடவடிக்கைகளைச் செயலகத் துறைகள் தமிழிலேயே எடுக்க வேண்டுவதுடன் அவர்களுக்கு அனுப்பப்பெறும் மடல்களையும் ஆணைகளையும், தமிழிலேயே அனுப்பவேண்டும். எனவே, இந்த நிலையில் துறைத் தலைமை அலுவலகங்களும் மண்டல அலுவலகங்களும் தங்களுடைய அறிக்கைகள், மடல்கள் ஆகியவற்றைச் செயலகத் துறைகளுக்குத் தமிழிலேயே எழுதியனுப்புவதுதான் முறை. இதுவே தமிழ்த் திட்டம் வெற்றிகரமாகச் செயற்படுவதற்குத் துணைபுரிவதாகும்.

(2) துறைத் தலைமை மற்றும் மண்டல அலுவலகங்களைப் பொறுத்தவரை தமிழ்த் திட்டத்தின் நான்காம் நிலையில்தான் அவை செயலகத் துறைகளுடன் தமிழில் தொடர்பு கொள்ளலாம். எனவே, துறைத் தலைமை மற்றும் மண்டல அலுவலகங்களில் தமிழ்த் திட்டத்தின் நான்காம் நிலையினை உடனடியாகச் செயற்படுத்தலாம் என்று ஆட்சிமொழிக் குழுச் செயலாளர் பரிந்துரைத்துள்ளார். அரசு இப்பரிந்துரையை ஏற்றுத் துறைத் தலைமை மற்றும் மண்டல அலுவலகங்களில் தமிழ்த் திட்டத்தின் நான்காம் நிலையை உடனே செயற்படுத்த ஆணையிடுகின்றது. இதன்படி துறைத் தலைமை மற்றும் மண்டல அலுவலகங்களில் இனிச் செயலகத் துறைகளுடன் கீழே கொடுக்கப்பட்டுள்ள விலக்களிக்கப்பட்ட பொருள்கள் நீங்கலாக எல்லாப் பொருள்களிலும் தமிழிலேயே தொடர்பு கொள்ள வேண்டும். தமிழில் குறிப்புகள் வரைவுகள் எழுதும் போது சில ஆங்கிலச் சொற்களுக்கு நேரான தமிழ்ச் சொற்களைக் காணமுடியாத நிலையேற்படுமாயின் அத்தகைய சமயங்களில் காலங்கடவாதிருக்க அவ்விடங்களில் ஆங்கிலச் சொற்களைத் தற்காலிகமாகப் பயன்படுத்திக் கருத்துகளை வெளிப்படுத்தலாம்.

(3) சில துறைத் தலைமை மற்றும் மண்டல அலுவலகங்களுக்குத் தமிழ்த் திட்டச் செயற்பாட்டிலிருந்து அவற்றின் தனித்தன்மையின் காரணமாகவோ வேறு காரணங்களுக்காவோ அளிக்கப்பட்டிருந்த விலக்குகள் யாவும் இதன் மூலம் நீக்கப்படுகின்றன. மேற்சொன்ன அலுவலகங்கள் திட்டச் செயற்பாட்டிலிருந்து தொடர்ந்து விலக்களிப்புத் தேவையென்று கருதினால் அரசுக்கு விண்ணப்பிக்கலாம்.

(4) எல்லா அரசு அலுவலகங்களிலும் விலக்கு அளிக்கப்பட்ட பொருள்கள் நீங்கலாக எல்லாப் பொருள்களிலும் சார்நிலை அலுவலகங்கள், ஒத்த அலுவலகங்கள், மேல்நிலை அலுவலகங்கள், செயலகத் துறைகள் ஆகியவற்றுடன் இனித் தமிழிலேயேதான் நடவடிக்கைகளை வைத்துக்கொள்ள வேண்டும். மேற்கூறியவாறு அலுவலகங்கள் செயல்பட்டு, அலுவலர்களையும் பணியாளர்களையும் ஊக்குவித்து ஓராண்டுக்குள் இதில் ஏற்பட்டுள்ள முன்னேற்றத்தைக் குறித்து அரசுக்கு ஓர் அறிக்கையினைத் துறைத் தலைமை அலுவலர்கள் அனுப்ப வேண்டும்.

நடவடிக்கையில் தொய்வு

இவ்வளவு தெளிவான ஆணைகள் இருந்தும் தமிழ் முழு ஆட்சிமொழியாக முடியாமல் தவித்துக் கொண்டிருக்கிறது.

தற்போது 19-க்கு மேற்பட்ட மாவட்டங்களில் ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் நடத்தப்பட்டுள்ளன. அனைத்துத் தரப்பினர்க்கும் ஆட்சிமொழிச் செய்திகள் உணர்த்தப்பட்டுள்ளன. ஆனால், பலர் திருந்தவே இல்லை.

இராமநாதபுரம் மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்குக்கு நான் சென்று கலந்துகொண்டேன். என் வருகை பற்றிய அறிவிப்பு ஆங்கிலத்தில் உள்ளது. வருபவர் தமிழ் அமைச்சர் என்று தெரிந்திருந்தும், நடக்கப்போவது தமிழ் ஆட்சிமொழிக் கருத்தரங்கம் என்பது தெரிந்திருந்தும் ஓர் அலுவலர் ஆங்கிலத்தில் அறிக்கை விடுகிறார் என்றால் அவர் மீது நடவடிக்கை எடுக்காவிட்டால் இந்த இழிநிலை மாறுமா?

ஆட்சிமொழிக் கருத்தரங்கிலும் இதைச் சுட்டிக் காட்டினேன்.

அதேபோல், தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத்திலிருந்து அதே இராமநாதபுர மாவட்ட ஆட்சியர் அலுவலகத்திற்கு வந்த மடல் ஆங்கிலத்தில் உள்ளது.

இதற்கொரு முடிவுகட்ட மாண்புமிகு முதல்வர் அவர்கள் வழிகாட்ட வேண்டுகிறேன்."

* * *

தமிழ்நாடு உணவு தானிய வியாபாரிகள் சங்கத்தின் மடல்

பெறுநர்

திரு. ராகேசு குமார் யாதவ், இ.ஆ.ப. அவர்கள்,

துணை ஆணையர் - வணிகவரித் துறை வடக்குப் பகுதி,

சென்னை - 600 006

உட்பொருள் : தமிழக அரசின் சட்டமீறல் தொடர்பாக.

பார்வை : தங்கள் கடித எண்.10741/96, நாள் 6.8.96.

அய்யா, தங்களது 6.8.96 ஆம் நாளைய ஆங்கிலக் கடிதம் கிடைக்கப் பெற்றோம்! தமிழக அரசின் சட்டப்படி அரசு அலுவலகங்கள் தமிழில்தான் கடிதத் தொடர்பு கொள்ளவேண்டும் என்பது தெரிந்ததே! ஆனால் தாங்கள் அரசின் சட்டத்திற்குப் புறம்பாக இப்படி ஆங்கிலத்தில் எழுதியிருப்பது வேதனைக்குரியது! முன்பும் தங்கள் அலுவலக ஆங்கிலக் கடிதத்திற்கு எங்கள் சங்கத்தின் தொடர்பாக அந்தக் கூட்ட நிகழ்ச்சியில் தங்களிடம் நேரில் கண்டனம் செய்தது நினைவு கூரத்தக்கது.

எனவே இனி இப்படி, தமிழக அரசின் சட்டத்திற்குப் புறம்பாக நடந்து கொள்ள வேண்டாம் என்று மிக்க மரியாதையுடன் உரிமையுடன் கேட்டுக் கொள்கிறோம்.

இப்படிக்கு

சா. சந்திரேசன்

செயலாளர்

மாண்புமிகு தமிழ் ஆட்சித் துறை அமைச்சர் அவர்களுக்கு வணக்கத்துடன் எழுதிக் கொள்வது

அய்யா,

ஆட்சிமொழிச் சட்டத்தை மீறி வணிக வரி அலுவலகத்திலிருந்து வந்த கடிதத்தைத் தங்களுக்கு இணைத்துள்ளேன். உரிய நடவடிக்கை எடுத்துச் சீர் அமைத்திடுக.

உண்மையுடன்

சா. பார்த்திபன்

செயலாளருக்காக

MOST IMMEDIATE

Personal Attention

COMMERCIAL TAXES DEPARTMENT

| From | To |
|---|---|
| Tmt. Yasmin Ahmed, I.A.S.,<br>Special Commissioner & Commr.<br>Chepauk, | All the Deputy Commissioners<br>(Territorial) |

Chennai - 600 005.

Ref. No. Drafting Cell/108096/96, dated 20.3.1998

Sir,

Sub : T.N.G.S.T. Act, 1959 - Sales of Broken Rice and Paddy Husk - Assessment for the period from 12.3.1993 to 16.7.1996 - Exemption from tax - Draft Notification sent - Certain instructions issued - regarding.

Ref : 1. This office Br. No.DC/108096/96, dt.4.2.98

2. This office Br. No. DC/108096/96, dt.16.3.98

All the Deputy Commissioners (Territorial) are informed that Draft Notification to exempt to the tax payable on the sale of Broken Rice and Paddy Husk for the period from 12.3.1993 to 16.7.1996 has been sent to Government in the references cited and orders are awaited. Therefore, all the Deputy Commissioners are requested to instruct the Assessing Officers.

---

VISIT

என் பயணத் தொடர்பான அறிவிப்பு

PHONE MESSAGE

To

1. The Superintendent of Police, Ramanathapuram
2. Sub - Collector, Paramakudi
3. Revenue Divisioanl Officer, Ramnad.

4. Assistant Executive Engineer (PWD), R.S. Mangalam
5. Executive Engineer (Irrigation) Paramakudi
6. Tahsildar, Tiruvadanai/Ramanathapuram/Paramakudi
7. The Inspector (HRCE) Ramnad/Tiruvadanai/Paramakudi

Sir,

Hon'ble Minister HR & CE and Tamil Development will be arriving Ramanathanpuram Dist. at.9.30 AM on 24.6.98 from Madurai by Car as per the following schedule.

| | | | |
|---|---|---|---|
| 24.6.98. | 6.00 AM | .. | Departure Chennai by Flight |
| | 6.40 AM | .. | Arrival at Madurai |
| | 9.30 AM | .. | Pudukuruchi Panchayat |
| | 11.30 AM | .. | Thonukudi Panchayat - Lunch |
| | 4.00 PM | .. | Melpanaiyur, Keelpanaiyur, Ayiraveli, Madapuram, Yesupuram |
| | Night Halt | .. | R.S. Mangalam. |

மாவட்ட ஆட்சித் தலைவர் எங்களுக்கு மடல் அனுப்புகிறார் பாருங்கள்

From

Thiru B. Anand, I.A.S.,
District Collector
Ramanathapuram

To

1. The M.L.A., Ramanathapuram
2. The M.L.A., Kadaladi
3. The M.L.A., Thiruvadanai
4. The M.L.A., Ilayankudi
5. The M.L.A., Paramakudi

Sir,

Sub : TWAD WORKS - Inspection of TWAD WORKS by the Collector intimation - regarding.

The Collector has programmed to inspect the TWAD WORKS as shown in the Annexure. The Block Development Officers concerned are directed to inform the elected representatives and make arrangement for their presence during the inspection of the Collector.

---

அறிவிப்புகள், படிவங்கள் ஆங்கிலத்தில்

வணிகவரித் துறைத் தொடர்பான படிவங்களும் அறிவிப்புகளும் தொடர்ந்து ஆங்கிலத்திலேயே வருவதால் வணிகர்கள் பெரிதும் இடர்ப்படுவதாக திருப்பூரில் உள்ள காயிதே மில்லத் பேரவை மடல் எழுதியுள்ளது.

1956இல் வெளியான ஆட்சிமொழிச் சட்டத்திலேயே (சட்டம் எண்.39/1956),

"அரசியல் சட்டப்படி அரசு பிறப்பிக்கும் ஆணைகள், விதிகள், ஒழுங்கு விதிகள் மற்றும் துணைச் சட்ட விதிகள் அனைத்தும் தமிழிலேயே இருத்தல் வேண்டும்" என்று உள்ளது. ஆனால், நாற்பது ஆண்டுகளாகியும் இந்த நிலை மாறவில்லை. இது குறித்துத் துறைக்கு அறிவுறுத்தப்பட்டுள்ளது.

தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரிய அலுவலர் ஒருவர் ஆங்கிலத்தில் மடல் எழுதியமையால், அவர்மீது நடவடிக்கை எடுக்குமாறு 27.10.97 அன்று திரு. பழமலை, இ.ஆ.ப. அவர்கட்கு ஒரு மடல் எழுதினேன். பெறப்பட்ட புகார் மனு இது.

பெறுதல்

மாண்புமிகு, தமிழக முதல்வர் அவர்கள்
மனுக்கள் - தனிப்பிரிவு - தலைமைச் செயலகம்,

அய்யா,

பொருள் : தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியம் சென்னை -5.
இவ்வலுவலகத்திலிருந்து பொதுமக்களுக்கு வரும் பதில் தபால்கள் பொதுமக்களுக்கு தமிழில் எழுதி வெளியிட வேண்டுமென பொதுமக்கள் பணிவுடன் சமர்ப்பிக்கும் கோரிக்கை மனு.

சேலம் மாவட்ட ஆத்தூர் வட்டத்திலுள்ள ஏத்தாப்பூர் பேரூராட்சியில் இருக்கும் பொது மக்களுக்கு உலக வங்கித் திட்டத்தில் கிடைக்கும் உதவிகொண்டு காவிரிக் குடிநீர் பருகி ஏத்தாப்பூர் பேரூராட்சி பொது மக்கள் பயனடைகிறார்கள். இதற்கு வீட்டு குடிநீர் கட்டணம் ரூ.82.00 ஆக இருப்பதை ரூ.20.00 ஆக குறைத்துத் தர தமிழ்நாடு இயக்குநர் திரு. வி.ஆர். வைத்தியநாதன், பொறியாளர் அவர்கள், சென்னை -5 எழுதிய தபாலுக்கு அவர்களிடமிருந்து ஆங்கிலத்தில் ஊர்பொது மக்களுக்கு தபால் வந்துள்ளது.

தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத்தில் நீர்வளச் செலவிற்கும், பொதுமக்களுக்கு குடிநீர் செலவுக்கும் பல-வித-விளம்பர செலவிற்கும் -பலகோடி திட்டத்தில் பணம் ஒதுக்கி செலவு-செய்கிறார்கள். எனவே ஊர் பொதுமக்களுக்கு குடிநீர் பெற பிரச்சனைகள் தமிழில் எழுதி அனுப்பும் கோரிக்கை விண்ணப்பத்திற்கு தமிழிலேயே ஊர் பொது மக்களுக்கு பதில் கிடைக்க தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத்திற்கு வழிவகை செய்யுமாறு வேண்டுகிறோம். இத்துடன் தமிழ்நாடு குடிநீர் வாரியத்திலிருந்து ஆங்கிலத்தில் வந்த தகவல் தபால் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது. மீண்டும் ஊர் பொதுமக்களுக்கு தகவல் கிடைக்க தமிழில் தகவல் அனுப்ப ஆவண செய்யுமாறு ஊர் பொதுமக்கள் சார்பில் வேண்டுகிறேன்.

இடம் : ஏத்தாப்பூர் இப்படிக்கு

நாள் : 8.10.97 ஏ.பொ. அசோக்குமார்

---------------------------------------------------

தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியம்

| From | To |
|---|---|
| Thiru V.R. Vaidyanathan, B.E., | Thiru Y.P. Ashok Kumar, |
| M.Sc., (Engg.), | Secretary (D.M.K.), |
| Engineer-in-Chief, | Ethapur Post, |
| TWAD Board, | Attur, |
| Chennai - 600 005 | Salem. |

Lr.No.11578/DO XI/O&M/96 dt.13.8.97

Sir,

Sub : TWAD - Non supply of water in all parts of places in Ethapur Town Panchayat - Reg.

Ref : Your Petition dt.16.6.97 addressed to the MD/TWAD.

With reference to the petition cited, I am to inform the following.

தி.பி.2028/ஐப்பசி 11

நேர்முக மடல்

அன்புடையீர்,

தங்களிடம் தொலைபேசியில் குறிப்பிட்டபடி மடல்கள் அனுப்பப்பட்டுள்ளன. அரசாணையை மீறிய குற்றத்திற்காக திரு. வி.ஆர். வைத்தியநாதனுக்குக் குறிப்பாணை வழங்கவும், அதன் படி ஒன்றினை எனக்கு அனுப்பவும்.

அன்புடன்

மு. தமிழ்க்குடிமகன்

பெறுநர்

திரு. எல். பழமலை, இ.ஆ.ப.,
மேலாண்மை இயக்குநர்
தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியம்
சென்னை - 600 005

அதுபோலக் கருவூலக் கணக்குத் துறையில் சிலரது மெத்தனம் சுட்டிக்காட்டப்பட்டது. நிதித்துறையினர் உடனே இது குறித்து ஒரு மடல் எழுதினர்.

தமிழ் ஆட்சி மொழி / தனிக்கவனம் நிதி(க.க.2) துறை

தலைமைச் செயலகம், சென்னை - 600 009

கடித எண் : 42690/க.க./2/98-1, நாள் : 25.6.98

| | |
|---|---|
| அனுப்புநர் | பெறுநர் |
| திரு. ஆர். பரசுராமன் | ஆணையர் |
| துணைச் செயலாளர் | கருவூலக் கணக்குத்துறை, சென்னை - 15 |

அய்யா,

பொருள் : திரு. ரஞ்சன்தாக, இயக்குநர், பள்ளிசாராக் கருவூல நலச்சங்கத்தின் செயல் முறைகள் அனைத்தும் ஆங்கிலத்தில் இருப்பதைத் தமிழில் செயல்படுத்தக் கோருதல் தொடர்பாக.

பார்வை : மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாடு, இந்துசமயம் (மற்றும்) அறநிலையத்துறை அமைச்சர் சென்னை - 9 அவர்களின் அலுவலகத்திலிருந்து பெறப்பட்ட கடிதம் நாள் 1.6.98

பார்வையில் கண்டுள்ள கடிதத்தின் நகல் 19.6.98 நாளிட்ட கடிதத்தில் இணைக்கப்பட்டு அனுப்பியதாக தெரிவிக்கிறேன். மேற்படி சங்கத்திடமிருந்து முழுமையான அறிக்கை பெற்று

அரசுக்கு விரைவில் அனுப்புமாறு தங்களைக் கேட்டுக்கொள்வதுடன், தங்கள் துறையைச் சார்ந்த அனைத்துக் கடிதத் தொடர்புகளும், குறிப்புகளும் தமிழில் இருக்குமாறு அனைத்து அலுவலர்களுக்கும் அறிவுரை வழங்கி ஆட்சிமொழியை முழுமையாகச் செயல்படுத்திட ஆவன செய்யுமாறும் கேட்டுக்கொள்ளப் பணிக்கப்பட்டுள்ளேன்.

தங்கள் உண்மையுள்ள
துணைச் செயலாளருக்காக,

---

சட்டமன்றப் பேரவைச் செயலகம்

அரசுத் தலைமை ஏவுநர் (கொறடா) தன் முகவரியை மாற்றிக் கொண்டாராம்.

அதற்கான அறிவிப்பைச் ச.ம. பேரவை அலுவலகம் ஆங்கிலத்தில் தருகிறது.

இந்த மடலைப் பெறுபவர்கள் அனைவரும் தமிழ்நாட்டில்தான் இருக்கிறார்கள். ஆனால் துறை அலுவலர்கள் இதில் கவனம் செலுத்தவில்லை.

Secretariat, Chennai - 600 009

LEGISLATIVE ASSEMBLY SECRETARIAT

Letter No.21938/96-16 T.N.L.A.S. (Bills - 1) Dated : 18.3.1998

From
Thiru G. Anees Ahmed, M.A., B.G.L.,
Under Secretary

To
The Works Manager,
Government Central Press,
Chennai - 600 079.

Sir,

Sub : Tamil Nadu Legislative Assembly - Change of City Address of Thiru B.M. Mubarak, M.L.A., Chief Government Whip-Intimated - Regarding.

Ref : Letter dated 18.3.1998 from the P.A. to Chief Government Whip, Secretariat, Chennai-9

I am to inform you that the P.A. to Chief Government Whip in his letter cited has intimated that Thiru B.M. Mubarak, M.L.A., Chief Government Whip representing Gudalur Assembly Constituency has since shifted his residence to the following new City Address.

தமிழ் நாட்டில், தமிழர்களுக்கு, தமிழர்கள் எழுதும் மடல்கள் - தமிழக அரசு எழுதும் விடைகள் - தமிழில் அமையவில்லையே என்று நாற்பது ஆண்டுகட்குப் பின் நான் புலம்பவேண்டிய நிலை.

இதற்கு ஒரே காரணம் அலுவலர்களின் - அரசு ஊழியர்களின் பொறுப்பற்ற போக்குத்தான் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

தலைமைச் செயலக ஆய்வின்போது, மேலும் பல உண்மைகள் புலப்படும்.



## இயல் - இருபது

# தமிழ் ஆட்சிமொழிக் கருத்தரங்குகள்

| | |
|---|---|
| 08.07.96 | தஞ்சை - 1 |
| 6.9.96 | கன்னியாகுமரி |
| 16.10.96 | சென்னை |
| 28.10.96 | கோவை - 1 |
| 28.11.96 | திருச்சி |
| 18.12.96 | சிவகங்கை |
| 19.12.96 | நெல்லை - 1 |
| 30.12.96 | தருமபுரி |
| 08.05.97 | சேலம் |
| 09.05.97 | ஈரோடு |
| 05.06.97 | திருவண்ணாமலை - 1 |
| 08.08.97 | காஞ்சிபுரம் - 1 |
| 08.09.97 | தூத்துக்குடி |
| 08.12.97 | விழுப்புரம் |
| 09.12.97 | வேலூர் |
| 15.03.98 | புதுக்கோட்டை |
| 26.06.98 | இராமநாதபுரம் |
| 06.07.98 | திருவாரூர் |
| 11.09.98 | நாகை |
| 25.09.98 | கரூர் |
| 26.10.98 | திண்டுக்கல் |
| 07.06.99 | நீலகிரி |
| 06.07.99 | கடலூர் |
| 26.10.99 | நெல்லை - 2 |
| 27.10.99 | விருதுநகர் |

27.10.99 தேனி

02.11.99 நாமக்கல்

07.12.99 திருவள்ளூர்

21.12.99 பெரம்பலூர்

21.06.2000 மதுரை

14.07.2000 தஞ்சாவூர் - 2

17.08.2000 கோவை - 2

25.09.2000 திருவண்ணாமலை - 2

31.10.2000 காஞ்சிபுரம் - 2

13.5.96க்குப் பின் 96-7

97-7

98-6

99-8

2000-6

'தமிழ் ஆட்சிமொழி ஆவது குறித்து முதல்வர் விரிவாகப் பேசியுள்ளார். 1971இல் 'கல்லூரிகளில் தமிழ்தான் பயிற்றுமொழி' என்று அறிவிக்கப்பட்டது. அதை எதிர்த்து, மாணவர் சிலரும், அதன் பின்னணியில் சில அரசியல் கட்சிகளும் கிளர்ச்சியில் இறங்கினர்.

எனவே ஒரு குழு அமைக்கப்பட்டது. அதன் பின் என்ன நடந்தது என்பது பற்றிக் கலைஞர் உரையிலேயே விளக்கமும் இருக்கிறது.

இதோ கலைஞர் உரை :

ஆட்சி மொழியாக ஆக வேண்டும் என்பதற்காகத் தமிழுக்காக என்றே தனி அமைச்சகம் "அதற்காக ஏதோ அந்தக் கொள்கையிலே நாம் விட்டுக் கொடுத்துவிட்டோம் என்றோ, தமிழ் கட்டாயமாக ஆக்கப்படாமல் போய்விடும் என்றோ யாரும் கருதத் தேவையில்லை. தமிழ் ஆட்சி மொழியாக ஆக வேண்டும் என்பதற்காகத் தான் தமிழுக்காக என்றே ஒரு தனி அமைச்சகமே, தனி அமைச்சரே இன்றைக்கு அறிமுகப்படுத்தப் பட்டிருக்கிறார். அந்த அமைச்சகத்தின் சார்பில் தமிழ் வளர்ச்சி, பண்பாடு இவைகள் மாத்திரமல்லாமல், தமிழ் ஆட்சி மொழி ஆவதற்கான அந்தச் சூழ்நிலையும் படிப்படியாக உறுதியாக இன்றைக்கு மேற்கொள்ளப்பட்டு வருகிறது என்பதை நான் விளக்கமாக அளிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன்."

இதனை மனத்தில் வைத்துக்கொண்டு, அடுத்த தலைப்பினைப் பார்க்க வேண்டும்.

ஆட்சிமொழிக் கருத்தரங்குகள்

ஆட்சிமொழிக் கருத்தரங்குகளால் பெரும் பயன் விளைகின்றது. ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள அனைத்து அலுவலர்களும் ஒரே இடத்தில் கூடியிருக்கும் நிலையில் ஆட்சிமொழித் தொடர்பான அரசாணைகள், தற்போதுள்ள குறைகள் ஆகிய அனைத்தும் சுட்டிக் காட்டப்படுகின்றன. அரசின் மேல்மட்ட அலுவலர்களும், துறை வல்லுநர்களும் கலந்துகொண்டு பேசுகின்றனர். அந்தந்த மாவட்டத்தில் உள்ள வணிகவரித்துறை, மருத்துவத்துறை, கூட்டுறவுத்துறை வல்லுநர்களும், அந்த ஊரில் உள்ள தமிழறிஞர்களும் பங்குபெற்றுப் பல கருத்துகளைக் கூறுகிறார்கள். பொதுமக்களிலும் பலர் திரண்டு வந்து கேட்கின்றனர்.

மாவட்ட அலுவலகங்களில் 100% தமிழ் ஆட்சிமொழியாகிட இந்த முயற்சி பெரிதும் பயன்படுகிறது.

ஆட்சி மொழிக் கருத்தரங்குகள் இந்தக் காலகட்டத்தில் ஒவ்வொரு மாவட்டத்தலை நகரிலும் நடத்தப்பட்டன. கருத்தரங்கம் நடைபெறும் முன் நமது த.வ.உதவி இயக்குநர்கள் ஒட்டு மொத்தமாகச் சென்று மாவட்டம் முழுமையும் உள்ள அனைத்து அலுவலகங்களிலும் ஆய்வு செய்வர். கருத்தரங்கு நடைபெறும்போது தரப்படும் புள்ளி விவரங்களைக் கொண்டே இந்த மாவட்ட அலுவலர்கட்கு அறிவுரை வழங்கப்படும்.

8.7.1996 இல் தஞ்சை மாவட்டத்தில் நடைபெற்ற கலந்துரையாடலில் பல செய்திகளும் ஆராயப்பட்டன. அந்த மாவட்டத்தில் தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கத்தின் விவரம் வெளியிடப்பட்டது.

மொத்தமுள்ள அலுவலகங்கள் 598 இல் 6 மாத நடவடிக்கைகளை ஆய்வு செய்ததில் (66இல்) நன்று என்று பாராட்டப்பட்டவை 7 அலுவலகங்கள் தான்.

தஞ்சை மாவட்டத்தில் 6 அலுவலகங்கள் தாம் 100% தமிழில் நடைபெறுகின்றன. 90% 1 அலுவலகம். 80% 4 அலுவலகங்கள். 75% - 5, 70% - 5 60% -8 அலுவலகங்கள்.

குந்தவை நாச்சியார் அரசினர் மகளிர் கல்லூரி 40% அளவில்தான் உள்ளது. 8க்கு மேற்பட்ட அலுவலகங்கள் 50% அளவில் உள்ளன.

ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் நடைபெறும்போது அந்தந்த மாவட்ட அமைச்சர்களில் கூடச் சிலர் வருவதில்லை. நாடாளுமன்ற, சட்டமன்ற உறுப்பினர்கள் பலர் வருவதில்லை. யாருக்கோ நடக்கிறது என்று கருதி வாராமலேயே இருந்து விடுபவர்கள் தாம் பலர். இந்த இயக்கத்தைச் சார்ந்த சிலர் தாம் தமிழுக்கு உயிர் கொடுத்தவர்கள்; பலர் சிறையில் வாடியவர்கள். ஆனால் இப்போது எந்த உணர்ச்சியுமின்றி இயங்குபவர்களாக இருக்கிறார்கள் என்பதையும் சுட்டாமல் இருக்க முடியாது.

சில மாவட்டங்களில் ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் இரண்டு முறை நடைபெற்றுள்ளன. குறிப்பாக காஞ்சிபுரம், நெல்லை, திருவண்ணாமலை, கோவை, தஞ்சை போன்ற இடங்கள்; தனி அமைப்புகள் சிலவும் ஆட்சிமொழி மாநாடுகளையும் கருத்தரங்குகளையும் நடத்தியுள்ளன.

மா.பெ.பொ.க. சார்பில் வே. ஆனைமுத்து 13.7.96இல் ஒரு கருத்தரங்கு நடத்தியுள்ளார். சென்னையில் உள்ள முத்தமிழ் ஆய்வு மன்றம் 27.9.96இல் ஆட்சிமொழி விழா நடத்தியுள்ளது. இதன் நிறுவனத் தலைவர் ஆட்சிமொழிக் காவலர் கோ. முத்துப்பிள்ளை.

சென்னையில்

நான்கு பெரும் மாநாடுகள்

இடம் : வசந்த மகால் திருமண மண்டபம், சென்னை - 600 017

## தமிழ் பயிற்சி மொழி - ஆட்சிமொழி மாநாடு

13.7.96, சனி, முற்பகல் 9 மணி முதல் 1 மணி வரை

தலைமை

கவிஞர் தமிழேந்தி

புரட்சிக் கவிஞர் கலை இலக்கிய மன்றம்

வரவேற்புரை : க. நாகராசன், பு.க.க.இ.ம.

உரையாற்றுவோர் :

முனைவர் பொற்கோ
தலைவர், தமிழ் இலக்கியத் துறை
சென்னைப் பல்கலைக் கழகம்

த. சுந்தரராசன்
தலைநகர்த் தமிழ்ச் சங்கம்

பொறிஞர் கு.ம. சுப்பிரமணியம்

பேராசிரியர் பா. கல்யாணி

புலவர் அ.க. கண்ணன்

முனைவர் ந. அரணமுறுவல்

சி. நாட்டுக்கோட்டையார்

பொன். இராசமாணிக்கம்

நன்றியுரை : மு. செயப்பிரகாசு

1983 முதல் 1988 வரை 15 மாவட்டத் தலைநகரங்களில் மட்டுமே கருத்தரங்குகள் நடத்தப்பட்டுள்ளன.

ஆனால் 1996-2001 இல் 35 கருத்தரங்குகள் நடத்தப்பட்டுள்ளன

1983 இல் ஒரே ஒரு கருத்தரங்கு. 20.12.1983 கோவை

1984 இல் ஒரே ஒரு கருத்தரங்கு. 20.12.1984 மதுரை

மதுரை மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் ஒரு கூட்ட அரங்கில் இது நடைபெற்றது. வெளியிலிருந்து வரவழைக்கப்பட்ட சிலர், அலுவலக உயர் அலுவலர் சிலர் என்று மொத்தம் 30 பேர் மட்டுமே கலந்து கொண்ட கருத்தரங்கம். அமைச்சர் அரங்கநாயகம் பங்கேற்றார். அங்கு நடைபெற்றது கலந்துரையாடல் கூட்டம்தான். அன்றைய கல்லூரி முதல்வர் எனும் நிலையில் இதில் நானும் கலந்து கொண்டு கருத்துரை வழங்கினேன்.

1985 இல் கருத்தரங்கே நடைபெறவில்லை.

1986 இல் சிறப்பாக 6 கருத்தரங்குகள் நடைபெற்றுள்ளன.

| | |
|---|---|
| 25.7.1986 | காஞ்சிபுரம் |
| 30.7.1986 | விருதுநகர் |
| 24.9.1986 | வேலூர் |
| 29.9.1986 | சிவகங்கை |
| 27.11.1986 | தருமபுரி |
| 23.12.1986 | நெல்லை |

1987இல் நான்கு கருத்தரங்குகள் நடை பெற்றுள்ளன

| | |
|---|---|
| 9.2.1987 | இராமநாதபுரம் |
| 24.2.1987 | சேலம் |
| 13.3.1987 | ஈரோடு |
| 27.10.1987 | தஞ்சாவூர் |

1988இல் 3 இடங்களில் . . . .

| | |
|---|---|
| 11.2.88 | திருச்சி |
| 9.3.88 | புதுக்கோட்டை |
| 24.3.88 | நாகர்கோயில் |

6.9.96 அன்று கன்னியாகுமரி மாவட்டக் கருத்தரங்கு நாகர்கோவிலில் நடைபெற்றது. மாவட்ட ஆட்சித்தலைவர் விசுவநாத் செகாங்கர், அரசுச் செயலர் வை. பழனிச்சாமி, சட்டமன்ற உறுப்பினர் இரா. பெர்னார்டு, சுற்றுலாத் துறை அமைச்சர் சுரேசுராசன் ஆகியோர் கலந்து சிறப்பித்தனர். ஆட்சிமொழி அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் சிறப்புரை ஆற்றினார்.

மாவட்ட ஆட்சியரின் தமிழ் ஆர்வமும் இதில் முக்கியம். நெல்லை கி. தனவேல் மிகுந்த ஆர்வம் உடையவர். கருத்தரங்கைச் சிறப்பாக நடத்தியபின் நகருந்துகளில் உள்ள பெயர்களைக் கூட மாற்றிவிட்டார். High ground ஹை கிரவுண்ட் - என்றிருந்ததை 'மேட்டுத்திடல்' என்றும் 'ஜங்ஷன்' என்பதைச் 'சந்திப்பு' என்றும் மாற்றிவிட்டார். கணினியில் வருவாய்த்துறை ஆவணங்கள் அனைத்தையும் கொண்டு வந்தார். நான் அதைத் தொடங்கி வைத்தேன்.

மணிச்சுடர்



நீலகிரி மாவட்ட ஆட்சியர் பி. சிவசங்கரன் நான் நீலகிரி செல்லும் முன்பே அனைத்து அரசு ஊர்திகளிலும் தமிழில் எழுதச் செய்துவிட்டார்.

1986க்கு முன் த.வ. இயக்குநர்தான் ஆட்சிமொழிக் கருத்தரங்கின் முக்கியப் பேச்சாளர். மாவட்ட ஆட்சித் தலைவர்கள் கலந்து கொள்வர். அமைச்சர்கள் எப்போதாவது கலந்து கொள்வது உண்டு.

ஆனால் 1996க்குப்பின் இக்கருத்தரங்குகள் மிகவும் பயனுடைய வகையில் நடத்தப்பட்டன. 1996-2001க்குள் நடைபெற்ற ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் அனைத்திலுமே நான் கலந்து கொண்டு ஒரு முழுமையான உரையை ஆற்றியிருக்கிறேன்.

16.10.96 அன்று சென்னை மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கம் நடத்தப்பட்டது.

பல அறிஞர்களும் பல்வேறு தலைப்புகளில் உரையாற்றினர். கலந்துகொண்ட அறிஞர்களின் பெயர்களையும், அவர்கள் பேசிய தலைப்புகளையும் கவனியுங்கள்.

ஆட்சிமொழிக்காக மட்டுமின்றி அனைத்துத் திசைகளிலும் தமிழை நிலைநாட்ட வேண்டும் எனும் முனைப்போடும், அரசு 'எதிலும் தமிழ்' என்பதை நிலைநாட்ட எப்படிச் சிந்திக்கவேண்டும் என்ற தொலைநோக்கோடும் இந்தக் கருத்தரங்கம் நடைபெற்றது.

சட்டமன்ற உறுப்பினர்களில் ஒன்றிரண்டு பேரைத் தவிர வேறு எவரும் இதில் கலந்து கொள்ளவில்லை. சட்டமன்ற உறுப்பினர்கட்கு அவ்வளவு ஆர்வம் ; அவ்வளவு அக்கறை.

நிகழ்ச்சி நிரல்

16.10.96 புதன்கிழமை காலை 10 மணி

| | | |
|---|---|---|
| வரவேற்புரை | : | திரு. ஆ. பன்னீர்செல்வம்<br>தமிழ் வளர்ச்சி இயக்குநர் (பொ.) |
| தலைமையுரை | : | திரு. வை. பழனிச்சாமி, இ.ஆ.ப.,<br>அரசுச் செயலாளர், தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை |
| சிறப்புரை | : | மாண்புமிகு சட்டப் பேரவைத் துணைத் தலைவர்<br>திரு. பரிதி இளம்வழுதி<br><br>சட்டமன்ற உறுப்பினர்<br>திரு. மு.க. ஸ்டாலின் |

| | | |
|---|---|---|
| பேராசிரியர் அ.மு. பரமசிவானந்தம் | : | மழலையர் பள்ளி முதலாகத் தமிழ் |
| முனைவர் மு. ஆனந்தகிருட்டினன்<br>தமிழ்நாடு உயர்கல்வி மன்றம் | : | தமிழில் பொறியியல் கல்வி |
| முனைவர் க.ப. அறவாணன்<br>புதுவைப் பல்கலைக் கழகம் | : | அயல்நாடுகளில் தமிழ் |
| திரு. விஜய. திருவேங்கடம்<br>இயக்குநர்<br>சென்னை வானொலி நிலையம் | : | மக்கள் செய்தி வாயில்களும் தமிழ் ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கமும் |
| டாக்டர் வே.ப. நாராயணன்<br>முதல்வர், சென்னை மருத்துவக் கல்லூரி | : | தமிழில் மருத்துவக் (எம்.பி., பி.எஸ்.) கல்வி |
| முனைவர் இரா. இளவரசு<br>தமிழ்ப் பேராசிரியர், மாநிலக் கல்லூரி | : | தமிழ் வழிக் கல்வியும் வேலைவாய்ப்பும் |
| டாக்டர் வே. கிருட்டினமூர்த்தி<br>பேராசிரியர், கணிப்பொறி அறிவியல்<br>தொழில் நுட்பத்துறை<br>அண்ணா பல்கலைக் கழகம் | : | கணிப்பொறியில் தமிழ் |

முனைவர் சு. இராமர் இளங்கோ : அயல் மாநிலங்களில் தமிழ்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

முனைவர் ம. இராசேந்திரன் : ஆட்சிமொழித் திட்டமும் மொழிபெயர்ப்பும்
இயக்குநர், மொழிபெயர்ப்புத் துறை

வாழ்த்துரை : சட்டமன்ற உறுப்பினர்கள்

டாக்டர் எ. செல்லக்குமார்

திரு. செங்கை சிவம்

திரு. சைதை கா. கிட்டு

திரு. டி.இராஜேந்தர்

திரு. ந.பூ. இராமஜெயம்

திரு. பி. அரங்கநாதன்

திரு. ஜே.எம். ஆரூண் ரஷீத்

பேருரை : மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர்
முனைவர் மு. தமிழ்க்குடிமகன்

சிலரது பேச்சுகளை 'பெருந்தகை அரசியல்' எனும் இதழ் வெளியிட்டுள்ளது. அவற்றையும் பார்க்கலாம்.

தாய்மொழி வளர்ச்சி

தமிழ் வளர்ச்சி இயக்குநர் வரவேற்புரையும் தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறைச் செயலாளர் தலைமை உரையும்.

"தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் நிதிப் பற்றாக்குறையைக் களைந்து, தமிழ் வழியில் பொறியியல் கல்வியை அடுத்த ஆண்டில் அங்குத் தொடங்க நடவடிக்கை மேற்கொள்ளப்படுகிறது. மருத்துவக் கல்வியைத் தமிழில் கற்பிக்க முதல் இரு வகுப்புகளுக்குத் தேவையான நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன. தமிழில் கணிப்பொறி வடிவமைக்கும் பணி மேற்கொள்ளப்பட்டுள்ளது. பிற நாடுகளிலும் பிற மாநிலங்களிலும் தமிழைப் பரப்ப உதவி செய்யும் திட்டமும் தீட்டப்பட்டுள்ளது."

இவ்வாறு தம் துறை நடவடிக்கைகளைத் தொகுத்துரைத்துத் தெளிவுபடுத்தினார் தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறை அரசுச் செயலாளர்.

மாநிலக் கல்லூரிப் பேராசிரியர் முனைவர் இரா. இளவரசு உரை :

ஆட்சிமொழிக் கருத்தரங்கில் பயிற்சி மொழி பற்றிய தலைப்புகளும் இடம் பெற்றிருக்கின்றன. இது கல்வித் துறையோடு தொடர்புடையது.

தமிழ் வளர்ச்சிக்குத் தனித்துறை அமைக்கப்பட்டுள்ளது. ஆட்சி மொழித் திட்டம் சிறப்பாக நிறைவேறும் என்ற நம்பிக்கை பிறக்கிறது. துறை மட்டுமின்றித் துறைக்குப் பொறுப்பேற்றிருக்கின்ற வரும் நம்பிக்கைக்கு உரியவராக இருக்கிறார்.

ஆங்கிலேயரின் வெளியேற்றத்திற்குப் பின்னர் ஆங்கிலக் கல்வி மேலோங்கி இருக்கிறது. சுயநிதிக் கல்லூரிகள் சமூக நீதிக்கு எதிரானவை. மேற்பட்டப் படிப்பில் தமிழ் இல்லை. பல்கலைக் கழகத்தில் தமிழ் இல்லை. தொழிற் கல்வியில் தமிழ் இல்லை. பள்ளிகளில் தமிழ் வழிக் கல்வி பயில்வோர் யார்? வாய்ப்பு வசதி அற்றோர் - தாழ்த்தப்பட்ட பிரிவினர் - முதல் தலைமுறையில் பள்ளியில் கால் வைப்போர். இந்தப் பிரிவினருக்கு வேலை வாய்ப்பில் முன்னுரிமை என்றால், எந்த வகையான வேலைகளில் வாய்ப்புத் தரப்படும்?

இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டில் ஹீப்ரு மொழி பேசும் பேராசிரியர் ஒருவர் கலந்து கொண்டார். தமிழ் பயிற்றுமொழி ஆகும் தகுதி பற்றிக் கருத்தரங்கில் பேசப்பட்டது. அதைக் கேட்டு அவர் பின்வருமாறு மொழிந்தார். நெடுங்காலமாகச் செம்மொழியாகிய தமிழ் வழக்கில் இருந்து வருகிறது. ஹீப்ரு மொழி பேசுவோர் சிதறுண்டு உலகில் பல நாடுகளில் வாழ்ந்து இப்பொழுது ஒரு இடத்தில் தங்களுக்கு என்று ஒரு நாட்டை உருவாக்கி உள்ளனர். அங்கு தொடக்கம் முதல் மேல் நிலைக் கல்வி வரை எல்லாம் ஹீப்ருவில் தான் கற்பிக்கப்படுகின்றன. தமிழில் ஏன் கற்பிக்க இயலாது என்று வினவினார். அதனால் எல்லா நிலையிலும் தமிழ் பயிற்று மொழி ஆனால்தான் எல்லா உயர் நிலை அலுவல்களுக்கும் தமிழ் வழிப் பயின்றோரால் வேலை வாய்ப்புப் பெற முடியும் என்பதாகப் பேராசிரியர் முனைவர் இளவரசு உரையாற்றினார்.

பேராசிரியர் முனைவர் அ.மு. பரமசிவானந்தம் மழலையர் பள்ளி முதல் என்ற தலைப்பில் உரையாற்றினார்.

வீதிதோறும் பல மழலையர் பள்ளிகள் உள்ளன. ஆனால் அவற்றில் தமிழ் இல்லை. கட்டாயம் ஆக்கினால்தான் எதையும் தமிழன் செய்கிறான். எனவே மழலையர் பள்ளியில் தமிழைக் கட்டாயம் ஆக்க வேண்டும். தமிழ்விடுதூதில் கூட 'இருந்தமிழே. உன்னால் இருந்தேன்' என்றுதான் கூறினான். 'உனக்காக இருந்தேன்' என்று சொல்ல வில்லை.

என் கல்வி நிறுவனத்திற்கு ஒருவர் தமிழாசிரியர் பணி கேட்டு வந்தார். அவர் தமிழில் எம்.ஏ. முதல் வகுப்பில் தேறியவர். அவருக்கு வாக்குண்டாம் தெரியவில்லை.

என் மழலையர் பள்ளியில் தமிழில் மட்டுமே சொல்லித் தரும் பிரிவு ஒன்றைத் தொடங்கினேன். இருவர் மட்டுமே அதில் சேர்ந்தனர். அதனால் அவ்வகுப்பை மூடி விட்டு ஆங்கில வழிப் பயிலும் வகுப்பில் சேர்க்க வேண்டியதாயிற்று!

சென்னை வானொலி நிலைய இயக்குநர் திரு. விசய திருவேங்கடம் உரை:

இத் தலைப்பில் நான்கு செய்திகள் சொல்லப்பட வேண்டும். அவை கொள்கை, செயல் விளக்கம், சிக்கல்கள், சில கருத்துரைகள் என்ற நான்கு.

கொள்கை என்பது வட்டார வழக்குகளை நீக்கிச் சீரான செந்தமிழைப் பயன்படுத்தும் கொள்கை. இது வானொலிக்கு உண்டு. திருநெல்வேலி நிலையத்தில் நெல்லை வட்டார வழக்கோ சென்னையில் சென்னைத் தமிழோ வானொலியில் பயன்படுத்துதல் இல்லை. வழக்கில் இருக்கும் சொற்களைப் பயன்டுத்துதல் முன்னர் உண்டு. இன்று இல்லை. ஆஜர், அமுல் முதலிய சொற்களைப் பயன்படுத்துதல் இல்லை.

வானொலி இதழ் வெளியிடப்பட்டது. இது 45 ஆயிரம் வாசகர்கட்குப் பிரயோஜனப்படும் நூல் என்று முன்னர் அச்சிடப்பட்டது. இப்பொழுது பிரயோஜனப்படும் என்பது பயன்படும் இதழ் என்று மாற்றப்பட்டது. விவாதம் என்பதைக் கலந்துரையாடல் என்று கூறுகின்றோம். பிளீடிங் மெட்ராஸ் என்பதை வண்ணம் மாறும் சென்னைத் துணி என்று வானொலி அலுவலர் ஒருவர் பெயர்த்தார். வாசிப்பது என்பதை வாசிப்பவர் என்று திருத்தி உரைக்கின்றோம்.

தகவலும் மொழியும் ஒட்டிப் பிறந்த இரட்டைக் குழந்தையர். செய்தி வாயிலில் அறிவியல் - அறிவியலில் இன்று நல்ல தமிழ்க் கலைச் சொற்கள் இடம்பெற வேண்டும் என்பதில் கண்ணும் கருத்துமாக இருக்கின்றோம்.

ஆட்சிச் சொல் அகராதியில் இடம் பெற்றுள்ள சொற்களைப் பொது மக்களும் அறிந்து கொள்ள வேண்டும் என்று அரசு எடுத்த முயற்சிக்கு வானொலி உறுதுணையாக உள்ளது. நாளொன்று பிறக்கச் சொல்லொன்று அறிவோம் என்ற கலைச் சொல் விளக்க ஒலிபரப்பு நவம்பர்த் திங்களிலிருந்து மேற்கொள்ளப்படவிருக்கிறது. இதன் முதல் ஒலி மாண்புமிகு அமைச்சர் தமிழ்க்குடிமகனார் குரலில் ஒலிக்க இருக்கிறது.

சிக்கல்கள் :

செய்தி பிறக்கும் வாயில்கள் ஆங்கிலத்தில் உள்ளன. அதனால் அவற்றை மொழி பெயர்க்கும் பொழுது ஆஜர், ரத்து போன்றவை மொழி பெயர்ப்பவரின் இயல்புக்கு ஏற்ப இடம் பெற்றுவிடுகின்றன. அதனால், இந்துஸ்தான் சமாச்சார் என்பது போன்ற ஒரு அமைப்பு இருப்பது நல்லது.

நாகையிலிருந்து மாவட்ட ஆட்சியர் நல்ல தமிழில் ஒரு அறிக்கை அனுப்பி உள்ளார். அதை அப்படியே ஒலிபரப்பலாம். காஞ்சி மாவட்ட ஆட்சியரிடமிருந்து அறிவொளி பற்றிய அறிக்கை பெறப்பட்டது. அதுவும் சிறப்பான தமிழில் அமைந்துள்ளது.

எனவே செய்தி பிறக்கும் வாயில் செம்மையாக இருந்தால் தரும் வாயிலாகிய வானொலியும் தொலைக்காட்சியும் சிறப்பாகச் செயல்பட வழி அமையும்."

*28.10.1996 அன்று கோவை மாவட்டக் கருத்தரங்கு*

மாவட்ட ஆட்சித் தலைவர் சி.பி. சிங் மிகுந்த ஆர்வம் படைத்தவர். எல்லாம் தமிழில் அமைய வேண்டும் என நினைப்பவர். அவரைப் பற்றி நான் பல மேடைகளில் மேற்கோள் காட்டிப் பாராட்டியிருக்கிறேன். ஒரு முறை, 9 பேர் கோவையில் ஒரு கரத்தரங்கில் கலந்து கொண்டனர். தமிழில் பேசிய ஒரே ஒரு பேச்சாளர் சி.பி. சிங். ஆங்கிலத்தில் பேசிய 8 பேரும் தூய தமிழர்கள்; 'திவான் பகதூர்' என்று தங்களைத் தாங்களே நினைத்துக்கொள்ளும் 'மேட்டுக்குடி' மனம் படைத்தவர்கள். இப்படிப்பட்ட நிலையில் சி.பி. சிங் அவர்களை எப்படிப் பாராட்டாமல் இருக்க முடியும்?

புலவர் மருதவாணன், கவிஞர் சேவற் கொடியோன், முனைவர் கா. மீனாட்சி சுந்தரனார், திருப்பாம்பரம் சண்முக சுந்தரம், முனைவர் ம. இராசேந்திரன் ஆகியோரும் ச.ம. உறுப்பினர்கள் சி.டி. தண்டபாணி, ஆ. நடராசன், சி.ஆர். இராமச்சந்திரன், எம். சண்முகம் போன்றோரும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

மிகுந்த மன நிறைவளிப்பதாகக் கருத்தரங்கு அமைந்திருந்தது. தினமலரில் (30.10.96) வந்த பேச்சு அப்படியே தரப்படுகிறது.

'வெளிநாட்டு தமிழருக்கு தமிழ் கற்பிக்க நிதி'

வெளிநாட்டில் உள்ள தமிழர்கள் தமிழ் கற்றுக் கொள்ள நிதி ஒதுக்கீடு செய்வது குறித்து தமிழக அரசு பரிசீலனை செய்து வருகிறது என தமிழ் ஆட்சி மொழி தமிழ் பண்பாட்டுத் துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் கோவையில் தெரிவித்தார்.

கோவை மாவட்ட அளவிலான ஆட்சி மொழிக் கருத்தரங்கு நடந்தது. இதில் அமைச்சர் தமிழ்க்குடிமகன், கோவை மாவட்ட கலெக்டர் சி.பி. சிங், தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறை செயலர் பழனிச்சாமி, தமிழ் வளர்ச்சி இயக்குநர் பன்னீர் செல்வம், எம்.எல்.ஏக்கள் உட்பட பலர் கலந்து கொண்டனர்.

தற்போது கோவை மாவட்டத்தில் 70 விழுக்காடு தமிழ் பயன்படுத்தப்படுகிறது. நீதிமன்ற வழக்குகள் மற்றும் மற்ற மாநிலங்களில் தகவல் தொடர்பிற்காக ஆங்கிலம் பயன்படுத்தப்படுகிறது. கீழ் நிலையில் உள்ள அதிகாரிகளுக்கு மூன்று மாதத்திற்கு ஒரு முறையாவது தமிழ் மொழிப் பயிற்சி அளிக்க வேண்டும். கலைச் சொற்கள், மற்றும் பொருத்தமான சொற்களை பயன்படுத்தி இந்த பயிற்சி வகுப்பை நடைமுறைப்படுத்த வேண்டும் என்றார்.

தமிழ் நாட்டில் உள்ள பள்ளிகளில் தமிழ் கற்றுத் தரவேண்டும். தற்போதுள்ள சூழ்நிலையில் தமிழ் ஆசிரியர்கள் தமிழைக் கற்றுக்கொடுக்கப் போதுமான கவனமோ, அக்கறையோ எடுத்துக் கொள்ளவில்லை. தமிழ் ஆட்சி மொழிச் சட்டம் இருந்தாலும் அதனை செயல்படுத்தும் செயல்திட்டம் இல்லை என பேசினார்.

தமிழ்த் துறை என்பது புதிதாக உருவாக்கப்பட்ட துறை அல்ல. கல்வித்துறையுடன் இணைந்து செயல்பட்டு வந்த ஒரு துறையாகும். தமிழுக்கு இதுவரை கவனிக்கப்படாமல் இருந்த திட்டத்தை நல்ல முறையில் செயல்படுத்த முடியும். அதற்கான சூழ்நிலை இப்போது உருவாகியுள்ளது.

இது தவிர வெளிநாட்டில் உள்ள தமிழர்களுக்குத் தமிழ் கற்றுக் கொடுக்க பல லட்ச ரூபாய் ஒதுக்கீடு செய்யவும் முதல்வர் பரிசீலனை செய்து வருகிறார். தமிழ்ப் பண்பாட்டுச் சுற்றுலா, தமிழ்ச் சிறப்புகள் ஆகியவற்றை தொகுத்துத் தர தமிழ்த்துறையின் சார்பில் முயற்சி மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

இப்போது கல்வியை விட சிறந்த வணிகம் எதுவும் இல்லை என்றாகிவிட்டது. தமிழில் முடியாதது என்று எதுவுமில்லை. நீங்கள் நினைத்தால் தமிழை வளர்க்க முடியும். ஆங்கிலத்தை ஒதுக்கிவிடவேண்டும் என்பதில்லை. தமிழ் திணிக்கப்படுகிறது என்று யாராவது சொன்னால் அவர்கள் தூக்கி எறியப்படுவர். தமிழ் என் கண்களைப் போன்றது. மற்ற மொழிகள் என் கண்ணாடியைப் போன்றவை. தேவையானால் கண்ணாடியை அணிந்து கொள்வேன் என்றார்."

"தமிழ் திணிக்கப்படுகிறது என்று யாராவது சொன்னால் அவர்கள் தூக்கி எறியப்படுவர்" என்று பேசியுள்ளேன். தமிழ் நாட்டில் உட்கார்ந்து கொண்டு 'தமிழ் திணிக்கப்படுகிறது' என்று சொல்வதற்கு எவ்வளவு நெஞ்சுரம் வேண்டும்?

ஆனால் செய்தித் தாள்களில் செய்தியை அரைகுறையாகப் படித்துவிட்டு "அவசரக்குழந்தைகள்" சிலர் தாங்கள் தான் ஒட்டுமொத்தத் தமிழகத்தின் பாதுகாவலர்கள் என்பது போல அறிக்கை விட்டுள்ளார்கள். அவர்களில் ஒருவர் குமரி அனந்தன். அவருடைய அறிக்கையைக் காணவும்.

"வேற்றுமொழி பேசுபவர்கள் தமிழ்க் கலாசாரத்தைப் பின்பற்றுவதில்லை என்றும் அவர்கள் தமிழ்த்துறை எடுக்கும் நடவடிக்கைகளை ஏற்றுக் கொள்ளவில்லை என்றால் தமிழ் மண்ணிலிருந்து தூக்கி எறியப்படுவார்கள் என்றும் தமிழ்க்குடிமகன் பேசியிருப்பது கண்டிக்கத்தக்கது.

பிறமொழியாளர்கள் தமிழ்க் கலாச்சாரத்தையும் ஏற்றுக்கொண்டு, தம் கலாச்சாரத்தையும் மறக்காமல் பின்பற்றுகிறார்கள் என்பதுதான் உண்மை. அமைச்சரின் பேச்சு வேற்றுமை விதையைத் தூவி விடுமோ என அஞ்சுகிறேன்.

தமிழ்நாட்டை வாழுமிடமாகக் கொண்டு வாழ்பவர்கள் அனைவரும் தமிழர்களே என்று தந்தை பெரியார் விளக்கம் கூறினார். தமிழை வளர்ப்பது பிறமொழியாளரைப் பழிப்பதற்குப் பயன்படக் கூடாது. பிரிவினைவாதமும் இப்படித்தான் தொடங்கும். எனவே ஒருமைப்பாட்டிற்கும் ஒற்றுமை உணர்வுக்கும் மாறான எதையும் அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசவும் வேண்டாம் செயல்படுத்தவும் வேண்டாம் என்று குமரி அனந்தன் கேட்டுக் கொண்டுள்ளார்."

28.11.96 - திருச்சி மாவட்டக் கருத்தரங்கம்

மாவட்ட ஆட்சித் தலைவர் இராஜீவ் இரஞ்சன் ஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்திருந்தார். உணவுத் துறை அமைச்சர் கா.நா. நேரு கலந்து கொண்டு கருத்தரங்கைத் தொடங்கி வைத்தார்.

மாலைமலர், முரசொலி போன்ற இதழ்கள் விரிவாகச் செய்திகளை வெளியிட்டிருந்தன. சட்டப்பேரவை உறுப்பினர்கள் அன்பில் பொய்யாமொழி, பா. பரணிகுமார் ஆகியோர் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

நிகழ்ச்சி நிரல்

காலம் : 28.11.96 நேரம் : 10.30 மணி இடம் : மாவட்ட ஆட்சியர் அலுவலகக் கூட்ட மன்றம்

| | | |
|---|---|---|
| வரவேற்புரை | : | திரு. ஆ. பன்னீர் செல்வம் |
| தலைமையுரை | : | திரு. வை. பழனிச்சாமி, இ.ஆ.ப.,<br>அரசுச் செயலர், தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத்துறை |
| முன்னிலையுரை | : | திரு. இராசீவ் ரஞ்சன், இ.ஆ.ப.,<br>மாவட்ட ஆட்சியர் |
| | | திருமதி. புனிதவல்லி பழனியாண்டி<br>மாநகராட்சி மேயர் |
| தொடக்கவுரை | : | மாண்புமிகு உணவுத்துறை அமைச்சர்<br>திரு. கா.நா. நேரு |
| | | *எங்கும் - எதிலும் தமிழ்* |
| கருத்துரை | : | முனைவர் ம. இராசேந்திரன்<br>இயக்குநர், மொழிபெயர்ப்புத் துறை - மொழி பெயர்ப்பில் |
| | | திருப்பாம்புரம், சண்முக சுந்தரம்<br>முதல்வர், அரசு இசைக்கல்லூரி - இசைத்துறையில் |

| | | |
|---|---|---|
| | | திரு. த. கணேசன்<br>வானொலி நிலைய இயக்குநர் - தகவல் தொடர்பில் |
| | | முனைவர் ச. நாகராசன்<br>தமிழ்த்துறைத் தலைவர் - பல்கலைக்கழகத்தில் |
| | | முனைவர் சி. நயினார் முகமது - பயிற்று மொழியில் |
| வாழ்த்துரை | : | நாடாளுமன்ற உறுப்பினர்கள் |
| | | சட்டமன்ற உறுப்பினர்கள் |
| | | திரு. அன்பில் பொய்யாமொழி |
| | | திரு. பா. பரணிக்குமார் |
| | | திரு. தி.ப. மாயவன் |
| | | திரு. கே. துரை |
| | | திரு. கே. கண்ணையன் |
| | | திரு. எம்.என். ஜோதிக்கண்ணன் |
| | | திரு. டி. கருப்புசாமி |
| | | திரு. ஆர். செல்வம் |
| | | திரு. கருத்தையாபாண்டியன்<br>மாவட்ட வருவாய் அலுவலர் |
| நிறைவுப்பேருரை | : | மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி அமைச்சர்<br>முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள் |
| நன்றியுரை | : | திரு. இரா. குணசேகரன் |

'தமிழில் அரசு ஆணை : மீறும் அதிகாரிகள் மீது நடவடிக்கை'

திருச்சி, நவ.28-

'அரசு ஆணைகள் தமிழில் பிறப்பிக்கப்பட வேண்டும் என்ற விதிமுறை மீறும் அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்கப்படும்' என்று தமிழ் ஆட்சி மொழி மற்றும் பண்பாட்டுத் துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் கூறினார்.

விதி மீறல்கள் செய்யும் அதிகாரிகள் மீது கண்டிப்பாக நடவடிக்கை எடுக்கப்படும். ஏற்கெனவே சிவகங்கையில் கருவூல அதிகாரி மீது நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது. தஞ்சாவூரில் ஒரு அதிகாரி இடமாற்றம் செய்யப்பட்டுள்ளார்.

'தமிழை ஆட்சி மொழியாக்க அரசு அலுவலர்கள் அனைவரும் பாடுபட வேண்டும் என்று திருச்சி மாவட்ட ஆட்சியர் ராசீவ் ரஞ்சன் கேட்டுக் கொண்டார்."

தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தைச் சரிவரச் செயற்படுத்தாத அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்கப்படும் என நானும் பல கருத்தரங்குகளில் , பல இடங்களில், பல முறை எச்சரிக்கை விடுத்துள்ளேன். திருச்சி மாவட்ட ஆட்சி மொழிக் கருத்தரங்கிலும் இந்தக் கடுமை வெளிப்படுத்தப்பட்டது. (தினமணி 29.11.1996) அதனோடு, ஆட்சிமொழித் தொடர்பான பல செய்திகளும் விரிவாக எடுத்து வைக்கப்பட்டன.

18.12.1996 இல் சிவகங்கையில் ஆட்சிமொழிக் கருத்தரங்கு நடைபெற்றது. மாவட்ட ஆட்சித் தலைவர் க. சண்முகம், இ.ஆ.ப., சிறப்பான முறையில் ஏற்பாடு செய்திருந்தார்.

சட்டமன்ற உறுப்பினர் தா. கிருட்டிணன் ஒரு தலைப்பில் உரையாற்றினார். தமிழறிஞர்கள் எனும் முறையில் பா. நமசிவாயம், கவிஞர் மீரா, புலவர் ஆ. பழநி, பகீரத நாச்சியப்பன், சண்முகசுந்தரம், ம. இராசேந்திரன் ஆகியோர் உரையாற்றினர். பிற சட்டமன்ற உறுப்பினர்கள் வரவில்லை. தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர் சிவராமன் கூட வரவில்லை. செயலர் வை. பழனிச்சாமி எல்லாவற்றிலும் ஆர்வத்தோடு கலந்து கொள்கிறார்.

மத்திய நிதியமைச்சர் ப. சிதம்பரம் கலந்து கொள்ளவேண்டுமென்று மடல் எழுதினோம். விடை ஏதும் வாராமையால் அவர் இடம் பெறவில்லை.

நிகழ்ச்சி நிரல்

| | | |
|---|---|---|
| நாள் | : | 18.12.1996 முற்பகல் 10.00 மணி |
| இடம் | : | சமுதாயக் கூடம், மாவட்ட ஆட்சியர் வளாகம், சிவகங்கை |
| வரவேற்புரை | : | திரு. ஆ. பன்னீர் செல்வம் |
| தலைமையுரை | : | திரு. வை. பழனிச்சாமி, இ.ஆ.ப.,<br>அரசுச் செயலர்<br>தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை |
| முன்னிலை | : | திரு. க. சண்முகம், இ.ஆ.ப.,<br>மாவட்ட ஆட்சித் தலைவர் |
| விழாப் பேருரை | : | மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி அமைச்சர்<br>முனைவர் மு. தமிழ்க்குடிமகன் |
| சிறப்புரை | : | பசும்பொன் தா. கிருட்டிணன்<br>சட்டமன்ற உறுப்பினர் |

பேராசிரியர் பா. நமச்சிவாயம்

பேராசிரியர் கவிஞர் மீரா

புலவர் ஆ. பழனி

புலவர் சொ. பதீரதநாச்சியப்பன்

திருப்பாம்புரம் சண்முகசுந்தரம்
முதல்வர், அரசு இசைக் கல்லூரி

முனைவர் ம. இராசேந்திரன்
இயக்குநர், மொழி பெயர்ப்புத்துறை

வாழ்த்துரை : திரு. உ.சுப. உடையப்பன்
நாடாளுமன்ற உறுப்பினர்

சட்டமன்ற உறுப்பினர்கள் :

திரு. இராமசிவராமன்
திரு. கரிய மா. இராமசாமி
திரு. ந. சுந்தரம்
திரு. கே. தங்கமணி

திருமதி. கா. சந்திரா
மாவட்ட ஊராட்சித் தலைவர்

திருமதி. ஆறுமுகம் சவகர்
நகர்மன்றத் தலைவர், சிவகங்கை

திரு. சந்திரன்
ஊராட்சி ஒன்றியத் தலைவர், சிவகங்கை

நன்றியுரை : திரு. கோ. செழியன்

சிவகங்கைக்கு அடுத்த நாளே 19.12.1996 இல் நெல்லையில் கருத்தரங்கு. மாவட்ட ஆட்சியர் நிரஞ்சன் மார்டி, துறைச் செயலாளர் வை. பழனிச்சாமி ஆகியோரது ஏற்பாடுகள்.

ஆட்சி மொழிக் கருத்தரங்கம் திருநெல்வேலி மாவட்டம்

நிகழ்ச்சி நிரல்

நாள் : 9.12.1996 முற்பகல் 10.00 மணி

வரவேற்புரை : முனைவர் சு. நடராசன்

முன்னிலையுரை: டாக்டர் நிரஞ்சன் மார்டி, இ.ஆ.ப.,
மாவட்ட ஆட்சியர்

தலைமையுரை : திரு. வை. பழனிச்சாமி, இ.ஆ.ப.,
அரசுச் செயலாளர்
தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை

சிறப்புரை : திரு. வே. சண்முகம் : வருவாய்த் துறையும், ஆட்சிமொழியும்
மாவட்ட வருவாய் அலுவலர்

திரு. து. சந்திரசேகரன் : உள்ளாட்சி அமைப்புகளும் ஆட்சிமொழியும்
மாநகராட்சி ஆணையர்

முனைவர் பா. வளனரசு : ஆட்சிமொழித் திட்டமும் கல்வித் துறையும்
தூய யோவான் கல்லூரி

முனைவர் தே. லூர்து : ஆட்சிமொழியும், நாட்டுப் புறவியலும்
நாட்டுப்புறவியல் ஆய்வு மையம்
தூய சவேரியார் கல்லூரி

வாழ்த்துரை : நாடாளுமன்ற, சட்டமன்ற உறுப்பினர்கள்

மாநகராட்சி மேயர்
திருமதி. மு. உமா மகேசுவரி

மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர்
திரு. ஆலடி அருணா

பரிசுகள் வழங்கிப் பேருரை : மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர்
முனைவர் மு. தமிழ்க்குடிமகன்

சட்ட அமைச்சர் ஆலடி அருணா கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார். மேயர் உமாமகேசுவரி ஒரு சில சட்டமன்ற உறுப்பினர்கள், தமிழறிஞர்கள் பா. வளனரசு, தே. லூர்து ஆகியோர் கலந்து கொண்டனர். இதில் முன்னாள நகர்மன்றத் தலைவர் சுப. சீத்தாராமன் 'வருவாய்த் துறையினர்' தந்த பழைய சுற்றறிக்கை ஒன்றினைத் தந்தார். அது, ஒப்பிட்டுப் பேச நன்கு பயன்பட்டது.

அடுத்து 30.12.1996 இல் தருமபுரி மாவட்டக் கருத்தரங்கு. மாவட்ட ஆட்சித்தலைவர் மோகன்பியாரே, துறைச்செயலர் வை. பழனிச்சாமி ஆகியோர் ஏற்பாடுகள், செய்தித்துறை அமைச்சர்

வ. முல்லைவேந்தன் கலந்து கொண்டு சிறந்த ஒத்துழைப்புக் கொடுத்தார். சட்டமன்ற உறுப்பினர்கள் மனோகரன், வேடம்மாள், வேங்கடேசன், காஞ்சனா கமலநாதன், சுகவனம் ஆகியோர் ஆர்வத்துடன் கலந்து கொண்டனர்.

நிகழ்ச்சி நிரல்

காலை 10.00 மணி

வரவேற்புரை : திரு. ஆ. பன்னீர் செல்வம்

முன்னிலை : திரு. வை. பழனிச்சாமி, இ.ஆ.ப.,
அரசுச் செயலாளர்

திரு. மோகன்பியாரே, இ.ஆ.ப.,
மாவட்ட ஆட்சித் தலைவர்

தொடக்கவுரை : மாண்புமிகு செய்தி - விளம்பரத் துறை அமைச்சர்
திரு. வ. முல்லை வேந்தன் அவர்கள்

தலைமையுரை : மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர்
முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள்

சிறப்புரை

முனைவர் ம. இராசேந்திரன் : தமிழ் ஆட்சி மொழித் திட்டமும் மொழிபெயர்ப்பும்
இயக்குநர், மொழிபெயர்ப்புத்துறை

முனைவர் எம். சண்முகம் : தமிழ் வழிக்கல்வியும் மக்களும்
இயக்குநர், அஞ்சல் வழி தொடர்
கல்வித்துறை, சென்னைப் பல்கலைக்கழகம்

அருள்திரு முனைவர் பி.டி. செல்லத்துரை : தமிழிசை
முதல்வர், தமிழிசைக் கல்லூரி, சென்னை

முனைவர் கொடுமுடி சண்முகன் : அலுவலகங்களில் தமிழ்ப் பயன்பாடு

வாழ்த்துரை : சட்டமன்ற உறுப்பினர்கள்

திரு. மனோகரன்,

திருமதி ஏ.ஆர். வேடம்மாள்

திரு. பி.வி.எஸ். வெங்கடேசன்

டாக்டர் காஞ்சனா கமலநாதன்

திரு. ஜி.எல். வெங்கடாசலம்

திரு. இ.ஜி. சுகவனம்

திரு. எஸ். ராஜாரெட்டி

திரு. பி. வெங்கடசாமி

திரு. ஜி.கே. மணி

நன்றியுரை : திரு. கி. குணசேகரன்

முனைவர் சண்முகம், இசை அறிஞர் செல்லத்துரை, சொல்லாராய்ச்சியாளர் கொடுமுடி சண்முகன் ஆகியோர் கலந்து கொண்டு பேசினர்.

பிற்காலத்தில் நான் கண்டு மகிழ்ந்த ஒன்று, தருமபுரியின் கடைத் தெருக்களில் பலகடைகளில் நல்ல தமிழ்ப் பெயர்களை எழுதி வைத்துப் பெருமை சேர்த்தனர். ஆட்சி மொழிக் கருத்தரங்கில் ஊட்டப்பட்ட உணர்ச்சிகளை, ஆர்வலர் ஒருசிலர் அப்படியே செயலுக்குக் கொண்டு வந்துவிட்டனர். இது இன்றும் மகிழ்ச்சியைத் தருகிறது. குறிப்பாக தானியங்கி (Auto) தானியங்கியகம் (Automobiles) என்ற சொற்கள் அதிக அளவில் தருமபுரி நகரக் கடை வீதிகளில் புழக்கத்தில் உள்ளன.

8.5.97 அன்று சேலத்தில் ஆட்சிமொழிக் கருத்தரங்கு. வேளாண்துறை அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகம் கலந்து கொண்டு ஆர்வமிக்க ஒத்துழைப்பை நல்கினார். மாவட்ட ஆட்சித் தலைவர் க. முத்துசாமி, துறைச் செயலர் வை. பழனிச்சாமி ஆகியோர்தம் ஏற்பாடுகள் சிறப்பாக அமைந்தன.

வணிகவரித்துறை சார்பில் பழ. கருப்பையா, தொழிலாளர் துறை சார்பில் செ. சபாபதி, மருத்துவத்துறை சார்பில் பாலசுப்ரமணியம், இலக்கியச் சார்பில் ம. இராசேந்திரன் புலவர் மு. அருச்சுனன், கவிஞர் தமிழ்நாடன் ஆகியோர் சிறந்த உரையை ஆற்றினர்.

கருத்தரங்கு மிகுந்த சுவையுடன் அமைந்து எழுச்சியுடன் விளங்கியது. தமிழ்நாடன் அவரது கட்டுரையை அப்படியே படி எடுத்துக் கொடுத்துவிட்டார். நல்ல முயற்சிதான். காற்றோடு கலந்து போகாமல் இன்றும் இருக்கிறதே! இதுவே ஒரு சிறப்புத்தான்.

8.5.97 தினகரன் வெளியிட்ட செய்தி.

சேலத்தில் இன்று தமிழ் வளர்ச்சித் துறை ஆட்சிமொழிக் கருத்தரங்கு. அமைச்சர்கள் தமிழ்க்குடிமகன் - வீரபாண்டி ஆறுமுகம் பங்கேற்பு

சேலம், மே 8-

தமிழ் வளர்ச்சித் துறை ஆட்சி மொழிக்கருத்தரங்கம் சேலத்தில் இன்று (8-ந்தேதி) மாவட்ட வளர்ச்சி மன்றக் கூடத்தில் நடைபெறுகிறது. கருத்தரங்கிற்கு தமிழ் ஆட்சி மொழி தமிழ் பண்பாட்டுத் துறை அமைச்சர் மு. தமிழ்க்குடிமகன் தலைமை தாங்குகிறார். தமிழக வேளாண்மைத்துறை அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகம் தொடங்கி வைத்துப் பேசுகிறார்.

கூடடத்தில் தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறைச் செயலாளர் வை. பழனிசாமி, கலெக்டர் க. முத்துசாமி ஆகியோர் முன்னிலை வகித்துப் பேசுகின்றனர். இதில் மேயர் டாக்டர் ஜி. சூடாமணி, துணை மேயர் ஜி.கே. சுபாசு, மாவட்ட ஊராட்சிக்குழுத் தலைவர் ஆ. நெடுஞ்செழியன், எம்.பிக்கள் ஆர். தேவதாஸ், டாக்டர் கே.பி. ராமலிங்கம், கே.கந்தசாமி, பி. தீர்த்தராமன், எம்.எல்.ஏக்கள் ஏ.எல். தங்கவேல், எஸ்.ஆர். சிவலிங்கம், கே.ஆர்.ஜி. தனபாலன், ஏ.எம். இராமசாமி, வி. பெருமாள், பி.கோபால், வி. முத்து, ஆர்.ஆர். சேகரன், கே. இராணி, ஐ.கணேசன், பி. கோவிந்தன் ஆகியோர் வாழ்த்திப் பேசுகின்றனர்.

கருத்தரங்கு

கருத்தரங்கில் தமிழும் மொழிபெயர்ப்பும் என்ற தலைப்பில் மொழிபெயர்ப்பு இயக்குநர் சென்னை ம. இராசேந்திரன், வணிகத் துறையில் தமிழ் என்ற தலைப்பில் வணிகவரித்துறை துணை ஆணையர் பழ. கருப்பையா, அரசு அழைப்பிதழ்களில் தமிழ் என்ற தலைப்பில் கவிஞர் தமிழ் நாடன், இலக்கியத்துறை என்ற தலைப்பில் புலவர் மு. அர்ச்சுனன், தொழில் துறையில் தமிழ் என்ற தலைப்பில் தொழிலாளர் துறை துணை ஆணையர் செ. சபாபதி, தமிழும் மருத்துவமும் என்ற தலைப்பில் நலப்பணிகள் துணை இயக்குநர் மருத்துவர் ஆர். பாலசுப்பிரமணியம் ஆகியோர் பேசுகின்றனர்.

முடிவில் சேலம் தமிழ் வளர்ச்சித் துறை துணை இயக்குநர் பொ. துரைசாமி நன்றி கூறுகிறார்."

9.5.97 அன்று ஈரோடு மாவட்டச் சார்பில் கருத்தரங்கு நடைபெற்றது. உதகையில் ஒரு விழாவிற்கு முதல்வர் சென்றிருந்தமையால் இந்த மாவட்ட அமைச்சர்கள் பெரியசாமி, செல்வராசு ஆகிய இருவரும் அங்கு சென்றுவிட்டனர். கருத்தரங்குக் கருத்துகளை அவர்கள் அறிந்து கொள்ள முடியாமல் போய்விட்டது.

நிகழ்வு முறை

நாள் : 9.5.97 வெள்ளிக்கிழமை காலை 10.00 மணி

இடம் : மாவட்ட வளர்ச்சி மன்றக் கூடம், மாவட்ட ஆட்சியர் அலுவலகம், ஈரோடு

| | | |
|---|---|---|
| வரவேற்புரை | : | முனைவர் ச. நாகராசன் அவர்கள்<br>தமிழ் வளர்ச்சி இயக்குநர் |
| முன்னிலை | : | திரு. வை. பழனிச்சாமி, இ.ஆ.ப. அவர்கள்<br>அரசுச் செயலாளர், தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறை<br><br>திரு. அபூர்வ வர்மா, இ.ஆ.ப., அவர்கள்<br>மாவட்ட ஆட்சித் தலைவர், பெரியார் மாவட்டம் |
| தலைமையுரை | : | மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள்<br>தமிழ் ஆட்சிமொழி-தமிழ்ப் பண்பாட்டுத்துறை அமைச்சர் |
| தொடக்கவுரை | : | மாண்புமிகு என்.கே.கே. பெரியசாமி அவர்கள்<br>கைத்தறித் துணி நூல் மற்றும் மாசுக்கட்டுப்பாட்டுத்துறை அமைச்சர் |
| விழாச் சிறப்புரை | : | மாண்புமிகு அந்தியூர் ப. செல்வராசு அவர்கள்<br>கதர் மற்றும் அச்சுத்துறை அமைச்சர் |
| கருத்துரை | | |
| மக்கள் மன்றமும் ஆட்சி மொழியும் | : | திருமதி. சுப்புலட்சுமி செகதீசன் அவர்கள்<br>சட்டமன்ற உறுப்பினர் |
| மொழியைக் காப்போம் | : | திரு. கோ. ப. வெங்கிடு, சட்டமன்ற உறுப்பினர் |
| ஆட்சிமொழித் திட்டமும் மொழிபெயர்ப்பும் | : | முனைவர் ம. இராசேந்திரன் அவர்கள்<br>இயக்குநர், மொழிபெயர்ப்புத்துறை |
| ஆட்சிமொழிச் சட்டமும் செயற்பாடும் | : | திரு. ஆர். கண்ணப்பன் அவர்கள்<br>மாவட்ட வருவாய் அலுவலர் |
| எங்கும் தமிழ் எதிலும் தமிழ் | : | புலவர் எழில்வேலன் அவர்கள் |
| ஆட்சிமொழித் திட்டச் செயற்பாடும், முன்னேற்றமும் | : | திரு.ஆர். பூவராகமூர்த்தி<br>மாவட்ட ஆட்சியரின் நேர்முக உதவியாளர் (பொது). |
| வணிகமும் ஆட்சிமொழியும் | : | திரு. பி.எஸ். முத்துவீரு அவர்கள்<br>உதவி ஆணையர், வணிகவரித்துறை |

| | | |
|---|---|---|
| தமிழகமும் ஆட்சிமொழியும் | : | புலவர் ஆறுமுகம் அவர்கள் |
| கல்வித்துறையில் ஆட்சிமொழி | : | செல்வி சி. பத்மாவதி அவர்கள் முதன்மைக் கல்வி அலுவலர் |
| கூட்டுறவும் ஆட்சிமொழியும் | : | திரு. மு. வரதராசன் அவர்கள் கூட்டுறவு சார்பதிவாளர் |

வாழ்த்துரை

| | | |
|---|---|---|
| மக்களவை உறுப்பினர்கள் | : | டாக்டர் கே.பி. இராமலிங்கம்<br>திரு. வி.பி.சண்முக சுந்தரம்<br>திரு. எஸ்.கே. கார்வேந்தன்<br>திரு. வி. கந்தசாமி |
| சட்டமன்ற உறுப்பினர்கள் | : | திரு. என்.எஸ். ராஜ்குமார் மன்றாடியார்<br>திரு. முத்தூர் எம்.பி. சாமிநாதன்<br>திரு. வி.ஏ. ஆண்டமுத்து<br>திரு. எஸ்.கே. இராசேந்திரன்<br>திருமதி. ஆர் சரசுவதி<br>திரு. எஸ்.என். பாலசுப்பிரமணியம்<br>திரு. நா. பெரியசாமி<br>திரு.ஆர். அரங்கசாமி, மாவட்ட ஊராட்சிக்குழுத் தலைவர்<br>திரு. செ. அரங்கராசன், ஈரோடு நகரமன்றத் தலைவர் |
| நன்றியுரை | : | முனைவர் மு. இராசேந்திரன் |

அரசு அதிகாரிகளுக்கு அமைச்சர் கடும் எச்சரிக்கை

ஈரோடு, மே 10-

தமிழில் பெறப்படும் கடிதங்களுக்கு அரசு அதிகாரிகள் தமிழில்தான் பதில் எழுதவேண்டும். அவ்வாறு அதிகாரிகள் செய்யத் தவறினால் சம்பந்தப்பட்டவர்கள் மீது நடவடிக்கை உறுதி என்று அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை விடுத்தார்.

கருத்தரங்கிற்குத் தலைமை வகித்த அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசியதாவது :-

ஆட்சி மொழிக் கருத்தரங்கு நடத்துவதில் தமிழ் வளர்ச்சித் துறை பெருமை அடைகிறது.

பொது மக்கள் தமிழில் தரும் கடிதங்களுக்கு அரசிடமிருந்து தமிழில்தான் பதில் தரப்படவேண்டும் என்பதைப் பலமுறை கூறிய அமைச்சர் ஆங்கிலத்தில் எழுதியிருந்தால் அவற்றின் நகலை எங்களுக்கு அனுப்புங்கள். மற்றவற்றை வெண்திரையில் காண்க என்று குறிப்பிட்டார்.

தலைமைச் செயலகத்தில் சில கடிதங்களை ஆங்கிலத்தில் அனுப்பியது குறித்து விளக்கம் கேட்டபோது அதிகாரிகள் தமிழ் தட்டச்சு எந்திரங்கள் போதுமானதாக இல்லாததால் அவசரத்திற்கு ஆங்கிலத்தில் எழுதினோம் என்று குறிப்பிட்டார்கள். மற்ற விஷயங்களில் அவசரத்தை பற்றி கவலைப்படுகிறார்களா? என்று அரசு பணியாளர்களை அமைச்சர் தமிழ்க்குடிமகன் ஒரு பிடிபிடித்தார்.

தலைமை செயலகத்தில் வெளி மாநிலங்கள், வெளிநாடுகள் உச்சநீதிமன்றம் போன்ற கடிதங்களுக்கு விதிவிலக்கு அளிக்கப்பட்டுள்ளது. மற்றவை தமிழிலேயே இருக்கவேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டுள்ளது.

தமிழகத்தில் 31 ஆயிரம் அரசு தொடக்கப்பள்ளிகளும், 5 ஆயிரம் உதவி பெறும் தனியார் பள்ளிகளும் உள்ளன. மேலும் பதிவு பெற்ற 2100 மழலையர் பள்ளிகளும், பதிவு பெறாத 22 ஆயிரத்து 250 மழலையர் பள்ளிகளும் உள்ளன. 7ம் வகுப்பு வரை எந்த பள்ளியிலும் யாரும் பயிலலாம் சான்றிதழ் பெறலாம் என்ற ஆணை உள்ளதால் 22 ஆயிரம் மழலையர் பள்ளிகள் அனுமதி பெறாமல் உள்ளன. அந்த அரசாணை நிறுத்தப்பட்டால் 22 ஆயிரம் பள்ளிகளும் காணாமல் போய்விடும். துவக்கப்பள்ளிகளில் தமிழைக் கட்டாயமாக்க வேண்டும் என்ற நிலை வரும்.

தமிழைப் படிக்காமல் யாரும் தமிழகத்தில் பட்டம் பெற முடியாது. முதல் மற்றும் இரண்டாம் வகுப்புகளில் தமிழ் கட்டாயப் பாடமாகவும் 3,4,5 வது வகுப்புகளில் தமிழ் கட்டாயப் பாடமாமகவும் ஆங்கிலம் விருப்பப்பாடமாகவும் மாற்றுவது குறித்து கல்வி அமைச்சர் முதலமைச்சருடன் பேசி விரைவில் நடவடிக்கை எடுக்கப்படும்.

சிங்கப்பூரில் 1948ம் ஆண்டிலேயே நகைக்கடைக்கு 'அணிமணி பொற்சாலை' என்று பெயர் பலகை வைத்துள்ளனர். 73 சதவீத சீனர்கள் உள்ள சிங்கப்பூரில் லீகுவான் யூ அமைச்சரவையில் தமிழுக்கு அங்கீகாரம் அளிக்கப்பட்டுள்ளது. இங்குள்ள கடைகளில் குறைந்த பட்சம் ஜுவல்லர்ஸ் என்பதற்கு பதிலாக 'நகைக்கடை' என்று எழுதக்கூடாதா?

மலேசியாவின் ஈப்போ நகர் அருகே "காமரூன் ஐலண்ட்" டில் "செந்தோசா உணவகம்" என்று தமிழில் உள்ள உணவகம் செயல்படுகிறது. தமிழகத்தில் கடைகளின் பெயர்ப் பலகைகளில் முதலில் தமிழிலும், இரண்டாவது ஆங்கிலத்திலும், மூன்றாவதாக தாய் மொழியிலும் எழுதிக் கொள்ளலாம் என்ற உரிமை கொடுத்துள்ளோம்."

இவ்வாறு அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசினார்.

புலவர் ஆறுமுகம் பேசுகையில் அரசு ஆணைகள் தமிழில் தரவேண்டும் என்றும் தமிழ் மொழி வாயிலாகக் கற்றவர்களுக்கு அரசுப் பணியில் முதலிடம் தரவேண்டும் என்றும் குறிப்பிட்டார்.

தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறைச் செயலாளர் வை.பழனிச்சாமி பேசுகையில் தொல்காப்பியர் காலத்தில் தமிழ் ஆட்சி.மொழியாக இருந்தது. அன்றே தொல்காப்பியம் இந்த சொற்களை வழங்கி இருந்தது. இன்றைய மொழி வழக்கில் பல வார்த்தைகளை இழந்து விட்டோம். ஆட்சியாளர்கள் ஆதரவு தரும் மொழிதான் வளர்ந்துள்ளது.

அரபு, பாரசீக இந்துஸ்தானி மொழிகளிலிருந்து பல வார்த்தைகள் தமிழோடு கலந்து விட்டன. ரஸ்தா, தபேதார், செலான் போன்ற வருவாய் துறையிலிருக்கும் சொற்கள் உதாரணம். 40 ஆண்டுகளாக தமிழ் ஆட்சி மொழித் திட்டம் முழுமையான வளர்ச்சி அடையவில்லை.

இவ்வாறு பேசினார்.

5.6.97 இல் திருவண்ணாமலையில் ஆட்சிமொழிக் கருத்தரங்கு நடைபெற்ற போது வழக்கம்போலவே அந்த மாவட்டம் சார்ந்த சில அறிஞர்களும் கலந்து கொண்டனர். பேரா.கா. பட்டாபிராமன் தமிழில் வரைவுகளை மேற்கொள்வதற்குப் பயன்படும் வகையில் நல்ல முறையில் ஒரு மொழி பெயர்ப்புப் பட்டியலை வழங்கினார். இவையனைத்தும் அடுத்த முறை ஆட்சிமொழி அகராதியுடன் சேர்த்து அச்சிடப்படவேண்டும். அப்போது, எல்லா அலுவலர்களும் பார்வையிட்டுப் பயன்படுத்திக் கொள்ள முடியும். வீட்டுவசதித்துறை அமைச்சர் பிச்சாண்டி கலந்து கொண்டு நல்ல ஒத்துழைப்புக் கொடுத்தார். மாவட்ட ஆட்சியர் சிவ. சூரியன், துறைச் செயலாளர் வை. பழனிச்சாமி, சட்டமன்ற உறுப்பினர்கள் திருவேங்கடம், அ. இராசேந்திரன், நன்னன் ஆகியோரும் தமிழறிஞர்கள், இராசேந்திரன், சண்முக சுந்தரம், பாண்டுரங்கன், ப. கண்ணன், உமாசங்கர் ஆகியோரும் கலந்து கொண்டு பேசினர்.

## நிகழ்ச்சி நிரல்

**5.6.97 காலை 10 மணி**

| | | |
|---|---|---|
| வரவேற்புரை | : | முனைவர் ச. நாகராசன்<br>தமிழ் வளர்ச்சி இயக்குநர் |
| தலைமைப் பேருரை | : | தமிழ் ஆட்சி மொழி அமைச்சர்<br>மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க்குடிமகன் |

| | | |
|---|---|---|
| தொடக்கவுரை | : | வீட்டுவசதித்துறை அமைச்சர் |
| | | மாண்புமிகு திரு. கு. பிச்சாண்டி |
| முன்னிலையுரை | : | திரு. வை. பழனிச்சாமி, இ.ஆ.ப., |
| | | அரசுச் செயலாளர் |
| | | தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை |
| | | திரு. சிவ. சூரியன், இ.ஆ.ப., |
| | | மாவட்ட ஆட்சித் தலைவர் |
| வாழ்த்துரை | : | நாடாளு மன்ற உறுப்பினர்கள் |
| | | திரு. த. வேணுகோபால் |
| | | திரு. பி. சண்முகம் |
| | | திரு. ஏ.எம். வேலு |
| | | சட்டமன்ற உறுப்பினர்கள் |
| | | திரு. பெ.கு. திருவேங்கடம் |
| | | திரு. அ. இராசேந்திரன் |
| | | திரு. வ. அன்பழகன் |
| | | திரு. ஆர். சிவானந்தம் |
| | | திரு. ந. பாண்டுரங்கன் |
| | | திரு. கே.வி. நன்னன் |
| | | திரு. பால. ஆனந்தன் |
| | | திரு. க. மணிவர்மா |
| | | மாவட்ட ஊராட்சித் தலைவர் |
| | | திரு. கே. நடராஜன் |
| | | நகர மன்றத் தலைவர் |
| | | திரு. வி. பவன்குமார் |
| கருத்துரை | : | முனைவர் ம. இராசேந்திரன் |
| | | இயக்குநர், மொழிபெயர்ப்புத்துறை |
| | | திருப்பாம்புரம் திரு. சண்முகசுந்தரம் |
| | | முதல்வர், அரசு இசைக்கல்லூரி, சென்னை |

பேராசிரியர் கா. பட்டாபிராமன்

புலவர் அ. பாண்டுரங்கனார்

திரு. ப. கண்ணன்

திரு. ந. உமாசங்கர்

நன்றியுரை : திரு. வை. கண்ணபுரக்கண்ணன்

திருவண்ணாமலை பேச்சின் சில பகுதிகளை 'முரசொலி' (9.6.97) வெளியிட்டது. அந்தப் பேச்சு இங்கே தரப்பட்டுள்ளது.

தமிழில் பேசும்போது

பழைய சொற்களைப் பயன்படுத்துவதோடு புதிய சொற்களை உருவாக்குவோம்

அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேச்சு

திருவண்ணாமலை, ஜூன் 9 -

"தமிழில் பேசும்போது பழைய சொற்களைப் பயன்படுத்துவதோடு புதிய சொற்களை உருவாக்கியும் பேசப் பழகிக் கொள்வோம்" என்று அமைச்சர் தமிழ்க்குடிமகன் தெரிவித்துள்ளார்.

தமிழ் வளர்ச்சித் துறையின் சார்பில் திருவாண்ணாமலை மாவட்ட ஆட்சி மொழிக் கருத்தரங்கம், ஆட்சியர் அலுவலக வளாகத்தில் நடந்தது. அமைச்சர் தமிழ்க்குடிமகன் தலைமை தாங்கிப் பேசியதாவது:-

தமிழகத்தில் நமது வளமான செல்வமான தமிழ் மொழியின் சொல்லாட்சியைப் பயன்படுத்தத் தவறியதால், நாம் வீழ்ச்சி அடைந்துள்ளோம்.

நாடு விடுதலையடைந்து பொன் விழா ஆண்டு நடக்கிறது. 1947 ம் ஆண்டே நமக்கு விடுதலை கிடைத்துவிட்டதாக நினைத்துக் கொண்டு இருக்கிறோம். ஆனால் இப்போதுதான் உண்மையான விடுதலை கிடைத்துள்ளது.

தமிழில் சொல்வளத்திற்கு பஞ்சம் இல்லை. பழைய சொற்களை எடுத்து பயன்படுத்த வேண்டும். தேவைப்படுமானால், புதிய சொற்களை உருவாக்க வேண்டும்.

உலகத்தில் தோன்றியுள்ள மொழிகள் அனைத்தும் ஒரு மூலத்தில் இருந்து தான் பிறந்து இருக்க வேண்டும். அந்த மூலத்திற்கு நெருங்கிய மொழியாகத் தமிழ் உள்ளது என 1858 ஆம் ஆண்டு கால்டுவெல் எனும் அறிஞர் கூறியுள்ளார். தமிழில் இருந்துதான் ஒரு வயிற்றில் பிறந்த

மொழிகளாக மலையாளம், கன்னடம், தெலுங்கு மொழி ஆகியன பிறந்துள்ளன. மொழி அலட்சியம் மற்றும் பொறுப்பின்மை காரணமாகத் தமிழ் இன்றைக்கு இந்த அளவுக்கு உள்ளது.

தமிழ் மொழி மீது நம்பகத்தன்மை இல்லாமல் போய்விட்டது. குழந்தைகளுக்கு தமிழில் பெயர் கூட வைப்பது இல்லை. இது ஒரு பெரிய வீழ்ச்சி. இதையெல்லாம் கவனிக்க வேண்டிய நேரம் இது. நல்ல தமிழில் பெயர் வைத்தால் வேறு மாநிலங்களில் வேலைவாய்ப்பு கிடைப்பது இல்லை என்கிறார்கள். அப்படியென்றால் வேறு மாதிரியாகத்தான் சிந்திக்க வேண்டும்.

ஆங்கிலப் பயிற்சி இருந்தால்தான் இந்தியாவில் எல்லா மாநிலத்திலும் வெளிநாடுகளிலும் வேலை பார்க்க முடியும் என பெரும்பாலானோர் நினைக்கின்றனர். தமிழை பயிற்று மொழியாகக் கொண்டு தேர்ச்சி பெறுபவர்களுக்கு வேலை வாய்ப்பு கிடைக்க தி.மு.க. அரசு பாடுபடும் என 96ம் ஆண்டு தேர்தல் அறிக்கையில் கூறியுள்ளது. அதை இங்கு நினைவுபடுத்த விரும்புகிறேன்.

ஒரு மாணவன் கல்லூரியில் சேரும்போது ஆங்கிலப் பயிற்சி மொழிப்பிரிவில் படிக்க வேண்டும் எனக் கூறுகிறான். அவனது அந்த கருத்தை ஆங்கிலத்தில் சொல் என்றால் அவனால் சொல்ல முடிவதில்லை. ஏதோ மயக்கத்தில் அவனது படிக்காத தந்தை கூறுவதைக் கேட்டு அந்த மாணவன் அப்படி நடந்து கொள்கிறான்.

ஒரு கல்லூரியில் ஆங்கிலப் பயிற்சி வழியில் பி.காம். படிக்கும் 192 மாவணர்கள் தேர்வு எழுதுகின்றனர். அதில் 100க்கு மேற்பட்ட மாணவர்கள் தங்கள் விடைத்தாள்களைத் தமிழில்தான் எழுதியுள்ளனர். அதுதான் இயற்கை. அதுதான் வரும். நமக்கு நாமே திரைபோட்டுக் கொண்டு வாழ்வது தமிழர்களுக்குப் பழக்கமாகிவிட்டது.

இந்தியாவில் வட மாநிலங்களுக்குக் குடி பெயர்ந்து இருக்கும் தமிழக பிராமணர்களின் வீடுகளில் நல்ல தமிழ் பேசுவதைக் காணமுடிகிறது. ஆனால், இங்கு குழந்தைகள் கூட அம்மாவை மம்மி என்றும் அப்பாவை டாடி என்றும் அழைக்கும் நிலை உள்ளது. அந்த அளவுக்குக் குழந்தைகள் தெரிந்து வைத்துக்கொண்டு இருக்கிறார்கள்.

இன்றைய தமிழ்ப் படங்கள் லவ் டுடே, ஒன்ஸ்மோர், மை இந்தியா என ஆங்கிலப் பெயர்களைத் தாங்கி வெளிவருகின்றன. இது போன்ற படங்களுக்கு இனி தமிழக அரசு சார்பில் பரிசு மற்றும் விருது மறுப்பது குறித்து தமிழக முதல்வருடன் பேசி தடைசெய்யப்படும்."

இவ்வாறு அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசினார்.

காஞ்சிபுரம் மாவட்டக் கருத்தரங்கு 8.8.97 அன்று நடைபெற்றது. தமிழில் மிகுந்த ஆர்வமுடைய மாவட்ட ஆட்சித் தலைவர் வெ. இறையன்பு, துறைச் செயலாளர் வை. பழனிச்சாமி ஆகியோரின் சிறப்பான ஏற்பாடுகள்.

நாடாளுமன்ற, சட்டமன்ற உறுப்பினர்களில் பி. முருகேசன் மட்டுமே கலந்து கொண்டார். பிறரெல்லாம் வரக்கூடாது என்று நினைக்கவில்லை. வந்து என்ன பேசி விடப் போகிறோம் என்ற தவிப்புதான் அவர்களைக் கலந்து கொள்ளவிடாமல் செய்துவிடுகிறது. அதில் ஈடுபாடு காட்ட முடியாத அளவுக்கு ஆட்சிமொழிச் செயலாக்கம் பல சட்டமன்ற உறுப்பினர்களிடமிருந்து அயன்மைப் பட்டே நிற்கின்றது என்பதுதான் என் கருத்து. அறிஞர்கள் மு.பி. பாலசுப்பிரமணியம், தேவராசன், சண்முகசுந்தரம், இராசேந்திரன், மா.வ. அலுவலர் இராசாமணி ஆகியோர் கலந்து கொண்டு நல்ல கருத்துகளை வழங்கினார்

## நிகழ்ச்சி நிரல்

8.8.97 காலை 10 மணி

| | | |
|---|---|---|
| வரவேற்புரை | : | முனைவர் ச. நாகராசன்<br>தமிழ் வளர்ச்சி இயக்குநர் |
| தலைமைப் பேருரை | : | மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர்<br>முனைவர் மு. தமிழ்க்குடிமகன் |
| முன்னிலையுரை | : | திரு. வை. பழனிச்சாமி, இ.ஆ.ப.,<br>அரசுச் செயலாளர்<br>தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை<br><br>திரு. வெ. இறையன்பு, இ.ஆ.ப.,<br>மாவட்ட ஆட்சித் தலைவர் |
| கருத்துரை | : | பேராசிரியர் மு. பி. பாலசுப்பிரமணியன்<br>திரு. தேவராசன்<br>திருப்பாம்புரம், சோ. சண்முகசுந்தரம்<br>அரசு இசைக்கல்லூரி முதல்வர்<br>முனைவர் ம. இராசேந்திரன்<br>மொழி பெயர்ப்புத் துறை இயக்குநர்<br>திரு. சி. ராஜாமணி<br>மாவட்ட வருவாய் அலுவலர் |
| வாழ்த்துரை | : | திரு. பி. முருகேசன், ச.ம.உ.. |
| நன்றியுரை | : | ஆ. அரிகிருட்டிணன் |

8.9.97 அன்று தூத்துக்குடி மாவட்ட ஆட்சி மொழிக் கருத்தரங்கு நடைபெற்றது. மாவட்ட ஆட்சித்தலைவர் சி. முத்துக்குமாரசாமி சிறப்பான ஏற்பாடுகளைச் செய்திருந்தார். ஆனால் பழைய கட்டிடத்தில் நடைபெற்றதால் 100 பேர் கூட அமர முடியாத சிறிய இடத்தில் கருத்தரங்கு நடைபெற்றது.

அமைச்சர் ஜெனிபர் சந்திரன், துறைச் செயலாளர் வை. பழனிச்சாமி சிறப்புரையாற்றினர். வழக்கம் போல் ம. இராசேந்திரன், 'இசை' சண்முகசுந்தரம் ஆகியவர்களுடன் பேராசிரியை பா. சவுந்தரா, கவிஞர் அ. செகதீசன், நா. புகழேந்தி, வணிகர்கள் சார்பில் ஆ. திருச்சிற்றம்பலம், கடலைமுத்து ஆகியோரும் கலந்து கொண்டனர்.

சட்டமன்ற உறுப்பினர்கள் என். பெரியசாமி, டேவிட் செல்வின் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

நான் பேசிக்கொண்டிருக்கும்போது இடையில் ஒருவர் குறுக்கிட்டார். எனக்குச் சினம் வந்து விட்டது என்றாலும் பொறுத்துக் கொண்டு அவர் சொன்னதைக் கேட்டேன் - அவரது குறுக்கீடு சரிதான்.

"இவ்வளவு பேசுகிறீர்களே, உங்கள் அலுவலகத்தில் ஆங்கிலத்தில் முத்திரையிட்டு மடல் அனுப்பியிருக்கிறார்களே!" என்றார். மடலையும் காட்டினார்.

அவரது குறுக்கீட்டுக்கு நன்றி தெரிவித்து, என் துறையின் பொறுப்பற்ற போக்கையும் சாடினேன். சென்னை சென்றதும் முதலில் அனைவரையும் அழைத்து ஆங்கிலத்தில் உள்ள முத்திரைகள் அனைத்தையும் மூலையில் கட்டிவையுங்கள் என்று ஆணையிட்டேன்.

8.12.97 அன்று விழுப்புரம் மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கம் நடைபெற்றது. அமைச்சர் பொன்முடி தொடக்கவுரை ஆற்றினார். மாவட்ட ஆட்சித் தலைவர் பிரவீண் குமார் ஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்திருந்தார். ம. இராசேந்திரன், கொடுமுடி சண்முகன், பேரா. திருநாவுக்கரசு, கண்ணப்பன், புலவர் வேலு ஆகிய தமிழறிஞர்கள் சிறப்புரையாற்றினார். சட்டமன்ற உறுப்பினர்கள் இந்த மாவட்டத்தில் அதிக அளவில் கலந்து கொண்டனர்.

திருவாளர்கள் ஏ.ஜி. சம்பத், ச. அழகுவேலு, ஆ. ஞானசேகரன், இரா. சேதுநாதன், வானூர் மாரிமுத்து, தா. உதய சூரியன் ஆகியோர் கலந்து கொண்டு சிறப்பித்தனர். மாவட்ட ஊராட்சி நகர்மன்றத் தலைவர்களும் கலந்து சிறப்பித்தனர்.

அமைச்சர் பொன்முடி தன் உதவியாளர் மூலமாக விழுப்புரத்தில் உள்ள பெரும்பான்மையான விளம்பரப் பலகைகள் நல்ல தமிழில் அமைந்திட ஏற்பாடு செய்தார்

மிகவும் பயனுள்ள கருத்தரங்கு, பல அலுவலர்களும் ஆர்வத்துடன் பங்கேற்றனர்.

## நிகழ்ச்சி நிரல்

8.12.97 காலை 10 மணி

| | | |
|---|---|---|
| வரவேற்புரை | : | முனைவர் ச. நாகராசன்<br>தமிழ் வளர்ச்சி இயக்குநர் |
| தலைமைப் பேருரை | : | மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க்குடிமகன்<br>தமிழ் ஆட்சிமொழி அமைச்சர் |
| தொடக்கவுரை | : | மாண்புமிகு முனைவர் க. பொன்முடி<br>போக்குவரத்துத்துறை அமைச்சர் |
| முன்னிலையுரை | : | திரு. பிரவீண் குமார், இ.ஆ.ப.,<br>மாவட்ட ஆட்சித் தலைவர் |
| கருத்துரை | : | முனைவர் ம. இராசேந்திரன்<br>இயக்குநர், மொழி பெயர்ப்புத்துறை<br><br>முனைவர் கொடுமுடி ச. சண்முகன்<br>செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம்<br><br>பேராசிரியர் து. திருநாவுக்கரசு<br><br>திரு. கண்ணப்பன்<br>ஓய்வு பெற்ற தலைமையாசிரியர்<br><br>புலவர் வேதா |
| வாழ்த்துரை | : | நாடாளுமன்ற உறுப்பினர்கள்<br><br>சட்டமன்ற உறுப்பினர்கள்<br><br>திரு. ஏ.ஜி. சம்பத்<br>திரு. ச. அழகுவேலு<br>டாக்டர் ஆ. ஞானசேகரன்<br>திரு. த. நடராஜன்<br>திரு. ஆர். சேதுநாதன்<br>திரு. ஏ. மாரிமுத்து<br>திரு. ஆர். ஜெ. மாணிக்கம்<br>திரு. இரா. மூக்கப்பன் |

திரு. தா. உதயசூரியன்
டாக்டர் ஏ. மணி
திரு. எஸ். சிவராஜ்

திரு. வி. தசரதன்
மாவட்ட ஊராட்சித்தலைவர், விழுப்புரம்

திரு. ஆர். ஜனகராஜ்
நகர் மன்றத் தலைவர், விழுப்புரம்

9.12.97 அன்று வேலூர் மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கம் நடைபெற்றது. மாவட்ட ஆட்சியர் டேவிதார் சிறப்பான முறையில் ஏற்பாடுகளைச் செய்திருந்தார். ம. இராசேந்திரன், கொடுமுடி சண்முகம், அலிப்பூர் ரகீம், ம. நாராயணன் ஆகிய தமிழறிஞர்களும், த. வேணுகோபால், சி. ஞானசேகரன், வி. கோவிந்தன், இரா. மகேந்திரன், இரா. காந்தி, பெ.நா. சுப்ரமணியன் முதலான சட்டமன்ற நாடாளுமன்ற உறுப்பினர்களும் பிற உள்ளாட்சித் தலைவர்களும் கலந்து கொண்டனர்.

பொதுப்பணித்துறை அமைச்சர் துரைமுருகன் தொடக்கவுரையாற்றினார். கல்லூரிக் காலத்திலிருந்து என்னுடன் பழகியவர் எனும் முறையில் என் தமிழ்ப் பற்றினை நன்கறிந்தவர் எனும் முறையில் மிகச் சிறப்பானதோர் உரையை நிகழ்த்தினார்.

விறுவிறுப்பாக நடைபெற்ற இந்தக் கருத்தரங்கம் பெரிதும் பயனைத் தந்தது எனலாம்.

நாங்கள் மட்டுமே கருத்துகளைச் சொல்கிறோம் என்றில்லை. இக்கருத்தரங்கில் பேசிய வேலூர் நாராயணன் பேசுவதைக் கேளுங்கள் :

'ஆட்சித்துறையில் எங்ஙனமெல்லாம் தமிழை வளர்க்கலாம் என்கின்ற நோக்கில் இன்று இந்தக் கருத்தரங்கம் கூட்டப் பெற்று கருத்துரை வழங்க வேண்டும் எனப் பணித்து என்னை இங்கே அழைத்திருக்கின்றார்கள். நான் பணியாற்றுவது பாரத ஸ்டேட் வங்கியில்! என்றாலும் முறையாகத் தமிழ் முதுகலை பயின்றவன்; கவிதைகள் - கட்டுரைகள் எழுதி வருபவன் என்கின்ற தகுதிக்காக என்னை இவர்கள் அழைத்திருக்கின்றார்கள்;

நம் நாடு விடுதலை பெற்ற பிறகு 1956 இல் தமிழ்நாட்டில் தமிழ் மட்டும்தான் ஆட்சிமொழியாக இருக்க வேண்டும் என்று சட்டமியற்றப்பட்டுள்ளது. இன்றைக்கு ஏறத்தாழ நாற்பது ஆண்டுகளாகின்றன. ஆனால் இந்தச் சட்டத்தில் எழுபது விழுக்காடு மட்டுமே நடைமுறைப்படுத்தப்பட்டுள்ளது என்றும், எஞ்சியுள்ள முப்பது விழுக்காடு நடைமுறைப்படுத்தப்படாமலேயே உள்ளது என்றும் தமிழ் வளர்ச்சித்துறை நண்பர்கள் என்னிடம் சொன்னார்கள். அப்பொழுது எனக்கு உருசிய கவிஞன் ஒருவனின் கவிதைதான் நினைவிற்கு வந்தது; அவன் பாடினான் :

நான் செத்துக் கிடந்தேன்;
என்னருகே இருவர் பேசிச் சென்றார்கள்;
நான் எழுந்து உட்கார்ந்தேன்
ஆம்! அவர்கள் பேசிச் சென்றது
என் தாய் மொழியில். . . !

தாய்மொழியில் பேசிச் சென்றால் செத்துப்போன பிணங்கூட எழுந்து உட்கார்ந்து கொள்ளும் என்று அவன் பாடினான். ஆனால் அத்தகைய உணர்ச்சி, தாய்மொழிப் பற்று இன்மை அரசுத்துறையில் தமிழ் வளர்ச்சிக்குப் பெரிதும் தடையாக உள்ளன என்று நான் கருதுகிறேன்.

மலேசியா, சிங்கப்பூர் சென்று திரும்பியவர்கள் கூறக் கேட்டிருக்கின்றேன். அங்கு இவை போன்ற பொது மண்டபங்களில் தமிழர்கள் பெருமளவில் கூடுகின்ற விழாக் காலங்களில் சுவர்களில் 'அருள் கூர்ந்து இல்லங்களில் தமிழிலேயே பேசுங்கள்' என்று எழுதி மாட்டப்பட்டுள்ளதாம். ஆம்! அங்கே சீனர், மலேசியர் போன்ற பல்வேறு இன மக்களுடன் தமிழர்கள் பழகுகின்ற வாய்ப்பு உள்ளதால், தமிழர்கள் தாய்மொழியை மறந்து விடுவார்களோ என்ற அச்சம் பெரியவர்களுக்கு எழுந்துள்ளது. இங்கேயும் - நம் தாய்த் தமிழகத்திலேயும் நிலைமை இவ்வாறே நீடிக்குமானால், நமது ஊர்ப் பொதுமண்டபங்களிலும், 'அருள்கூர்ந்து இல்லங்களில் தமிழிலேயே பேசுங்கள்' என்று எழுதி வைக்க வேண்டிய கட்டாயம் வந்துவிடும்; அந்த நிலை நமக்குத் தேவைதானா? எண்ணிப் பார்க்க வேண்டும்.

அரசு அலுவலகங்களில் பெரும்பாலோர் இன்றுங்கூட ஆங்கிலத்தில் தான் கையெழுத்திடுவதாக அறிய வருகிறேன். வருந்துகிறேன். தமிழில்தான் கையொப்பமிட வேண்டும் என்று தமிழக அரசு ஆணை பிறப்பித்து ஏறத்தாழ இருபதாண்டுகள் ஆகின்றனவே! இன்னும் என்ன தயக்கம்? ஒருவேளை அதற்காகத் தனியாகப் பணச்சலுகை - ஊதிய உயர்வு ஏதேனும் எதிர்பார்க்கின்றார்களா? என்பது தெரியவில்லை. இன்றைய பணச் சமுதாயத்தில் அப்படியும் இருக்கக் கூடும்! அரசு இதுபற்றிச் சிந்திக்க வேண்டும்.

இன்னொரு செய்தி! வணிக நிறுவனங்களில் தமிழிலேயே பெயர்ப்பலகை வைக்க வேண்டும் என்று தமிழக அரசு சட்டம் இயற்றிப் பல ஆண்டுகள் ஆகிவிட்டன. ஆனால் வணிகர் சமுதாயம் அதனைப் பொருட்படுத்தியதாகவே தெரியவில்லை. சேலம் - கோவை மாநகரங்களில் மட்டும் ஓரளவு பெயர்ப்பலகைகள் தமிழில் இருப்பதைப் பார்த்தேன்; மகிழ்ந்தேன். மற்ற இடங்களில் என்ன நிலைமை? மீண்டும் கவிஞர் காசி ஆனந்தன் கூறிய கருத்துதான் என் நினைவில் நிழலாடுகிறது.

"பிரான்சு நாட்டின் கடைத் தெருவில் நடக்கும்போது பிரான்சு தெரிகிறது. செருமானிய நாட்டின் கடைத் தெருவில் நடக்கும் போது செருமனி தெரிகிறது; உருசிய நாட்டின் கடைத்தெருவில்

நடக்கும்போது உருசியா தெரிகிறது. தமிழ்நாட்டின் கடைத்தெருவில் நடக்கும்போது இங்கிலாந்து அல்லவா தெரிகிறது" என்று வருந்துகிறார் இவர்.

இது பற்றியும் பெருமக்களாகிய நீங்கள் சிந்திக்க வேண்டும்.

ஏற்கெனவே, அரசு, 'ஆட்சிச் சொல் அகராதி' என்றொரு நூலினை வெளியிட்டுள்ளது. அதனையும், நம் பாவாணர், பாவலரேறு பெருஞ்சித்திரனார், நம் பெருமைக்குரிய அமைச்சர் மு. தமிழ்க்குடிமகனார் போன்றோரின் நூல்களையும் நம் அரசு அலுவலர்கள் படிக்கின்ற பழக்கத்தை மேற்கொள்ள வேண்டும். சென்னை வானொலியில் அன்றாடம் காலையில், 'நாளொன்று பிறக்கச் சொல்லொன்று அறிவோம்' என்றொரு நிகழ்ச்சி ஒலிபரப்பாகின்றது. அவற்றைக் கேட்டாலே போதும்; நமக்குப் பல புதிய சொற்கள் அறிமுகமாகும்!

இதோ மற்றுமொரு நூல் - 'பாவேந்தர் - கனவு' - அமைச்சர் மு. தமிழ்க்குடிமகனார் இயற்றியது. இந்நூலின் 230 ஆம் பக்கத்தில் வணிகப் பெருமக்களுக்காகப் பல சொற்களைத் தமிழ்ப்படுத்தித் தருகின்றார்கள்.

| | | |
|---|---|---|
| மெடிக்கல் ஷாப் | - | மருந்தகம் |
| டீ ஸ்டால் | - | தேநீர்க்கடை |
| சில்க் ஹவுஸ் | - | பட்டு மாளிகை |
| ஸ்டேஷனரி | - | பல்பொருள் கடை, மளிகை |
| சினிமா தியேட்டர் | - | திரையரங்கம் |

என்று நீண்ட தொரு பட்டியலையே தந்திருக்கின்றார்கள். அவற்றை 'இன்று ஒரு தமிழ்ச்சொல்' என்ற முறையில் அரசு அலுவலகங்கள் தோறும் எழுதி வைக்கலாம். நான் பணியாற்றி வருகின்ற 'பாரத ஸ்டேட் வங்கி' வேலூர் கிளையில் அன்றாடம் ஒரு பொன் மொழியை எழுதி வைக்கின்றோம். அதற்கு நல்ல வரவேற்பும் பாராட்டும் பொதுமக்களிடமிருந்து வந்த வண்ணம் உள்ளன. எனவே அரசு அலுவலர்களும் 'அன்றாடம் ஒரு தமிழ்ச்சொல்' என்ற முயற்சியில் இறங்குவது நல்ல பலனைத் தரும்.

அரசுத் துறையில் சிறந்த வரைவுகளை எழுதுபவர்கட்குப் பரிசு என்ற முறையில் வழங்கப்படுகின்ற தொகை பற்றி அறிந்தேன். அந்தப் பரிசுத் தொகைகளை அருள் கூர்ந்து அரசு உயர்த்த வேண்டும்; அல்லது 'ஓர் ஆண்டு ஊதிய உயர்வு' நல்க வேண்டும் என்பது என் பணிவான கருத்து; அப்பொழுது தான் சிறந்த தமிழ் வரைவுகளை எழுதும் அலுவலர்களின் பட்டியல் மேலும் மேலும் நீளும். ஏனென்றால், நாம் வாழ்வது பணச் சமுதாயம்!

தமிழால் எல்லாம் முடியாது என்று சிலர் சொல்கின்றார்கள். ஒரு வாதத்திற்கு ஒப்புக் கொண்டு அவர்களை நான் திருப்பிக் கேட்கின்றேன் : ஆங்கிலத்தால் மட்டுமே எல்லாம் முடியுமா?

இதோ இந்த அரங்கத்தில் நீங்கள் இத்துணைப் பேர்கள் குழுமியிருக்கின்றீர்கள் : முயன்று பாருங்கள் நான் ஒரு சொற்றொடரைக் கூறுகின்றேன்; அதனை ஆங்கிலத்தில் சொல்ல முடிகிறதா என்று பாருங்கள்.

"உங்கள் தகப்பனாருக்கு நீங்கள் எத்தனையாவது மகன்?"

இதனை யாராவது ஆங்கிலத்தில் பெயர்த்துச் சொல்லுங்கள் பார்ப்போம்! 'இதோ நான் சொல்கிறேன்' என்று எமது வங்கி நண்பர் ஒருவர் முன்வந்தார்; சொல்லுங்கள் என்றதும் அவர் சொன்னார். "What is the Roll of ths son to your father?" என்றார். உடனே நான், 'என்னப்பா.. .. உங்கள் அப்பா வகுப்பறையா நடத்துகின்றார்? என்றேன். சுற்றியிருந்தவர்கள் எல்லாம் இதோ. .. உங்களைப் போலத்தான்... பலமாகச் சிரித்துவிட்டார்கள். அது தானே நிலைமை? தமிழில் மொழி பெயர்க்க இயலாத இடங்களில் தமிழைக் கொண்டுபோய்ச் சேர்ப்பதில் நாம் முனைப்பாக இருக்க வேண்டும்."

இதுபோன்ற பல இடங்களிலும் பல தமிழார்வலர்கள் சிறந்த கருத்துகளைத் தெரிவித்துள்ளனர்.

## நிகழ்ச்சி நிரல்

9.12.97 காலை 10 மணி

| | | |
|---|---|---|
| வரவேற்புரை | : | முனைவர் ச. நாகராசன்<br>தமிழ் வளர்ச்சி இயக்குநர் |
| தலைமைப் பேருரை | : | மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க்குடிமகன்<br>தமிழ் ஆட்சி மொழி அமைச்சர் |
| தொடக்கவுரை | : | மாண்புமிகு திரு. துரைமுருகன், எம்.ஏ., பி.எல்.,<br>பொதுப்பணித்துறை அமைச்சர் |
| முன்னிலையுரை | : | திரு. ப.வி.ச. டேவிதார், இ.ஆ.ப.,<br>மாவட்ட ஆட்சியர் |
| கருத்துரை | : | முனைவர் ம. இராசேந்திரன்<br>இயக்குநர், மொழிபெயர்ப்புத்துறை<br><br>முனைவர் கொடுமுடி சண்முகன்<br>அகரமுதலித் திட்ட இயக்ககம்<br><br>பேராசிரியர் அலிப்பூர் ரகீம் |

கவிமாமணி வேலூர் ம. நாராயணன்

வாழ்த்துரை : நாடாளுமன்ற உறுப்பினர்கள்

திரு. பி. சண்முகம்

திரு. த. வேணுகோபால்

திரு. ஏ.எம். வேலு

திரு. ஆர். மார்க்கபந்து

சட்டமன்ற உறுப்பினர்கள்

திரு. சி. ஞானசேகரன்

திரு. வி. கோவிந்தன்

திரு. ஆர். மகேந்திரன்

திரு. ஆர். காந்தி

திரு. ஜி. சண்முகம்

திரு. சி.கோபு

திரு. பி.என். சுப்பிரமணியன்

திரு. வி.ஜி. தனபால்

திரு. ஆர். தமிழ்ச்செல்வன்

திரு. அப்துல் லத்தீப்

திரு. ஏ.எம். முனிரத்தினம்

திரு. ஏ. இராசேந்திரன்

நன்றியுரை : திரு. வை. கண்ணபுரக்கண்ணன்

புதுக்கோட்டை மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கம் மார்ச்சு 98இல் நடைபெற்றது. அப்போது நான் பேசியதன் சாரம் இங்கே சுருக்கித் தரப்படுகிறது. கருத்தரங்க உரைகள் பெரிய அளவில் பயன்பட்டன என்பதை யாரும் மறுக்கமுடியாது.

ஆட்சிமொழிச் செயலாக்கத்தில் நாங்கள் காட்டிய ஊக்கத்தை இந்தப் பேச்சில் காணலாம்.

(முரசொலி 17.3.98)

தமிழ் மொழியை ஆட்சிமொழியாக ஆக்குவதே நமது உயர்ந்த எண்ணமாகும்.

அமைச்சர் மு. தமிழ்க்குடிமகன் பேச்சு

அனைத்து வழிகளிலும் தமிழ்மொழி ஆட்சி மொழியாக நாம் துணை நிற்போம். தமிழ்

மொழியை உரிய இடத்தில் ஆட்சி மொழியாக்குவதே நமது உயர்ந்த எண்ணமாகும் என்று தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர் மு. தமிழ்க்குடிமகன் கூறியுள்ளார்.

புதுக்கோட்டை மாவட்ட ஆட்சித் தலைவர் வளர்ச்சி மன்றக் கூட்ட அரங்கில் தமிழ் வளர்ச்சித் துறையின் சார்பில் புதுக்கோட்டை மாவட்ட ஆட்சி மொழிக் கருத்தரங்கம் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் மு. தமிழ்க்குடிமகன் தலைமையில் நடைபெற்றது. இதில் அவர் பேசியதாவது :-

ஆட்சி மொழிக் கருத்தரங்கின் 16-ஆவது அரங்கம் இது. இங்குள்ள மாவட்ட ஆட்சியர் சண்முகம் என்னோடு இணைந்து இரு கருத்தரங்கை நடத்திய பெருமையைப் பெற்றுள்ளார். அவருக்கு எனது பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழின் பெருமையைப் பற்றிப் பேச வந்தவர்கள் அணுவைத் துளைத்து ஏழுகடலைப் புகுத்தி குறுகத்தரித்த குறள் என்று அன்றே சொன்னார்கள். அன்றே அணுவின் பெருமையைத் தமிழ் தந்த குறளோடு ஒப்பிட்டு மகிழ்ந்தனர்.

அணுவைத் தெரிந்து கொண்ட நாம் அதன் பயனை அடையவில்லை. ஆனால் இன்று அணு-குண்டுகளாக மாறிய சூழ்நிலை உள்ளது. பாரதியார் கூறும்போது யாம் அறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவது வேறில்லை என்றார். அப்படிப்பட்ட தமிழ்மொழி இன்னும் ஏன் ஏற்றம் பெறவில்லை; ஆட்சி மொழியாக அதிகாரம் பெறவில்லை என்பதுதான் நமது கேள்வியாக உள்ளது.

காங்கிரஸ் ஆட்சி, பேரறிஞர் அண்ணா ஆட்சி, கலைஞர் ஆட்சி, புரட்சித் தலைவர் ஆட்சி ஆகிய அனைத்துக்கட்சி ஆட்சிகளிலும் தமிழ் மொழிக்குத் தகுந்த ஏற்றம் கொடுத்துத் தான் உள்ளனர். இந்தக் கருத்தில் நான் யாரையும் குறை சொல்லமாட்டேன். ஆனால் தமிழ் மொழி ஏற்றம் பெற்றதா? அல்லது நாம் ஏமாற்றம் பெற்றோமா? என்பதுதான் கேள்விக் குறியாக உள்ளது. இவ்வாறு எழும் அனைத்துக் கேள்விகளுக்கும் பதில் சொல்லும் கருத்தரங்கமாக இது உள்ளது.

தமிழ்மொழி தலை சிறக்க வழிவகை கூறவே நான் இங்கு வந்துள்ளேன். ஒரு திரைப் படத்தில் எம்.ஆர். ராதா வேடிக்கையாகக் கூறும்போது "அயல்நாட்டினர் நீராவியின் மூலம் எஞ்சினை இயக்குவர். ஆனால் நாம் நீராவி மூலம் புட்டு தயாரித்து வாயில் விடுகின்றோம்" என்று கூறினார்.

அவர் கூறியது திரைப்படத்தில்தான் என்றாலும் அந்தக் கருத்துகளை நாம் மறந்துவிட முடியுமா? தமிழன் தகுதியை அல்லவா தரம் பிரித்துக் காட்டியுள்ளார். 23.1.57 அன்றே தமிழ்மொழி ஆட்சி மொழியாக்கப்படுகிறது என்று அரசாணை போடப்பட்டது. இதில் வேடிக்கை என்னவென்றால் இந்த அரசாணை கூட ஆங்கிலத்தில்தான் எழுதப்பட்டு இருந்தது.

அதன்பின் 1963இல் வெளிவந்த அரசாணையும் ஆங்கிலத்தில் தான் வெளியானது.

அதன்பின் 1987 -ஆம் ஆண்டு அரசாணை கூட ஆங்கிலத்தில்தான் இருந்தது. இப்படி இருந்தால் தமிழ் மொழியை எப்படி ஆட்சி மொழி ஆக்கப்போகின்றார்கள் என எண்ணத் தோன்றுகிறது.

சட்டமுறை

சிங்கப்பூர் போன்ற நாடுகளின் முன்னேற்றத்திற்குக் காரணம் அங்குள்ள சட்டமுறைதான். அங்கு ஒரு தாளைக் கீழே போடக்கூடாது, எச்சிலைத் துப்பக் கூடாது. நம் ஆட்கள் அங்கு இருக்கும் போது எச்சில் வந்தால் வாந்தி வந்தால் கூட வாயை மூடிக் கொள்கின்றனர். அதே தமிழன் சென்னை மீனம்பாக்கம் விமானநிலையம் வந்தவுடன் வராத எச்சிலை வரவழைத்துத் துப்பி மகிழ்கின்றான்.

நான் ஆங்கிலம் படித்து இருந்தால் கல்லூரிப் பேராசிரியராகவே இருந்து இருப்பேன். நான் தமிழ் வளர்ச்சித் துறையின் அமைச்சராக உள்ளேன். ஆம் கலைஞர் ஒரு முறை எனது கல்லூரி விழாவிற்கு வந்தபோது நான் தமிழில் வரவேற்புரை நிகழ்த்தினேன்.

அந்தத் தமிழே என்னை இன்று இத்துறையின் அமைச்சர் என்ற அரியணையில் உட்கார வைத்தது. தமிழ் படித்தவர்களை வேலை வாய்ப்புத் துறையில் மதிக்கவேண்டும் என்று இங்கே குறிப்பிட்டனர். அதையும் நாங்கள் மாற்றம் செய்து கொண்டு தான் வருகின்றோம்.

தமிழில் 50 மதிப்பெண் வாங்கினால்தான் தேர்ச்சி போட வேண்டும் என்று இங்கே குறிப்பிட்னர். ஐ.ஏ.எஸ். தேர்வுக்கு 2 தாள்கள் தமிழில்தான் எழுதவேண்டும். அந்த இரு தாள்களையும் தமிழ்ப் பேராசிரியர்கள்தான் மதிப்பிடுகின்றனர்.

தமிழன் நிலையும் தமிழின் நிலையும்

எங்கே நாம் அதிக மதிப்பெண்கள் போட்டால் அடுத்தமுறை நம்க்குத் தாள்களை மதிப்பிடத் தெரியவில்லை என எண்ணி அந்த வாய்ப்பைத் தராமல் செய்து விடுவார்களோ என்று எண்ணி அந்த 300 ரூபாய்க்கு ஆசைப்பட்டு மிகவும் குறைந்த மதிப்பெண்களை வழங்குகின்றனர். இதுதான் தமிழன் நிலை. தமிழின் நிலை.

மற்ற பாடங்களில் எல்லாம் 100/100 மதிப்பெண் போடும்போது தமிழில் மட்டும் மதிப்பெண் போடக்கூடாதா என்ற நிலையும் உள்ளது. இந்த ஆண்டில் தான் 180 பேர் தமிழில் முதல் பரிசுகளைப் பெற்றுள்ளனர். இது நமக்குப் பெருமையாக உள்ளது.

மழலைக் குழந்தைகளின் படிப்பில் நிச்சயம் மாறுதல் கொண்டு வரப்படும். தமிழ் மொழி படிக்காத யாரும் இனிமேல் பட்டம் பெறமுடியாது என்ற நிலையை உருவாக்கிட உள்ளோம்.

கடைகளில் கூட தமிழில் பெயர்ப் பலகை வைக்க வேண்டும் என்று அரசு ஆணை

பிறப்பித்துள்ளோம். அதைக் கடைப்பிடிக்காதவர்களைத் தொழிலாளர் துறையினர் - கவனித்துக் கொள்வார்கள். தமிழ் மொழியின் எழுத்து அளவு 5 மடங்கு என்றும், ஆங்கில எழுத்தின் அளவு 3 மடங்கு என்றும், மற்றமொழி எழுத்து 2 மடங்கு என்றும் ஆணையிட்டோம்.

நமது வெற்றி

அதனையும் திருத்தி மற்ற மொழிகளைவிட தமிழ் மொழி எழுத்துக்கள் பெரிதாக இருக்கவேண்டும் என்று குறிப்பிட்டோம். 31/4 லட்சம் பெயர்ப் பலகைகளில் 21/4 இலட்சம் பெயர்ப்பலகைகள் தமிழில் எழுதி உள்ளனர். இது நாம் அடைந்த வெற்றிதானே.

குமார் தையலகம் என ஒருவர் எழுதினால் அடுத்தவர் வேல்முருகன் டைலர்ஸ் என்று எழுதுகின்றார். இதில் தையலகம் என்பதை விட டைலர்ஸ் என்ன பெரிது. தமிழில் குமார் தையலகம் என்ற கடைக்காரர் ஏதோ கிழிந்த துணி தைப்பது போலவும் டைலர்ஸ் என்பவர் மேலைநாட்டில் பயிற்சி பெற்றவர் என்றும் நம்மவர் நினைக்கின்றனர். விசாரித்துப் பார்த்தால் இருவருமே கடந்த வாரம் வரை எதிர்த்த கடையில் காஜா எடுத்து பட்டன் கட்டியவர்கள் என்ற விவரம் தெரிந்தது. என்ன வினோத எண்ணம்!

பாரிசில் உள்ள தமிழன் 1.9.48-க்கு முன்பே பல்பொருள் அங்காடி என்று பெயரிட்டு மகிழ்ந்தான். சிங்கப்பூர் தமிழன் அணி மணி பொற்சாலை என்று அன்புத் தமிழில் பெயரிட்டான். ஆனால் இங்கு உள்ளவர்கள் ஜுவல்லர்ஸ் என்று நீட்டி, மடக்கி வெளியிடுகின்றனர்.

ஆகவே தான் நான் கூறுகின்றேன், தமிழில் பெயர் வைத்த கடைக்கு ஆதரவு தாருங்கள். விலை உயர்வாக இருந்தாலும், தொலைவு நெடியதாக இருந்தாலும் தமிழ்ப் பெயர் கொண்ட கடையிலே வியாபாரம் செய்யுங்கள். தமிழுக்கு நல்ல மதிப்புத் தாருங்கள் என்றுதான் கேட்கிறேன்.

பெரும் அறிஞர்களைக் கொண்ட குழுவினரைக் கொண்டு தமிழில் அர்ச்சனை நூல் தயாரித்து உள்ளோம். தமிழில் அர்ச்சனை செய்தால் என்ன? தெய்வம் ஏற்றுக் கொள்ளாதா? வடநாட்டுப் பக்தர்கள் வரும்போது வடமொழிகளில் அர்ச்சனையைச் செய்யட்டும். நாங்கள் அதற்கு மாறுபட்டவர்கள் அல்ல.

சென்னையில் ஒருவர் எழுதியபோது தமிழ்க்குடிமகனே போற்றி 'கருணாநிதியே போற்றி' 'கடமை - கண்ணியம் - கட்டுப்பாடு கொண்ட கபாலீஸ்வரரே போற்றி' என்று எழுதி விட்டார். ஆகவே அந்த அன்பரை இடை நீக்கம் செய்து விட்டோம். இவ்வாறு எங்களது கொள்கைக்கு, தமிழுக்கு யாராவது களங்கம் விளைவித்தால் உடன் நடவடிக்கை மேற்கொள்ளப்படும்.

ஆங்கிலம் எப்போது தமிழ்நாட்டில் வந்தது? 1600-க்குப் பிறகுதானே. கிழக்கு இந்தியக் கம்பெனியர் வந்தபிறகுதானே ஆங்கிலம் இங்கே வந்தது. தமிழில் உள்ள அதிக நூல்களை நாம் இன்னும் படிக்கவில்லை.

நாங்கள் படிக்கின்ற காலங்களில் தமிழில் பலநூல்கள் கிடைக்கவில்லை. ஆனால் இன்று

பல அரிய தமிழ் நூல்கள் கிடைக்கின்றன. காலம் செல்லச் செல்லப் புது நூல்களும், புதுச் சொற்களும் கிடைத்துள்ளன என்பது தானே உண்மையாகும். கிளப்பு என்றால் என்னவென்று கல்லூரி மாணவரிடம் கேட்டால் ஆளைக் காட்டுங்கள் மற்ற வேலையை நான் பார்த்துக் கொள்கின்றேன் என்கின்ற காலம் இது. அரி என்று சொல்லுக்கு 52 பொருள்கள் உள்ளன.

தமிழ் என் தாய் மொழி

ஆகவே என் தமிழ், என் தாய்மொழி என்று பேசுங்கள். தமிழ் படித்ததால் தமிழ்க்குடிமகன் தாழ்ந்து விடவில்லை. எனவே அனைத்து வழிகளிலும் தமிழ்மொழி ஆட்சி மொழியாக நாம் துணை நிற்போம். நம் உயிரினும் மேலான தமிழ்மொழியை உரிய இடத்தில் ஆட்சி மொழியாக்குவதே நமது உயர்ந்த எண்ணமாகும்."

இவ்வாறு அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசினார்.

26.6.1998 அன்று இராமநாதபுர மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கு நடைபெற்றது. மாவட்ட ஆட்சித்தலைவர் பா. ஆனந்த் ஏற்பாடுகளைச் செய்திருந்தார். நாகராசன், இராசேந்திரன் போன்ற துறை இயக்குநர்களும், சுந்தர மகாலிங்கம் போன்ற பேராசிரியர்களும் கலந்து கொண்டனர். என் சொந்த மாவட்டமாக இருந்தும் தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தில் போதிய அக்கறை காட்டவில்லை. என் வருகை குறித்தும், ஆட்சிமொழிக் கருத்தரங்கம் குறித்தும் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்திலிருந்து தொடர்புடைய அலுவலர்கள் அனைவர்க்கும் ஒரு மடல் போயிருக்கிறது. அந்த மடல் முழுவதும் ஆங்கிலத்திலேயே இருப்பதைக் கண்டு அதிர்ச்சியுற்றேன். சென்னையில் என் அலுவலகத்தில் இருந்து அனுப்பப்படும் என் பயண நிகழ்ச்சி நிரல் தமிழிலேயே அனுப்பப்படுகிறது. அதைக்கூட யாரோ 'முயற்சி எடுத்து' (?) ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக் கின்றனர்?

எனக்கு எப்படிச் சினம் வந்திருக்கும் என்று உங்களால் உய்த்துணர முடியும். மேடையிலேயே 'அந்த அலுவலரைக் கிழிகிழி என்று கிழிக்க வேண்டிதாயிற்று. அவர் மீது நடவடிக்கை எடுக்குமாறும் பணிக்கப்பட்டது.

(தினமலரில் வந்த பேச்சு மட்டும் தரப்படுகிறது)

ஆங்கில மோகம் - தமிழ்க்குடிமகன் வேதனை

ராமநாதபுரம், ஜுன் 27 -

ஆங்கில மோகம் மாறினால்தான் தமிழ் ஆட்சிமொழியாக வரும் என்று அமைச்சர் தமிழ்க்குடிமகன் தெரிவித்தார்.

ராமநாதபுரத்தில் தமிழ் வளர்ச்சித் துறை ஆட்சிமொழி கருத்தரங்கு நடந்தது. கருத்தரங்கில் அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசும்போது, 1956 இல் தமிழ் ஆட்சிமொழி என்று

அரசாணை வெளியிடப்பட்டது. 40 ஆண்டுகளாகியும் இந்த ஆணை முழு அளவில் அமலாகவில்லை. ஆங்கிலம் என்பது ஒரு கருவி. தமிழில்தான் கையெழுத்து இடவேண்டும் என்று சட்டம் இயற்றிக்கூட ஆங்கிலத்தில்தான் கையெழுத்து போடுகின்றனர். இது அரசு ஆணையை மீறிய செயல். ஆங்கில மோகம் மாறினால்தான் தமிழ் ஆட்சி மொழியாக வரும் என்றார்.

விழாவில் கலெக்டர் ஆனந்த், மொழி பெயர்ப்பு இயக்குநர் ராஜேந்திரன், தமிழ் வளர்ச்சி இயக்குநர் நாகராஜன், சேதுபதி அரசு கலைக்கல்லூரி தமிழ்த்துறை தலைவர் சுந்தரமகாலிங்கம் உட்படப் பலர் பேசினர்.

6.7.98 இல் திருவாரூரில் ஆட்சிமொழிக் கருத்தரங்கம் நடைபெற்றது. மாவட்ட ஆட்சியர் மோகன் ச.ம.உ.. அசோகன் மற்றும் தமிழறிஞர்கள் கலந்து கொண்டனர். எங்கள் துறையின் செயலாளர்கள் சீனிவாசன், இராமகிருட்டிணன் ஆகியோர் எப்போதும் இது போன்ற நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வதில்லை. இதில் ஆர்வமாக இருந்தவர் வை. பழனிச்சாமி, இ.ஆ.ப. மட்டும். மற்ற சட்டமன்ற உறுப்பினர்கள் யாரும் கலந்து கொள்ளவில்லை.

கு. தென்னவன் (கலைஞரின் நண்பர்) தமிழறிஞர்கள் இராசேந்திரன், மு. இளமுருகன், இரெ. சண்முக வடிவேல், கு. சுப்புரத்தினம் ஆகியோர் சிறப்புரையாற்றினர். நடைபெற்ற இடம் கலைஞர் இளமைக் காலத்தில் பயின்ற பள்ளி.

## நிகழ்ச்சி நிரல்

நாள் : 6.7.98 திங்கட்கிழமை காலை 10.30 மணி

| | | |
|---|---|---|
| இடம் | : | வடபாதிமங்கலம் சோமசுந்தரம் ஆண்கள் மேல்நிலைப் பள்ளி, திருவாரூர் |
| வரவேற்புரை | : | முனைவர் ச. நாகராசன், தமிழ் வளர்ச்சி இயக்குநர் |
| முன்னிலையுரை | : | திரு. ம.ரா. மோகன், இ.ஆ.ப. அவர்கள்<br>மாவட்ட ஆட்சித் தலைவர்<br><br>திரு. கு. தென்னவன் அவர்கள்<br>தலைவர், கமலாம்பிகா கூட்டுறவு நகர வங்கி, திருவாரூர் |
| தலைமைப் பேருரை | : | மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள்<br>தமிழ் ஆட்சி மொழி அமைச்சர் |
| கருத்துரை | : | முனைவர் ம. இராசேந்திரன் அவர்கள்<br>மொழிபெயர்ப்பு இயக்குநர்<br><br>முனைவர் பா. இறையரசன்<br>துணைத் தலைவர், சவகர் சிறுவரில்லம், தஞ்சாவூர் |

முனைவர் மு. இளமுருகன்
பேராசிரியர், தமிழவேள் உமா மகேசுவரனார் கரந்தை
கலைக் கல்லூரி, தஞ்சாவூர்

முனைவர் இரா. கண்ணன், தமிழ் விரிவுரையாளர்
திரு.வி.க. அரசு கலைக்கல்லூரி, திருவாரூர்

புலவர் இரெ. சண்முகவடிவேல்
செயலாளர், திருவாரூர் தமிழ்ச் சங்கம்

திரு. கு. சுப்புரெத்தினம்
தலைமை ஆசிரியர், ஆண்கள் மேல்நிலைப்பள்ளி, திருவாரூர்

திரு. பி. பக்கிரிசாமி, மாவட்ட ஊராட்சித் தலைவர்

திருமதி தெ. யசோதா தெட்சிணாமூர்த்தி
நகர் மன்றத் தலைவர்

நன்றியுரை : திரு. க. கபிலர்

11.9.1998 அன்று நாகையில் கருத்தரங்கம். மாவட்ட ஆட்சித் தலைவர் சிவ்தாசு மீனா மிகுந்த ஆர்வத்துடன் கலந்து கொண்டார். நாகைச் சட்டமன்ற உறுப்பினர் நிஜாமுதீன் மட்டும் கலந்துகொண்டார்.

பல உறுப்பினர்கள் மாவட்டத் தலைநகரில் நடக்கும் நிகழ்ச்சியில் தங்களுக்கும் பங்கு உண்டு என்று நினைப்பதைவிட, அது ஒரு தொகுதியில் நடைபெறுவதாகவே எண்ணி ஒதுங்கி விடுகின்றனர். அன்பர்கள் இராசேந்திரன் புலவர் புகழேந்தி, புலவர் மணிமேகலை, இரா. ஆதிகேசவன், சுப்பிரமணியம், பசீர் அகமது ஆகியோர் பேசினர். எப்போதுமே இதுபோன்ற கருத்தரங்குகளில் யாராவது ஒரு வணிகரையும் பேசச் செய்து விடுவோம். விளம்பரப் பலகைகளில் நல்ல தமிழ் இடம் பெறச் செய்ய இது தூண்டுதலாக அமைந்து விடுகிறது.

## நிகழ்ச்சி நிரல்

நாள் : 11.9.98 வெள்ளிக்கிழமை முற்பகல் 10.30 மணி

இடம் : நடராசன் தமயந்தி மேல்நிலைப்பள்ளி, நாகப்பட்டினம்

வரவேற்புரை : முனைவர் ச. நாகராசன்

தலைமைப் பேருரை: மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர்
முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள்

முன்னிலையுரை : திரு சிவ் தாசு மீனா, இ.ஆ.ப. அவர்கள்
மாவட்ட ஆட்சியர்

கருத்துரை : முனைவர் ம. இராசேந்திரன்

திரு அம்பலவாணன்

திரு இராசமாணிக்கம்

திரு எம்.சி.கே. நிசாமுதீன்

திருமதி சி. கலாவதி சந்திரபானு, மாவட்ட ஊராட்சித் தலைவர்

திருமதி வனசா இராசமாணிக்கம், நகர்மன்றத் தலைவர்

முனைவர் சுலாமணி சுப்பிரமணியன்
முதல்வர் (பொறுப்பு), ஏ.டி.எம்.மகளிர் கல்லூரி

திரு. பசீர் அகமது, செயலாளர், வணிகர் சங்கம்

புலவர் மணிமேகலை, தமிழாசிரியர், நகராட்சி மகளிர் மேல்நிலைப்பள்ளி

தமிழ்க்கடல் இரா. ஆதிகேசவனார்

புலவர் வே. புகழேந்தி, செந்தமிழ்ப் பேரவை, மயிலாடுதுறை

நன்றியுரை : முனைவர் கோ. விசயராகவன்

அரசின் சார்பில் தேவையில்லாமல் ஓர் அறிவிப்பைச் செய்து குழப்பினார்கள். இது முதல்வரே செய்த குழப்பம். அவர் கருத்தைப் பின்பற்றுகிறோம் என்று சொல்லி ஓர் அழைப்பிதழ் வந்துள்ளது பாருங்கள். 25.9.98 இல் கரூர் மாவட்டக் கருத்தரங்கம் நடைபெற்றது.

நிகழ்ச்சி நிரல்

நாள் : 25.9.98 வெள்ளிக்கிழமை முற்பகல் 10.30 மணி

இடம் : நாரதகான சபா, கரூர்

வரவேற்புரை : தமிழ் வளர்ச்சி இயக்குநர்

தலைமைப் பேருரை : மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர்

முன்னிலையுரை : செயலர் அவர்கள், தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும்
இந்து சமய அறநிலையத்துறை

கரூர் மாவட்ட ஆட்சியர் அவர்கள்

வாழ்த்துரை : தலைவர் அவர்கள், மாநில கைத்தறி நெசவாளர் சங்கம்

சட்டமன்ற உறுப்பினர்கள்

கரூர், அரவக்குறிச்சி, கிருட்டிணராயபுரம், குளித்தலை

கரூர் மாவட்ட ஊராட்சித் தலைவர் அவர்கள்

எனக்கே இப்போது இந்தக் கட்டுரையை எழுதுகிற போது கரூர் மாவட்ட ஆட்சியர் யார் என்று சட்டென்று நினைவுக்கு வரவில்லை. அவரவர் பதவிகளை மட்டும் தான் போட வேண்டுமே தவிர, பெயர்களைப் போடக் கூடாது என்று ஓர் அறிவிப்பு. இதனால் ஏற்பட்ட குழப்பம். சட்டமன்ற உறுப்பினர் வாசுகி, பரமத்தி சண்முகம், இராசேந்திரன், சண்முகசுந்தரம், கே.சி. பழனிச்சாமி போன்றோர் பேசினர். இதில்தான் 7.10.1956 இல் பாவேந்தர் தலைமையில் குளித்தலையில் நடைபெற்ற ஆட்சிமொழி மாநாட்டு அழைப்பிதழ்ச் செய்திகள் பேசப்பட்டன. எங்கள் கருத்தரங்குகளில் இது எங்களுக்குக் கிடைத்த வலுவான சான்று. அதை நானும் 'ஆட்சித் தமிழ்' நூல்வரை கொண்டு வந்துவிட்டேன்.

26.10.1998 இல் திண்டுக்கல்லில் நடைபெற்ற ஆட்சி மொழிக் கருத்தரங்கிலும் இதே குளறுபடி. யாருடைய பெயரும் இல்லாமல் வெறும் பதவிகள் மட்டும் குறிக்கப்பட்ட இதழ்-அழைப்பிதழில் உயிரே இல்லை. செத்த பிணம் போலக் காட்சியளிக்கிறது.

நிகழ்ச்சி நிரல்

நாள் : 26.10.98 திங்கட்கிழமை காலை 10.30 மணி

இடம் : மாவட்ட ஆட்சியர் அலுவலகக் கருத்தரங்குக் கூடம், திண்டுக்கல்

வரவேற்புரை : தமிழ் வளர்ச்சி இயக்குநர் அவர்கள், சென்னை

தலைமையேற்று விழாப்பேருரை : மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர் அவர்கள்

சிறப்புரை : மாண்புமிகு ஊரகத் தொழில் மற்றும் பத்திரப் பதிவுத்துறை அமைச்சர் அவர்கள்

முன்னிலையுரை : செயலர் அவர்கள், தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத்துறை

திண்டுக்கல் மாவட்ட ஆட்சியர் அவர்கள்

வாழ்த்துரை : நாடாளுமன்ற உறுப்பினர்கள், திண்டுக்கல், பழனி, பெரியகுளம்

சட்டமன்ற உறுப்பினர்கள், திண்டுக்கல், நிலக்கோட்டை, நத்தம், பெரியகுளம், வேடசந்தூர், ஒட்டன்சத்திரம், பழனி

மாவட்ட ஊராட்சித் தலைவர் அவர்கள், திண்டுக்கல்

நகர்மன்றத் தலைவர் அவர்கள், திண்டுக்கல்

ஊராட்சி ஒன்றியக் குழுத் தலைவர் அவர்கள், திண்டுக்கல்

கருத்துரை : மொழிபெயர்ப்புத்துறை இயக்குநர் அவர்கள், சென்னை

மாவட்ட வருவாய் அலுவலர் அவர்கள், திண்டுக்கல்
மற்றும் கவிஞர்களும், அறிஞர் பெருமக்களும்

நன்றியுரை : தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் அவர்கள், திண்டுக்கல்

மாவட்ட ஆட்சித் தலைவர் சீவரத்தினம் சிறப்பாக ஏற்பாடுகளைச் செய்திருந்தார். சட்டமன்ற உறுப்பினர்களில் திண்டுக்கல் மணிமாறன் மட்டுமே வந்து பேசினார். ஒரு சில தமிழ்ப் பேராசிரியர்களும், மாவட்ட வருவாய் அலுவலரும் மிகச் சிறப்பாகப் பேசினார்கள்.

நல்லவேளையாக கருத்தரங்கினை 28.10.98இல் நடத்தி அனைவரது பெயர்களும் விளங்கும்படி அச்சிட்டிருந்தனர். குழப்பம் தீர்ந்தது.

ம. இராசேந்திரன், அ.கா. முத்துசாமி, தமிழ்ப் பெரியசாமி, சரோசினி புதியவன் போன்றவர்கள் பல செய்திகளை எடுத்துச் சொல்லி மகிழ்வூட்டினர்.

இது பற்றிய இதழ்ச் செய்தி இங்கே தரப்படுகின்றது.

திண்டுக்கல்லில் நடைபெற்ற ஆட்சிமொழிக் கருத்தரங்கத்தில் பேசியதிலிருந்து

குடிநீர் இங்கு இருக்க

'ட்ரிங்கிங் வாட்டர்' எதற்கு - அமைச்சர் தமிழ்க்குடிமகன்

தமிழுக்காக ஒரு நீண்டகாலப் போராட்டம் நடத்த வேண்டியுள்ளது. சிலர் விட்டுச் சென்ற எச்சங்களை இன்னும் சுமந்து கொண்டு உள்ளோம். வீரமாமுனிவர் கூட தமிழ் மொழியைக் கற்றுக்கொண்டு தேம்பாவணி என்ற காவியத்தையும் படைத்தார். கல்வி வரை வரை நாம் ஒரு பக்குவத்தை நோக்கி போய்க்கொண்டு இருக்கிறோம். நம்மால் ஆங்கிலக் கலப்பு இல்லாமல் பேச முடியும்.

நமக்குள் மேட்டுக்குடி போன்ற மனோபாவம் உடைய போலித்தனம் உள்ளது. ஒரு மாய உலகில் வாழ்கிறோம். தமிழில் சுருக்கமாக எழுத முடியவில்லை. எல்லாம் விரிவான வார்த்தைகள் என்று கூறுகிறார்கள். "குடிநீர்" என்பதைக்கூட "ட்ரிங்கிங் வாட்டர்" என்று எழுதுகிறார்கள். இது ஒரு வகையான மோகம். அதனால்தான் பாரதி சொன்னான் மிக அழகாக "என்று மடியும் எங்கள் அடிமையின் மோகம்" என்று. குடிநீர் என்பது சுருக்கம் இல்லையா?

முன்பெல்லாம் கழிவறைகளில் "ஸ்திரீகள்", "புருஷர்கள்" என்று எழுதி வைத்திருப்பார்கள்.

அதனை ஆண்; பெண் என்று மாற்றிட கி.ஆ.பெ. போன்றவர்கள் பெரிதும் முயற்சி செய்தனர். எக்ஸ்பிரஸ் வண்டிகளை 'தொடர் வண்டி' என்று மொழி பெயர்த்தோம். பின் "விரைவு வண்டி" என்று மாற்றினோம். இதனை "விறகு வண்டி" என்று சிலர் கிண்டலடித்தார்கள்.

ஒரு முறை மகாத்மா காந்தி தமிழகத்திற்கு வந்தபோது ஆங்கிலத்தில் கூறி வரவேற்ற தமிழரைப் பார்த்து "தமிழனிடத்தில் தாய்மொழி இன்னும் சமாதியில்தான் நிற்கிறது" என்றார்.

அடிப்படையில் மரபும், பண்பாடும், எழுதப்படாத சட்டங்கள்தான். ஆட்சிமொழி என்பது நமது உணர்வில் வரவேண்டும். 1978லேயே அரசாணை மூலம் தமிழில் ஒப்பமிட ஆணையிடப்பட்டுள்ளது. அது கூட ஆங்கிலத்தில் பிறப்பிக்கப்பட்டுள்ளது. இ.ஆ.ப.க்கள் செயல்படுத்துவதில்லை. இதற்காகத்தான் மூவாண்டு முனைப்புத் திட்டம் உருவாக்கினர்.

அதில் பொது மக்கள் தமிழில் மடல் எழுதினால் அதிகாரிகள் தமிழில்தான் பதில் தரவேண்டும். இதுதான் ஆட்சி மொழிச் சட்டத்தின் முதல் பகுதி. ஆனால் அதிகாரிகளுக்கு சட்டமியற்றினாலும் தமிழ் உணர்வு எட்டவில்லை. கடந்த 40 ஆண்டுகளில் 25 சதம் தான் தமிழ் தலைமைச் செயலகத்தில் புக ஆரம்பித்திருக்கிறது. இன்னும் 75 சதம் இருக்கிறது. ஆக 120 ஆண்டு ஆகும் போலிருக்கிறது.

அலுவலகங்களில் அரசு ஊழியர்களுடன் தொடர்பு கொள்பவர்கள் பொதுமக்கள் தான். ஆகவே, தமிழில் எழுதுங்கள். தமிழ் வீட்டிலும், அடுக்களையிலும் புழங்கினால்தான் ஆட்சியில் தமிழ் ஆட்சிமொழியாக ஆட்சி செய்யமுடியும்."

* * *

இன்னொரு செய்தியும் நமக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. சென்னைப் பல்கலைக் கழகம், அண்ணா பொது வாழ்வியல் மையம், தெற்கு தென்கிழக்கு ஆசிய நாடுகளின் மரபு வழிப் பண்பாட்டு நிறுவனம் ஆகியவை இணைந்து சென்னைப் பல்கலைக்கழக மண்டபத்தில் 3.5.1999 அன்று 'தமிழ் ஆட்சிமொழி' பற்றிய கருத்தரங்கினை நடத்தின. ந. சுப்பு ரெட்டியார், அவ்வை நடராசன், கி. வேங்கட சுப்பிரமணியன், இ. மறைமலை, ம. இராசேந்திரன், எழிலரசு, ச. முத்துக்குமரன், ஈரோடு தமிழன்பன், இ.சு. முத்துச்சாமி, இரா. தாண்டவன், ச. நாகராசன், மலையமான், மதியழகி, ந. கடிகாசலம் ஆகிய அறிஞர்கள் கலந்து கொண்டு சிறப்பாக நடத்தினர். அரசு எடுக்கும் முயற்சிக்கு அறிஞர்களின் ஒத்துழைப்பும் ஊக்கமும் என்றும் உண்டு என்பதைக் காட்டுவதற்கான கருத்தரங்கு இது.

7.6.99இல் நீலகிரி மாவட்டக் கருத்தரங்கு உதகையில் நடைபெற்றது. கருத்தரங்குக்கு முன்னதாகவே மாவட்ட ஆட்சியர் பொ. சிவசங்கரன் அரசு ஊர்திகள் அனைத்திலும் தமிழில் எழுதி வைத்துவிட்டார். அவரும் அரசு ஏவுநர் (கொறடா) பா. முபராக் அவர்களும், சட்டமன்ற உறுப்பினர்கள் குண்டன், அரங்கநாதன் ஆகியோரும் கலந்துகொண்டனர். பிற அலுவலர்கள், அறிஞர்கள் கலந்து கொண்டனர்.

அமைச்சரின் அன்றைய உரையை வானொலி முழுமையாக ஒலி பரப்பியது. எல்லாச் செய்தித் தாள்களிலும் செய்திகள் விரிவாக வெளிவந்தன.

## ஆட்சி மொழிக் கருத்தரங்கம் - நீலகிரி மாவட்டம்

நாள் : 7.6.99 முற்பகல் 10.30 மணி

முன்னிலை : மாண்புமிகு அரசு தலைமை ஏவுநர்
திரு பா.மு. முபாரக்

திரு பொ. சிவசங்கரன், இ.ஆ.ப.
மாவட்ட ஆட்சியர்

வாழ்த்துரை : திரு டி. குண்டன், சட்டமன்ற உறுப்பினர், உதகமண்டலம்

திரு மு. அரங்கநாதன், சட்டமன்ற உறுப்பினர், குன்னூர்

திரு ஆ. நல்லுசாமி, மாவட்ட வருவாய் அலுவலர், உதகமண்டலம்

முனைவர் ஆத்ம சோதி, தமிழ்ப் பேராசிரியர், அரசுக் கலைக் கல்லூரி, உதகமண்டலம்

செல்வி ரோசலின் மேரி, விரிவுரையாளர், மரகதமுடி மகளிர் கல்லூரி உதகமண்டலம்

திரு விசயா மணிகண்டன், மாவட்ட ஊராட்சித் தலைவர்

திரு ப. சோசப் செல்வராசு, செயலர், மாவட்ட வருவாய்த்துறை அலுவலர் சங்கம் உதகமண்டலம்

வரவேற்புரை : முனைவர் ம. இராசேந்திரன், தமிழ் வளர்ச்சி இயக்குநர்

பேருரை : மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர்
முனைவர் மு. தமிழ்க்குடிமகன்

நன்றியுரை : ஆ. அரிகிருட்டிணன்

ஆசிரியர்கள் நிலையில் முனைவர் ஆத்மசோதி, செல்வி ரோசலின் மேரியும், மாவட்ட வருவாய்த்துறை அலுவலர் சங்கச் செயலாளர் சோசப் செல்வராசு ஆகியோரும் கலந்து கொண்டனர்.

சோசப் செல்வராசு ஒரு நல்ல கருத்தினைச் சொன்னார். தலைமைச் செயலக ஆய்வு முடித்தபின் அமைச்சர்களுக்கும், அரசுச் செயலர்கட்கும் எழுதிய நேர்முக மடல்களில் இவரது பேச்சினை மேற்கோள் காட்டியுள்ளேன்.

அங்கே பேசிய பேச்சு விரிவான முறையில் இங்கு தரப்பட்டுள்ளது. இவற்றிலிருந்து எவ்வளவு கடுமையாகச் செய்திகள் சொல்லப்பட்டன என்பதைப் புரிந்து கொள்ள முடியும்.

மழலையர் பள்ளிகளில் 'கட்டாயமாகத் தமிழ் கற்பிக்க வேண்டும்'

அமைச்சர் தமிழ்க்குடிமகன் கண்டிப்பு

ஊட்டி, ஜூன், 8-

"மழலையர் பள்ளிகளில் கட்டாயமாகத் தமிழ் கற்பிக்க வேண்டும்" என்று அமைச்சர் தமிழ்க்குடிமகன் கூறினார்.

தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சித் துறை சார்பில் நீலகிரி மாவட்ட ஆட்சி மொழிக் கருத்தரங்கம் ஊட்டியில் நடைபெற்றது. இந்தக் கருத்தரங்கிற்கு அமைச்சர் தமிழ்க்குடிமகன் தலைமை ஏற்றுப் பேசியதாவது :-

இந்த ஆண்டு 8 கருத்தரங்கம் நடத்த வேண்டும். தமிழ் வளர்ச்சி இயக்குநராக இராசேந்திரன் பொறுப்பு ஏற்ற பிறகு உதகையில், உவகையுடன் முதல் கருத்தரங்கைத் தொடங்கி வைக்கிறேன். தமிழ் வளர்ச்சியில் சிவபெருமான் முன்னிலை வகித்ததாக சங்க காலத்தில் கூறப்படுகிறது. அந்தப் பெயரைக் கொண்ட நீலகிரி மாவட்ட ஆட்சித் தலைவர் சிவசங்கரன் தமிழக அரசு ஆணைப்படி இன்று இங்கு பல மாறுதல்கள் செய்து உள்ளார்.

3 பேர்களுக்கு வணக்கத்தையும், நன்றியினையும் தெரிவிக்க வேண்டும். நீண்ட காலமாக தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறையை, கல்வித் துறையில் கரைந்தும், மறைந்தும் இருந்ததைப் பிரித்து அதை வெளியே கொண்டு வந்து தனித் துறையாக்கி அதற்கு ரூ.9கோடி நிதியுதவி அளித்த தமிழக முதல்வருக்கு வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

1956ஆம் ஆண்டில் தமிழ் மொழியை ஆட்சி மொழியாகக் கொண்டு வர வேண்டும் என்று அடித்தளம் போட்டவர் முன்னாள் அமைச்சரும், முன்னாள் ஆளுநருமான சி. சுப்பிரமணியம்; தமிழ் ஆட்சி மொழியாக வரவேண்டும் என்று முதல் குரல் சட்டமன்றத்தில் கொடுத்தவர் கசபதி நாயக்கர். அதனைத் தொடர்ந்து 7.10.1956ம் ஆண்டில் குளித்தலையில் தமிழ் ஆட்சி மொழிக் கருத்தரங்கு-பாவேந்தர் பாரதிதாசன் தலைமை ஏற்க கசபதி நாயக்கர் கொடியேற்றி வைத்தார். 27.12.1956ம்

ஆண்டில் தமிழ் ஆட்சி மொழிக்கான சட்டம் வந்தாலும் 40 ஆண்டுகளில் எதிர்பார்த்த பலனை எய்தவில்லை. முதல் அரசாணை ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டது. 1956 முதல் 1966 ம் ஆண்டு வரை அரசு ஆணைகள் தமிழில் வெளிவரவில்லை.

தமிழில் முடியாதது இல்லை

தமிழில் முடியாது என்று சொல்ல முடியாது. தமிழால் அன்றைக்கும், என்றைக்கும் முடியும். ஜன்னல் என்பது தமிழ் மொழி அல்ல. சாளரம், பலகணி என்பன தமிழ்ச் சொற்கள். ஜன்னல் என்பது போர்ச்சுகீசியர்கள் சொல். அந்தச் சொல் தொடர்ந்து நீடிக்கிறது.

ஒற்றைச் சாளர முறை என்று பொறியியல், மருத்துவத் துறைகளுக்கு விண்ணப்பம் அனுப்ப வேண்டும் என்று கொண்டு வந்தோம். அது தற்போது நடைமுறையில் வந்து கொண்டு உள்ளது.

பழச்சாறு நிலையம் என்று தமிழில் கொண்டு வந்தோம். ஆனால் பழமுதிர்சோலை என்று பெயர் வைக்கப்பட்டுத் தமிழகம் முழுவதும் பழமுதிர்சோலை (பழச்சாறு நிலையம்) அமைக்கப்பட்டுள்ளது. ஏதாவது ஒரு வழியில் தமிழ் வளரவேண்டும்.

முருகன் மிதிவண்டி நிலையம் என்று எழுதி இருந்தால் அவரைப் பாராட்டவேண்டும். ஆங்கிலம் வேண்டாம் என்று ஒதுக்கிவிடக் கூடாது. காரணம் இந்திக்குப் பதிலாக ஆங்கிலம் ஒரு கருவியாக வேண்டும் என்று நாம் எடுத்துக் கொள்ள வேண்டும். வேறு நாடுகள், வேறு மாநிலங்களில் தேவை ஏற்படும்போது அதைப் பயன்படுத்த வேண்டும். வலிமையான கருவியாக எடுத்துக் கொள்ள வேண்டுமே தவிர அதையே வாழ்க்கையாக வைத்துக் கொள்ளக்கூடாது.

தமிழ் - கண்கள்

ஆங்கிலம் கண் கண்ணாடி போன்றது. தமிழ் எனது கண்களைப் போன்றது. இங்கு தமிழ்ச் சங்கத் தலைவர் பேசும் போது குழந்தைகள் ஆங்கிலம் படிக்க வைப்பது பிழைப்பதற்காக என்று கூறினார். பிழைப்புக்காக ஆங்கிலம் படிக்க வைக்கக்கூடாது.

அம்மாவை "மம்மி" என்றும், அப்பாவை "டாடி" என்று சொன்னால் தான் வேலை கொடுப்பதாகச் சொன்னால் எப்படி எடுத்துக் கொள்ள முடியும்?

ஆங்கில மோகம்

மேல்மட்ட அளவிலான மக்களுடன் நடுத்தர மக்களும் ஆங்கில மோகம் கொண்டு உள்ளனர். ஆனால் கடைசி நிலையில் உள்ள ஏழை பாமர மக்கள் தமிழ்ப்பற்று கொண்டு உள்ளனர். குழந்தைகள் தமிழ்ப் பண்பாடு காக்கின்றனர். படிக்காதவனும் கூட கிராமத்து தெம்மாங்கு பாடல் பாடுகிறான். மம்மி, டாடி என்று அழைப்பது நாட்டின் பண்பாட்டை மாற்றி விட்டது.

ஜெர்மன் நாட்டில் அவர்களின் சாலைகள் இடங்களுக்கு அவர்களின் மொழியில் பெயர்ப்பலகை எழுதப்பட்டு இருப்பதைக் காணமுடியும். கனடா நாட்டின் கியூபெக் மாநிலத்தில் ஆங்கில மொழி இருந்தாலும் அவர்கள் பேசக்கூடிய பிரெஞ்ச் மொழியில் தான் பெயர்ப் பலகை காண முடிகிறது. அதை எதிர்த்து அந்த நாட்டில் உச்ச நீதிமன்றத்திற்கு சென்று முறையிட்டபோது பிரஞ்ச் மொழியில் பெரிய எழுத்தில் பெயரும், சிறியதாக ஆங்கிலத்திலும் இருந்தால் போதும் என்று நீதிமன்றம் தீர்ப்பளித்து உள்ளது.

ஆனால் தமிழகத்தில் தமிழ் எழுத்துகளில் தமிழ் மொழியில் பெயர்ப் பலகை பெரியதாக இருக்க வேண்டும். சிறிய அளவில் ஆங்கிலமோ, இந்தியோ, மலையாளமோ, கன்னடமோ இருக்கவேண்டும் என்று அரசு உத்தரவு பிறப்பித்தால் அதை ஏற்க மறுக்கிறார்கள். செயல்படுத்தத் தயங்குகிறார்கள். அந்த எண்ணம் மாறவேண்டும். பொறுப்பற்ற தமிழ் மக்களாக இருக்கும் நிலை மாறவேண்டும்.

இங்கு பேசிய வருவாய் அலுவலர் சங்கத் தலைவர் கூறினார், அரசு ஆணைகள் ஆங்கிலத்தில் வருகின்றன. அதற்குப் பதில் தமிழில் எழுத வேண்டும். சென்னைத் தலைமை செயலகத்தில் சில பொறுப்பற்ற அலுவலர்கள் உள்ளனர், என்றார்.

31 துறைகளில் ஆய்வுப் பணி

எனவே இம்மாதம் தலைமைச் செயலகத்தில் 31 துறைகளில் எனது முன்னிலையில் ஆய்வுகள் மேற்கொண்டு நடவடிக்கைகள் எடுக்கப்படும். தமிழ் வளர்ச்சித் துறையில் செயலராக இருந்த அதிகாரி தமிழில் தான் எல்லா அரசு ஆணைகளும் வரவேண்டும் என்ற ஆணை பிறப்பித்து, மாற்றலாகிச் சென்று அவர் இருக்கும் துறையில் ஆங்கிலத்தில் அரசாணை வருகிறது. இதற்கு மெத்தனம் தான் காரணம்.

மழலையர் பள்ளிகளில் தமிழ் கட்டாயம்

மழலையர் பள்ளிகளில் கண்டிப்பாக தமிழ்ப் புலமை பெற்ற ஆசிரியர்களால் தமிழ்ப் பாடம் கட்டாயமாக கற்பிக்கவேண்டும். அப்படிக் கற்பிக்கும் பள்ளிகளுக்குத் தான் அரசு, தேர்வுச் சான்றுகள் வழங்கும். இல்லை எனில் சான்று கேட்டு அரசிடம் வரக்கூடாது."

இவ்வாறு அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசினார்.

நீலகிரி மாவட்ட ஆட்சித் தலைவர் பொ. சிவசங்கரன் பேசும்போது, நீலகிரி மாவட்டத்தில் அரசு கோப்புகளில் தமிழ் பயன்படுத்தப்பட்டு வருகிறது. மாவட்டத்தில் பெரும்பாலான இடங்களில் பெயர்ப் பலகை தமிழில் பயன்படுத்தப்படுகிறது. வரும் கால கட்டங்களில் அரசு அதிகாரிகள் கோப்புகளில் தமிழில் பயன்படுத்த வேண்டும். கோப்புகள், பதில்கள் தமிழில் இருக்கவேண்டும்,

என்று கூறினார்.

6.7.99 அன்று கடலூரில் ஆட்சிமொழிக் கருத்தரங்கம் நடைபெற்றது. மா. ஆட்சித் தலைவர் சந்தீப் சாக்சேனா, மராட்டிய மாநிலத்தைச் சேர்ந்தவராக இருந்தும் தமிழில் எல்லா நடவடிக்கைகளும் அமைய வேண்டும் என்பதில் ஆர்வம் காட்டினார். அவர் பேசியதையும், மாவட்டத் துணை ஆட்சியர் - ஒரு குசராத் மாநிலத்தவர் - பேசியதையும் அமைச்சர்கட்கு எழுதிய மடலில் மேற்கோள் காட்டியுள்ளேன். மாவட்ட அளவில் நல்ல ஆர்வம் காட்டிச் செயற்படுவதாக உறுதியளித்தனர்.

மாவட்ட வருவாய் அலுவலரும் நல்ல தமிழார்வம் படைத்தவராக இருந்ததால் அவரது அக்கறையும் சிறப்பாக இருந்தது.

பிற்பட்டோர் நலத்துறை அமைச்சர் எம்.ஆர்.கே. பன்னீர் செல்வம் தொடக்கவுரை யாற்றினார். சட்டமன்ற உறுப்பினர்கள் இள. புகழேந்தி, மருத்துவர் வை. இராமசாமி, வெ. கணேசன் (மா.ஊ. தலைவர்), து. தங்கராசு (நகராட்சித் தலைவர்) ப. முருகேசன், கவிஞர் கா. பொ. இளம்வழுதி ஆகியோர் உரையாற்றினர்.

26.10.99 இல் நெல்லையில் கருத்தரங்கு. மாவட்ட ஆட்சியர் கி. தனவேல் சிறப்பாக ஏற்பாடு செய்திருந்தார். மேயர் உமாமகேசுவரி, அறிஞர்கள் ச.வே. சுப்பிரமணியம், க.பா. அறவாணன், பா. வளனரசு, தொ. பரமசிவன், கமால், தங்கசாமி ஆகியோர் கலந்து கொண்டனர். அமைச்சர் ஆலடி அருணாவோ, உள்ளூரிலேயே வாழும் சட்டமன்ற உறுப்பினர்கள் அ.இலெ. சுப்பிரமணியம், ஆவுடையப்பன் ஆகியோரோ கலந்து கொள்ளவில்லை. நாடாளுமன்ற உறுப்பினர்கள் யாரும் வரவில்லை.

நிகழ்ச்சி நிரல்

நாள் : 26.10.99 செவ்வாய்க் கிழமை காலை 10.30 மணி

வரவேற்புரை : முனைவர் ம. இராசேந்திரன் அவர்கள்
தமிழ் வளர்ச்சி இயக்குநர்

கருத்துரை : புலவர் செ.மு. கமால் அவர்கள், மாவட்டத் தலைவர்
தமிழகத் தமிழாசிரியர் கழகம், திருநெல்வேலி

திரு. இரா. சு. தங்கசாமி அவர்கள்
பாவாணர் தமிழ்ச் சங்கம், திருநெல்வேலி

திரு. தளவாய் த. இராமசாமி அவர்கள்
பொருநை இலக்கிய வட்டம்

திருமதி. ஜெ. சுகுமாரி அவர்கள், மாவட்ட ஊராட்சித் தலைவர்

திரு. எஸ். விசுவநாத பாண்டியன் அவர்கள், துணை மேயர்
திருநெல்வேலி மாநகராட்சி

முனைவர் தொ. பரமசிவன் அவர்கள், தமிழியல் துறைத் தலைவர்
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், திருநெல்வேலி

பேராசிரியர் பா. வளன் அரசு அவர்கள், துணைத் தலைவர்
சவகர் சிறுவர் இல்லம், திருநெல்வேலி

நெல்லை மாநகராட்சி மேயர்
திருமதி. மு. உமாமகேசுவரி அவர்கள்
சட்டமன்ற உறுப்பினர்கள்

திரு. கோ. நயினா முகம்மது அவர்கள்
திரு. எம். அப்பாவு அவர்கள்
திரு. முகமது கோதர் மைதீன் அவர்கள்
திரு. அ.லெ. சுப்பிரமணியம் அவர்கள்
திரு. இரா. ஆவுடையப்பன் அவர்கள்
திரு. சொ. கருப்பசாமி அவர்கள்

முனைவர் க.ப. அறவாணன், துணைவேந்தர்

அறிஞர் ச.வே. சுப்பிரமணியம்

திரு. கி. தனவேல், இ.ஆ.ப. அவர்கள், மாவட்ட ஆட்சியர்

சிறப்புரை : மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர்
முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள்

நன்றியுரை : முனைவர் அர. இராமசாமி அவர்கள்

த.மா.க. சட்டமன்ற உறுப்பினர் எம். அப்பாவு, முசுலீம் லீக் சட்டமன்ற உறுப்பினர் காதர் மைதீன் ஆகிய இருவரும் கலந்து கொண்டு பேசினர். மொழியை முன்வைத்தே மேலே வந்த, தி.மு.க. புள்ளிகளிடத்தில் எப்படிப்பட்ட அலட்சிய உணர்வு வந்துவிட்டது என்பதற்கு இது சிறந்த எடுத்துக்காட்டாகும்.

இந்தக் கருத்தரங்குக்குச் சில நாட்களுக்கு முன்பாகவே மாவட்ட ஆட்சித் தலைவர் கி. தனவேல் ஓர் அருமையான பணியைச் செய்திருந்தார். ஹைகிரவுண்ட், ஜங்ஷன், என்றெல்லாம்

நகர உந்துகளில் எழுதப்பட்டிருந்த பெயர்களை மாற்றி, 'மேட்டுத்திடல்' 'சந்திப்பு' என்றெல்லாம் எழுதிவைக்கும்படி செய்துவிட்டார். நாங்கள் அவற்றை நேரில் பார்த்தபோது பெரிதும் மகிழ்ச்சி அடைந்தோம்.

ஆட்சி மொழிக் கருத்தரங்குகளில் விளையும் புதிய பலன்கள் என்று இவற்றைக் கொள்ளலாம்.

'தமிழில் படித்தவர்களுக்கு மட்டுமே அரசுப்பணி' (தினமணி, 27.10.99)

தமிழகத்தில் தமிழில் படித்தவர்களுக்கு மட்டுமே அரசுப் பணி, மழலையர் பள்ளி முதல் முதுநிலைப் பட்டக் கல்வி வரை தமிழ் வழிக் கல்வி, தமிழில் பொறியியல் கல்வி, தமிழைச் செம்மொழியாக அறிவிக்கச்செய்வது, மத்திய அரசில் தமிழையும் ஆட்சி மொழியாக்குவது உள்ளிட்ட அனைத்துத் திட்டங்களையும் அரசு நிச்சயம் நிறைவேற்றும்.

தமிழ் வளர்ச்சித்துறை சார்பில் திருநெல்வேலி மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கு பாளையங்கோட்டை தூய சவேரியார் கல்லூரி அரங்கில் செவ்வாய்க்கிழமை நடைபெற்றது. இதற்குத் தலைமை தாங்கி அமைச்சர் மேலும் பேசியதாவது :

அலுவலர்களின் மெத்தனப் போக்கு, இளக்காரம், போலித்தனம் உள்ளிட்ட காரணங்களால் தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தை முழுமையாகச் செயல்படுத்த முடியாத நிலை நீடித்து வந்தது.

தலைமைச் செயலகத்தில் உள்ள அனைத்துத் துறைகளையும் ஆய்வு செய்து, தமிழை ஆட்சிமொழியாக்குவதற்கான நடவடிக்கைகள் விரைவுபடுத்தப்பட்டுள்ளன. இதுவரை 12 துறைகள் ஆய்வு செய்யப்பட்டுவிட்டன. இந்தியாவில் பிற மாநிலங்களில் அவரவர் தாய்மொழியிலேயே அனைத்து நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்படுகின்றன. அதே மனப்பாங்கு தமிழர்களாகிய நம்மிடம் இல்லை.

தமிழில் படித்தால் வேலை கிடைக்காது. இந்தியில் படித்தால் வேலை கிடைக்கும் என்ற மாயையில் இருந்து விடுபட வேண்டும். இந்தி பேசும் மாநிலங்களிலேயே வேலையின்மை இருக்கும் போது, தமிழகத்தில் படித்துவிட்டு வேலையில்லாமல் இருக்கும் 35 இலட்சம் பேருக்கு மட்டும் வேலை கிடைத்துவிடுமா என்ன?

இத்திட்டங்களைச் செயல்படுத்துவதற்கு அதிகாரிகளின் மனப்போக்கு மாற வேண்டும். அதோடு, பொதுமக்களின் மனத்திலும் மாற்றம் ஏற்பட வேண்டும். தமிழ்க்குடும்பங்கள் பிற மொழிக் கலப்பில்லாத, தமிழ்ப் பண்பாட்டைக் காக்கும் குடும்பங்களாக இருக்கவேண்டும். அப்படி இல்லையெனில், தமிழ் நலிவடையத்தான் செய்யும், என்றார் தமிழ்க்குடிமகன்.

அனைத்துத் துறைகளிலும் மார்ச்சுக்குள் தமிழில் அரசாணை

தமிழ்க்குடிமகன் அறிவிப்பு (தினமணி)

திருநெல்வேலி, அக்.26-

'தமிழகத்தில் வரும் மார்ச் மாதத்துக்குள் அனைத்து அரசுத் துறைகளிலும் தமிழிலேயே அரசாணைகள் வெளியிடுவதற்கும், மடல்கள் அனுப்புவதற்கும் நடவடிக்கை எடுக்கப்படும். இதைச் செயல்படுத்தத் தவறும் அரசு அதிகாரிகள், ஊழியர்கள் தண்டிக்கப்படுவர்' என தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் மு. தமிழ்க்குடிமகன் அறிவித்துள்ளார்.

கடந்த 1956 ஆம் ஆண்டு, காமராஜர் ஆட்சிக் காலத்தில் தமிழ் ஆட்சி மொழிச் சட்டம் கொண்டு வரப்பட்டது. அதன்பிறகு இச் சட்டத்தைச் செயல்படுத்த 200-க்கும் மேற்பட்ட அரசாணைகள் பிறப்பிக்கப்பட்டன. எனினும், தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தை முழுமையாகச் செயல்படுத்த முடியவில்லை.

தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தை முழுமையாகச் செயல்படுத்த நடவடிக்கை எடுக்கப்படும் என 1996 தேர்தலின்போது வெளியிடப்பட்ட தி.மு.க.தேர்தல் அறிக்கையில் வாக்குறுதி அளிக்கப்பட்டது. அந்த அடிப்படையில்தான் தி.மு.க. அரசு பொறுப்பேற்றவுடன் தமிழ் வளர்ச்சிக்கெனத் தனி அமைச்சகம் ஏற்படுத்தப்பட்டது.

தமிழக வரலாற்றிலேயே முதன் முறையாக நிதித் துறை தற்போது தமிழில் அரசாணை வெளியிட்டுள்ளது. இதேபோல, பிற துறைகளிலும் தமிழில் அரசாணைகள் வெளியிடவும், மடல்கள் அனுப்பவும் நடவடிக்கை எடுக்கப்படும் என்றார் அமைச்சர்.

நெல்லைக் கருத்தரங்கில் அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேச்சு

தமிழைப் புறக்கணிக்கும் அதிகாரிகளுக்குத் தண்டனை (தினகரன்)

நெல்லை, அக்.27

அனைத்துத் துறைகளிலும் தமிழ் பின்பற்றப்பட வேண்டும், தமிழைப் புறக்கணிக்கிற அதிகாரிகளுக்கு அரசு தண்டனை வழங்கும் என்று பாளையில் நடந்த தமிழ் ஆட்சி மொழிக் கருத்தரங்கில் தமிழ் வளர்ச்சித்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசினார். அப்போது அவர் கூறியதாவது:

தமிழை ஆட்சிமொழி ஆக்குவதில் கடந்த 43 ஆண்டுகளாகச் சிக்கல் இருந்து வந்தது. கரையேற முடியாமல் தட்டுத் தடுமாறி நங்கூரம் பாய்ச்சி இன்று தப்பிக்க முடியாது என்ற நிலையில் தலைமைச் செயலகம் முதல் கீழ்மட்டம் வரை தமிழ் ஆட்சிமொழி ஆக்கக்கூடிய நிலை உருவாகி இருக்கிறது.

மறைந்த தமிழ் அறிஞர் கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்கள் நீதிமன்றம், தலைமைச் செயலகம் ஆகிய அனைத்துத் துறைகளிலும் தமிழ் என்கிற நிலை உருவாக வேண்டும். ஆனால் எங்கே தமிழ், எதிலே தமிழ் என்கிற நிலை இருக்கிறது என்று தான் சாவதற்கு முன் வேதனையோடு கூறிச் சென்றார்

1967-ல் அண்ணா அவர்கள் முதலமைச்சர் ஆனபோது, தமிழகத்தில் தமிழ் பயிற்சி மொழி, பாடமொழி எல்லாத் துறைகளிலும், நிர்வாக மொழி என்று சட்ட மன்றத்தில் தீர்மானம் நிறைவேற்றினார். இருமொழிக் கொள்கையை அவர் அறிவித்தார்.

தமிழை ஆட்சிமொழி ஆக்க வேண்டுமென்று எல்லோருக்கும் ஆர்வம் இருக்கிறது. முதலமைச்சருக்கும் எனக்கும் ஆர்வம் இருக்கிறது. ஆனால் அது எல்லோருக்கும் ஏற்பட வேண்டும். சில சில அதிகாரிகளுக்கு இன்னும் அந்த உணர்வு ஏற்படவில்லை. அவர்கள் இன்னும் ஆங்கிலத்திலேயே அரசு கடிதங்களையும், ஆணைகளையும் எழுதுகின்றனர். இது போன்ற தவறுகளைச் செய்தால் விட்டு விடுவார்கள் என்ற மத மதப்பு அவர்களுக்கு இருக்கிறது. அப்படியே என்றாலும் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளலாம் என்று நினைப்பார்கள்.

ஆனால் அவர்களுக்கு இனிக் கடுமையான தண்டனை வழங்கப்படும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். 1996-ல் தி.மு.க. தேர்தல் அறிக்கையில் தி.மு.க. ஆட்சிக்கு வந்தால் தமிழ் ஆட்சிமொழி ஆக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டது. அதன்படி ஆட்சிக்கு வந்ததும் அதைச் செயலாற்றிக் கொண்டு இருக்கிறோம்.

நிதித்துறையின் ஆணைகள் தமிழில் வெளிவந்திருப்பதைப் பத்திரிகைகள் வெளியிட்டிருக்கின்றன. படிப்படியாக அனைத்துத் துறைகளிலும் தமிழ் ஆட்சி மொழியாக்கப்படும் தி.மு.க. ஆட்சிக்கு வந்ததும் தமிழ் மொழிக்கென்று ஒரு அமைச்சரை நியமித்துத் தமிழை ஆட்சிமொழியாக்க உறுதியான நடவடிக்கை எடுத்து வருகிறார் முதல்வர்.

1956-ல் தமிழ்நாடு தனி மாநிலம் ஆனது. 27.12.56-ல் ஆட்சிமொழி சட்டம் கொண்டு வரப்பட்டது. 7.10.56-ல் குழித்தலையில் தமிழ் ஆட்சிமொழி மாநாடு நடத்தப்பட்டது. இதில் பாரதிதாசன் போன்ற அறிஞர்கள் கலந்து கொண்டனர்.

இங்கே பேசிய சட்டமன்ற உறுப்பினர் மற்ற மாநிலங்களுக்கு செல்ல வேண்டுமானால் தமிழ் மட்டும் தெரிந்தால் போதாது மற்ற மொழிகளும் தெரியவேண்டும் என்று கூறினார். அப்போது கர்நாடகத்திற்குப் போக வேண்டுமானால் கன்னட மொழி படிக்க வேண்டுமா? ஆந்திராவிற்கு செல்ல வேண்டுமானால் தெலுங்கு மொழி படிக்க வேண்டுமா?

வெளி மாநிலங்களில் இருந்து தமிழ்நாட்டிற்கு வருகிறவர்கள் தமிழ் மொழியைப் படித்துவிட்டுத்தான் வருகிறார்களா? எந்த மொழியையும் படிப்பதற்குத் தமிழ்நாட்டில் தடை இல்லை. சென்னையில் இந்தி பிரச்சார சபா இருக்கிறது. அதற்கு அரசு தடை விதிக்கவில்லை. அதே போல ஒரிசாவில் தமிழ் சபா இருக்கிறது. அங்கும் தடை இல்லை.

73 சதவீதம் சீனர்கள் இருக்கும் சிங்கப்பூரில் 9.2.56-லேயே தமிழ் ஆட்சி மொழி ஆக்கப்பட்டு விட்டது. ஆனால் தமிழ்நாட்டில் ஆட்சி மொழி ஆக்குவதில் பல்வேறு சிக்கல்கள் இருக்கின்றன. கடைக்காரர்கள் பெயர்ப் பலகைகளை தமிழில் எழுதுவதற்கு சங்கடப்படுகின்றனர்.

நகைக் கடைகளில் ஜுவல்லரி மார்ட் என்று தான் எழுதுகிறார்கள். ஆனால் சிங்கப்பூரில் அணிமணி பொற்சாலை என்று எழுதி இருக்கிறார்கள்.

எனவே ஆட்சிமொழி ஆக்குவது என்பது ஒரு அரசு மட்டும் செய்கிற பணி அல்ல. நாம் அனைவரும் சேர்ந்து செயல்படவேண்டும். வேறு எந்த மாநிலத்திலும் அரசு இந்தப் பணியை செய்யவில்லை. தமிழ்நாட்டில் தான் பொறுப்பற்ற போக்கு இருக்கிறது.

தமிழ்நாட்டின் முதல் சமத்துவபுரத் திறப்பு விழாவில் எனக்கு அனுப்பப்பட்ட அழைப்பிதழில் தமிழ்க்குடிமகன் என்று ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தது. இவ்வளவு பொறுப்பற்ற நிலை இருக்கிறது. தமிழ்நாட்டில் 90 இலட்சம் செலவில் 1000 தமிழ் தட்டச்சு எந்திரங்கள் வழங்கப் பட்டிருக்கின்றன.

64 இலட்சம் செலவில் பொறியியல் நூல்கள் வெளியிடப்பட்டிருக்கின்றன. தமிழைச் செம்மொழி ஆக்குவதற்கான முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டு வருகிறது. தமிழில் பொறியியல், மருத்துவ இயல் போன்றவை கொண்டு வருவதற்கான நடைமுறைகள் நடுவணரசில் தேங்கிக் கிடக்கின்றன.

இவை படிப்படியாகச் செயல்படுத்தப்படும். விமானங்களில் தமிழில் ஒலி பரப்புவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படும்.

இந்தியாவை ஆங்கிலேயன் ஆண்டதால் நாம் ஆங்கிலம் படித்திருக்கிறோம். பிரெஞ்சுக்காரன் ஆண்டிருந்தால் பிரெஞ்சு தான் படித்திருப்போம். ஒரு இளைஞன் பெட்டிக் கடைக்குச் சென்று அந்த புத்தகம் (செக்ஸ்) இருக்கிறதா? என்று கேட்டிருக்கிறான். அதற்கு கடைக்காரன் ஆங்கிலத்தில் தான் இருக்கிறது. தமிழில் இல்லை என்று கூறியிருக்கிறான்.

உடனே அந்த இளைஞன் உங்களையெல்லாம் தமிழ்க்குடிமகனிடம் சொல்லித்தான் திருத்த வேண்டும் என்று ஒரு பத்திரிகையில் வெளிவந்திருக்கிறது. அந்த அளவுக்குத் தமிழ் உணர்வு இருப்பதை பாராட்டுகிறேன். அனைத்துத் துறை அலுவலர்களும் தமிழில் கையெழுத்துப் போடவும், அரசு உத்தரவைப் பின்பற்ற வேண்டும்.

இவ்வாறு அவர் கூறினார்.

27.10.99 முற்பகல் விருதுநகர்க் கருத்தரங்கு. மாவட்ட ஆட்சியர் ச. கிருட்டிணன், முன்னாள் அமைச்சர் இராமச் சந்திரன் ஆகியோர் முன்னிலை. இந்தக் கருத்தரங்கினை வன்னியப் பெருமாள் மகளிர் கல்லூரியும் இணைந்து நடத்தியது. கல்லூரி சார்ந்த பலரும், அறிஞர்கள் ம. இராசேந்திரன், மோ. இசுரேல், இராம, சுந்தரம், ம.கா. பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த பல பேராசிரியர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர். கருத்தரங்கில் படிக்கப்பட்ட கட்டுரைகள் அனைத்தும் தொகுப்பு நூலாக வெளியிடப்பட்டுள்ளன. உள்ளூர்ச் சட்டமன்ற உறுப்பினர் உட்பட வேறெவரும் கலந்து கொள்ளவில்லை. உதவி இயக்குநர் க. பசும்பொன் எடுத்துக்கொண்ட சிறப்பு முயற்சி பாராட்டத்தக்கது.

நிகழ்ச்சி நிரல்

நாள் : 27.10.99 நேரம் : முற்பகல் 10.00 மணி

வரவேற்புரை : திரு. ப.அ.ப.இராசமோகன், செயலாளர்
வே.வே. வன்னியப்பெருமாள் பெண்கள் கல்லூரி, விருதுநகர்

முன்னிலையுரை : முனைவர் ம. இராசேந்திரன், தமிழ் வளர்ச்சி இயக்குநர்

கருத்தரங்கினைத் துவக்கி மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர்
வைத்து விழாப் பேருரை : முனைவர் மு. தமிழ்க்குடிமகன்

தலைமையுரை : திரு. ச. கிருஷ்ணன், இ.ஆ.ப.,
மாவட்ட ஆட்சியர், விருதுநகர்

வாழ்த்துரை : சட்டமன்ற உறுப்பினர்கள்

திரு. ஏ.ஆர்.ஆர்.சீனிவாசன்
திரு. வி.பி. இராசன்
திரு. கே.எம். விசயகுமார்
திரு. தங்கம் தென்னரசு
திரு. இரா. தாமரைக்கனி
திரு. ஆர். சொக்கர்

உள்ளாட்சி அமைப்புக்களின் பிரதிநிதிகள்

திருமதி எஸ். விசயலட்சுமி, மாவட்ட ஊராட்சித் தலைவர்
திரு. ஏ. சுப்பிரமணியன், ஊராட்சி ஒன்றியத் தலைவர், விருதுநகர்
திரு. பி.எம்.ஏ.என். தனசேகரன், தலைவர்

திருமதி. பி.எஸ்.பி. இராசேசுவரி, இணைச்செயலாளர்
திரு.க.வ.ப. இராசமோகன், பொருளாளர்
திருமதி. அ. சந்திரா, முதல்வர், வே.வே. வன்னியப்பெருமாள்
பெண்கள் கல்லூரி, விருதுநகர்
பேராசிரியர் மோ.இசுரேல், மதுரை
திரு. க. முருகேசன், செய்தி ஆசிரியர், தினமணி, மதுரை
திரு. முத்து, இதயம் நல்லெண்ணெய், விருதுநகர்

நன்றியுரை : முனைவர் க. பசும்பொன்

தமிழ் ஆட்சி மொழி பற்றிய உத்தரவுகளை கடைப்பிடிக்காத அதிகாரிகள் மீது நடவடிக்கை அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை

விருதுநகர், அக்.28-

தமிழ் ஆட்சிமொழி தொடர்பான அரசு உத்தரவுகளை கடைப்பிடிக்காத அதிகாரிகள் மீது கடும் நடவடிக்கை எடுக்கப்படும் என அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரித்தார்.

விருதுநகர் மாவட்ட தமிழ் வளர்ச்சித் துறையும் விருதுநகர் வி.வி.வி. பெண்கள் கல்லூரியும் இணைந்து தமிழ் வளர்ச்சித் திட்டக் கருத்தரங்கை நடத்தின.

கல்லூரிக் கலையரங்கில், கலெக்டர் கிருஷ்ணன் தலைமையிலும் தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் ராஜேந்திரன் முன்னிலையிலும் நடைபெற்ற இந்த கருத்தரங்கினைத் தொடங்கி வைத்து அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசியதாவது :-

காமராசர்

"தமிழகத்தில் தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தை 1956-ம் ஆண்டே கொண்டுவந்த பெருந்தலைவர் காமராசரும், சி. சுப்பிரமணியமும் பாராட்டுக்குரியவர்கள். பின்னர் 1968-ம் வருடம் பேரறிஞர் அண்ணா, தமிழ் பயிற்றுமொழி மற்றும் நிர்வாக மொழி என்ற தீர்மானத்தைச் சட்டமன்றத்தில் கொண்டு வந்து அதை நிறைவேற்றிட 5 வருடகாலக்கெடுவும் நிர்ணயித்தார். ஆனால் நாம் 1999-ம் ஆண்டில் நின்று கொண்டு இன்னும் அதைப்பற்றிப் பேசிக்கொண்டு இருக்கிறோம்.

1996-ம் ஆண்டு தி.மு.க. தேர்தல் அறிக்கையில் தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தை அமுல்படுத்துவோம் என்று அறிவித்தபடி, தமிழக முதல்வர் என்னைப் போன்ற தொண்டனை அந்தத் துறைக்கு அமர்த்தி அதற்கான நடவடிக்கைகளை எடுக்கச் சொல்லிப் பணித்துள்ளார்.

பயிற்றுமொழி

பொறியியல் கல்லூரிகளில் தமிழைப் பயிற்று மொழியாக்க, தமிழ்ப் பல்கலைக்கழகம் நடவடிக்கை எடுத்து, அதற்கான கோப்பு 400 பக்கங்கள் ஆன பின்பும் நடைமுறைப்படுத்த முடியவில்லை. தமிழ்ப் பல்கலைக்கழகம் எனது பொறுப்பில் இருந்தபோதிலும், முதலில் அண்ணா பல்கலைக்கழகத்தில் நடைமுறைப்படுத்த முயன்றும் இயலாமல் போனது.

பாடப்புத்தகம்

தற்போது மத்திய அரசு நமக்குச் சார்புள்ள அரசு. எனவே, அதனை அமுல்படுத்த முடியும் என எண்ணுகிறோம். தமிழக அரசு ரூ.64 இலட்சம் செலவில் 73 பொறியியல் துறைப் பாடப்புத்தகங்களை தமிழில் வெளியிட்டுள்ளது.

தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் 1956-ம் ஆண்டு கொண்டு வரப்பட்டது. அதற்கான ஒரு குழு அமைப்பது தொடர்பான உத்தரவு 1957-ம் ஆண்டு ஆங்கிலத்தில்தான் வெளியானது. 1978-ம் ஆண்டே, அரசு அதிகாரிகள் தமிழில்தான் கையெழுத்திட வேண்டும் என்று எம்.ஜி.ஆர். ஒரு உத்தரவைப் பிறப்பித்தார். 22 ஆண்டுகளாகியும் அந்த உத்தரவை அதிகாரிகள் யாரும் கண்டு கொள்ளவில்லை.

கடும் நடவடிக்கை

அரசின் பிற உத்தரவுகளைப் போல், தமிழ் ஆட்சி மொழி தொடர்பான உத்தரவுகளைக் கடைப்பிடிக்காத அதிகாரிகள் மீதும் பதவி நீக்கம் போன்ற கடுமையான நடவடிக்கைகள் எடுக்கப்படும். தலைமைச் செயலகத்திலும், தமிழ் ஆட்சிமொழி விதிமுறைகளை கடைப்பிடிக்க நடவடிக்கைகள் எடுக்கப்படும். கோவில்களில் தமிழில் அர்ச்சனை செய்ய, தமிழ் வழி பாட்டு நூல்களை வெளியிட்டுள்ளோம்.

விருதுநகர் மாவட்ட நிர்வாகத்திலும் நூற்றுக்கு நூறு தமிழை ஆட்சிமொழியாக்க மாவட்ட ஆட்சியர் கிருஷ்ணன் நடவடிக்கை மேற்கொள்வார் என நம்புகிறேன்.

இவ்வாறு அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசினார்.

27.10.99 மாலையில் தேனியில் கருத்தரங்கம். மாவட்ட ஆட்சித் தலைவர் பசீர் அகமது மற்றும் இல. மூக்கையா, பெ. ஆசையன், அழகர்ராசா ஆகிய சட்டமன்ற உறுப்பினர்கள், பிற அறிஞர்கள் கலந்து கொண்டனர்.

நிகழ்ச்சி நிரல்

வரவேற்புரை : முனைவர் ம. இராசேந்திரன், தமிழ் வளர்ச்சி இயக்குநர்

முன்னிலையுரை : திரு. பெ.மு. பசீர் அகமது, இ.ஆ.ப.,
தேனி மாவட்ட ஆட்சித் தலைவர்

| | | |
|---|---|---|
| தலைமையேற்றுப் பேருரை | : | மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர் |
| | | முனைவர் மு. தமிழ்க்குடிமகன் |
| வாழ்த்துரை | : | சட்டமன்ற உறுப்பினர்கள் |
| | | திரு. ந.இர. அழகர்ராசா |
| | | திரு. இல. மூக்கையா |
| | | திரு. பெ. ஆசையன் |
| | | திரு. அ. சுடலைமுத்து |
| | | திரு. ஓ.இரா. இராமச்சந்திரன் |

உள்ளாட்சி அமைப்புகளின் பிரதிநிதிகள்

| | | |
|---|---|---|
| | | திரு.க.க.ம. இராமச்சந்திரன், மாவட்ட ஊராட்சித் தலைவர், தேனி |
| | | மருத்துவர் மு. கண்ணப்பன், நகராட்சித் தலைவர், தேனி |
| | | திரு. செ. மலைராசா, ஊராட்சி ஒன்றியத் தலைவர், தேனி |
| கருத்துரை | : | முனைவர் மு. இராசேந்திரன், மாவட்ட வருவாய் அலுவலர் |
| | | திரு. இரா. கருணாகரன், முதன்மைக் கல்வி அலுவலர் |
| | | திரு. மு. இராசசேகர், |
| | | கூட்டுறவுச் சங்கங்களின் இணைப்பதிவாளர் |
| | | பேராசிரியர் மு. அப்துல் சமது |
| | | ஹாஜி கருத்தராவுத்தர் கல்லூரி, உத்தமபாளையம் |
| | | பேராசிரியர் முத்துதங்க அய்யப்பன் |
| | | ஏல விவசாயிகள் கல்லூரி, போடிநாயக்கனூர் |
| | | பேராசிரியை முனைவர் உலகம்மாள் |
| | | ஜெயராஜ் அன்னபாக்கியம் பெண்கள் கல்லூரி, பெரியகுளம் |
| | | புலவர் மு. இராசரத்தினம், பெரியகுளம் |
| | | திரு. பெ. செல்லப்பாண்டியன் |
| | | வட்டார வளர்ச்சி அலுவலர், ஊராட்சி ஒன்றியம், ஆண்டிப்பட்டி |
| | | திரு. கு.ச.க. நடேசன், தலைவர், நாடார் சரசுவதி பெண்கள் |
| | | மேல்நிலைப்பள்ளி மற்றும் கல்லூரி, தேனி |
| நன்றியுரை | : | முனைவர் க. பசும்பொன் |

மாவட்ட வருவாய் அலுவலர் மு. இராசேந்திரன் நல்ல தமிழ்ப் பற்றாளர், தமிழறிஞர்களாகிய அப்துல் சமது, முத்துதங்க அய்யப்பன், உலகம்மாள், மு. இராசரத்தினம் ஆகியோர் மிகுந்த மகிழ்ச்சியுடன் கலந்து உரையாற்றிப் பெருமை சேர்த்தனர்.

அரசு ஊழியர்கள் பதவி உயர்வு பெற ஆட்சித் தமிழ் தேர்வு எழுத வேண்டும்
அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேச்சு

தேனி, நவ.1 - (தினத்தந்தி)

"தமிழக அரசு ஊழியர்கள் பதவி உயர்வு பெற ஆட்சித்தமிழ் தேர்வு எழுதி வெற்றி பெறவேண்டும்" என்று அமைச்சர் தமிழ்க்குடிமகன் கூறினார்.

மாவட்ட ஆட்சி மொழிக் கருத்தரங்கம், தமிழ் ஆட்சி மொழி அமைச்சர் தமிழ்க்குடிமகன் தலைமையில் தேனி மாவட்ட கலெக்டர் பசீர் அகமது முன்னிலையில் நடைபெற்றது. நிகழ்ச்சியில் அமைச்சர் தமிழ்க்குடிமகன் கலந்து கொண்டு பேசினார்.

"அடிமைத் தளைகளில் பூட்டப்பட்டிருந்து, விடுதலை பெற்ற எந்தவொரு நாடும் உடனே தன் மொழியை முதன்மைப்படுத்த, தன் மக்களை மேம்பாடடையச் செய்ய, தன் வட்டாரத்தை வளப்படுத்தவே முயற்சி செய்யும். ஆனால் தமிழ் மக்களுக்கு மட்டும் அந்தச் சொரணை வரவில்லை. அடிமை மோகத்திலிருந்து அவர்கள் முழுமையாக மீண்டு விடவில்லை.

"கடந்த 40 ஆண்டு காலமாகத் தமிழகத்தில் தமிழ் ஆட்சி மொழி சட்டமாக இருந்தும் நடைப்பிணமாக உள்ளது. சவலைப் பிள்ளையாக இருந்த இச்சட்டத்தைச் செயல்பட வைத்த பெருமை முதல் - அமைச்சருக்கு உண்டு.

துணைத் தீர்மானம் 1968-ல் சட்ட சபையில் கொண்டு வரப்பட்டபோது தமிழ் மொழியை அனைத்து அரசுத் துறைகளிலும் 5 ஆண்டுகளுக்குள் செயல்படுத்த வேண்டும் என்று இருந்தது.

இப்போது 1999-ல்தான் நூற்றுக்கு நூறு நிறைவேறும் என்ற நம்பிக்கை உள்ளது. தமிழ் மக்கள் உலகம் முழுவதும் 7 கோடி பேர் உள்ளனர்.

உலக நாடுகள் பலவற்றில் பேசப்படும் மொழி தமிழ். ஆங்கிலம்தான் உலக மொழி என இங்கிலாந்து கூடக் கூறவில்லை. ஆனால் தமிழ்நாட்டுக் காரர்கள்தான் ஆங்கிலத்தை உலகமொழி என்று கூறி வருகின்றார்கள். நகை என்றாலே நமக்கு தெரியும். ஆனால் ஜுவல்லர்ஸ் என்கிறார்கள். தையலகம் என எழுதினால் கிழிந்த துணி தைக்கும் கடை என நினைத்து டெய்லர் என எழுதுகிறார்கள்.

சிங்கப்பூரிலேயே 1948லேயே அணி - மணி பொற்சாலை என நகைக்கடைக்கு எழுதப்பட்டு நடைமுறையில் இருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

அரசு அலுவலர்களும், ஊழியர்களும் தமிழ் ஆட்சி மொழியைப் பின்பற்றிச் செயல்பட வேண்டும். எத்தனையோ அரசு உத்தரவுகள் ஆங்கிலத்திலேயே பிறப்பிக்கப்படுகின்றன. இதற்குக் காரணம் ஐ.ஏ.எஸ் அதிகாரிகள். அரசு ஆணைகள் தமிழில் இருக்க வேண்டும் என உத்தரவு இருக்கும்போது 4 துறைகள் தவிர மற்ற துறைகள் அனைத்திலும் அரசு ஆணை ஆங்கிலத்தில் பிறப்பிக்கப்பட்டு வருகிறது.

ஆட்சி மாறினாலும் ஆட்கள் மாறினாலும் சட்டத்தை மீறாமலிருந்தால் தமிழ் ஆட்சி மொழி வந்திருக்கும். ஆதலால் அரசு உயர் அதிகாரிகள் 3 மாதத்திற்குள் அனைத்துத்துறை அரசு ஆணைகளும் தமிழில் பிறப்பிக்க வேண்டும். தேர்வாணையம் மூலம் தேர்ந்து எடுக்கப்படும் அரசு அலுவலர்கள் பணிவரன்முறை பெற வேண்டுமானாலும் ஆட்சித் தமிழ் புத்தகத்தில் தேர்வு எழுதி தேர்ச்சி பெற்றால்தான் பணி வரன் மற்றும் பதவி உயர்வு வழங்கப்படும் என விரைவில் அரசு ஆணை வெளியிடப்பட உள்ளது.

மழலைப்பள்ளிகள் கட்டுப்படுத்தப்பட உள்ளன.

தமிழ் மொழி முதன்மை மொழியாக கொண்டு வரப்பட உள்ளது. தமிழ் மறுமலர்ச்சி ஏற்படுத்தி மருத்துவம் மற்றும் பொறியியல் படிப்புகள் தமிழில் படிப்பதற்கு விரைவில் ஆவன செய்யப்படும்.

தமிழ்நாட்டில் குழந்தைகள் தாய்மார்களை அம்மா என்று அழைப்பதை விட மம்மி என அழைப்பதற்கு விரும்புகிறார்கள். ஆனால் மம்மி என்றால் எகிப்து நாட்டில் செத்த பிணத்தினைக் குறிக்கும்.

ஆதலால் தமிழில் அம்மா என அழைக்கக் குழந்தைகளுக்கு பெற்றோர்கள் கற்றுக்கொடுக்க வேண்டும்" மேற்கண்டவாறு அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசினார்.

2.11.99 அன்று நாமக்கல் மாவட்ட ஆட்சி மொழிக் கருத்தரங்கு நடைபெற்றது. மாவட்ட ஆட்சித் தலைவர் தயானந்த கட்டாரியா ஆர்வத்துடன் ஏற்பாடு செய்திருந்தார். கே.கே. வீரப்பன் முதலான சட்டமன்ற உறுப்பினர்களும், கலாராணி, ப. பரமசிவம், கோ. கண்ணன், பெரு. மதியழகன் முதலிய தமிழன்பர்களும் கலந்து கொண்டனர். கருத்தரங்கு மிகச் சிறப்பாக அமைந்தது.

நிகழ்வு முறை

நாள் : 2.11.99 செவ்வாய்க் கிழமை முற்பகல் 10.30 மணி

இடம் : நாமக்கல் கவிஞர் மகளிர் கலைக் கல்லூரிக் கலை அரங்கு

வரவேற்புரை : திரு. ஆ. அரிகிருட்டிணன்

தலைமை -பேருரை : மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி அமைச்சர்
முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள்

முன்னிலை : திரு. தயானந்த கட்டாரியா, இ.ஆ.ப., அவர்கள், மாவட்ட ஆட்சியர்

வாழ்த்துரை : திரு. ஆ. இராசு அவர்கள், மாவட்ட வருவாய் அலுவலர்
திரு. க. தெய்வநாயகம் அவர்கள், மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலர்
திரு. ந. இளங்கோ அவர்கள், செய்தி- மக்கள் தொடர்பு அலுவலர்
பேராசிரியர் திருமதி கலாராணி அவர்கள்
மகளிர் கல்லூரி, நாமக்கல்
பேராசிரியர் திரு. கோ. கண்ணன் அவர்கள்
திருவள்ளுவர் கலைக்கல்லூரி, இராசிபுரம்
பேராசிரியர் முனைவர் பெரு. மதியழகன் அவர்கள்
கால்நடை மருத்துவக் கல்லூரி, நாமக்கல்
பேராசிரியர் முனைவர் ப. பரமசிவம் அவர்கள்
அறிஞர் அண்ணா கலைக் கல்லூரி, நாமக்கல்
திரு. நா. இளங்கோ அவர்கள், மாவட்ட ஊராட்சிக் குழு உறுப்பினர்
திரு. கோ.சி. வீரப்பன் அவர்கள், ஊராட்சி ஒன்றியக் குழுத் தலைவர்
திரு. து.சு. மணியன் அவர்கள், நகர மன்றத் தலைவர்

சட்டமன்ற உறுப்பினர்கள்

திரு. பி.ஆர். சுந்தரம் அவர்கள்
திரு. சி.சந்திரசேகரன் அவர்கள்
திரு. கே. வேலுசாமி அவர்கள்
திரு.கே.கே. வீரப்பன் அவர்கள், மாவட்ட ஊராட்சிக் குழுத் தலைவர்
மருத்துவர் வி. சரோசா அவர்கள், நாடாளுமன்ற உறுப்பினர்
திரு. வி.பி. துரைச்சாமி அவர்கள், மாநிலங்களவை உறுப்பினர்
முனைவர் ம. இராசேந்திரன், தமிழ் வளர்ச்சி இயக்குநர்

நன்றியுரை : முனைவர் அ.மு. இராசேந்திரன்

தமிழ் வளர்ச்சித்துறை ஆணைகளை மீறினால் அரசு அதிகாரிகளுக்குத் தண்டனை
அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை.

நாமக்கல், நவ.4-(தினத்தந்தி)

'தமிழ் வளர்ச்சித்துறை அரசாணைகளை மீறிச் செயல்படும் அரசு அதிகாரிகள் தண்டிக்கப்படுவார்கள்' என்று அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரித்தார்.

தமிழ் வளர்ச்சித் துறை சார்பில் நாமக்கல் மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கம் நாமக்கல் கவிஞர் ராமலிங்கம் பிள்ளை அரசினர் பெண்கள் கலைக் கல்லூரியில் உள்ள கலை அரங்கில் நடந்தது.

கருத்தரங்குக்கு தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் மு. தமிழ்க்குடிமகன் தலைமை தாங்கிப் பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது :

தமிழ் ஆட்சி மொழியாக்கும் சட்டம் கடந்த 1956-ம் ஆண்டு நிறைவேற்றப்பட்டது என்றாலும் சட்டம் நிறைவேற்றப்பட்டு 43 ஆண்டுகள் ஆகியும் இதுவரை எதிர்பார்த்த முன்னேற்றம் ஏற்பட வில்லை. தமிழ் வளர்ச்சிக்கு என்று தனியாக ஒரு துறை ஒதுக்கப்பட்டு அதற்கு நான் அமைச்சராக இருக்கிறேன். துறை ஒதுக்கப்பட்டபின் கடந்த 3½ ஆண்டுகளில் பெருமளவு முன்னேற்றம் ஏற்பட்டு உள்ளது. வானொலி, செய்தித்தாள், தொலைக்காட்சி, அரசு அலுவலகங்கள் போன்றவற்றில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டு உள்ளது என்றாலும் இன்னும் முழுமையான எதிர்பார்த்த வளர்ச்சியை அடைந்து விடவில்லை.

இங்கே அறிஞர் பெருமக்கள், உள்ளாட்சி அமைப்பினர் பலர் பேசினார்கள். பல கருத்துகளை தெரிவித்தார்கள். அவர்களில் பலர் சட்டத்தின் மூலம் இதற்கு நடவடிக்கை எடுக்க வேண்டும் என்கிறார்கள்.

சிங்கப்பூரை எடுத்துக் கொண்டால் அங்கு முழுக்க முழுக்கச் சட்டத்தின் ஆட்சி நடக்கிறது. யாராக இருந்தாலும் மொழி, இனம் ஏதும் பாராது 100க்கு 100 சதவீதம் சட்டம் தண்டிக்கிறது.

ஆனால் நமது நாட்டில் சட்டமே தண்டிக்கப்படுகிறது. வாய்ப்பு கிடைக்குமானால் சட்டத்தையே குழிதோண்டி புதைத்து விடுகிறார்கள்.

தமிழ்நாட்டைத் தவிர்த்து உலகம் முழுவதும் உள்ள தமிழர்கள் ஏறத்தாழ 1 கோடி பேர், தமிழ்நாட்டில் மட்டும் 6 கோடிப் பேர். இதுதான் உண்மையான புள்ளிவிவரம். உள்நாட்டுத் தமிழர்களைவிட வெளிநாட்டு தமிழர்களுக்கு தமிழ்ப்பற்று, தமிழ் உணர்வு அதிகம் உண்டு.

தமிழ்நாட்டில் 27.12.56 இல் தமிழ் ஆட்சிமொழி சட்டம் இயற்றப்பட்டு விட்டாலும் அதில்கூட நமக்கு வெற்றி இல்லை. சிங்கப்பூரில் அதற்கு முன்னதாக 9.2.56 லேயே இயற்றி விட்டார்கள்.

தமிழ்நாட்டில் வணிகர்கள் கூட விளம்பரப் பலகையை தமிழில் வைப்பதை தாழ்வு மனப்பான்மையாகக் கூறுகிறார்கள். தமிழ் இனம் நினைத்தால் தமிழ் மொழியை வாழ வைக்க முடியும்.

கல்லூரிகளில் ஆங்கில வழியில் படிக்கும் மாணவர்கள் தேர்வின் போது தமிழில் எழுதுகிறார்கள். வெளியே கேட்டால் ஆங்கில வழியில் படிப்பதாகப் பெருமையாகச் சொல்கிறார்கள். இந்தப் போலி நாகரிகம் தேவையா?

ஆங்கிலம், இந்தி படித்தால் உடனே வேலைக்குச் சென்று விடலாம் என நினைக்கிறார்கள். உத்திரபிரதேசத்தில் 45 இலட்சம் பேர் வேலைக்காகக் காத்திருக்கிறார்கள். பீகார் மாநிலத்தில் 38 இலட்சம் பேர் காத்திருக்கிறார்கள். அவர்கள் எப்படித் தமிழ்நாட்டில் படித்தவனுக்கு வேலை கொடுத்து விடுவார்கள்?

தமிழ்வழிப் பொறியியல் கல்லூரி தொடங்க உரிய நடவடிக்கை எடுக்கப்பட்டு உள்ளது. மத்திய அரசின் ஒப்புதலுக்காக உள்ளது. விரைவில் கிடைக்கும். இதுவும் தமிழ் வளர்கிறது என்பதற்கு உதாரணம்.

கருவூலச் சீட்டுகளில் சம்பளப் பட்டியலில் தமிழில் எழுதுங்கள். அதை ஏற்றுக் கொள்ளாவிடில் 16 (ஆ) விதியின்படி சட்டப்படி அந்த அலுவலர் மீது நடவடிக்கை எடுக்க முடியும்.

42 ஆண்டுகளுக்கு பின் அரசின் தலைமை செயலகத்தில் தமிழ் ஆய்வு நடத்தப்பட்டு உள்ளது. நிதித்துறையில் இருந்து முதன் முதலாக தமிழில் ஆணை வந்துள்ளது. இது பெருமைப்படத்தக்கது.

தமிழ்நாட்டைப் பொறுத்த வரை அனைத்துத் துறையிலும் தமிழ்ப்பற்று தமிழ் உணர்வு என்பதை ஏற்படுத்துவது கடும் முயற்சி தான். காரணம் வழி வழியாக அப்படியே வந்து விட்டார்கள். பழைய நடைமுறைகளே தொடர்ந்து பின்பற்றப்பட்டு வருகின்றன.

இனிமேல் தமிழ் வளர்ச்சித் துறையின் அரசாணைகளை மதிக்காமல் அலுவலர்கள் மீறினால் அதற்கு தண்டனை உண்டு. முதலில் கண்டனம் தெரிவிக்கப்படும். கண்டனம் என்றால் அந்த அலுவலருக்கு பதவி உயர்வே கிடைக்காது. இதை உடனடியாக செயல்படுத்துவோம். 2 பேர் மீதாவது நடவடிக்கை எடுத்தால்தான் மற்றவர்களுக்கு அது பாடமாக அமையும்.

நீதிபதி மோகன் குழு பரிந்துரைகள் அமைச்சரவையில் விவாதிக்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டு உள்ளது. விரைவில் அது செயல்படுத்தப்படும். அப்போது தமிழில் படித்தவர்களுக்கு வேலை வாய்ப்பில் நிச்சயமாக முன்னுரிமை வழங்கப்படும்.

அதுபோல தமிழ்நாடு அரசு தேர்வாணையம் (டி.என்.பி.எஸ்.சி.) மூலம் வேலை வாய்ப்புப் பெறுவோர், தகுதி நிறைவு (பதவி உயர்வு) பெற இதுவரை 10-ம் வகுப்பு நிலையிலேயே தேர்வு எழுதி வந்தனர். இதனால் எளிதில் வெற்றி பெற்று வந்தனர். இனி அது கிடையாது.

'ஆட்சித் தமிழ்' என்ற நூல் அரசால் வெளியிடப்பட்டு உள்ளது. இதில் இருந்து தான் கேள்விகள் கேட்கப்படும். அந்த நூலைப் படித்தவர்கள் தான் தேர்வில் வெற்றி பெற்றுப் பதவி உயர்வு பெற முடியும்.

அரசு அலுவலர்கள் தமிழ் மொழியில் எழுதுவதை முறையாகக் கடைப்பிடித்தாலே ஒரே நாளில் அலுவலகங்களில் தமிழை முழுமைப்படுத்திவிட முடியும். அதற்கு அவர்கள் மனது வைக்கவேண்டும். அதற்கான முயற்சியை தமிழ் வளர்ச்சித் துறை மேற்கொள்ளும்.

மேற்கண்டவாறு அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசினார்.

7.12.99 இல் திருவள்ளூர் மாவட்டக் கருத்தரங்கு.

அமைச்சர் க. சுந்தரம், மாவட்ட ஆட்சியர் பிரபாகர், சட்டமன்ற உறுப்பினர் சி.சு. மணி, பிற அலுவலர்கள், அறிஞர்கள் கலந்து கொண்டனர். பிற சட்டமன்ற உறுப்பினர்கள் எவரும் வரவில்லை. தமிழில் ஆர்வம் உடையவராகத் தன்னைக் காட்டிக் கொள்ளும் இராமனும் (பள்ளிப்பட்டு) வரவில்லை.

கு. சம்பந்தம், செ. உலகநாதன் முதலிய தமிழறிஞர்களும் வணிகர்கள் சார்பில் துளசிராமனும் மற்றும் உள்ளாட்சித் தலைவர்கள், அரசு அலுவலர்களும் கலந்து கொண்டு பேசினர்.

## நிகழ்ச்சி நிரல்

| | | |
|---|---|---|
| நாள் | : | 7.12.99 செவ்வாய்க்கிழமை முற்பகல் 10.30 மணி |
| இடம் | : | க.சி.பா. (கே.சி.பி) திருமண மண்டபம் |
| வரவேற்புரை | : | முனைவர் ம. இராசேந்திரன், தமிழ் வளர்ச்சி இயக்குநர் |
| முன்னிலை | : | திரு. ச.கை. பிரபாகர், இ.ஆ.ப., திருவள்ளூர் மாவட்ட ஆட்சித் தலைவர் |
| தலைமையேற்றுப் பேருரை | : | மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள் |
| கருத்தரங்கு தொடக்கவுரை | : | மாண்புமிகு பால்வளத் துறை அமைச்சர் திரு. க. சுந்தரம் அவர்கள் |
| வாழ்த்துரை | : | சட்டமன்ற உறுப்பினர்கள் |
| | | கும்மிடிப்பூண்டி திரு. கி. வேணு |
| | | திரு. சி.சு. மணி |
| | | திருமதி. நாகம்மாள் தென்னவன், மாவட்ட ஊராட்சித் தலைவர் |
| | | திரு. எஸ். சுந்தரராசு, நகராட்சித் தலைவர் |
| | | திருமதி. மல்லிகா சந்திரன், திருவள்ளூர் ஒன்றியக் குழுத் தலைவர் |

கருத்துரை : திரு. கோ. சம்பந்தம், மாவட்ட வருவாய் அலுவலர்

திரு. ஜான் லீனாசு, மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலர்

திரு. சு. செல்லமுத்து, செய்தி மக்கள் தொடர்பு அலுவலர்

திரு. கு. சம்பந்தம், தமிழாசிரியர்

பேராசிரியர் செ. உலகநாதன்

திரு. ட்டி. ஆர். துளசிராமன், தலைவர், அனைத்து வியாபாரிகள் முன்னேற்ற நலச் சங்கம், திருவள்ளூர்

நன்றியுரை : திருமதி. சு.பெ. இராணி

21.12.99 அன்று பெரம்பலூர் மாவட்ட ஆட்சி மொழிக் கருத்தரங்கம். நாடாளுமன்ற உறுப்பினர் ஆ. இராசா, முன்னாள் ச.ம.உ. இராசு ஆகியோர் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

21.6.2000 அன்று மதுரை மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கம் நடைபெற்றது. சட்டப் பேரவைத் தலைவர் பி.டி.ஆர். பழனிவேல்ராசன், மாவட்ட ஆட்சியர் வீ. தங்கவேலு, நா.ம. உறுப்பினர் அக்கினிராசு, ச.ம.உறுப்பினர்கள் வேலுச்சாமி, தெய்வநாயகம், மேயர் பெ. குழந்தைவேலு, தமிழன்பர்கள் இராசேந்திரன், கருணைதாசன், வணிகர் சங்கத் தலைவர் இரத்தினவேலு ஆகியோர் கலந்து கொண்டனர்.

நிகழ்ச்சி நிரல்

21.6.2000 புதன்கிழமை காலை 10.30 மணி

வரவேற்புரை : முனைவர் ம. இராசேந்திரன், தமிழ் வளர்ச்சி இயக்குநர்

முன்னிலையுரை : திரு. வீ. தங்கவேலு, இ.ஆ.ப., மாவட்ட ஆட்சித் தலைவர், மதுரை

மதுரை மாநகரத் தந்தை திரு. பெ. குழந்தைவேலு

தொடக்கவுரை : மாண்புமிகு தமிழ்நாடு சட்டப் பேரவைத் தலைவர் திரு. பி.டி.ஆர். பழனிவேல்ராசன்

சிறப்புரை : மாண்புமிகு ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் நலத்துறை அமைச்சர் திரு. சமயநல்லூர் செல்வராசு

தலைமையேற்றுப் பேருரை : மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன்

வாழ்த்துரை : நாடாளுமன்ற உறுப்பினர்கள்

திரு. ச. அக்கினிராசு
திரு. பி. மோகன்
சட்டமன்ற உறுப்பினர்கள்
திரு. வீ.வேலுச்சாமி
திரு. ஏ. தெய்வநாயகம்
திரு. செ. இராமச்சந்திரன்
திரு. கோ. தளபதி
திரு. ம. முத்துராமலிங்கம்
திரு. இல. சந்தானம்
திரு. பெ.ந. வல்லரசு
திரு. கே.வி.வீ. இராமாணிக்கம்

திரு. மு. பாண்டியன், துணைமேயர், மதுரை மாநகராட்சி

திரு. இரா. சுந்தரராசன் சேர்வை, மாவட்ட ஊராட்சித் தலைவர்

கருத்துரை திரு. எசு. இரத்தினவேலு
தலைவர், தமிழ்நாடு தொழில் மற்றும் வர்த்தக சங்கம்

மருத்துவர் இரா. விசயலக்குமி
முதல்வர், அரசு இராசாசி மருத்துவமனை

திரு. பழ. கருப்பையா, துணை ஆணையர் (வணிகவரி - செயலாக்கம்)

திரு. சோ. கனகவேல் மனோகரன், உதவி ஆணையர், வணிகவரி

திரு. கீ.பூ. நல்லதம்பி, செய்தி-மக்கள் தொடர்பு அலுவலர்

முனைவர் சக்திபெருமாள், மதுரை மாநகராட்சி மன்ற உறுப்பினர்

முனைவர் இரா. மோகன், இணைப் பேராசிரியர்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

முனைவர் இ.கி. இராமசாமி, தமிழ்த்துறைத் தலைவர், யாதவர் கல்லூரி

முனைவர் மாணிக்கம், தமிழ்த்துறைத் தலைவர், தியாகராசர் கல்லூரி

முனைவர் முத்தையா, தமிழ்த்துறைத் தலைவர்
அரசு கலைக்கல்லூரி, மேலூர்

நன்றியுரை : முனைவர் பெ. சந்திரா

இதில் இரத்தினவேலு வரம்பு மீறி, சில தவறான கருத்துகளைத் தெரிவித்தார்.

ஏற்கெனவே வழக்கில் உள்ள எளிமையான தமிழ்ச் சொற்களையே தங்கள் விளம்பரப் பலகைகளில் பயன்படுத்த முன் வாராத இவர்கள், 'வணிகச் சொற்பட்டியலில் உள்ள சில சொற்களைத் திறனாய்வு செய்ய முற்பட்டது வியப்பாக இருந்தது. என் நிறைவுரையில் கடுமையாகச் சாடவேண்டி வந்துவிட்டது. தாங்கள் தங்கள் பணியைச் செய்யாமல் பிறர்க்கு அறிவுரை சொல்ல முற்படுவர்களை எனக்கு அறவே பிடிக்காது.

14.7.2000 அன்று தஞ்சை மாவட்டக் கருத்தரங்கம் நடைபெற்றது. மாவட்ட ஆட்சித் தலைவர் மூ. இராசாராம் மிகுந்த ஆர்வம் உடையவர். உப்பிலியம்மன் கோவில் திருமண மண்டபத் திறப்பு விழாவில் 'தினமணி'யில் நான் எழுதிய கட்டுரையைக்கையில் வைத்துக் கொண்டு மேற்கோள் காட்டிப் பேசியவர் : இங்கு சிறப்பான ஏற்பாடுகளைச் செய்தவர்.

அமைச்சர் கோ.சி. மணி அவர்களைப் பயணர் விடுதியில் சந்தித்தேன். அவர் பல நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள வேண்டியிருந்ததால் வர இயலவில்லை என்றார். அவர் வராத காரணத்தால் நாடாளுமன்ற, சட்டமன்ற, உள்ளாட்சி மன்றத் த்லைவர் எவரும் வரவில்லை. தமிழ்ப்பற்றுடைய உபயதுல்லா கூட வரவில்லை. த.ப.க. துணைவேந்தர் கதிர் மகாதேவன், பேரா. திராவிடராணி, பேரா. இறையரசன், வணிகர் சங்கச் சார்பில் த.வெள்ளைச்சாமி ஆகியோர் கலந்து கொண்டு உரையாற்றினர்.

## நிகழ்ச்சி நிரல்

| | | |
|---|---|---|
| நாள் | : | 14.7.2000 பிற்பகல் 3.00 மணி |
| இடம் | : | மாவட்ட ஆட்சியர் அலுவலகக் கூட்ட அறை (பனகல் கட்டடம்) தஞ்சாவூர் |
| வரவேற்புரை | : | முனைவர் ம. இராசேந்திரன் அவர்கள்<br>தமிழ் வளர்ச்சி இயக்குநர் |
| முன்னிலையுரை | : | தஞ்சாவூர் மாவட்ட ஆட்சியர்<br>முனைவர் மூ. இராசாராம், இ.ஆ.ப. அவர்கள் |
| கருத்துரை | : | முனைவர் கதிர். மகாதேவன்<br>துணைவேந்தர், தமிழ்ப் பல்கலைக்கழகம் |
| | | திரு. இரெ. மகாலிங்கம், செய்தி மக்கள் தொடர்பு அலுவலர் |
| | | செல்வி இரா. திராவிடராணி, தமிழ்த்துறை விரிவுரையாளர்<br>குந்தவ்வை நாச்சியார் அரசு மகளிர் கலைக் கல்லூரி, தஞ்சாவூர் |

முனைவர் பா. இறையரசன், துணைத் தலைவர்,
சவகர் சிறுவரில்லம், தஞ்சாவூர்

திரு. த. வெள்ளைச்சாமி, பொதுச் செயலர்
தமிழ்நாடு வணிகர் சங்கம், தஞ்சாவூர்

தலைமையுரை : மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி அமைச்சர்
முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள்

நன்றியுரை : திரு. க. கபிலர்

அரசியல்வாதிகளும் அக்கறை காட்டாமல், அதிகாரிகளும் அலட்சிய மனப்பாங்குடன் நடந்து கொண்டால் தமிழ் எப்படி முழுமையான ஆட்சிமொழி ஆகும்? என்பதுதான் இப்போது நாம் சிந்திக்கவேண்டியது.

கோவை மாவட்டக் கருத்தரங்கம் இரண்டாவது முறையாக 17.8.2000அன்று நடைபெற்றது. மாவட்ட ஆட்சித் தலைவர் கோ. சந்தானம் ஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்திருந்தார்.

சட்டமன்ற உறுப்பினர் சி.டி. தண்டபாணி, மேயர் கோபால கிருட்டிணன் ஆகியோர் முன்னிலை ஏற்றுப் பேசினர். வ.கு. இலட்சுமணன், ஆ. நடராசன், சி.இரா. இராமச்சந்திரன், ம. சண்முகம் முதலான சட்டமன்ற உறுப்பினர்களும் வாழ்த்திப் பேசினர்.

புலவர் மருதவாணனும், வணிகர் சார்பில் சு. விசுவநாதனும் மற்றும் பல அலுவலர்களும் கலந்து கொண்டனர். அமைச்சர் பொங்கலூர் பழனிச்சாமி வரவில்லை.

நிகழ்ச்சி மிகவும் விறுவிறுப்பாக நடைபெற்றது.

நிகழ்ச்சி நிரல்

வரவேற்புரை : முனைவர் ம. இராசேந்திரன்
தமிழ் வளர்ச்சி இயக்குநர்

முன்னிலையுரை : திரு. சி.டி.தண்டபாணி, தலைவர்
தமிழ்நாடு மாநிலத் தலைமைக் கூட்டுறவு வங்கி

மாநகரத் தந்தை திரு. வே. கோபாலகிருட்டிணன்

சட்டமன்ற உறுப்பினர்கள் :

திரு. வ.கு. இலட்சுமணன்
திரு. ஆ. நடராசன்

திரு. பா. அருண்குமார்

திரு. சி.இரா. இராச்சந்திரன்

திரு. ம. சண்முகம்

கருத்துரை : டாக்டர் க. மணிவாசகன், இ.ஆ.ப.,
கூடுதல் ஆட்சியர் (வளர்ச்சி), கோவை

திரு. இராசேந்திரகுமார், இ.ஆ.ப.
மாநகராட்சி ஆணையர், கோவை

திரு. த. ஆபிரகாம், மாவட்ட வருவாய் அலுவலர், கோவை

திரு. இரா. சுப்பையன், மாவட்ட ஊராட்சித் தலைவர், கோவை

புலவர் ச. மருதவாணன்

திரு. சு. விசுவநாதன், தலைவர்,
தமிழக வியாபாரிகள் சம்மேளனம், கோவை

தலைமையேற்றுப் பேருரை : மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி அமைச்சர்
முனைவர் மு. தமிழ்க்குடிமகன்

பேசிய பேச்சின் ஒரு பகுதி 18.8.2000 தினமணி இதழில் உள்ளது.

மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க்குடிமகன் பேசுகின்றார்.

தமிழர்களின் தாழ்வு மனப்பான்மை!

தமிழ் வளர்ச்சித் துறையின் சார்பில் கோவையில் நடந்த 'மாவட்ட ஆட்சி மொழிக் கருத்தரங்கில் பேசியது :

"ஆங்கிலம் படித்தால் மேன்மையும், தமிழால் தாழ்வும் வந்து விடும் என்ற தவறான மனப்பான்மை மக்களிடம் மேலோங்கி உள்ளது. இயன்றவரை தமிழில் எழுதுங்கள் பேசுங்கள் என்று தான் கூறுகின்றோம். 'தமிழர்கள், தங்கள் தாய்மொழியைப் பற்றி வெட்கமான கருத்துக் கொண்டிருக்கின்றனர்' என டாக்டர் ஜி.யூ.போப் கூறியது இன்றளவும் உண்மையாக இருந்து வருகிறது. கடந்த நான்கைந்து ஆண்டுகளாகத் தமிழர்களுக்குப் பல்லாயிரக்கணக்கான நூல்கள் வரவாக இருப்பினும், அதைப் படிப்பதற்குக் கூட்டம் இல்லை என்பதுதான் வெட்கக் கேடு! தமிழை இழிவாகக் கருதும் நிலையை விட்டொழித்தால் தானாகத் தமிழ் வளரும்! அரசுத் துறைகளில் முழுமையாகத் தமிழைப் பயன்படுத்த அரசாணைகள் வெளியிடப்பட்டுள்ளன. எனினும் இன்னும் பெரும்பாலான அரசு ஊழியர்கள் தமிழில் கையெழுத்திடத் தயங்குகின்றனர். இவர்கள் எப்போது

வேண்டுமானாலும் தண்டிக்கப்படலாம்! அரசாணைகள், கடிதப் போக்குவரத்து, தகவல் பரிமாற்றங்கள் தமிழிலேயே நடைபெற வேண்டும் என்று தொடர்ந்து வலியுறுத்துகிறோம். நீதி மன்றத்தில் ஏழை எளியோருக்குப் புரியும் வகையில் தாய்மொழியில் வழக்குகளை நடத்துங்கள் என்று வழக்கறிஞர்களைக் கேட்டுக் கொள்கிறோம். மருத்துவமனையில் தரப்படும் மாத்திரைகளின் பெயர்கள் தமிழிலும் அச்சடிக்கப்பட்டுள்ளது. எனவே மருத்துவர்கள் மருந்துச்சீட்டைத் தமிழில் எழுதித் தரலாம். வணிக நிறுவனப் பெயர்ப் பலகைகளைத் தமிழில் எழுதாவிட்டால், தொழிலாளர் நலத்துறை நடவடிக்கை எடுத்து ரூ.1000/- தண்டம் விதிக்கும். பள்ளிகளில் 1 முதல் 5 ஆம் வகுப்பு வரை தமிழைப் பயிற்றுமொழி ஆக்குவதில் ஏராளமான தடைகள் உள்ளன. மொழிவாரி மாநிலம் எனப் பிரிந்த பிறகு, மொழிக் கொள்கை தொடர்பாக ஒரு முடிவை எடுக்க மாநில அரசுக்கு உரிமை கிடையாதா?

கர்நாடகத்தில் பயிற்றுமொழி தொடர்பாக, அரசுக்குச் சாதகமாக அந்த மாநில உயர்நீதி மன்றம் தீர்ப்புக் கூறியது. இதைச் சுட்டிக் காட்டி தமிழ்நாடு அரசின் சார்பில், உச்சநீதி மன்றத்தில் மேல்முறையீடு செய்யப்பட்டுள்ளது. விரைவில் இதில் நல்ல முடிவு கிடைக்கும்!"

25.4.2000 அன்று திருவண்ணாமலையில் இரண்டாவது முறையாகக் கருத்தரங்கம் நடைபெற்றது. நானும் அமைச்சர் பிச்சாண்டியும் கலந்து கொண்டோம். மாவட்ட ஆட்சித்தலைவர் தங்க. கலியபெருமாள் ஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்திருந்தார். புதிதாகக் கட்டப்பட்ட ஆட்சியர் அலுவலக வளாகத்தின் கருத்தரங்குக் கூட்டம் சிறப்பாக அமைந்திருந்தது. உதவி இயக்குநர் கா.மு. சேகர் நிகழ்ச்சியைத் தடபுடலாக ஏற்பாடு செய்திருந்தார்.

வழக்கம்போலச் சட்டமன்ற உறுப்பினர்கள் திருவேங்கடம், அ. இராசேந்திரன் ஆகிய இருவரும் கலந்து கொண்டனர். சில அலுவலர்கள் நிலைமையை உணர்ந்து பேசினர். தமிழ் அறிஞர்கள் ப. கண்ணன், அ. பாண்டுரங்கன் ஆகியோர் சிறப்பாகப் பேசினர். முழு நிறைவோடு நிகழ்ச்சி அமைந்தது.

நிகழ்ச்சி நிரல்

| | | |
|---|---|---|
| வரவேற்புரை | : | முனைவர் ம. இராசேந்திரன்<br>தமிழ் வளர்ச்சி இயக்குநர் |
| முன்னிலையுரை | : | திரு. தங்க.கலியபெருமாள், இ.ஆ.ப.<br>திருவண்ணாமலை மாவட்ட ஆட்சியர் |
| தலைமையேற்றுப் பேருரை | : | மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி அமைச்சர்<br>முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள் |
| சிறப்புரை | : | மாண்புமிகு நடுவண் அரசின் துணி நூல் துறை இணை அமைச்சர்<br>திரு. செஞ்சி ந. இராமச்சந்திரன் அவர்கள் |

மாண்புமிகு வீட்டுவசதித் துறை அமைச்சர்
திரு. கு. பிச்சாண்டி அவர்கள்

வாழ்த்துரை : நாடாளுமன்ற உறுப்பினர்கள்

திரு. மு. துரை
திரு. த. வேணுகோபால்
சட்டமன்ற உறுப்பினர்கள்
திரு. பெ.சு. திருவேங்கடம்
திரு. அ. இராசேந்திரன்
திரு. இரா. சிவானந்தம்
திரு. வ. அன்பழகன்
திரு. ந. பாண்டுரங்கன்
திரு. நா. பால. ஆனந்தன்
திரு. கொ.வி. நன்னன்
திரு. க. மணிவர்மா

திரு. க. நடராசன், மாவட்ட ஊராட்சித் தலைவர்

கருத்துரை : திரு. சோ. நாகராசன், மாவட்ட வருவாய் அலுவலர்

திரு. இரா. சேதுராமன், வேளாண்மை இணை இயக்குநர்

திரு. நோ. முத்துக்கிருட்டிணன், முதன்மைக் கல்வி அலுவலர்

திருமதி. ந. சாவித்திரி
மாவட்ட ஆதி திராவிட மற்றும் பழங்குடியினர் நல அலுவலர்

திரு. ப.சு. சௌந்தரராசன், நகராட்சி ஆணையாளர்

இலக்கியத் தென்றல் திரு. ப. கண்ணன்

வித்துவான் திரு. அ. பாண்டுரங்கனார்

நன்றியுரை : முனைவர் கா.மு. சேகர்

31.10.2000 அன்று காஞ்சிபுரத்தில் இரண்டாவது முறையாகக் கருத்தரங்கு நடைபெற்றது. மாவட்ட ஆட்சியர் அ. சுகுமாறன் ஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்திருந்தார். கடந்த முறையை விட இம்முறை கூட்டம் அதிகம். சட்டமன்ற உறுப்பினர் பொ. முருகேசனுடன் பிற அலுவலர்கள் பேசினர். தமிழ் அன்பர்கள் சார்பில் முனைவர் அ. சக்கரவர்த்தி, புலவர் கணேசன், செ. சந்திரமோகன், நாத்திகம் நாகராசன் ஆகியோர் பேசினர்.

மிகவும் விறுவிறுப்பாக நடந்த கருத்தரங்கம் இது. உதவி இயக்குநர் விசயராகவன் பல பணிகளைச் செய்து கூடுதல் ஆர்வத்தை ஏற்படுத்தி இருந்தார்.

## நிகழ்ச்சி நிரல்

| | | |
|---|---|---|
| வரவேற்புரை | : | முனைவர் ம. இராசேந்திரன்<br>தமிழ் வளர்ச்சி இயக்குநர் |
| முன்னிலையுரை | : | திரு. அ. சுகுமாரன், இ.ஆ.ப., மாவட்ட ஆட்சியர் |
| தலைமையேற்றுப் பேருரை | : | மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி அமைச்சர்<br>முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள் |
| சிறப்புரை | : | மாண்புமிகு நடுவணரசின் வனம் மற்றும்<br>சுற்றுப்புறச் சூழல் துறை அமைச்சர்<br>திரு. டி.ஆர். பாலு அவர்கள் |
| வாழ்த்துரை | : | நாடளுமன்ற உறுப்பினர்கள்<br>திரு. ஏ.கே. மூர்த்தி<br>திரு. அ. கிருட்டிணசாமி<br>சட்டமன்ற உறுப்பினர்கள்<br>திரு. பொ. முருகேசன்<br>திரு. சி. சண்முகம்<br>திரு. மீ.அ. வைத்தியலிங்கம்<br>திரு. வீ. தமிழ்மணி<br>திரு. ச.க.வெங்கடேசன்<br>திரு. செ. மதிவாணன்<br>திரு. க. சுந்தர்<br>திரு. ஏ. கோதண்டம்<br>திரு. கெ. பழனிச்சாமி, மாவட்ட ஊராட்சித் தலைவர்<br>திரு. ச.சு. திருநாவுக்கரசு, காஞ்சிபுரம் நகரமன்றத் தலைவர்<br>திருமதி. இராணி முருகேசன்<br>காஞ்சிபுரம் ஊராட்சி ஒன்றியக் குழுத் தலைவர் |
| கருத்துரை | : | முனைவர் அ. சக்கரவர்த்தி<br>விரிவுரையாளர், பச்சையப்பன் ஆடவர் கல்லூரி, காஞ்சிபுரம் |

புலவர் வே. கணேசன், எம்.ஏ., பி.எட்.,

செ. சந்திரமோகன், எம்.ஏ., பி.எட்.,
காஞ்சிபுரம் மாவட்டத் தமிழாசிரியர் கழகம்

நாத்திகம் நாகராசன், அமைப்பாளர், அறிவு வளர்ச்சி மன்றம், காஞ்சி

நன்றியுரை : முனைவர் கோ. விசயராகவன்

ஆட்சிமொழிக் கருத்தரங்கின் வாயிலாகப் பல அமைச்சர்கள், இ.ஆ.ப. அலுவலர்கள் பல நாடாளுமன்ற, சட்டமன்ற உறுப்பினர்கள், உள்ளாட்சிப் பொறுப்பில் உள்ள பலர், அரசு அலுவலர்கள், தொடர்புடைய தமிழறிஞர்கள், வணிகர்கள், பொதுமக்கள், ஆர்வமுள்ள பிற தோழர்கள் ஆகிய அனைவரையும் ஒருங்கிணைக்க முடிந்தது. ஆட்சிமொழித் திட்ட வரலாற்றைச் சொல்லி, அரசாணைகளை வெளியிட்டு, பல எச்சரிக்கைகளை விட்டு இவற்றை நடத்தும்போது பெரும் பயன் விளையத்தான் செய்கிறது. ஒவ்வொரு மாவட்டத்திலும் இந்த நிகழ்ச்சிகள் நடக்கும்போது ஒரு விறுவிறுப்பு ஏற்படுவதைப் பல முறை கண்டிருக்கிறேன்.

எனவே, எங்கள் செய்திகளை எடுத்துச் சொல்லிவிட்டோம்.

*கொடுக்கின்ற நல்லுழைப்பும் தமிழை நோக்கிக்*
*கொள்கின்ற நல்லுணர்வும் சேரும்போது*
*தடுக்கின்ற பகை யாவும் தூளாய்ப் போகும்*
*தமிழுக்கு வாழ்வளிக்க இதுதான் நேரம்.*

- முனைவர் மு. தமிழ்க்குடிமகன்

---

அவ்வளவு உத்தரவும் இனி தமிழில் தான்

# அரசு அதிகாரிகளுக்கு 6 மாத 'கெடு!'

சட்டசபையில் தமிழ்க்குடிமகன் அதிரடி அறிவிப்பு

இயல - இருபத்து ஒன்று

## மாவட்ட ஆட்சியர் அலுவலக ஆய்வுகள்

ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் நடைபெறும் மாவட்டத்தில் கருத்தரங்குக்கு முன்னதாகப் 10க்கு மேற்பட்ட த.வ.உ. இயக்குநர்கள் கூடி ஆய்வு செய்வதுண்டு. மாதந்தோறும் த.வ.உ. இயக்குநர் ஒருவர் 30க்கு மேற்பட்ட அலுவலகங்களில் ஆய்வு மேற்கொள்வதும் உண்டு.

அமைச்சரே ஆய்வு செய்ய வருகிறார் என்று அறிவித்துவிட்டு அனைத்து அலுவலர்களையும் வைத்துக் கொண்டு ஆய்வு செய்ததும் உண்டு.

19.6.1996 இல் அமைச்சரே மதுரை மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தை ஆய்வு செய்தார்.

சனவரி, பிப்ரவரி, மார்ச்சு, ஏப்ரல் 96 ஆகிய நான்கு மாதங்களில் தமிழ் பயன்படுத்தப்பட்ட அளவு ஏறத்தாழ 90% ஆகும். நமது நெருக்குதல், கண்காணிப்பு ஆகியவற்றைப் பொறுத்துத் தமிழை முழுமையாகப் பயன்படுத்துவோம் என்று அனைவரும் உறுதிமொழி அளித்தனர்.

அந்த வகையில், மதுரை மாவட்ட ஆய்வு நிறைவு தருவதாகவே இருந்தது.

மதுரை மாவட்ட ஆட்சித்தலைவர் அலுவலகத்தில் சனவரி 1996 மாதத்தில் தமிழ் பயன்படுத்தப்பட்ட அளவைக் காட்டும் பட்டியல்

| பிரிவு | எண்ணிக்கை ஆங்கிலமும் தமிழும் | எண்ணிக்கை தமிழ் மட்டும் | தமிழில் விழுக்காடு | மாவட்ட ஆட்சியரின் கூடுதல் பதிவு பெற்ற அலுவலர்கள் |
|---|---|---|---|---|
| ஏ. | 502 | 453 | 90 | |
| சி. | 438 | 345 | 78 | |
| இ. | 408 | 340 | 83 | மாவட்ட ஆட்சித்தலைவரின் |
| எப். | 416 | 302 | 72 | நேர்முக உதவியாளர் (பொது) |
| ஜி. | 285 | 260 | 91 | |
| பதி. | 140 | 128 | 91 | |
| டி. | 252 | 235 | 93 | மாவட்ட ஆட்சித்தலைவரின் கூடுதல் |
| பி. | 285 | 228 | 80 | தனி உதவியாளர் |
| ஓய். | 355 | 304 | 85 | |

| | | | | |
|---|---|---|---|---|
| பி.ந. | 350 | 325 | 92 | மாவட்ட பிற்பட்டோர் மற்றும் சிறுபான்மையினர் நல அலுவலர். |
| மது. | 289 | 255 | 88 | உதவி ஆணையர் (கலால்) மதுரை |
| உ.உ.க. | 340 | 306 | 90 | மாவட்ட விநியோக அலுவலர் |
| ஜே. | 354 | 318 | 89 | தனித்துணை ஆட்சியர் |
| எம். | 130 | 118 | 90 | (ம.கு.தீ.பி.) |
| வி. | 304 | 245 | 80 | மாவட்ட ஆட்சித்தலைவரின் நேர்முக உதவியாளர் (கணக்கு) |
| ஆதி. | 270 | 225 | 83 | மாவட்ட ஆதிதிராவிட மற்றும் பழங்குடியினர் நல அலுவலர் |
| என். | 175 | 146 | 83 | மாவட்ட ஆட்சித்தலைவரின் நேர்முக உதவியாளர் (விவசாயம்) |

பிப்ரவரி 96 - நிலைமை

| | | | | |
|---|---|---|---|---|
| ஏ. | 508 | 412 | 81 | |
| சி. | 450 | 385 | 85 | |
| இ. | 428 | 330 | 77 | |
| எப். | 409 | 282 | 69 | மாவட்ட ஆட்சியரின் கூடுதல் தனி உதவியாளர் |
| ஜி. | 318 | 279 | 87 | |
| பதி. | 140 | 130 | 93 | |
| டி. | 292 | 245 | 83 | |
| பி. | 348 | 262 | 75 | |
| ஒய். | 392 | 360 | 92 | |
| ஜே. | 355 | 319 | 90 | |
| பி.ந. | 356 | 320 | 89 | மாவட்ட பிற்படுத்தப்பட்டோர் மற்றும் சிறு பான்மையினர் நல அலுவலர் |
| மது. | 308 | 270 | 87 | உதவி ஆணையர் (கலால்) |
| உ.உ.க. | 365 | 322 | 88 | மாவட்ட விநியோக அலுவலர் |

| | | | | |
|---|---|---|---|---|
| எம். | 129 | 118 | 92 | தனித்துணை ஆட்சியர் (மக்கள் குறைதீர்க்கும் பிரிவு) |
| வி. | 330 | 258 | 72 | நேர்முக உதவியாளர் (கணக்கு) |
| ஆதி. | 298 | 265 | 89 | மாவட்ட ஆதி திராவிடர் மற்றும் பழங்குடியினர் நல அலுவலர் |
| என். | 198 | 176 | 88 | நேர்முக உதவியாளர் (விவசாயம்) |

மார்ச்சு 96 - நிலைமை

| | | | | |
|---|---|---|---|---|
| ஏ. | 565 | 500 | 88 | |
| சி. | 455 | 380 | 83 | |
| இ. | 420 | 339 | 80 | |
| எப். | 412 | 310 | 75 | நேர்முக உதவியாளர் (பொது) |
| ஜி. | 325 | 282 | 86 | |
| பதி. | 155 | 138 | 89 | |
| டி. | 290 | 248 | 85 | |
| பி. | 345 | 275 | 78 | |
| ஒய். | 385 | 362 | 94 | கூடுதல் தனி உதவியாளர் |
| ஜே. | 350 | 315 | 90 | |
| பி.ந. | 365 | 340 | 93 | மாவட்ட பிற்படுத்தப்பட்டோர் நல அலுவலர் |
| மது. | 312 | 285 | 92 | உதவி ஆணையர் (கலால்) |
| உ.உ.க. | 360 | 329 | 91 | மாவட்ட விநியோக அலுவலர் |
| எம். | 125 | 115 | 92 | தனித்துணை ஆட்சியர் (மக்கள் குறைதீர்க்கும் பிரிவு) |
| வி. | 325 | 248 | 76 | நேர்முக உதவியாளர் (கணக்கு) |
| ஆதி. | 295 | 260 | 88 | மாவட்ட ஆதி திராவிட நல அலுவலர் |
| என். | 195 | 180 | 92 | நேர்முக உதவியாளர் (விவசாயம்) |

ஏப்ரல் 96 - நிலைமை

| | | | | |
|---|---|---|---|---|
| ஏ. | 580 | 515 | 88 | |
| சி. | 468 | 384 | 82 | |
| இ. | 434 | 348 | 80 | நேர்முக உதவியாளர் (பொது) |
| எப். | 429 | 318 | 74 | |
| ஜி. | 340 | 290 | 85 | |
| பதி. | 168 | 150 | 89 | |
| டி. | 304 | 255 | 84 | |
| பி. | 340 | 275 | 81 | |
| ஒய். | 398 | 365 | 91 | கூடுதல் தனி உதவியாளர் |
| ஜே. | 370 | 315 | 85 | |
| பி.ந. | 380 | 346 | 91 | மாவட்ட பிற்பட்டோர் நல அலுவலர் |
| மது. | 334 | 290 | 87 | உதவி ஆணையர் (கலால்) |
| உ.உ.க. | 386 | 342 | 88 | மாவட்ட வருவாய் அலுவலர் |
| எம். | 129 | 115 | 89 | தனித்துணை ஆட்சியர் (ம.கு.த.) |
| வி. | 342 | 252 | 75 | நேர்முக உதவியாளர் (க), மதுரை |
| ஆதி. | 298 | 270 | 90 | மாவட்ட ஆதிதிராவிடர் நல அலுவலர் |
| என். | 178 | 152 | 85 | நேர்முக உதவியாளர் (விவசாயம்) |

## தமிழ் வளர்ச்சித் துறை, தஞ்சாவூர் மாவட்டம்

| | | |
|---|---|---|
| 1. | மொத்த அலுவலகங்கள் | 598 |
| 2. | மாவட்ட நிலை அலுவலகங்கள் | 38 |
| 3. | சார்நிலை அலுவலகங்கள் | 510 |
| 4. | உள்ளாட்சி அலுவலகங்கள் | 46 |
| 5. | தன்னாட்சி நிறுவனங்கள் | 4 |

| | ஆய்வு செய்த அலுவலகங்களின் மொத்த எண்ணிக்கை | சுமார் | நன்று | குறைவு |
|---|---|---|---|---|
| 1996 சனவரி | 4 | 4 | .. | .. |
| 1996 பிப்ரவரி | 22 | 19 | 3 | .. |
| 1996 மார்ச்சு | 1 | 1 | .. | .. |
| 1996 ஏப்ரல் | 14 | 11 | 3 | .. |
| 1996 மே | 9 | 9 | .. | .. |
| 1996 சூன் | 16 | 15 | 1 | .. |

தஞ்சாவூர் மாவட்ட அரசு அலுவலகங்களின் ஆய்வுக் குறிப்பு

| எண். | அலுவலகத்தின் பெயர் | விழுக்காடு |
|---|---|---|
| 1. | கண்காணிப்புப் பொறியாளர் (பொ.ப.து.) நிலநீர் வட்டம் | 60 |
| 2. | வட்டாரப் போக்குவரத்து அலுவலகம் | 50 |
| 3. | தமிழ்நாடு வீட்டுவசதி வாரியம் | 50 |
| 4. | உதவி இயக்குநர், கதர் கிராமத் தொழில் | 60 |
| 5. | அறிஞர் அண்ணா சர்க்கரை ஆலை, குறுங்குளம் | 50 |
| 6. | துணை ஆணையர், இந்துசமய அறநிலையத்துறை | 50 |
| 7. | குந்தவை நாச்சியார் அரசினர் மகளிர் கல்லூரி | 40 |
| 8. | மாவட்டப் பதிவாளர், தஞ்சாவூர் | 100 |
| 9. | நகராட்சிகளின் நிருவாக மண்டல இயக்குநர் | 50 |
| 10. | கோட்ட வன அலுவலகம் | 50 |
| 11. | மாவட்ட மறுவாழ்வு அலுவலகம் | 50 |
| 12. | மண்டல நன்னடத்தை அலுவலகம் | 100 |
| 13. | நிலவரித்திட்ட தலைமை அலுவலகம் | 60 |
| 14. | செய்தி மக்கள் தொடர்பு அலுவலகம் | 80 |
| 15. | மாவட்ட நூலக அலுவலகம் | 80 |
| 16. | கூட்டுறவுச் சங்கங்களின் இணைப் பதிவாளர் அலுவலகம் | 60 |
| 17. | உதவி ஆணையர் (வணிகவரி) அலுவலகம் | 75 |
| 18. | கோட்டப் பொறியாளர் (நெ.ஊ.ப.) அலுவலகம் | 60 |
| 19. | கோட்டத் தீயணைப்பு அலுவலகம் | 100 |
| 20. | உள்ளாட்சி நிதிக் கணக்குத் துறை | 80 |
| 21. | கண்காணிப்புப் பொறியாளர் (பொ.ப.து.)காவிரி வளர்ச்சிப் பணிகள் வட்டம் | 60 |

| | | |
|---|---|---|
| 22. | மாவட்டக் கல்வி அலுவலகம் | 70 |
| 23. | மாவட்ட வன அலுவலகம் | 70 |
| 24. | மாவட்ட சமூக நல அலுவலகம் | 75 |
| 25. | மீன்துறை உதவி இயக்குநர் அலுவலகம் | 70 |
| 26. | மாவட்ட நில அளவை அலுவலகம் | 90 |
| 27. | மாவட்டக் கருவூலம் | 75 |
| 28. | துணை இயக்குநர் - சுகாதாரப் பணிகள் | 70 |
| 29. | மாவட்ட குடும்ப நலம் | 80 |
| 30. | மண்டல உடற்கல்வி அலுவலகம் (மகளிர்) | 100 |
| 31. | மண்டல உடற்கல்வி அலுவலகம் (ஆடவர்) | 100 |
| 32. | செயற்பொறியாளர் அலுவலகம் (பொ.ப.து.) | 70 |
| 33. | மாவட்ட ஊட்டச்சத்து அலுவலகம் | 75 |
| 34. | மண்டல இணை இயக்குநர் (கால்நடை பராமரிப்புத்துறை) | 100 |
| 35. | மாவட்ட சுற்றுலா அலுவலகம் | 75 |
| 36. | மருத்துவக் கல்லூரி மருத்துவமனை | 50 |
| 37. | தொழிற்சாலைகள் ஆய்வாளர் அலுவலகம் | 60 |
| 38. | நகராட்சி அலுவலகம் | 60 |

விருதுநகர் மாவட்டத்தில் ஆய்வு செய்த போது கண்டறியப்பட்ட உண்மை

விருதுநகர் மாவட்டத்திலுள்ள அரசு அலுவலகங்களில் 10% அலுவலகங்களில் தமிழ் 95% பயன்படுத்தப்படுகிறது.

50% அலுவலகங்களில் தமிழ் 75% இற்கும் மேல் பயன்படுத்தப்படுகிறது.

எஞ்சிய அலுவலகங்களில் தமிழின் பயன்பாடு 50% இற்கும் குறைவாக உள்ளது.

தன் வாரியங்கள், தன்னாட்சி நிறுவனங்களில் தமிழின் பயன்பாடு 10% இற்கும் குறைவாக உள்ளது. அரசால் எடுக்கப்படும் சில புதிய நடவடிக்கைகள் மூலம் இங்கும் தமிழ்ப் பயன்பாடு அளவு இனிமேல் சிறப்பாக இருக்கும் என எதிர்நோக்கலாம்.

மாவட்ட ஆட்சியகத்தில் 65% தான் தமிழ் பயன்படுத்தப்படுகிறது. பெரிய மாவட்டமான மதுரை மாவட்ட ஆட்சியகத்தில் 90% இற்கும் மேல் தமிழ் பயன்படுத்தப்படும்பொழுது, இங்குள்ளோர் மேலும் சிறிது கூடுதல் முனைப்புடன் செயல்பட்டு 100% நிலையைப் பெறுவார்கள் என எதிர்பார்க்கலாம்.

இதுதான் ஆய்வு செய்த அலுவலர்கள் தந்த குறிப்பு.

10.6.99 மற்றும் 11.6.99 ஆகிய நாட்களில் திருவண்ணாமலையில் ஆய்வு செய்த முதன்மை ஆணையர் மற்றும் வருவாய் நிர்வாக ஆணையர் அவர்களின் பொது ஆய்வு அறிக்கையில் தமிழ் வளர்ச்சி தொடர்பான குறிப்பின் பகுதி நகல்.

திட்டம் வெற்றி பெறுவதற்கான யோசனைகள்

அலுவலர்கள் மற்றும் பணியாளர்கள் அனைவரும் தமிழிலேயே கையொப்பமிடல் வேண்டும். தமிழ்த் தட்டச்சுகளைப் பெரும்பான்மையாகப் பயன்படுத்த வேண்டும். அனைத்து அலுவலர்களும் வரைவுகளை (விதிவிலக்கு அளிக்கப்பட்டவை தவிர) தமிழிலேயே எழுதவேண்டும். பதிவேடுகள் அனைத்தும் தமிழிலேயே பேணப்படல் வேண்டும். விதிவிலக்களிக்கப்பட்ட இனங்கள் தவிர பிற அனைத்துக் கடிதப் போக்குவரத்தும் தமிழிலேயே இருத்தல் வேண்டும். ஆட்சிச் சொல் அகராதி, சிறப்புச் சொற்கள் துணையகராதி, பிழை நீக்கி எழுதும் முறை போன்ற புத்தகங்களை சென்னை - 108, குறளகம் தமிழ் வளர்ச்சி இயக்குநருடன் தொடர்பு கொண்டு பெறுவதற்கு நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும். மேற்குறிப்பிட்டுள்ளவாறு ஆட்சிமொழித் திட்டத்தை மேம்படுத்த தக்க நடவடிக்கை எடுக்குமாறு மாவட்ட ஆட்சித் தலைவருக்குத் தெரிவிக்கலாம்.

/உண்மை நகல்/

ஒவ்வொரு மாவட்ட ஆட்சியர் அலுவலகமும் தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கத்தில் கூடுதலான கவனம் செலுத்தத் தொடங்கியது. இத்தகு அறிவிப்புகள் காலம் காலமாகச் செய்யப்படும் வழக்கமான சடங்காக இல்லாமல், த.வ.துறை கடுமையாகக் கண்காணிக்கின்றது என்ற உணர்வோடு செய்யப்பட்டன என்றும் கொள்ள வேண்டும்.

14.6.99 அன்று ஈரோடு மாவட்டத்தில் வெளியிடப்பட்ட அறிக்கை தெளிவாகக் குறிப்பிடுகிறது.

"தவிர்க்க முடியாத சில இனங்களைத் தவிர அனைத்து ஆவணங்களும் தமிழிலேயே பராமரிக்கப்பட்ட வேண்டுமெனத் தெரிவிக்கப்படுகிறார்கள். வரைவுகள் அனைத்தும் தமிழிலேயே தயாரித்து ஆட்சிமொழித் திட்டத்தில் கணிசமான முன்னேற்றம் காண வேண்டுமென அனைத்துச் சார்நிலை அலுவலர்களும் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்" என்பதில் உள்ள அழுத்தத்தைக் கவனிக்கவும்.

4.7.99 அன்று ஆய்வு செய்த வகையில் கடலூர் மாவட்ட ஆட்சியர் அலுவலகம்

ஆட்சி மொழி குறித்த ஆய்வறிக்கை

1. வளர்ச்சிப் பிரிவில் 15 அலுவலர்களும் பணியாளர்களும் ஆங்கிலத்திலேயே கையொப்பமிட்டு வருகின்றனர்.

2. பணிப்பதிவேடுகள் ஆங்கிலத்தில் உள்ளன

3. கடிதப் போக்குவரத்துகள் தேவையின்றி ஆங்கிலத்தில் உள்ளன.

4. பதவிப் பெயர் முத்திரைகள், (P.A (G), D.R.O.) ஆங்கிலத்தில் உள்ளன.

5. தற்செயல் விடுப்பு விண்ணப்பங்கள் ஆங்கிலத்தில் உள்ளன.

6. மாவட்ட ஆட்சியரின் சீருந்தில் Collector என்றும் மாவட்ட வருவாய் அலுவலர் சீருந்தில் District Revenue Officer என்றும் ஆங்கிலத்திலேயே பதவிப் பெயர்கள் எழுதப்பட்டுள்ளன.

7. மாவட்ட ஆட்சியர் அலுவலக வாகனங்கள் எதிலும் தமிழில் எண்பலகை இடம் பெறவில்லை.

மாவட்ட ஆட்சியர் தமக்கு வரும் கோப்புகளில் தமிழிலேயே குறிப்புகள் எழுதி வருகிறார். தட்டச்சுப் பொறிகள் உரிய அளவில் உள்ளன. * * *

ஆய்வு செய்யப்பட்ட அலுவலகம் : மாவட்டாட்சியர் (பொதுப்பிரிவு) திருவள்ளூர்

ஆய்வு நாள் : 3.12.99 - 4.12.99

1. வருகைப் பதிவேடுகள், தொடர் குறிப்புப் பதிவேடு

பணியாளர்களின் வருகைப் பதிவேட்டில் விடுப்பு, அலுவல்பணி, அனுமதி, தகவலின்மை போன்ற குறிப்புகள் தமிழில் உள்ளன.

மொத்தப் பணியாளர்கள் 84 பேரில் 16 பேர் ஆங்கிலத்தில் ஒப்பமிட்டுள்ளனர்.

2. பதிவேடுகள் (தமிழில்)

அனைத்து இருக்கைகளின் தன் பதிவேடுகள், ஆய்வுக் குறிப்புப் பதிவேடு, நிலை முன்பணப் பதிவேடு, பணக்கணக்குப் பதிவேடு, வங்கி வரைவோலைப் பதிவேடு, தினசரி அஞ்சல்வில்லைப் பதிவேடு, தனியார் அஞ்சல் பதிவேடு, எழுதுபொருள் வழங்கும் பதிவேடு, திரையரங்கு உரிமம் புதுப்பித்தல் பதிவேடு, வீடு கட்டும் முன்பணப் பதிவேடு ஆகியவை தமிழில் உள்ளன.

ஆங்கிலத்தில் உள்ளவை

அ. சம்பளப் பட்டியல் பதிவேடு, ஆ. வழங்கப்படாச் சம்பளப் பதிவேடு, இ. காணொலிப் பேழையகப் பதிவேடு, ஈ. மிதிவண்டி முன்பணப்பதிவேடு, உ. மிதிவண்டி முன்பண விண்ணப்பங்களின் முதுநிலைப் பட்டியல் பதிவேடு, ஊ. கருவூலத்திற்குப் பட்டியல்கள் எடுத்துச் செல்லும் பதிவேடு ஆகியவை ஆங்கிலத்தில் உள்ளன.

தமிழும் ஆங்கிலமும் கலந்து பேணப்படுபவை

அ. காலமுறைப் பதிவேடுகள், ஆ. அரசு அஞ்சல் அனுப்புகைப் பதிவேடு, இ. பதிவஞ்சல் பதிவேடு, ஈ. அலுவலக ஆணைப்புத்தகம், உ. எழுது பொருள் வழங்கும் பதிவேடு, ஊ. எழுது பொருள் இருப்புப் பதிவேடு, எ. துப்பாக்கி உரிமம் வழங்கும் பதிவேடு

ஆகியவை தமிழும் ஆங்கிலமும் கலந்து எழுதப்படுகின்றன.

3. பணிப்பதிவேடுகள்

பணிப்பதிவேடுகளில் சில பதிவுகள் தமிழும் ஆங்கிலமும் கலந்து எழுதப்படுகின்றன. தேர்வுகளில் தேர்ச்சி பெற்ற விவரம், சம்பள அறுதியீடு, பணிச் சரிபார்ப்புச் சான்றிதழ் ஆகிய பதிவுகள் ஆங்கிலத்தில் உள்ளன.

4. ஆங்கிலத்தில் விண்ணப்பங்கள்

1. பொது வருங்கால வைப்பு நிதி விண்ணப்பம், 2. வீடு கட்டும் முன்பண விண்ணப்பம்

5. காலமுறை அறிக்கைகள் (ஆங்கிலம்)

1. முதலமைச்சரின் தனிப்பிரிவுக்கு அனுப்பப்படும் குறை தீர்க்கும் நாள் தொடர்பான அறிக்கை
2. அரசு சார் செயலாளருக்கு,
3. வருவாய் நிருவாக ஆணையருக்கு அனுப்பப்படும் அறிக்கைகள்.

ஒப்பளிப்பு ஆணைகள் (தமிழில்)

ஈட்டிய விடுப்பு, மருத்துவ விடுப்பு ஒப்பளிப்பு விடுப்பு, விடுப்பு ஒப்புவிப்பு, பொது வருங்கால வைப்புநிதி முன்பண ஒப்பளிப்பு, விழா முன்பணம், கதர் கைத்தறி முன்பண ஒப்பளிப்பு, திருமண முன்பணம் ஆகிய ஆணைகள் தமிழிலேயே உள்ளன.

ஒப்பளிப்பு ஆணைகள் (ஆங்கிலத்தில்)

1. வீடு கட்டும் முன்பணம், 2. தொலைபேசிக் கட்டணம், 3. மின் கட்டணம், 4. எரிபொருள் செலவினம், 5. சில்லரைச் செலவினம் ஆகிய ஒப்பளிப்பு ஆணைகள் ஆங்கிலத்தில் உள்ளன.

5. பற்றொப்பப் பதிவேட்டில் ஆங்கிலத்தில் ஒப்பம்

மொத்த பணியாளர்கள் 89 பேரில் 28 பேர் ஆங்கிலத்தில் ஒப்பமிடுகின்றனர்.

6. பயண நிரல்கள் (தமிழ்)

மாவட்டாட்சியர், மாவட்ட வருவாய் அலுவலரின் பயண நிரல்கள் தமிழிலேயே உள்ளன.

7. பெயர்ப்பலகைகள், தகவல் பலகைகள்

அனைத்தும் தமிழிலேயே உள்ளன.

8. இரப்பர் முத்திரைகள்

தமிழும் ஆங்கிலமும் கலந்து காணப்படுகின்றன. முழுமையும் தமிழில் அமைதல் வேண்டும்.

9. ஊர்திகளில் தமிழ்

ஊர்திகளில் TN - என உள்ளது. த.நா. என மாற்றி எழுதுதல் வேண்டும்.

10. கடிதப் போக்குவரத்து

பெரும்பாலும் கடிதப் போக்குவரத்துத்தமிழிலேயே உள்ளது. ஒரு சில வட்டாட்சியர்களிடமிருந்து பெறப்படும் கடிதங்கள் ஆங்கிலத்தில் உள்ளன. மாவட்ட ஆட்சியர் அலுவலகத்திலிருந்து மேலலுவலர்களுக்கு அனுப்பப்படும் சில கடிதங்கள் ஆங்கிலத்தில் உள்ளன.

கடந்த ஆறு திங்களில் அனுப்பப்பட்ட மொத்தக் கடிதங்கள் 17830

தமிழ் - 11595

ஆங்கிலம் - 6235

11. கணினி

11 கணினிகள் பயன்படுத்தப்படுகின்றன. சம்பளப்பட்டி அட்டவணைகள், ஒப்பளிப்பு ஆணைகள் ஆகியவை ஆங்கிலத்தில் உள்ளன. தமிழில் அமைதல் வேண்டும்.

பாராட்டத்தக்கவை

மாவட்ட வருவாய் நிருவாகக் கூட்டத்தின் ஆய்வுரை, மக்கள் குறை தீர்க்கும் மனுக்கள் தொடர்பான நடவடிக்கைகள் தமிழில் உள்ளன.

பணிநியமனம், மாறுதல், கருணை அடிப்படையில் பணி நியமனம், ஒழுங்கு நடவடிக்கை ஆகியவை தமிழிலேயே வெளியிடப்படுகின்றன.

ஆட்சிமொழித் திட்டத்தைச் செயற்படுத்தும் எண்ணமும் ஆர்வமும் பணியாளர்களிடையே மேலோங்கியுள்ளன.

(வளர்ச்சிப் பிரிவு)

1. வருகைப் பதிவேடுகள், தொடர் குறிப்புப் பதிவேடுகள்

வருகைப் பதிவேடுகளில் தற்செயல் விடுப்பு, அலுவல் பணி, அனுமதி, தகவலின்மை போன்ற குறிப்புகள் தமிழில் உள்ளன.

மொத்தப் பணியாளர்கள் 33 பேரில் 3 பேர் ஆங்கிலத்தில் ஒப்பமிடுகின்றனர்.

2. பதிவேடுகள் (தமிழில்)

(அ) அனைத்து இருக்கைகளின் தன்பதிவேடுகள், பயிர்சிப் பதிவேடு, ஊதிய உயர்வு பதிவேடு, நிலுவைப் பதிவேடு, திருமண முன்பணப் பதிவேடு, பதிவஞ்சல் பதிவேடு, வெளியூர் அஞ்சல் பதிவேடு, பதிவஞ்சல் வருகைப் பதிவேடு, வரைவோலைகள் பெறும் பதிவேடு, மக்கள் குறை தீர்க்கும் மனுக்கள் பெறும் பதிவேடு, அலுவலக ஆணைப் புத்தகம், பணப் பதிவேடு, அடையாளவில்லைப் பதிவேடு, எழுதுபொருள் பதிவேடு ஆகியவை உள்ளன.

(ஆ) பதிவேடுகள் (ஆங்கிலத்தில்)

அ. சம்பளப்பட்டியல், ஆ. இணைப்புகள்

இ. கருவூலத்திற்கு பட்டியல்கள் எடுத்துச் செல்லும் பதிவேடு

ஈ. வழக்குப் பதிவேடு

உ. முன்சம்பளச் சான்றிதழ் பதிவேடு

(இ) ஆங்கிலமும் தமிழும் கலந்து எழுதப்படுபவை

அ. ஊதிய உயர்வுப் பதிவேடு, ஆ. வழங்கப்படாச் சம்பளப் பதிவேடு

இ. கருவிகள் மற்றும் தளவாடங்கள் இருப்புப் பதிவேடு

ஈ. காலமுறை அறிக்கைகள் பதிவேடு ஆகியவை

3. பணிப்பதிவேடுகள்

தமிழும் ஆங்கிலமும் கலந்து எழுதப்படுகின்றன.

பணிச்சார்புச் சான்றிதழ் ஆங்கிலத்தில் உள்ளது.

அனைத்துப் பதிவுகளும் தமிழிலேயே அமைதல் வேண்டும்.

4. ஆங்கிலத்திலுள்ள விண்ணப்பங்கள்

அ. வீடு கட்டும் முன்பண விண்ணப்பங்கள்

ஆ. மிதிவண்டி முன்பண விண்ணப்பங்கள்

5. ஒப்பளிப்பு ஆணைகள் (தமிழில்)

அ. ஈட்டிய விடுப்பு, மருத்துவ விடுப்பு, ஒப்பளிப்பு, விடுப்பு ஒப்பளிப்பு, விழா, கதர், முன்பணங்கள், திருமண முன்பண ஒப்பளிப்பு ஆகியவை தமிழில் உள்ளன.

ஆ. ஒப்பளிப்பு ஆணை (ஆங்கிலத்தில்)

1. வீடு கட்டும் முன்பண ஒப்பளிப்பு ஆணை

பற்றொப்பப் பதிவேடு (ஒப்பம் - ஆங்கிலம்)

அ. மொத்த அலுவலர் / பணியாளர்கள் : 54 பேர் ஆங்கிலத்தில் : 9 பேர்

ஆ. பெயர்ப் பலகைகள் தமிழிலேயே உள்ளன.

இ. இரப்பர் முத்திரைகள்

இரப்பர் முத்திரைகள் தமிழும் ஆங்கிலமும் கலந்து பயன்படுத்தப்படுகின்றன.

8. கடிதப் போக்குவரத்து

இவ்வலுவலகத்தில் பெரும்பான்மையான கடிதப் போக்குவரத்துகள் தமிழிலேயே உள்ளன. கடந்த ஆறு திங்களில் இவ்வலுவலகத்திலிருந்து அனுப்பப்பட்ட மொத்த கடிதங்கள் 3419

தமிழில் : 2558

ஆங்கிலம் : 861

ஊரக வளர்ச்சி இயக்குநருக்கு அனுப்பப்படும் ஒழுங்கு நடவடிக்கை தொடர்பான அறிக்கை ஆங்கிலத்தில் உள்ளது. இதனைத் தவிர்க்கலாம்.

9. பாராட்டத்தக்கவை

கடிதப் போக்குவரத்தில் பெருமளவு தமிழில் அமைந்துள்ளமை பாராட்டத்தக்கது.

* * *

16.12 / 17.12.99 ஆகிய நாட்களில் பெரம்பலூர் மாவட்டத்தில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வில் பல உண்மைகளைக் காணலாம். கணக்கிட்டுப் பார்த்தால் 40% கூடத் தமிழில் இல்லை என்றே கூறலாம்.

கடுமையான ஆய்வுக்குப் பின்னும், ஆட்சிமொழிக் கருத்தரங்குக்குப் பின்னும் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டது.

அந்த அறிக்கையை அப்படியே காண்பது நல்லது. இந்த மாவட்ட அலுவலர்கள் எந்தக் கவலையுமில்லாமல் 'சித்தன் போக்கு; சிவன் போக்கு' என்று செயல்பட்டுள்ளார்கள் என்றே கொள்ளவேண்டும்.

தமிழ் ஆட்சிமொழித் திட்ட ஆய்வு - கலந்துரையாடல் குறிப்பு

16.12.99, 17.12.99

பொதுப்பிரிவு

1. ஒப்பம் :

வருகைப் பதிவேடு : பணியாளர்கள் பெயர்களும் தலைப்பு எழுத்துக்களும் தமிழில் எழுதப்பட்டுள்ளன. 62 பணியாளர்களில் 10 பணியாளர்கள் ஆங்கிலத்தில் சுருக்கொப்பம் இடுகின்றனர்.

பற்றொப்பப் பதிவேடு :

ஊதியம் பெறும் பற்றொப்பப் பதிவேட்டில் 6 பணியாளர்கள் ஆங்கிலத்தில் ஒப்பமிடுகின்றனர். தற்செயல் விடுப்பு விண்ணப்பங்களில் 10 பணியாளர்கள் ஆங்கிலத்தில் ஒப்பமிட்டுள்ளனர்.

2. அலுவலக ஆணைகள் :

தமிழில் உள்ளன.

3. பயணநிரல்கள் :

மாவட்ட ஆட்சியர், மாவட்ட வருவாய் அலுவலர் ஆகியோரின் பயணநிரல்கள் தமிழில் உள்ளன.

4. பதிவேடுகள் :

1. தன் பதிவேடுகள், 2. பதிவஞ்சல் பதிவேடு, 3. உள்ளூர் அஞ்சல் பதிவேடு 4. வெளியூர் அஞ்சல் பதிவேடு, 5. ஊர்திப் பதிவேடு, 6. காலமுறை அறிக்கைப்பதிவேடு, 7. பணக்கணக்குப் பதிவேடு, 8. நிலை முன்பணப் பதிவேடு, ஆகியவை தமிழில் உள்ளன.

9. திருமண முன்பணப் பதிவேடு, 10. வாகன முன்பணப் பதிவேடு இரண்டும் தமிழ் ஆங்கிலம் கலந்து எழுதப்பட்டுள்ளன.

11. சேமிப்பு நிதி முன்பணப் பிடித்தப் பதிவேடு, 12. கல்வி முன்பணப் பிடித்தப் பதிவேடு, 13. வீடுகட்ட முன்பணப் பிடித்தப் பதிவேடு, 14. கைத்தறி முன்பணப் பிடித்தப் பதிவேடு, 15. அஞ்சல்

அலுவலக காப்பீட்டுத்தொகை பிடித்தப் பதிவேடு, 16. விழா முன்பணப் பிடித்தப் பதிவேடு, 17. குடும்பநலத் தொகை பிடித்தப் பதிவேடு, 18. கருவூலப் பட்டி பதிவேடு ஆகியவை ஆங்கிலத்தில் உள்ளன.

5. பணிப்பதிவேடுகள் :

பணி சரிபார்ப்புச் சான்றிதழ்கள், ஆண்டு ஊதிய உயர்வு, துறைத் தேர்வில் தேர்ச்சி பெற்ற விவரங்கள், ஈட்டிய விடுப்பு, ஒப்புவிப்பு, மழைக்கோட்டு வழங்கி விவரம் ஆகிய பதிவுகள் ஆங்கிலத்தில் உள்ளன.

6. கடிதப் போக்குவரத்து :

சேமிப்புநிதி முன்பண ஆணை, சேமிப்பு நிதி பகுதி இறுதி எடுப்பு கருவூலவிதியின்படி (பணம் வழங்கும் பதிவேட்டில்) வழங்கும் சான்று, ஊதியத்தை பிற பணியாளரிடம் வழங்குமாறு தெரிவிக்கும் கடிதங்கள் ஆங்கிலத்தில் உள்ளன.

படி அனுப்பப்படுகிறது எனும் வாலாயமான கடிதங்கள் சில ஆங்கிலத்தில் உள்ளன.

சில கோப்புகளில் குறிப்புகள் தமிழ் ஆங்கிலம் கலந்து எழுதப்பட்டுள்ளன. (திட்டப்பணிகள் தொடர்பானவை).

ஒருசில தன் பதிவேட்டின் ஆய்வுக்குறிப்பேட்டில் மேலலுவலரின் பார்க்கப்பட்டது என்ற குறிப்பு ஆங்கிலத்தில் உள்ளது.

7. காலமுறை அறிக்கைகள் :

நிலநிர்வாக ஆணையருக்கு அனுப்பப்படும் அரசு நிலங்களை குத்தகைக்கு விடுதல் தொடர்பான காலமுறை அறிக்கை மற்றும் முகப்புக் கடிதம் ஆங்கிலத்தில் உள்ளது. சில சார்நிலை அலுவலர்களிடமிருந்து பெறப்படும் வெற்றறிக்கை மற்றும் அதன் முகப்புக் கடிதங்கள் ஆங்கிலத்தில் உள்ளன.

8. இரப்பர் முத்திரைகள் :

தமிழிலும் ஆங்கிலத்திலும் உள்ளன. நாள் முத்திரையில் திங்களின் பெயர் ஆங்கிலத்தில் உள்ளது. 'அனுமதிக்கப்பட்டது' 'வழங்கப்பட்டது' முத்திரைகள் ஆங்கிலத்தில் உள்ளன. இவற்றைத் தமிழில் செய்து பயன்படுத்தவேண்டும்.

* * *

மாவட்ட ஆட்சித் தலைவர் தலைமையிலும், த.வ. இயக்குநர் தலைமையிலும் 'ஆட்சி மொழிச் செயலாக்கத்தினை விரைவுபடுத்திச் செம்மைப் படுத்திட வேண்டி' கலந்துரையாடல்

கூட்டங்களும் ஏற்பாடு செய்யப்பட்டன. 6.6.2000 அன்று காஞ்சிபுரம் மாவட்டத்தில் நடைபெற்ற கூட்டச் சுற்றறிக்கையினை இங்குக் காணலாம்.

"தமிழ்நாடு அரசு, தமிழ்வளர்ச்சித்துறை, மாநிலம் முழுமையும் 'அன்னைத் தமிழ் ஆட்சி மொழி' ஆக்கிட வேண்டி பல்வேறு முனையின் கீழ் நடவடிக்கை எடுத்து வருகிறது. அதுபோலவே காஞ்சிபுரம் மாவட்டத் தமிழ் வளர்ச்சித்துறையின் ஆட்சி மொழிச் செயலாக்கத்தினை விரைவு படுத்தி செம்மைப்படுத்திட வேண்டி, மாவட்ட ஆட்சித் தலைவர், காஞ்சிபுரம் அவர்களின் தலைமையின் கீழ் காஞ்சிபுரம் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் 6.6.2000 காலை 11.00 மணியளவில் நடக்க இருக்கும் கூட்டத்திற்கு தவறாமல் கலந்து கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன். கூட்டத்தில் தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் கலந்து கொள்கிறார்."

* * *

21.6.2000 அன்று மதுரை மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கம். அதற்கு முன்னதாகவே மதுரை மாவட்ட ஆய்வு நடத்தப்பட்டு அறிக்கையும் தரப்படுகிறது. அதன் வாயிலாகப் பல குறைபாடுகள் கண்டறியப்பட்டன. தனி அமைச்சகம் அமைத்துக் கடுமையான முயற்சிகள் மேற் கொள்ளப்பட்டபிறகும் 'சங்கத் தமிழ்' வளர்ந்த மதுரையில் பொதுவான முன்னேற்றம் இல்லை.

கி.பி. 2000த்தில் ஐந்து மாதங்களில் 3456 பக்கங்கள் தமிழில் தட்டச்சுச் செய்யப்பட்டுள்ளன என்றால் 3050 பக்கங்கள் ஆங்கிலத்தில் தட்டச்சுச் செய்யப்பட்டுள்ளன.

1996 தொடக்கத்தில் செய்யப்பட்ட மதுரை மாவட்ட ஆய்வில் 90% வரை தமிழ் ஆட்சிமொழி செயலாக்கப்பட்டதுபோல் தோன்றியது. ஆனால் 2000த்தில் பார்த்தால் 70% தேறுமா என்பது ஐயமே!

ஏன் இந்தப் பின்னடைவு? முன்னைய அறிக்கை அவர்களால் தரப்பட்டது. வசதிபோல அள்ளி விட்டிருக்கிறார்கள் புள்ளி விவரங்களை. பின்னது எங்கள் அலுவலர்களால் ஆராயப்பட்ட பின் உள்ள விவரம், ஆழ்ந்து ஆராய்ந்தால் இப்படித்தான் இருக்குமா? இவை அடுத்தநாள் ஆட்சிமொழிக் கருத்தரங்கில் சுட்டிக்காட்டப்பட்டன.

மாவட்ட ஆட்சியர் அலுவலகம், மதுரை

வளர்ச்சிப் பிரிவு

கலந்துரையாடல் குறிப்புகள்

அ. பதிவேடுகள் :

தன்பதிவேடு, முன்கொணர் தன்பதிவேடு, நினைவூட்டு நாட்குறிப்பேடு, காலமுறை அறிக்கைப் பதிவேடு, அஞ்சல் வில்லை கணக்குப்பதிவேடு, பகிர்வுப்பதிவேடு,

கொடுபடாச்சம்பளப்பதிவேடு, நிலை முன்பணிப்பதிவேடு, பணக்குறிப்பேடு, துணைப் பணக்குறிப்பேடு, பிற இனங்களுக்கான (சம்பளம் அல்லாத) பற்றொப்பப்பதிவேடு, வருமுன் காப்போம் திட்ட வைப்புப் பதிவேடு, போன்றவைகள் தமிழில் உள்ளன.

சம்பளப்பட்டி, பற்றொப்பப்பட்டியல், முக்கிய ஆவணத் தொகுப்பு அட்டவணைகள், உள்ளூர் அனுப்புகைப்பதிவேடு, நேரில் அஞ்சல்கள் வழங்கும் பதிவேடு, வெளியூர் / பதிவஞ்சல் அனுப்புகைப் பதிவேடு, பதிவஞ்சல் வருகைப்பதிவேடு, தொலை அச்சுப் பதிவேடு, சிறப்புக் கடிதங்கள் பதிவேடு, ஆங்கிலச் செவ்வைப்படிப்பதிவேடு, கருவூலப்பட்டிகள் பதிவேடு, காலமுறைப்பதிவேடு ஆகியன ஆங்கிலத்திலும், தமிழிலும் கலந்துள்ளன. முன்பண ஒப்பளிப்பு, பிடித்தம் தொடர்புடைய பதிவேடுகளில் தமிழும் ஆங்கிலமும் கலந்துள்ளன.

ஆ. ஒப்பங்கள் :

மாவட்ட ஆட்சியரின் நேர்முக உதவியாளர் (ஊரக வளர்ச்சி) அவர்களின் ஒப்பம் ஆங்காங்கே ஆங்கிலத்தில் உள்ளது.

திருவாளர்கள் - உமாமகேஸ்வரன், எ. இராசவேலு, என். பாண்டியன், ஆர். பார்த்தசாரதி, டி. வில்சன் ஜெயராமன், எம். சண்முகம், கே. காமராசன், எம்.எஸ். சங்கர், எம். முருகேசன், எஸ். சுவாமி, திருமதி. ஜி.கே. சாந்திராணி ஆகியோர் பற்றொப்பப் பதிவேட்டில் ஆங்கிலத்தில் ஒப்பம் இட்டுள்ளனர். இவர்களின் ஒப்பம் வருகைப்பதிவேட்டிலும் ஆங்கிலத்தில் உள்ளது. தமிழில் ஒப்பம் இடுகின்றவர்கள் அவர்களின் முதலெழுத்துகளை ஆங்கிலத்தில் எழுதுகின்றனர்.

இ. கடிதப் போக்குவரத்தும், கோப்புகள் பராமரிப்பும் :

பெரும்பாலும் தமிழில் அமைந்துள்ளன. ஆங்கிலத்தில் மடல்கள் வருகின்ற நேர்வுகளில் ஆங்கிலத்திலேயே மறுமொழி எழுதி அனுப்பும் நடைமுறை பெரும்பாலும் பின்பற்றப்படுகின்றது. தமிழில் அரசாணைகள் இருந்தபோதிலும் கூட அதில் எழுதப்படும் மேற்குறிப்பு வரைவுகள் ஆங்கிலத்தில் உள்ளன.

ஈ. ஆணைகள் :

பெரும்பான்மையான ஆணைகள் தமிழில் உள்ளன.

உ. இருக்கைப் பெயர்கள் :

தமிழ் எழுத்துகளில் இருக்கைப் பெயர்கள் குறிப்பிடாது கே.1 முதல் தொடங்கி கே.17 வரை இருக்கையின் பெயர்கள் உள்ளன.

ஊ. பணிப்பதிவேடுகள் :

பணிப்பதிவேடுகளில் அமைந்துள்ள பதிவுகள் ஆங்கிலத்திலும், ஆங்கிலமும் தமிழும் கலந்தும் உள்ளன. தமிழில் பதிவு செய்யப்பட்டுள்ள நிலையில் சான்றொப்பம் இடும் அலுவலரது பதவிப் பெயர் முத்திரைகள் ஆங்கிலத்தில் இடப்பட்டுள்ளன.

எ. சார்நிலை அலுவலக ஆய்வு :

உசிலம்பட்டி ஊரக வளர்ச்சி உதவி இயக்குநர் (தணிக்கை) அலுவலகம் 1999-ஆம் ஆண்டுக்கு ஆண்டாய்வு செய்யப்பட்டுள்ளது. ஆய்வறிக்கை தமிழில் உள்ளது. தமிழ் ஆட்சிமொழித் திட்டம் தொடர்பில் எத்தகைய குறிப்பும் இடம் பெறவில்லை.

ஏ. தட்டச்சுப் பணிகள் :

2000 சனவரி முதல் மே திங்கள் முடிய உள்ள 5 திங்கள்களில் 6505 பக்கங்கள் தட்டச்சு செய்யப்பட்டுள்ளன. ஆங்கிலத்தில் உள்ள பக்க எண்ணிக்கை 3050 ஆக உள்ளது. தமிழில் தட்டச்சிடப்பட்ட பக்கங்களின் எண்ணிக்கை 3455 மட்டுமே ஆகும்.

மாவட்ட ஆட்சியர் அலுவலகம், மதுரை

வருவாய்ப் பிரிவு

கலந்துரையாடல் குறிப்புகள் :

அ. பதிவேடுகள்

பிரிவுகளில் பேணப்படுகின்ற பெரும்பாலான பதிவேடுகள் தமிழில் உள்ளன.

இயக்கப் பதிவேடு, பதிவஞ்சல் அனுப்புகை, பகிர்வுப்பதிவேடு சிறப்புக் கடிதங்கள் வருகை, மறுகவனிப்புப்பதிவேடு, முக்கிய ஆணைத் தொகுப்புகள், சில இருக்கைகளில் உள்ள காலமுறைப் பதிவேடுகள், வழக்குப் பதிவேடுகள், வருவாய் வசூல் சட்டப்பதிவேடு, பிற பணிகள் பதிவேடு, நிலக்குத்தகை உரிமைச் சீராய்வுப் பதிவேடு, பணப்பதிவேடுகள், ஒத்திசைவுத் தொகுப்புப் பதிவேடு ஆகியவை ஆங்கிலத்திலும் தமிழிலும் உள்ளன.

தகுதிகாண் பருவத்தினர் பதிவேடு (பதிவுரு எழுத்தர்), முதன்மை ஆணைத் தொகுப்புகள் சில, ஆங்கில செவ்வைப்படிப்பதிவேடு தொலைபேசி செலவினப்பதிவேடு, வாகன முன்பணம், பொதுவைப்புநிதி முன்பணம், விழா முன்பண ஒப்பளிப்புப் பதிவேடுகள் நீதிப்பேராணைப் பதிவேடு, முன்பணப்பிடித்தப்பதிவேடு, கடன் ஒப்பளிப்புப் பதிவேடு, பட்டிகள் பதிவேடு ஆகியவை ஆங்கிலத்தில் பேணப்பட்டு வருகின்றன.

ஆ. ஒப்பங்கள் :

திரு. சாமுவேல் செல்வராஜ், வி.ஆர். சந்திரசேகரன், எம். முருகையன், எம். நூர்ஜஹான்பேகம், எம். கஜேந்திரன் ஆகியோர் வருகைப்பதிவேட்டில் ஆங்கிலத்தில் ஒப்பமிட்டுள்ளனர். பற்றொப்பப்பதிவேட்டில் சிலர் ஆங்கிலத்தில் ஒப்பமிட்டுள்ளனர். சிலரது பெயருக்கு முன்னர் உள்ள முதலெழுத்து ஆங்கிலத்தில் உள்ளது.

இ. கடிதப்போக்குவரத்துகள் & கோப்புகள் பராமரிப்பு :

பெரும்பாலான கடிதப் போக்குவரத்துகள் தமிழில் உள்ளன. ஒருசில இனங்களில் ஆங்கிலம் (நில ஆக்கிரமிப்பு அகற்றுதல் 20.ஆண்டு ஆக்கிரமிப்பு அறிக்கை, காலமுறை ஓய். 1/269/2000 வீடு கட்ட முன்பணம் ஒப்பளிப்பு ஆணை, மக்கள் தொகைக் கணக்கு, ப2, ப3 இருக்கையில் அமைந்துள்ள நடவடிக்கைகள்) முழுமையாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. சில இனங்கள் (நில ஆர்ஜிதம்) தமிழும் ஆங்கிலமும் கலந்துள்ளன.

ஈ. தட்டச்சுப் பணிகள் :

2000 சனவரி முதல் மே திங்கள் முடிய உள்ள 5 திங்கள்களில் 50,698 பக்கங்கள் தட்டச்சு செய்யப்பட்டுள்ளன. ஆங்கிலத்தில் உள்ள பக்க எண்ணிக்கை 10,786 ஆகும். தமிழில் தட்டச்சிடப்பட்ட பக்கங்களின் எண்ணிக்கை 39,910 ஆகும்.

உ. சென்ற ஆய்வின்போது கூறியவை களையப்படாதநிலை :

புள்ளிவிவரப்பதிவேடு பேணப்பட வேண்டுமென அறிவுறுத்தப்பட்டுள்ளது. இதுவரை நிறைவேற்றப்படவில்லை.

தஞ்சாவூரில் கருத்தரங்கு நடத்தப்படுவதற்கு முன் மாவட்ட ஆட்சியர் அலுவலகம் ஆய்வு செய்யப்பட்டது. 1.5.99 முதல் 31.10.00 முடிய உள்ள ஆறுமாதகாலம் எடுத்துக்கொள்ளப்பட்டது. கடிதப் போக்குவரத்து தமிழில் 44826 என்றால் ஆங்கிலத்தில் 9587 ஆகும். எப்படியும் 80 தான் தேறுகிறது. தட்டச்சுச் செய்யப்பட்ட பக்கங்களில் 76% அளவுதான் தமிழில் உள்ளன.

இது எவ்வளவோ சிறப்பு என்று பாராட்டலாம்.

வருவாய்ப் பிரிவு

"இரண்டாயிரத்திற்குள் எங்கும் தமிழ் எதிலும் தமிழ்"

ஆட்சி மொழித் திட்டம் செயற்பாட்டு நிலை ஆய்வறிக்கை - திருவண்ணாமலை மாவட்டம்

1. ஆய்வுக்காலம் : 1997 முதல் 2000 வரை

2. அலுவலர்கள் / பணியாளர்கள் : 6 + 83 = 89

3. தற்போதைய ஆய்வு : 21.9.2000, 22.9.2000

4. ஆய்வுக் குறிப்புகள் :

| தொடர் எண் | ஆய்வுக்குட்பட்டவை | மொத்தம் | தமிழில் | விழுக்காடு | |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | |
| 1. | ஆணைகள் | 174 | 174 | 100 | |
| 2. | கடிதப் போக்குவரத்து | 16528 | 11591 | 70 | |
| 3. | தட்டச்சுப்பொறி | 8 | 5 | 62 | |
| 4. | தட்டச்சுப்பக்கங்கள் | 66112 | 46364 | 70 | இதுவே முதல் ஆய்வு |
| 5. | சுற்றறிக்கைகள் | 65 | 65 | 100 | |
| 6. | பதிவேடுகள் | 110 | 80 | 73 | |
| 7. | காலமுறை அறிக்கை | 166 | 138 | 83 | |
| 8. | பட்டிகள் | 36 | 26 | 72 | |
| 9. | ஒப்பம் (பற்றொப்பப்பதிவேட்டில்) | 89 | 89 | 100 | |
| 10. | முத்திரைகள் | 72 | 60 | 83 | |
| 11. | பெயர்ப்பலகைகள் | 6 | 6 | 100 | |
| 12. | ஆட்சிமொழித்திட்ட நிறைவேற்ற ஒட்டுமொத்த விழுக்காடு | | | 83% | |
| 13. | மேலதிகாரியின் குறிப்புரை | | இணைக்கப்பட்டுள்ளது | | |
| 14. | பணியாளர் மற்றும் நிர்வாகச் சீர்திருத்தத் துறையின் குறிப்புரை | | - | - | |
| 15. | ஆய்வு அலுவலரின் கையொப்பம் | | | | |

உறுதி மொழி

"இன்று முதல் ஆட்சி மொழித் திட்டச் செயற்பாடு 100 விழுக்காடு தொடர்ந்திடும் என உறுதி அளிக்கிறேன்"

வளர்ச்சிப் பிரிவு

"இரண்டாயிரத்திற்குள் எங்கும் தமிழ் எதிலும் தமிழ்"

ஆட்சி மொழித் திட்டம் செயற்பாட்டு நிலை ஆய்வறிக்கை - திருவண்ணாமலை மாவட்டம்

1. ஆய்வுக்காலம் : 1997 முதல் 2000 வரை
2. அலுவலர்கள் / பணியாளர்கள் : 4 + 28
3. தற்போதைய ஆய்வு : 21.9.2000, 22.9.2000
4. ஆய்வுக் குறிப்புகள் :

| தொடர் எண் | ஆய்வுக்குட்பட்டவை | மொத்தம் | தமிழில் | விழுக்காடு |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 1. | ஆணைகள் | 8 | 8 | 100 |
| 2. | கடிதப் போக்குவரத்து | 137436 | 104984 | 76 |
| 3. | தட்டச்சுப்பொறி | 4 | 3 | 75% |
| 4. | தட்டச்சுப்பக்கங்கள் | 13991 | 8523 | 61 |
| 5. | சுற்றறிக்கைகள் | 42 | 42 | 100 |
| 6. | பதிவேடுகள் | 57 | 32 | 56 |
| 7. | காலமுறை அறிக்கை | 56 | 46 | 82 |
| 8. | பட்டிகள் | 49 | 12 | 24 |
| 9. | ஒப்பம் (பற்றொப்பப்பதிவேட்டில்) | 32 | 32 | 100 |
| 10. | முத்திரைகள் | 23 | 18 | 78 |
| 11. | பெயர்ப்பலகைகள் | 2 | 2 | 100 |
| 12. | ஆட்சிமொழித்திட்ட நிறைவேற்ற ஒட்டுமொத்த விழுக்காடு | | | 77% |
| 13. | மேலதிகாரியின் குறிப்புரை | | இணைக்கப்பட்டுள்ளது | |
| 14. | பணியாளர் மற்றும் நிர்வாகச் சீர்திருத்தத் துறையின் குறிப்புரை | | - | - |
| 15. | ஆய்வு அலுவலரின் கையொப்பம் | | | |

உறுதி மொழி

"இன்று முதல் ஆட்சி மொழித் திட்டச் செயற்பாடு 100 விழுக்காடு தொடர்ந்திடும் என உறுதி அளிக்கிறேன்"

அலுவலக நிர்வாகப் பிரிவு - திருவண்ணாமலை மாவட்டம்

"2000க்குள் எங்கும் தமிழ் - எதிலும் தமிழ்"

துறைகள் மற்றும் வாரியங்கள் மதிப்பீடு - சூலை மாத ஆய்வு

| வ.எண். | துறைகள் | விழுக்காடு |
|---|---|---|
| 1. | உணவுப் பொருள் வழங்கும் துறை | 88 |
| 2. | பிற்பட்டோர் நலத்துறை | 73 |
| 3. | தொழிலாளர் துறை | 89 |
| 4. | வனத்துறை | 88 |
| 5. | சமூகநலத்துறை | 73 |
| 6. | கல்வித்துறை | 77 |
| 7. | நில அளவைத் துறை | 84 |
| 8. | முன்னாள் படைவீரர் தொடர்புத்துறை | 78 |
| 9. | செய்தி மக்கள் தொடர்புத்துறை | 77 |
| 10. | புள்ளியியல் துறை | 86 |
| 11. | நெடுஞ்சாலை ஊரகப்பணித்துறை | 85 |
| 12. | கூட்டுறவுத் தணிக்கைத் துறை | 86 |
| 13. | கருவூலத் துறை | 59 |
| 14. | வருவாய்த் துறை | 77 |
| 15. | ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் நலத்துறை | 63 |
| 16. | வேலைவாய்ப்பு மற்றும் பயிற்சித்துறை | 87 |
| 17. | காவல் துறை | 64 |
| 18. | மருத்துவத் துறை | 65 |
| 19. | கால்நடைத்துறை | 77 |
| 20. | ஊரக வளர்ச்சி மற்றும் உள்ளாட்சித் துறை | 75 |
| 21. | போக்குவரத்துத் துறை | 70 |
| 22. | பதிவுத் துறை | 79 |

| | | | |
|---|---|---|---|
| 23. | நூலகத் துறை | 100 | |
| 24. | வணிகவரித் துறை | 74 | |
| 25. | வேளாண்மைத் துறை | 79 | |
| 26. | தீயணைப்புத்துறை | 81 | |
| 27. | பொதுப்பணித்துறை | 81 | |
| 28. | சிறைத்துறை | 81 | |
| 29. | புவியியல் மற்றும் சுரங்கத் துறை | 75 | 78% |
| | வாரியங்கள் | | |
| 30. | வீட்டு வசதி வாரியம் | 56 | |
| 31. | குடிநீர் வடிகால் வாரியம் | 54 | |
| 32. | மின் வாரியம் | 36 | 64% |

வினாப்பட்டி

1. அலுவலகத்தின் பெயர் .. மாவட்ட ஆட்சியர் அலுவலகம், தஞ்சாவூர்
2. அலுவலகத் தலைவரின் பெயர் (பதவிப் பெயருடன்) .. முனைவர் மூ. இராசாராம், இ.ஆ.ப.,
3. பணியாளர்களின் எண்ணிக்கை (அலுவலக மற்றும் களப் பணியாளர்) .. 138
4. தமிழ் பயன்படுத்தப்படுகிற அளவு வருமாறு

| காலமுறை அறிக்கைகள் உட்பட கடிதப் போக்குவரத்து (விதிவிலக்குப்பெற்ற இனங்கள் தவிர) | சென்ற ஆறு திங்களில் (1.5.99 முதல் 31.10.99 வரை) | | |
|---|---|---|---|
| | எண்ணிக்கை தமிழில் | எண்ணிக்கை ஆங்கிலத்தில் | எண்ணிக்கை மொத்தம் |
| (1) | (2) | (3) | (4) |
| அ. பொதுமக்களுக்கும் / அரசுச் சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை .. | 6831 | 430 | 7261 |
| ஆ. மேல்நிலை அலுவலர்களுக்கு .. | 11900 | 2161 | 14061 |
| இ. சார்நிலை, சமநிலை அலுவலர்களுக்கு .. | 20296 | 3618 | 23914 |
| ஈ. அரசின் மற்ற அலுவலகங்களுக்கு .. | 5799 | 1378 | 7177 |
| கூடுதல் .. | 44826 | 7587 | 52413 |

| | | | | |
|---|---|---|---|---|
| உ. அலுவலகப் பணியாளர்கள், சார்நிலை அலுவலர்கள் ஆகியோரிடமிருந்து வரப்பெற்றவை | .. | 35501 | 5177 | 40678 |

5. அலுவலகத்தில் உள்ள பதிவேடுகள் எண்ணிக்கை வருமாறு - விதிவிலக்குப் பெற்ற இனங்கள் தவிர

| | | |
|---|---|---|
| அ. முழுமையும் தமிழில் | .. | 473 |
| ஆ. தமிழும் ஆங்கிலமும் கலந்து | .. | 29 |
| இ. முழுமையும் ஆங்கிலத்தில் | .. | 19 |
| கூடுதல் | .. | 521 |

6. கீழ்க்காணும் நூல்கள் போதிய எண்ணிக்கையில் உள்ளனவா?

| | | |
|---|---|---|
| அ. ஆட்சிச் சொல்லகராதி (நான்காம் பதிப்பு) (ஒவ்வொரு எழுத்தருக்கும் ஒன்று வீதம் | .. | ஆம். உள்ளன |
| ஆ. சிறப்பு சொல் துணையகராதி (உங்கள் துறைக்குரியது) | .. | ஆம். உள்ளன |
| இ. மாவட்ட அலுவலக நடைமுறை நூல் (தமிழ்ப் பதிப்பு) | .. | இல்லை |
| ஈ. பிழை நீக்கி எழுதும் முறை | .. | இல்லை |
| உ. கழக ஆங்கிலத் தமிழ் கையகராதி | .. | இல்லை |

7. தட்டச்சுப்பணி

| | | |
|---|---|---|
| அ. தமிழ்த் தட்டச்சுகளின் எண்ணிக்கை | .. | 17 |
| ஆ. ஆங்கிலத் தட்டச்சுகளின் எண்ணிக்கை | .. | 11 |
| இ. அலுவலகத்தில் உள்ள தட்டச்சர்களின் மொத்த எண்ணிக்கை (சுருக்கெழுத்தர் உட்பட) | .. | 28 |

| | | | |
|---|---|---|---|
| ஈ. | தமிழ் தட்டச்சில் தேர்ச்சி பெற்றுள்ள தட்டச்சர்/சுருக்கெழுத்துத் தட்டச்சர் ஆகியோரின் எண்ணிக்கை | .. | 28 |
| உ. | தமிழ்த் தட்டச்சில் இன்னும் தேர்ச்சி பெறாத தட்டச்சர்/சுருக்கெழுத்துத் தட்டச்சர் ஆகியோரின் எண்ணிக்கை | .. | -- |
| ஊ. | கடந்த ஆறு திங்கள்களில் தட்டச்சுச் செய்யப்பட்ட செல்வைப் படிகளின் பக்க எண்ணிக்கை | | |
| | 1. தமிழில் | .. | 68,380 |
| | 2. ஆங்கிலத்தில் | .. | 21,439 |
| | கூடுதல் | .. | 89,719 |

8. அலுவலர்களிலும் பணியாளர்களிலும் -

| | | | |
|---|---|---|---|
| அ. | தமிழில் பள்ளியிறுதித் தேர்வுநிலை மொழித் தகுதி பெற்றிருக்காத பணியாளர்களின் எண்ணிக்கை | .. | இல்லை |
| ஆ. | மேற்கூறியவர்களில் 30.11.1957க்கு முன்னர் நியமிக்கப்பட்டுப் பணியாற்றி வருவோரின் எண்ணிக்கை. தமிழ் வளர்ச்சித் துறை நடத்தும் தமிழ்த் தேர்வில் அவர்கள் தகுதி பெற்று விட்டனரா? இல்லையெனில் அவர்கள் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை விவரம் | .. | -- |
| இ. | 30.11.1957க்குப் பின்னர் நியமிக்கப்பட்டுப் பணியாற்றி வருவோரின் எண்ணிக்கை தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணைக் குழு நடத்தும் இரண்டாம் வகுப்புத் தமிழ்த் தேர்வில் அவர்கள் தகுதி பெற்றுவிட்டனரா? இல்லையெனில் அவர்கள் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை விவரம் | .. | -- |

9. முந்தைய ஆய்வின் போது சுட்டிக்காட்டப் பெற்ற குறைகள் அனைத்தும் களையப் பெற்றனவா? இல்லையெனில் அவர்கள் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை விவரம் .. அனைத்துக் குறைகளும் களையப்பெற்று அறிக்கை அனுப்பப்பெற்றது.

10. நடப்புக் கோப்புகள் ..

| இருக்கை | நிலுவையிலுள்ள நடப்புக் கோப்புகள் | | |
|---|---|---|---|
| | தமிழ் | ஆங்கிலம் | இரு மொழிகளிலும் |
| 78 | 6992 | 122 | 932 |

11. காலமுறை அறிக்கைகள் -

| இருக்கை | மொத்தம் | விதிவிலக்குப் பெற்றவை | தமிழில் இருக்க இருக்கவேண்டியவை | தமிழில் உள்ளவை |
|---|---|---|---|---|
| 78 | 323 | 20 | 303 | 303 |

* * *

கோவை மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கு நடைபெறும் முன் மாவட்டஆட்சியர் அலுவலகத்தில் முழு ஆய்வு நடைபெற்றது. தஞ்சையை விடக் கோவை நல்ல முன்னேற்றம். மொத்தத்தில் 87% தமிழ் ஆட்சி உள்ளது.

கையொப்பமிடுவதில் மட்டும் 207 பேரில் 143 பேர்தான் தமிழில். இன்றும் 64 பேர் தொடர்ந்து ஆங்கிலத்திலேயே கையொப்பம் இட்டு வந்தனர்.

இக்குறை கருத்தரங்கில் சுட்டிக் காட்டப்பட்டது.

கோவை மாவட்ட ஆட்சியர் அலுவலகம் - ஆட்சி மொழித் திட்டச் செயற்பாட்டு நிலை 87%

| | மொத்தம் | தமிழில் | விழுக்காடு |
|---|---|---|---|
| 1. கையொப்பம் | 207 | 143 | 69% |
| 2. பதிவேடுகள் | 205 | 174 | 85% |
| 3. காலமுறை அறிக்கைகள் | 164 | 164 | 100% |
| 4. கடிதப் போக்குவரத்து | 30865 | 28367 | 92% |
| 5. நடப்புக் கோப்புகள் | 6289 | 5215 | 83% |
| 6. தட்டச்சுப் பக்கங்கள் | 51074 | 40968 | 80% |
| 7. பெயர்ப்பலகைகள் அனைத்தும் தமிழில் | | | 100% |
| | | | 609/700=87% |

அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சில அலுவலகங்கள் மட்டுமே காட்டப்பட்டுள்ளன. பிற மாநிலங்கட்கோ, நடுவண் அரசுக்கோ நேரடித் தொடர்பில்லாத, தலைமைச் செயலகத்தோடும் பொதுமக்களோடும் மட்டுமே இருவழித் தொடர்புள்ள மாவட்ட ஆட்சியர் அலுவலகங்கள் இன்னும் கவனம் செலுத்த வேண்டும்.

* * *

அறிஞர் அண்ணா பிறந்த மண்ணில் உதவி இயக்குநர் விசயராகவன் முயற்சியில் நடைபெற்ற ஆட்சிமொழிச் செயலாக்கத்தில் அவர் தொகுத்து வழங்கிய குறிப்புகள் எங்கள் கடும் முயற்சிகளை உங்களுக்குச் சொல்லும்.

போலீஸ் சூப்பிரண்டு சைலேந்திரபாபு அறிவுரை (தினகரன் 12.2.2000)

காவல் நிலையங்களில் தமிழில் அலுவல் நடத்துக

காஞ்சிபுரம் பிப்.12 - காவல் நிலையங்களில் தமிழில் அலுவல் நடத்த வேண்டும் என்று போலீஸ் சூப்பிரண்டு சைலேந்திரபாபு அறிவுறுத்தினார்.

காஞ்சிபுரம் மாவட்ட போலீஸ் நிலையத்தில் தமிழ் வளர்ச்சித் துறையின் சார்பில் ஆட்சி மொழிச் செயலாக்கப் பயிற்சி நடந்தது.

"காவல் நிலையங்களில் பணி புரியும் காவலர்கள், ஆய்வாளர்கள், உதவி ஆய்வாளர்கள், மாவட்ட காவல் துணை கண்காணிப்பாளர்கள் இனி உடனே ஆட்சி மொழியாம் தமிழில் தான் கையொப்பமிடல் வேண்டும். காவல் நிலையங்களில் எழுதப்படும் கடிதங்கள், பதிவேடுகள், கோப்புகள் தரப்படும் வான் செய்திகள் இடப்படும் ரப்பர் முத்திரைகள் ஆகியவை சுத்தமான தமிழில் அமைத்திடல் வேண்டும். இனி வரும் காலங்களில் தமிழ் நாடு அரசு ஆட்சி மொழி ஆணையின்படி காவல் நிலையங்கள் தமிழில் அலுவலை நடத்த வேண்டும்."

இவ்வாறு அவர் பேசினார்.

மாவட்ட வருவாய் அலுவலர் சகாயம் பயிற்சி முகாமைத் தொடங்கி வைத்துப் பேசினார். அப்போது அவர் கூறியதாவது :

தமிழ்நாடு அரசுப் பணியாளர்களிடையே நாம் தமிழர் என்கிற உணர்வு என்று ஒன்று இருந்தால்தான் தமிழ்நாடு அரசு ஆட்சிமொழிச் செயலாக்கம் வெற்றிபெறும். மேலும் 1956-ல் ஆரம்பிக்கப்பட்ட ஆட்சிமொழிக் குழுவின் நோக்கம் தமிழ் வளர்ச்சித் துறை என்று உருவாக்கம் பெற்றுப் பல்வேறு ஆணைகள் வெளியிட்டும் இன்று தமிழில் கையொப்பமே இடாத நிலையில் சிலர் இருப்பது வேதனைக்கு உரியது.

இவ்வாறு அவர் பேசினார்.

தமிழ் வளர்ச்சி நற்பணி மன்றத் தலைவர் பேரரசு, பச்சையப்பன் ஆடவர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் முனைவர் சக்கரவர்த்தி, பெருமாள் கோவில் மேலாளர் சங்கரராமன், சாமிநாத குருக்கள் ஆகியோர் பேசினார்கள். மாவட்ட தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் விஜயராகவன் அனைவரையும் வரவேற்றார்.

Need for Tamil as official language stressed

Express New Service

Kancheepuram. June 6: Tamil Development Department director Dr. Rajendran has reitereated that whatever be the problem to be encountered, Tamil should be used in Governemnt offices. He was speaking at the meeting earmarked for making Tamil as official language held at the Kancheepuram Collectorate.

Kancheepuram gives the hope of making 100 percent use of the language. The meetings are held with a view to making Tamil the official language all over the State.

We may have to face problems in enforcing Tamil as official language. Government employees should sign only in Tamil. Reply to the public and official correspondence should be in Tamil. The Tamil Development Department assistant directors would camp and review making Tamil as official language in the district.

Among others, Collector A Sukumaran, SP. C. Sylendra Babu and Chengalpattu Medical College principal MR Srinivasan participated.

தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கம் மாவட்டத்தில் தீவிர ஆய்வு

காஞ்சிபுரம் ஜுன் 39- (தினமணி)

தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கம் குறித்து காஞ்சிபுரம் மாவட்டத்தில் உள்ள பல்வேறு அரசு அலுவலகங்களில் தீவிர ஆய்வு நடத்தப்பட்டு வருகிறது என தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் கோ. விசயராகவன் தெரிவித்துள்ளார்.

அவரது அறிக்கை;

தமிழ் வளர்ச்சித் துறை தமிழகத்தில் அரசு அலுவலகங்களில் 2000க்குள் 100 சதம் தமிழை ஆட்சி மொழிச் செயலாக்கத்தை அமல்படுத்த முனைப்புடன் செயல்பட்டு வருகிறது.

இதற்கு முதற்கட்டமாக காஞ்சிபுரம், திருவாரூர் மாவட்டங்கள் தேர்வு செய்யப்பட்டுள்ளன.

அரசு அலுவலகங்களில் ஆய்வு செய்ய 9 உதவி இயக்குநர்கள், 15 துறைப் பணியாளர்கள் அடங்கிய குழு அமைக்கப்பட்டுள்ளது. இக்குழு தினமும் ஆய்வில் ஈடுபட்டு வருகிறது.

காஞ்சி மாவட்டத்தில் இதுவரை 260 அலுவலகங்களில் ஆய்வு நடத்தப்பட்டுள்ளது. ஆய்வின் போது அலுவலகத் தலைவர்களின் உறுதி மொழியாக ஆட்சி மொழியில் தமிழ் 100 சதம் என்ற சான்று வாங்கப்படுகிறது.

வணிக நிறுவனங்கள் பெயர்ப்பலகையில் தமிழில் எழுதுதல், துண்டு வெளியீடு வழங்குதல், ஒட்டு வில்லைகள் வழங்குதல் முதலிய பணிகள் ஆட்சி மொழிச் செயலாக்கத் திட்டமாக நிறைவேற்றப்பட்டு வருகின்றன.

ஆலந்தூர், செம்பாக்கம், மாடம்பாக்கம், பீர்க்கங்கரணை, பள்ளிக்கரணை, தாம்பரம் கிழக்கு உள்ளிட்ட இடங்களில் தெருமுனைப் பிரசாரம் செய்யப்பட்டது.

பெயர்ப் பலகை திறப்பு

தாம்பரம் நகராட்சி அலுவலகத்தில் எங்கும் தமிழ், எதிலும் தமிழ் பெயர்ப்பலகைத் திறப்பு விழா கடந்த 27ஆம் தேதி நடைபெற்றது.

நகராட்சி ஆணையர் சோ. பாலசுப்பிரமணியன் தலைமை தாங்கினார். நகராட்சித் தலைவர் எஸ்.ஆர். ராஜா முன்னிலை வகித்தார். தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் பெயர்ப்பலகையைத் திறந்து வைத்தார். பின்னர் தாம்பரம் கடைத்தெருவில் எங்கும் தமிழ், எதிலும் தமிழ் தெரு முனைப் பிரசாரம் துவக்கி வைக்கப்பட்டது.

தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர்கள் கோ. விசயராகவன் (காஞ்சிபுரம்), வெங்கட்ராமன் (சென்னை), முத்தையா (தர்மபுரி), சேகர் (திருவண்ணாமலை), சிவசாமி (கோவை), அருட்செல்வி(ஈரோடு), சியாமளா (கரூர்), நாகலட்சுமி (தேனி), லலிதா (விழுப்புரம்) மற்றும் அரசு அதிகாரிகள் கலந்து கொண்டனர் என்றார் விசயராகவன்.

காஞ்சிபுரம் மாவட்டம்

தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கத்தில் முழுமையான மாவட்டமாகத் திகழும்

தமிழ் வளர்ச்சி இயக்குநர் தகவல்

காஞ்சிபுரம், ஜூன் 9 (கதிரவன்)

காஞ்சிபுரம் மாவட்டம் தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கத்தில் முழுமையான மாவட்டமாகத் திகழும் என்று மாநில தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் இராசேந்திரன் கூறியுள்ளார்.

காஞ்சிபுரம் மாவட்டத்திற்கு என்று ஒரு தனிச்சிறப்பு உண்டு. பேரறிஞர் அண்ணா அவர்கள் பிறந்ததும், பட்டுக்குப் பெயர் போனதும் இம்மாவட்டம் தான். தமிழ் ஆட்சி மொழியில் 100 சதவீத செயலாக்கம் பெறும் என்ற நம்பிக்கையூட்டும் மாவட்டமாக இம்மாவட்டம் திகழ்கிறது.

தமிழகத்தில் அரசு அலுவலகங்களில் தமிழை ஆட்சி மொழியாக்க வேண்டும் என்ற நோக்கில் இவ்விளக்கக் கூட்டங்கள் நடைபெறுகின்றன. தமிழ்மொழியைச் செயல்படுத்துவதில் சிக்கல்கள் வரலாம். சிக்கல்களைப் போக்கி அரசுத்துறைகளில் தமிழ் ஆட்சி மொழி சிறந்து விளங்க வேண்டும். அரசு அலுவலர்கள் தமிழில்தான் கண்டிப்பாக கையெழுத்திட வேண்டும்.

மக்களுக்குத் தரப்படும் பதில்களும், அரசு உயர் அலுவலர்களுக்கு அனுப்பப்படும் தகவல்களும் தமிழில் இருக்க வேண்டும். உயர் அலுவலர்கள் இதில் கண்ணும் கருத்துமாகவும் கண்டிப்பாகவும் செயல்படவேண்டும். அரசின் படிவங்கள் ஆங்கிலத்தில் இருந்தவைகள் தமிழில் வெளியிடப்பட்டுள்ளன. இதை அனைவரும் பயன்படுத்தவேண்டும். இம்மாத இறுதிக்குள் காஞ்சிபுரம் மாவட்டம், அரசு அலுவலகங்களில் நூறு சதவீதம் ஆட்சிமொழியில் சிறந்து விளங்குகிறது என்ற நிலை உருவாக மாவட்ட கலெக்டர் தக்க நடவடிக்கை எடுப்பார்கள் என நம்புகிறேன். தமிழ் வளர்ச்சித் துறை உதவி இயக்குநர்கள் முகாமிட்டு இம்மாவட்டத்தில் தக்க ஆய்வு செய்து, இம்மாத இறுதிக்குள் அரசு அலுவலகங்களில் முழுமையான தமிழ்ஆட்சி மொழி மாவட்டமாக ஆக்கிக் காட்டுவார்கள். அதற்கு இம்மாவட்ட அரசு அலுவலர்கள் ஒத்துழைப்புத் தரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு அவர் பேசினார்.

கலெக்டர் சுகுமாரன் பேசுகையில், காஞ்சிபுரம் மாவட்டத்தில் உள்ள அனைத்து அரசு அலுவலகங்களும், தமிழ்ச் செயலாக்கம் வெகுவிரைவில் முழுமை பெறும். அதற்கு அரசு அலுவலர்கள் ஒத்துழைப்புத் தர வேண்டும். தமிழ்மொழிச் செயலாக்கத்தில் நமது மாவட்டம், பிற மாவட்டங்களுக்கு முன்னோடியாகத் திகழ வேண்டும் எனத் தெரிவித்தார்.

மாவட்ட காவல்துறை கண்காணிப்பாளர் சைலேந்திரபாபு பேசும் போது, இம்மாவட்டத்தில் காவல்துறையில் கையெழுத்திடுவதும், செய்திகள் அனுப்புவதும் தமிழில் இருக்கவேண்டும் என்று நடைமுறைப்படுத்தப்பட்டு வருகிறது. அது மேலும் சிறப்பாகச் செயல்பட கண்காணிக்கப்படும். தமிழ்மொழி பேசும்போது, ஆங்கிலம் கலக்காமல் பார்த்துக் கொள்ளவேண்டும். நல்ல தமிழ் நூல்களைப் படிக்க வேண்டும். தாய்மொழி நம் தாய்க்குச் சமம் எனத் தெரிவித்தார்.

இவ்விளக்கக் கூட்டத்திற்கு வருகைதந்த அனைத்து அரசு அலுவலர்களையும் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் விசயராகவன் வரவேற்றார். இக்கூட்டத்தில் அனைத்து மாவட்ட அலுவலர்களும் கலந்து கொண்டார்கள்.

"மாவட்ட ஆட்சியர் மூலம் தமிழில் கையொப்பம் உத்தரவிடல்" (தினமலர் நாள் 28.9.99)

அரசு ஊழியர்கள் பெயரில் உள்ள இனிசியலையும் தனித் தமிழில்தான் எழுத வேண்டும் எனத் தமிழக அரசு உத்தரவிட்டுள்ளது.

தமிழ்நாடு அரசு ஆணையின் படி தமிழக அரசின் அலுவலர்கள் முதல் கடைநிலைப் பணியாளர்கள் வரை தமிழில் நிறைவாகப் பெயர் முன்னெழுத்துகளையும், ஊர்ப்பெயர்களிலிருந்தால் அவற்றையும் நிறைவாக தமிழில் எழுத வேண்டும். காஞ்சிபுரம் மாவட்டத்திற்கான அரசு பணியாளர்கள் அனைவரும் தமது முன்னெழுத்துகளை (இனிசியல்) மொழி உருச்செய்து எழுதாமல் மொழி மாற்றம் செய்து எழுத வேண்டும். உதாரணமாக ஆர். கள்ளழகன் எனின் ஆர். என்ற முன்னெழுத்தினை இரா. கள்ளழகன் என்று மொழி மாற்றம் செய்து எழுத வேண்டும். இதைக் கையொப்பம் போடும் பொழுதும் சுருக்கொப்பமிடும் பொழுதும் தவறாமல் பின்பற்றுதல் வேண்டும்.

இத்தகவலை கலெக்டர் சுகுமாரன் தெரிவித்துள்ளார்.

அரசு போக்குவரத்துக் கழகத்தில் தமிழில் அலுவலகப் பணிகள்

மேலாண்மை இயக்குநர் நடவடிக்கை

காஞ்சிபுரம் பிப்.27 (தினத்தந்தி 27.2.2000)

சென்னை மாநகர்அரசு போக்குவரத்துக் கழக அலுவலர்கள், பணிமனைகளில் முழுக்க முழுக்கத் தமிழையே அலுவலகப் பணிகளில் பயன்படுத்தும்படி மேலாண்மை இயக்குநர் உத்தரவிட்டுள்ளார்.

தமிழ் வளர்ச்சித் துறை ஆய்வு

காஞ்சிபுரம் மாவட்டத் தமிழ் வளர்ச்சித் துறை இந்த மாவட்டத்தில் உள்ள அனைத்து அரசு நிறுவனங்களிலும் தமிழ் ஆட்சி மொழி என்ற கொள்கையினைச் செயலாக்கி ஆய்வுகள் மேற்கொண்டு வருகிறது.

அதன்படி சென்னை மாநகர் போக்குவரத்துக் கழகம் (சென்னை கோட்டம் -1) தாம்பரம், ஆலந்தூர், அய்யப்பன்தாங்கல் பணிமனைகளில் தமிழ் வளர்ச்சித் துறையினர் ஆய்வு செய்தனர்.

அதிகாரி உத்தரவு

அதில் எடுக்கப்பட்ட நடவடிக்கையின் படி தமிழக அரசின் அன்னைத் தமிழே ஆட்சி மொழி என்னும் இலட்சிய நோக்கை மாநகர் போக்குவரத்துக் கழகத்தின் பணிமனை மற்றும் நிர்வாக பணிமனைப் பிரிவுகளிலும் முழுமையாக்கிட அன்றாடப் பணிகள் தமிழ் மொழியில் நடைபெற வேண்டும் என்று அதன் மேலாண்மை இயக்குநர் சுற்றறிக்கை அனுப்பி உள்ளார்.

கோப்புகள்

கோப்புகள் மற்றும் பதிவேடுகள் தமிழில் மட்டும்தான் பராமரித்தல் வேண்டும்.

அரசு, அரசு சார்ந்த நிறுவனங்கள் மற்றும் தனியாருக்கு வழங்கப்படும் குறிப்புகள் மற்றும் பதில் உரைகள் தமிழில்தான் அமையவேண்டும்.

தமிழில்தான் முதன்மை அலுவலர் முதல் அனைத்துப் பணியாளர்களும், ஓட்டுநர் - நடத்துநர்களும் கையொப்பம் சுருக்கொப்பம் இடவேண்டும். அலுவலர், அலுவலகம், நிர்வாகப் பிரிவுகள் மற்றும் பணிமனைகளில் அன்றாடம் உபயோகத்தில் உள்ள ரப்பர் முத்திரைகள், தகவல் விளம்பரப் பலகை, பெயர்ப்பலகை ஆகியவைகள் தமிழில்தான் அமைதல் வேண்டும்.

இவ்வாறு சென்னை மாநகர்ப் போக்குவரத்துக் கழக மேலாண்மை இயக்குநர் உத்தரவிட்டுள்ளார்.

இந்தத் தகவலை காஞ்சிபுரம் மாவட்ட தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் கோ. விசயராகவன் தெரிவித்துள்ளார்.



## இயல் - இருபத்திரண்டு

# உதவி இயக்குநர்கள் பணியமர்த்தம்

1983 முதல் 1989 வரையில் ஒழிவான உதவி இயக்குநர் பணியிடங்கள் அனைத்தும் நிரப்பப் படாமலேயே இருந்தன. ஏறத்தாழ 6 ஆண்டுகளாகவே இப்பணியிடங்கள் காலியாக இருக்குமானால் மாவட்டங்களில் உள்ள அலுவலகங்களில் எப்படி ஆய்வுப் பணி நடைபெற்றிருக்க முடியும்?

யாரும் ஆய்வு செய்ய வரமாட்டார்கள் என்ற நிலை இருந்தால் பிற அலுவலர்கட்கு ஏதேனும் உறுத்தல் வந்திருக்குமா? தமிழில் எழுதவேண்டும் எனும் எண்ணமாவது பிறந்திருக்குமா?

காலிப் பணியிடங்கள்

| | | |
|---|---|---|
| தருமபுரி | 19.2.1983 | முதல் |
| ஈரோடு | 30.6.1983 | முதல் |
| கோவை, நீலகிரி | 9.2.1984 | முதல் |
| நெல்லை | 14.5.1984 | முதல் |
| புதுக்கோட்டை | 16.5.1984 | முதல் |
| விருதுநகர் | 7.5.1985 | முதல் |
| கடலூர் (தெ.ஆ.) | 6.6.1985 | முதல் |
| காஞ்சிபுரம் | 30.9.1985 | முதல் |
| திருச்சி | 16.4.1986 | முதல் |
| மதுரை | 9.4.1987 | முதல் |
| தஞ்சாவூர் | 4.11.1988 | முதல் |
| கன்னியாகுமரி | 4.11.1988 | முதல் |
| வேலூர் (வட.ஆ.) | 20.11.1988 | முதல் |
| சேலம் | 29.11.1989 | முதல் |

(14 காலி இடங்கள்)

ஆய்வு செய்யும் மாவட்ட அலுவலர்களே இல்லையென்றால் தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம் எப்படியிருக்கும் என்பதை எண்ணிப் பாருங்கள்.

### உதவி இயக்குநர்கள் அமர்த்தமும் ஆய்வும்

1989 ஆம் ஆண்டு தி.மு.க. ஆட்சி அமைந்தபோது த.வ., த.ப. துறையும் கல்வித் துறையோடுதான் இணைந்திருந்தது. எனவே தமிழ் வளர்ச்சி அமைச்சர் பேரா. அன்பழகன் ஆவார்.

அந்தக்கால கட்டத்தில் 'தமிழ் ஆய்வு அலுவலர்' எனும் பதவி உருவாக்கப்பட்டு 10 பேர்வரை பணியில் அமர்த்தப்பட்டனர். தமிழ் முதுகலை மற்றும் ஆய்வு நிறைஞர் (M.Phil) அல்லது முனைவர் பட்டம் பெற்றவர்களில் சிலர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இவர்களில் எவரும் வேலை வாய்ப்பகத்தின் வாயிலாகத் தேர்ந்தெடுக்கப்படவில்லை. முழுக்க, முழுக்க நேரடிப் பணி அமர்த்தங்கள். இவர்கள் 10 பேர் மட்டும் இருந்தாலும் 29 மாவட்டங்கள் இருந்த காரணத்தால் ஒவ்வொருவரும் இரண்டு மூன்று மாவட்டங்களைக் கவனித்தனர். புரட்சித் தலைவி ஆட்சியின்போது மேலும் ஒரு தமிழ் ஆய்வு அலுவலர் அமர்த்தப்பட்டார்.

எனவே நன்கு கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டிய செய்திகள் இவை:

1. 29 மாவட்டங்கள்
2. 11 தமிழ் ஆய்வு அலுவலர்கள்
3. ஏற்கெனவே இருந்த சிலர்
4. ஒருவரே மூன்று மாவட்டங்களைக் கவனித்துக் கொள்ள வேண்டிய நிலை.

ஓர் உதவி இயக்குநர் ஒரு மாதத்தில் 45 அலுவலகங்கள் வரை ஆய்வு செய்திடவேண்டும். 1999 நவம்பர் மாதத்தில் கன்னியாகுமரி மாவட்ட உதவி இயக்குநர் மேற்கொண்ட பணிகளை ஒரு பார்வை பாருங்கள். தெங்கம்புதூர் - 2, கன்னியாகுமரி - 3, குழித்துறை - 2, நாகர்கோவில் -3, தக்கலை - 3 (இரண்டாம் கிழமை).

புதுக்கடை -2, குமாரபுரம் - 3, வேர்க்கிளம்பி - 2, நாகர்கோவில்-2, (மூன்றாம் கிழமை) கல்லுக்குட்டம் - 2, வில்லுக்குறி - 3, மார்த்தாண்டம் - 3, நாகர்கோவில் - 2 (நான்காம் கிழமை)

இப்படி ஆய்வுப் பணி நடைபெறும்போது, உதவி இயக்குநரே இல்லாமல் ஒருவரே 3 மாவட்டங்களைக் கவனித்தால் எப்படி இருக்கும்? எண்ணிப் பாருங்கள்.

இதற்கிடையில் தான் த.வ. அமைச்சர் அவர்களால் தமிழ் ஆய்வு அலுவலர்கள் 10 பேர் பணியமர்த்தப்பட்டனர்.

இவர்களது பணியமர்த்தங்கள் குறித்த உண்மை நிலைதான் என்ன?

வேலை வாய்ப்பகம் மூலமாக இல்லாமல் நேரடி நியமனம் என்ற வகையில் இவர்கள் அமர்த்தப்பட்டனர். இதனை எதிர்த்து தமிழ் வளர்ச்சித் துறையில் உள்ள கண்காணிப்பாளர்கள் வழக்குத் தொடர்ந்தனர். அவர்கள் தொடர்ந்த வழக்கின் மீது நீண்டகாலமாகவே எந்த முடிவும் எட்டப் படவில்லை.

ஏற்கெனவே பணியாற்றிய த.ஆ. அலுவலர்கள் போக மேலும் உள்ள 15-க்கும் மேற்பட்ட உ.இ. பணியிடங்கள் பல ஆண்டுகளாகவே காலியாகவே இருந்தன.

1987-இல் தொடங்கிய இந்தப் போர் 1997 வரை நீடித்தது. பல பணியிடங்களைக் காலியாகவே வைத்துக்கொண்டிருந்தால், அதுவும் பத்தாண்டுகள் இந்த நிலைமை நீடித்தால் தமிழ் வளர்ச்சி எந்த அளவுக்கு இருந்திருக்கும் என்று சிந்தித்துப் பாருங்கள். மாதந்தோறும் ஒவ்வோர் அலுவலகத்திலும் நடைபெறவேண்டிய ஆய்வும் நடைபெறாமல் இருக்கும்போது அந்தந்த அலுவலகங்களில் எத்தனைபேர் தமிழைப் பற்றிய கவலையோடு அக்கறையெடுத்துச் செயற்பட்டிருக்க முடியும்?

எனவே ஓர் அரைகுறை நிலையே பல ஆண்டுகளாக இருந்து வந்தது.

வழக்கு ஓர் உச்சகட்டத்தை அடைந்தது. தமிழாய்வு அலுவலர்களின் மறு ஆய்வு மனுவைத் தள்ளுபடி செய்து நடுவர் மன்றம் தீர்ப்பு வழங்கிய பின், நீதிமன்றத் தீர்ப்பைச் செயற்படுத்துமாறு தமிழ் வளர்ச்சித் துறைப் பணியாளர் சங்கத்தின் சார்பில் மீண்டும் அரசுக்குக் கோரிக்கை மனு அளிக்கப்பெற்றது. ஆனால், இக்கோரிக்கை மனுவை ஏற்காமலும், நடுவர் தீர்ப்பினைக் கருதாமலும், மீண்டும் அரசின் சார்பில் டெல்லி உச்ச நீதிமன்றத்தில் மேல்முறையீட்டு மனுவொன்று அளிக்கபெற்றது. இம்மனுவும் உச்ச நீதிமன்றத்தில் தள்ளுபடி செய்யப்பட்டது.

தமிழ்நாடு நிருவாக நடுவர் மன்றத்தில் இத்தொடர்பில் நீதிமன்ற அவமதிப்பு வழக்கு, தமிழ் வளர்ச்சித் துறைப் பணியாளர்களின் சார்பில் தொடரப்பெற்றது. இவ்வழக்கு விசாரணையிலிருந்தபோது, 14.12.95 -ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சிப் பண்பாட்டுத்துறை அரசாணை எண்.313-இல் புதிய நியமன விதிகள் வெளியிடப்பெற்றன. இவ்வாணையில்,

1. நேரடித் தேர்வு மூலம் - 60%
2. தமிழ் வளர்ச்சி இயக்ககக் கண்காணிப்பாளர் பதவி வகிப்போரிடமிருந்து மாற்றல் மூலம் - 20%
3. தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத்துறைப் பிரிவுகளில் இருந்து கண்காணிப்பாளர் பதவித் தரத்திற்குக் குறையாத பதவி வகிப்போரிடமிருந்தும்/வேறு பணியிலிருந்தும் - 20%

ஆக தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் பணியிடங்கள் நிறைவு செய்யப்படுமெனத் தெரிவிக்கப்பட்டது.

வேறு எத்துறையிலுமில்லாத வகையிலும், நீதிமன்றத் தீர்ப்பிற்கு மாறாகவும் மேற்கண்ட நியமன விதிகளிருப்பதைச் சுட்டிக்காட்டி, துறைப் பணியாளர்க்கு 80% நேரடி நியமனத்துக்கு 20% என இருக்கத்தக்க வகையிலும், துறைப் பணியாளருக்குரிய கல்வித் தகுதியாகக் குறைந்தபட்சக் கல்வித் தகுதியை வரையறுக்கவும் வேண்டுமென வலியுறுத்தித் தமிழ் வளர்ச்சித் துறைப் பணியாளர் சங்கத்தின் சார்பில் அரசுக்குத் தொடர்ந்து மேல்முறையீடு அளிக்கப்பெற்றது. ஆயினும், இக்கோரிக்கை கவனிக்கப்படவில்லை.

தமிழகத்தில் புதிய அரசு பொறுப்பேற்றவுடன், தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாட்டுத் துறை என்ற புதிய அமைச்சகம் உருவாக்கப்பட்டு, அதன் அமைச்சராக நான் பொறுப்பேற்றவுடன், துறைத் தொடர்பான கோரிக்கைகளை முழுமையாக அறிந்துகொண்டு, தமிழ் வளர்ச்சித் துறைப் பணியாளர் சங்கத் தலைவர்களை அழைத்துப் பேசித் தீர்வுகாணுமாறு அரசுச் செயலாளருக்கு ஆணைகள் வழங்கி என் ஆணையின் படி, 15.7.96 அன்று தமிழ் வளர்ச்சித் துறைப் பணியாளர் சங்கத் தலைவர், தமிழ் வளர்ச்சி இயக்குநர் (பொறுப்பு), அரசுச் செயலாளர் ஆகியோரின் கூட்டம் தலைமைச் செயலகத்தில் நடைபெற்றது.

இக் கூட்டத்தில் பணியாளர்களின் கோரிக்கைகளிலுள்ள நியாயத்தை எடுத்துக்கூறி அவற்றை நிறைவேற்றித் தருமாறு தமிழ் வளர்ச்சித் துறைப் பணியாளர் சங்கத் தலைவர் கேட்டுக் கொண்டார். அதன்மீது தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை அரசுச் செயலாளர் அவர்கள் பின்வரும் முடிவுகளைத் தெரிவித்தார்கள்.

1. தமிழ் வளர்ச்சி இயக்ககக் கண்காணிப்பாளர்களின் பதவியுயர்வுக்கு நியமன விதிகளின்படி 20% உள்ளது. தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத்துறை சார்ந்த இதரப் பிரிவுகளுக்கு வழங்கப்பட்ட 20% அளவீட்டை தமிழ் வளர்ச்சி இயக்ககக் கண்காணிப்பாளர்களுக்குப் பதவியுயர்வு மூலம் அளிக்கக் கருதலாம். ஆக மொத்தம் 40% அளவீடு கண்காணிப்பாளர்களின் பதவியுயர்வுக்கு அளிக்கலாம்.

2. இதுதவிரவும் நேரடி நியமனத்திற்கு தமிழ் வளர்ச்சித் துறைப் பணியாளர்களில் தகுதியுள்ளவர்கள் விண்ணப்பிக்கலாம்.

3. உதவி இயக்குநர் (நிர்வாகம்) பணியிடத்தைக் கண்காணிப்பாளர் தரத்தில் பட்டப் படிப்பு இல்லாதவர்களைக் கொண்டு முதுநிலை அடிப்படையில் நிரப்பலாம். இதற்கேற்ப இப் பதவியைப் புத்தாக்கம் செய்யலாம்.

மேற்கண்ட முடிவுகளினடிப்படையில் தமிழ் வளர்ச்சித் துறைப் பணியாளர் சங்கம் தமிழாய்வு அலுவலர்களின் நியமனம் குறித்து நடுவர் மன்றத்தில் தொடர்ந்த வழக்கைத் திரும்பப் பெற்றுக் கொள்ள வேண்டுமெனத் தெரிவித்தார்கள்.

மேற்சொன்ன முடிவுகள் பணியாளர்களுக்குப் போதிய நிறைவை அளிக்காததால் மாண்புமிகு அமைச்சர் அவர்களுக்கு தமிழ் வளர்ச்சித் துறைப் பணியாளர் சங்கத்தின் சார்பில் மேல் முறையீடு அளிக்கப்பெற்றது. இதனையடுத்து, மாண்புமிகு அமைச்சர் அவர்கள் உடனடியாக நடவடிக்கை மேற்கொண்டு, 3.12.96- அன்று மாண்புமிகு அமைச்சர், அரசுச் செயலாளர், தமிழ் வளர்ச்சித் துறைப் பணியாளர் சங்கத் தலைவர் ஆகியோரின் கூட்டம் மாண்புமிகு அமைச்சர் அவர்களின் அறையில் நடைபெற்றது. இக் கூட்டத்தில் பணியாளர் தரப்பில் கூறப்பட்ட கருத்துக்களைப் பரிவோடு கருதிப் பார்த்துப் பின்வரும் முடிவுகளை மாண்புமிகு அமைச்சர் அவர்கள் அறிவித்தார்கள்.

1. கண்காணிப்பாளர் பதவியுயர்வு, நேரடி நியமனம் 1 : 1 என்ற விகிதாச்சாரப்படி நிறைவு செய்யப்படும்.

2. நேரடி நியமனத்திற்குத் தகுதியுள்ள துறைப் பணியாளர்களும் அரசுச் செயலாளர் ஏற்கெனவே தெரிவித்தவாறு விண்ணப்பிக்கலாம்.

3. உதவி இயக்குநர் (நிர்வாகம்) பணியிடம் பட்டதாரியல்லாத துறைக் கண்காணிப்பாளர்கள் மூலம் நிறைவு செய்யப்படும்.

மேற்கண்ட முடிவுகளை தமிழ் வளர்ச்சித் துறைப் பணியாளர் சங்கத் தலைவரும், துறைப் பணியாளர்களும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டார்கள்.

இது தொடர்பாக நன்றி தெரிவித்து அறிவிப்புகள் வெளியிடப்பட்டன. அவற்றில் உள்ள சில பகுதிகள் மட்டும்:

"முதல்வர் பொறுப்பேற்றதும் தமிழ் வளர்ச்சிக்கெனத் தனியமைச்சகத்தை ஏற்படுத்தி அதன் அமைச்சராக முனைவர் மு. தமிழ்க்குடிமகனை நியமித்தார். இத்துறையின் அமைச்சர் பொறுப்பை அவர் ஏற்றவுடன், தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயற்பாட்டை முனைப்போடு முடுக்கிவிட்டார்.

இத்துறையில், பணியாளர்கள் பதவி உயர்வுகள் கிடைக்காமல் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளதையும், அதனால் நீதிமன்றங்களுக்குச் செல்ல வேண்டிய நிலையையும், நீதிமன்றத் தீர்ப்புகளுக்குப் பின்னரும் அத்தீர்ப்புகளை ஏற்காமல் வேண்டுமென்றே தன்னிச்சையாக பணியாளர் விரோத ஆணைகளைப் பிறப்பித்ததால் தமிழ் வளர்ச்சித் துறையிலுள்ள அலுவலர் பணியிடங்களைப் பல ஆண்டுகளாக நிறைவு செய்ய இயலாமலிருப்பதையும், இதனால் துறைப் பணிகள் பெரிதும் பாதித்துள்ளதையும் அறிந்து அச்சீர்கேட்டை உடனடியாக அகற்ற அமைச்சர் மு. தமிழ்க்குடிமகன் தீவிர நடவடிக்கைகள் எடுத்தார்.

இதுகுறித்துத் தமிழ் வளர்ச்சித் துறைப் பணியாளர் சங்கம் ஏற்கெனவே அரசுக்கு அனுப்பிய மேல் முறையீட்டு மனுவைப் பரிவோடு ஆய்வு செய்த அமைச்சர், கடந்த 3.12.96 அன்று தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறைச் செயலாளர் வை. பழனிச்சாமி அவர்களையும், தமிழ் வளர்ச்சித் துறைப் பணியாளர் சங்க மாநிலத் தலைவர் க. தேவதாஸ் அவர்களையும் நேரில் அழைத்துப் பேசி பின்வரும் ஆணைகளை வழங்கியுள்ளார்.

இதுதவிர, ஆய்வு உதவி இயக்குநர், மொழி பெயர்ப்பு உதவி இயக்குநர் ஆகிய பணி இடங்கள் - பட்டதாரிகளாக உள்ள துறைக் கண்காணிப்பாளரின் பதவி உயர்வு மற்றும் நேரடி நியமனம் ஆகியவற்றின் மூலமாக 1 : 1 என்ற விகிதாச்சாரத்தில் நிறைவு செய்யப்படும். இதற்கேற்ப நியமன விதிகள் திருத்தியமைக்கப்பட்டு வெளியிடப்படும்.

தமிழ் வளர்ச்சித் துறையில் இனித் தமிழாய்வு அலுவலர் என்ற பணியிடம் தோற்றுவிக்கப்படமாட்டாது. தற்போதுள்ள தமிழாய்வு அலுவலர் பணியிடங்கள் உதவி இயக்குநர் பணியிடங்களாக மாற்றப்படும்.

மேற்குறிப்பிட்ட ஆணைகளை ஏற்று நிர்வாகத் தீர்ப்பாயத்தில் தமிழாய்வு அலுவலர் பணியிடம் குறித்து தமிழ் வளர்ச்சித் துறைப் பணியாளர் சங்கம் தொடுத்த வழக்கைத் திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டும். இது போன்றே தமிழாய்வு அலுவலர்கள் தொடுத்த வழக்கை அவர்கள் திரும்பப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

அமைச்சர் அவர்களின் மேற்கண்ட முடிவுகளை ஏற்றுக்கொண்டு, தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தைச் செவ்வனே நிறைவேற்றுவதில் அரசு மற்றும் அமைச்சர் ஆகியோரின் சீரிய முயற்சிகளுக்கு முழு ஒத்துழைப்பு அளிப்பதாக, தமிழ் வளர்ச்சித் துறைப் பணியாளர் சங்கத்தின் மாநிலத் தலைவர் க. தேவதாஸ் தெரிவித்தார்."

எனவே, இனி த.வ. உதவி இயக்குநர்கள் பணிமாற்றத்தில் எந்தத் தடங்கலும் நேராத அளவுக்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

13.5.96-இல் நான் பதவியேற்றேன். உதவி இயக்குநர் பணிகளின் தேவை குறித்து நன்கு உணர்ந்திருந்தமையால் அதுபற்றி உடனே ஆய்வு செய்யத் தொடங்கி, வழக்குகள் பற்றிய விவரம் குறித்து உடனடி நடவடிக்கைக்கான முயற்சிகளை மேற்கொண்டேன். அந்த ஆணையால் தான் 15.7.96 அன்று (பொறுப்பேற்ற இரண்டே மாதத்தில்) அதற்கான கூட்டத்தைக் கூட்டினேன். இத்தகைய சிறந்த ஏற்பாட்டுக்கு வரவேற்பு இருந்தது. வேலைகள் சுறுசுறுப்பாக நடைபெற்றன. ஆனால், 'தினமலர்' இதழ் மட்டும் இதனைக் கிண்டல் செய்திருந்தது.

"பணிமாறுதல் முறையில் கண்காணிப்பாளர் பதவிவகித்து வருபவர்களுக்கு 50 சதவீதம், நேரடி நியமனம் 50 சதவீதம் மூலம் இந்தப் பணிகளுக்குப் பதவி உயர்வு வழங்கலாம். நேரடி நியமனத்தின்படி வேலைவாய்ப்பு அலுவலகம் மூலம் எம்.ஏ. தமிழ் படித்தவர்கள் உதவி இயக்குநர்களாக தேர்வு செய்யப்படுவர். அதற்கு ஏற்கெனவே இந்தத் துறையில் பணியாற்றும் எந்த வகையான ஊழியராக இருந்தாலும், அலுவலக உதவியாளராக இருந்தாலும் அவர் எம்.ஏ., தமிழ் படித்து இருந்தால் போதும், அவரை உதவி இயக்குநர்களாக்க அவர்களது மனுவையும் பரிந்துரைத்து உதவி இயக்குநர் பணியிடங்கள் வழங்கலாம்."

இதுவே அந்த அரசாணையின் சாரம்.

"இப்படிச் செய்தது பிற துறைகளின் ஊழியர்கள், அதிகாரிகள் வரை வருத்தத்தையும் தீராத கொதிப்பையும் ஏற்படுத்தி உள்ளது" என்கிறது 'தினமலர்'.

பொதுவாகச் சிலர்க்கு இதில் வருத்தம் இருக்கக்கூடும். ஆனால் ஏதோ கொதிப்பு ஏற்பட்டு விட்டது போல எழுதுவது ஒருவகையில் தூண்டிவிடும் செயல்தான்.

பல ஆண்டுகளாக உதவி இயக்குநர்கள் அமர்த்தப்பட முடியாமல் தமிழ் வளர்ச்சி, மாவட்ட அலுவலகங்களின் ஆய்வு என்பதே அறவே இல்லாமல் முடங்கிப் போய்விட்டன என்பதைக் கணக்கில் கொள்ளவேண்டும். இவ்வளவு செய்தும், அலுவலகத்தில் பணியாளர்களிலிருந்து 5 பேர் மட்டுமே தகுதியுடையவர்கள். அவர்கள் பணியமர்த்தப்பட்டனர். மீதி அனைவரும் முனைவர் (பி.எச்.டி.) பட்டம் பெற்ற முறையான முதுகலைப் பட்டதாரிகள். மேலும் நேரடி நியமனம் என்று வரும்போது 'முனைவர்' பட்டம் பெற்றவர்கள் மட்டுமே கருதப்படுகின்றனர்.

ஓர் இதழில் உதவி இயக்குநர்கள் பணியமர்த்தம் தொடர்பான குற்றச்சாட்டு எழுதப்பட்டிருந்தது.

அந்த செய்தி இதுதான்.

"இவர்கள் மக்கள் தொடர்பு அதிகாரிகளைத் தேர்வு செய்வதுபோல் அமைச்சகத்தால் நேரடியாகத் தேர்வுசெய்யப்பட இருக்கின்றார்கள். வேலை வாய்ப்பு அலுவலகத்தின் மூலமோ அல்லது சர்வீஸ் கமிஷன் மூலமோ இவர்கள் தேர்வு செய்யப்படாமல் காதும், காதும் வைத்தாற்போல் தெரிந்தவர்களுக்கு மட்டும் விண்ணப்ப பாரங்கள் தரப்படுகின்றன.

1989-இல் தமிழ் வளர்ச்சித்துறையில் அப்போதைய கல்வி மந்திரி பேராசிரியர் அன்பழகனால் 20 பேர் உதவி இயக்குநர்களாக நேரடியாக நியமிக்கப்பட்டார்கள். அப்போது எந்தப் பேரமும் நடக்கவில்லை. தமிழில் எம்.ஏ., படித்த தகுதியானவர்கள் பரிசீலிக்கப்பட்டு நியமிக்கப் பட்டார்கள். இவர்கள் இன்னமும் பணி நிரந்தரம்செய்யப்படாமல், அரசு தரும் அரசு ஊழியர்களுக்கான எந்தச் சலுகையும் கிடைக்காமல், பரிதாபத்துடன் அரசாங்கத்துக்குக் கோரிக்கை மேல் கோரிக்கை வைத்தபடியே இருக்கின்றார்கள்". எனினும் தவறுகள் நடக்கக்கூடாது எனும் எச்சரிக்கையாகத்தான் செய்தி எழுதப்பட்டது என்பதை உணரமுடிந்தது.

கடைசியாக இப்படி முடித்தார்கள்.

"அமைச்சர் தமிழ்க்குடிமகனுக்குத் தெரியாமல்கூட இப்படித் தவறுகள், பேரங்கள் நடைபெறலாம். பெருமைப் படத்தக்க அளவில் தமிழ்ப பணியாற்றிவரும் தமிழ்க்குடிமகனார் துறையில் மேலும் கவனம் செலுத்துவது நலம்."

அவர்கள் நம்பிக்கையைப் போல வேலைவாய்ப்பகத்தின் மூலமே பட்டியல் பெறப்பட்டது. அனைவரும் தமிழில் முனைவர் பட்டம் பெற்றுவிட்டுப் பல ஆண்டுகளாகக் காத்திருப்பவர்கள். திரு. வெ. இறையன்பு, இ.ஆ.ப. அவர்களைக் குழுத் தலைவராகக் கொண்டு, த.வ. இயக்குநர், உலகத்

தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் ஆகியோரை உறுப்பினர்களாகக் கொண்டு நேர்காணல் நடத்தப்பட்டது.

முற்றிலும் தகுதி அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் உதவி இயக்குநர்களாகப் பதவியில் அமர்த்தப்பட்டனர்.

ஒவ்வோர் உதவி இயக்குநரும் ஒரு மாவட்டத்தில் உள்ள 500க்கும் மேற்பட்ட அலுவலகங்களை ஆய்வு செய்யவேண்டும்.

இவர்கள் மட்டுமின்றி அலுவலக உதவியாளர்கள், தட்டச்சர்கள், ஏவலர்கள் ஆகியோரும் அமர்த்தப்பட்டனர்.

எனவே உதவி இயக்குநர் அலுவலகங்கள் முழுவீச்சில் செயற்படத் தொடங்கின.

அதுமட்டுமன்று; மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் எந்த ஓர் அலுவலக வாய்ப்பும் இல்லாமல் பல உதவி இயக்குநர்கள் 'ஒண்டி' இருந்ததும் தெரியவந்தது. எனவே மா. ஆ. அலுவலகத்தில் த.வ.உ. அலுவலகத்துக்கு என்று ஓர் இடம் ஒதுக்க அறிவுறுத்தப்பட்டது. அதன்பின் ஒவ்வோர் அலுவலகத்துக்கும் கூடுதல் பணியிடங்கள் ஒதுக்கப்பட்டன.

உதவி இயக்குநர் - 1

உதவியாளர் - 1

இளநிலை உதவியாளர் - தட்டச்சர் - 1

அலுவலக உதவியாளர் - 1

மேலும் ஏற்கெனவே பணியாற்றிய 11 தமிழாய்வு அலுவலர்களின் பணியிடங்களும் உ.இ. பணியிடங்களாக மேம்படுத்தப்பட்டு அவர்களது பணி வரன்முறை செய்யப்பட்டது.

(அரசாணை எண். 16/22.1.1998)

தொடர்ந்து பணியாற்றும் தமிழாய்வு அலவலர்கள் 9 பேர் பதவி உயர்வு பெற்றனர். த.வ. துறைப் பணியாளர்கள் 5 பேர் கல்வித் தகுதி காரணமாக உ.இ. பதவி உயர்வு பெற்றனர். எஞ்சிய இடங்கள் நேரடி அமர்த்தம் ஆயின. வேலை வாய்ப்பகத்திலிருந்து தமிழில் முனைவர் பட்டம் பெற்றவர்கள் பட்டியல் பெறப்பட்டது. 100க்கு மேற்பட்டோர் நேர்காணலுக்கு வந்தனர். தமிழார்வமுள்ள வெ. இறையன்பு, இ.ஆ.ப. வைத் தலைவராகவும், த.வ. இயக்குநர் ச. நாகராசன், உ.த.நி. இயக்குநர் இராமர் இளங்கோ ஆகியோரை உறுப்பினர்களாகவும் கொண்ட குழு இவர்களைத் தெரிந்தெடுத்தது. தமிழ் ஈடுபாடும், அறிவு, துடிப்புடன் செயலாற்றும் ஆர்வம்

ஆகியவற்றை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு எந்த வகையான பரிந்துரைக்கும் இடமளிக்காமல் த.வ.உதவி இயக்குநர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

இப்போது எல்லா மாவட்டங்களிலும் த.வ. உதவி இயக்குநர் ஒருவர் - அவருடன் மூன்று அலுவலகப் பணியாளர்கள் சேர்ந்து பணியாற்றும் வாய்ப்பு அமைந்துவிட்டது.

ஒருவரே மூன்று மாவட்டங்களைக் கவனிக்கும் நிலைமாறி ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒருவர். மாதந்தோறும் அலுவலகங்களில் ஆய்வு, ஒவ்வொரு மாவட்டத்திலும் ஆட்சிமொழிக் கருத்தரங்கு என்று பணிகள் வேகம் பெறத் தொடங்கின.

எனவே மாவட்டந்தோறும் ஒரு தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் என்ற அளவில் முழு வீச்சில் பணியாற்ற முடிந்தது. அவர்கள் மாதந்தோறும் எப்படிப் பணியாற்ற வேண்டும் என்பது குறித்துத் தெளிவான நெறிமுறைகள் வகுத்தளிக்கப்பட்டன. அது குறித்தும் த.வ. துறை நடவடிக்கை, மற்றும் முயற்சிகளுக்குரிய வரவேற்புக் குறித்தும், 13.12.98-ஆம் நாளைய 'தினமலரில்' வெளிவந்த செய்தியைப் பார்த்தாலே விளங்கிக் கொள்ள முடியும்.

அரசு அலுவலகங்களில் அதிரடி
எதிலும் தமிழ் புகுத்த அதிகாரிகளுக்கு கிடுக்கிப்பிடி
உடனுக்குடன் ஆய்வு செய்ய கடும் உத்தரவு

'தமிழகத்தில் உள்ள எல்லாப் பள்ளிகளிலும் எட்டாம் வகுப்பு வரையில் தமிழ் மொழியில் தான் பாடம் நடத்த வேண்டும்' என்று அரசு அதிரடி அறிவிப்பை வெளியிட்டதைத் தொடர்ந்து, தமிழ் வளர்ச்சித் துறை அதிகாரிகளுக்கு அரசு கிடுக்கிப்பிடி உத்தரவு ஒன்றைப் பிறப்பித்துள்ளது. அரசு அலுவலகங்களில் தமிழை முழுமையாகப் புகுத்த கடுமையாக உத்தரவு பிறப்பிக்கப்பட்டு உள்ளது.

தமிழ் ஆட்சி மொழித் திட்டத்தை விரைந்து, முனைப்புடன் முழுமையாக செயல்படுத்த அரசு திட்டமிட்டு வருகிறது. அதற்கேற்ப தமிழ் வளர்ச்சிக்குத் தனி அமைச்சகமும் ஏற்படுத்தப்பட்டுள்ளது. மண்டல அலுவலகங்கள் உருவாக்கப்பட்டு, பிரிக்கப்பட்ட புதிய மாவட்டங்கள் உட்பட அனைத்து மாவட்டங்களிலும் அதிகாரிகள், பணியாளர்கள் நியமிக்கப்பட்டு உள்ளனர்.

இந்நிலையில், திட்டத்தை முழுமையாக செயல்படுத்த, அதிகாரிகளுக்கு அரசு அதிரடி உத்தரவைப் பிறப்பித்துள்ளது.

தமிழ் வளர்ச்சி இயக்ககம் இது பற்றி வெளியிட்ட உத்தரவு விவரம் : -

அரசு அலுவலகங்களுக்கு ஆய்வுப் பணிக்கு செல்லும்போது, உரிய இலக்கை எட்ட, ஆய்வுக்குரிய அலுவலகத்தில் பதிவேடுகள், கோப்புகள், அறிக்கைகள் அனைத்தையும் விடுபடாமல் முழுமையாக ஆய்வு செய்யும் வகையில் பயணத் திட்டம் போட வேண்டும்.

ஆய்வு மேற்கொள்ளாத அலுவலகங்களில் ஆய்வு மேற்கொண்டு, ஆறு மாதங்களுக்குள் மீண்டும் அந்த அலுவலகத்தை ஆய்வு செய்யும் வகையில் பயணம் திட்டமிடப்பட வேண்டும். ஒரு அலுவலகத்திற்கான ஆய்வு நாள் ஆறு மாத கால இடைவெளி இருக்கவேண்டும்.

சனி, ஞாயிறு விடுமுறை நாட்கள் மற்றும் அரசு விடுமுறை நாட்கள் தவிர, மாதம் ஒன்றுக்கு 19 நாட்கள் பணி நாட்களாக அமைய வேண்டும். பணி நாட்களில் திங்கட்கிழமைகளில் தலைமையிடத்தில் இருக்குமாறு பயண நிரலை அமைத்தல் வேண்டும். வாரத்திற்கு ஒரு நாள் மாவட்டத் தலைநகரங்களில் உள்ள அலுவலகங்களை ஆய்வு செய்ய வேண்டும். மாதம் ஒன்றுக்கு 15 நாட்கள் ஆய்வுப்பணியாக அமைத்து, நாள் ஒன்றுக்கு சராசரியாக மூன்று அலுவலகங்கள் வீதம் 45 அலுவலகங்கள் ஆய்வு செய்ய திட்டமிட வேண்டும். (முன்பு 25 அலுவலகங்கள் தான் இருந்தது.) பெரிய அலுவலகங்கள் இரண்டு, சிறிய அலுவலகங்கள் நான்கு, பெரிய அலுவலகமும், சிறிய அலுவலகமும் கலந்தவாறு மூன்று அலுவலகங்களை ஒரே நாளில் ஆய்வு செய்யத் திட்டமிடலாம்.

ஆய்வு மேற்கொள்ளப்பட்ட அலுவலகத்தில் தமிழ் மொழி அமலாக்குவது பற்றி குறிப்பு எழுதவேண்டும். தமிழில் கையெழுத்துப் போடுகின்றனரா, கோப்புகள், குறிப்புகள் தமிழில் எழுதுகின்றனரா, என ஆய்வு செய்ய வேண்டும். ஆய்வு செய்த நாளை, துறை வாரியாகப் பதிவேட்டிலும் பதிவு செய்ய வேண்டும். இவ்வாறு பதிவு செய்தால் அலுவலகங்களில் ஆட்சிமொழி திட்ட செயல்பாட்டில் முன்னேற்றம் காணமுடியும். அலுவலர்கள் தாங்கள் ஆற்றிய பணிவிவரக் குறிப்பை ஐந்து நாட்களுக்குள் மாநில அலுவலகத்திற்கு அனுப்பி வைக்க வேண்டும். தாமதமாக அனுப்பி வைத்தால் கடும் நடவடிக்கை எடுக்கப்படும்.

பயண நிரலின் படி பணி மேற்கொள்ளாது இருந்தால், அதற்கான தகவலை ஒவ்வொரு மாதமும் 5ம் தேதிக்குள் மாநில அலுவலகத்திற்கு அனுப்பி வைக்கவேண்டும். தகவலின் அடிப்படையில் தமிழ் வளர்ச்சித்துறை சார்பில் அரசுக்கு இது சம்பந்தமாக அறிக்கை சமர்ப்பிக்கப்படும்.

இந்த உத்தரவில் குறிப்பிட்டுள்ளதன் படி, தமிழ் வளர்ச்சித்துறை அதிகாரிகள் நடைமுறைப்படுத்த வேண்டும். இந்த வழிமுறையை பின்பற்றாவிட்டால் தகுந்த நடவடிக்கை மேற்கொள்ளப்படும். உடனடியாக இந்த முறை அமலுக்கு கொண்டு வரப்படுகிறது."

இவ்வாறு உத்தரவில் கூறப்பட்டுள்ளது.

அரசுப் பணியாளர்கள் அனைவரும் தமிழில் தான் அனைத்து ஆவணங்களிலும் கையெழுத்திட வேண்டும் என்று 78ம் ஆண்டு அரசு பிறப்பித்த அரசாணை (எண்.1134) உள்ளது. ஆனால், இந்த நடைமுறை அரசு அலுவலகங்களில் பெரும்பாலும் நடைமுறைப்படுத்தப் படவில்லை. தி.மு.க. அரசு பதவிக்கு வந்த பிறகு இதில் முன்னேற்றம் காணப்பட்டது.

கடந்த 96ம் ஆண்டு அன்று முதல்வர் கருணாநிதி தலைமையில் கூடிய அமைச்சர் மற்றும் எம்.எல்.ஏ.க்கள் கூட்டத்தில் அமைச்சர்கள் அனைவரும் இனி தமிழில் தான் கையெழுத்திட வேண்டும் என்ற தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது. இதற்கான அரசாணையும் அப்போது வெளியிடப்பட்டது.

"தற்போது எட்டாம் வகுப்பு வரை தமிழ் மீடியம் தான் என்ற அதிரடி அறிவிப்பை அரசு வெளியிட்டது. மக்கள் மத்தியில் பெரும் வரவேற்பை பெற்ற இந்த உத்தரவையடுத்து, எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்கிற நிலையை உருவாக்க ஏற்கெனவே போட்ட உத்தரவிற்கு நினைவூட்டும் உத்தரவாக தற்போது அரசு புதிய உத்தரவை பிறப்பித்துள்ளது" என்கிறது தினமலர்.

பதவி உயர்வு பெற்ற உதவி இயக்குநர்களில் க. தேவதாசு, நேரடி அமர்த்தம் பெற்றவர்களில் கோ. விசயராகவன் ஆகியோரது சில பணிகள் மட்டும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.



பத்தாம் வகுப்பு பொதுத் தேர்வில் மாவட்ட அளவில் தமிழில் அதிக மதிப்பெண் பெற்று 2-ம் இடம்பெற்ற சின்ன காஞ்சிபுரம் அரசினர் பெண்கள் பள்ளி மாணவி ஜி.கீதாவுக்கு பரிசளிக்கிறார் ஆட்சியர் சுகுமாரன். உடன் (இடமிருந்து) உதவி இயக்குநர் (தமிழ் வளர்ச்சி) விஜயராகவன், மக்கள் தொடர்பு அலுவலர் மு.நா.கிருஷ்ணசாமி.

இயல் - இருபத்து மூன்று

## கருவூலங்களில் தமிழ்ப் பயன்பாடு

சிவகங்கை மாவட்டத்தில் ஓர் அலுவலகத்திலிருந்து ஒருவர் தமிழில் பட்டியல் அனுப்பினால் ஏற்பதில்லை என்றும் திருப்பிவிட்டு விடுகிறார் என்றும் செய்திவந்தது. இது தொடர்பாக நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று முடிவெடுத்தேன். அங்கு எழுதி விளக்கம் கேட்டோம்.

சென்னைக் கோட்டையில் தொடர்புடைய அரசு கூடுதல் செயலாளரை வரவழைத்துப் பேசினேன். அவர் சிலவற்றைத் தெளிவு படுத்தினார். 17.3.1997 அன்று ஒரு கடிதம் எழுதினேன்.

(20 28 நாள் : 17.3.97)

இதனை மேற்கோள் காட்டி அனைத்துக் கருவூல அலுவலர்களுக்கும் அரசு கூடுதல் செயலாளர் ஒரு கடிதம் எழுதினார். (100168/நிதி (கக2)/96-4, நாள். 25.3.97

அனுப்புநர்

திரு. அ. சேதுராமலிங்கம்

அரசு கூடுதல் செயலாளர்

பெறுநர்

அனைத்துத்துறை அலுவலர்கள்

அனைத்து மாவட்டக் கருவூல அலுவலர்கள்

அனைத்து சார்நிலைக் கருவூல அலுவலர்கள்

அனைத்து மண்டல இணை இயக்குநர்கள், கருவூலக் கணக்குத் துறை

அனைத்து சம்பளக் கணக்கு அலுவலர்கள், கருவூலக் கணக்குத் துறை

பொருள் : பட்டியல்கள் - தமிழில் எழுதப்படும் பட்டியல்கள் விரைந்து ஏற்பது குறித்து.

பார்வை : மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி (ம) தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சர் அவர்களின் கடித எண்.2028, நாள் : 17.3.1997.

கருவூலங்கள் மற்றும் சம்பளக் கணக்கு அலுவலகங்களில் தேர்வுக்காக அனுப்பப்படும் பட்டியல்கள் கீழ்கண்டவாறு அமையலாம் எனத் தெளிவுரை வழங்கப்படுகிறது.

1. கருவூல விதி எண். 16, துணை விதி 2 (ஆ)ல் குறிப்பிட்டுள்ளவாறு பட்டியல் தயாரிக்கத் தேவைப்படும் படிவம் தமிழ் - ஆங்கிலம் ஆகிய இரு மொழியிலும் இருக்கலாம்.

2. ஒரு பட்டியலையோ (Bill) அல்லது கைச்சாத்தையோ (VOUCHER) தமிழில் தயாரிக்கலாம். அப்படித் தயாரிக்கப்பட்ட பட்டியலில்

அ. பணம் பெறுபவர் பெயர்

ஆ. கோரப்படும் தொகை

இ. எந்த இனத்தின் கீழ் கோரப்படுகிறது

என்ற மூன்றை மட்டும் ஆங்கிலத்தில் குறிப்பிடல் வேண்டும். அதில் பட்டியலைப் பணமாக்கும் அலுவலர் மேலொப்பம் இட வேண்டும்.

2. வருங்காலங்களில் ஏற்புக்காக அனுப்பப்படும் பட்டியல்கள் மேற்காணும் தெளிவுரைப்படி இருப்பின் அவற்றை உடனடியாகத் தேர்வு செய்து அனுப்புமாறும், எவ்விதக் காரணத்தைக் கொண்டும் கால தாமதம் செய்தல் கூடாது என்றும் அனைத்துக் கருவூல அலுவலர்கள், சம்பளம் மற்றும் கணக்கு அலுவலர்கள் அறிவுறுத்தப்படுகிறார்கள்.

தங்கள் உண்மையுள்ள

(ஒ-ம்). . . . .

அரசு கூடுதல் செயலாளருக்காக

அதன்படி,

பட்டியலையோ அல்லது கைச்சாத்தையோ தமிழில் உருவாக்கலாம். அப்படி உருவாக்கப்பட்ட பட்டியலில் (அ) பணம் பெறுபவர் பெயர் (ஆ) கோரப்படும் தொகை (இ) எந்த இனத்தின் கீழ் கோரப்படுகிறது என்ற மூன்றை மட்டும் ஆங்கிலத்தில் குறிப்பிட்டு, பணியிலிருக்கும் அலுவலர் மேலொப்பம் இடவேண்டும்.

இவ்வளவு முயற்சிகள் எடுத்தும் 1997 இல் முயற்சிகள் மேற்கொண்டும் 20.9.98 'தினமணி' யில் 'தடுமாறிய தமிழ்க் காசோலை' எனும் தலைப்பில் ஒரு செய்தி வந்தது.

உடனே தினமணிக்கு நான் ஒரு மடல் எழுதினேன். அது 22.9.1998 இதழில் வெளிவந்தது.

இந்த மடல் இதுதான் :

'தினமணி'யின் 'ஊர்வலம்' பகுதியில் (20.9.98) தடுமாறிய 'தமிழ்க் காசோலை' பற்றிய செய்தியைக் கண்டேன். ஓராண்டுக்கு முன்னர் சிவகங்கைக் கருவூல அலுவலர் ஆங்கிலத்தில் குறிப்பெழுதிய போதும், மதுரைக் கருவூலத்தில் தமிழில் தரப்பட்ட சம்பளப் பட்டியலுக்குப் பணம் தர மறுத்த போதும் உடனடி நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.

அதன் தொடர்பாக, கருவூலங்கள் மற்றும் சம்பளக் கணக்கு அலுவலகங்களில் தேர்வுக்காக அனுப்பப்படும் பட்டியல்கள் கீழ்க்கண்டவாறு அமையலாமெனத் தெளிவுரை வழங்கப்பட்டுள்ளது.

1. கருவூல விதி எண்.16 துணை விதி 2(ஆ)ல் குறிப்பிட்டுள்ளவாறு பட்டியல் தயாரிக்கத் தேவைப்படும் படிவம் தமிழ் - ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளிலும் இருக்கலாம்.

2. ஒரு பட்டியலையோ (Bill) அல்லது கைச்சாத்தையோ (Voucher) தமிழில் தயாரிக்கலாம். அப்படித் தயாரிக்கப்பட்ட பட்டியலில்,

அ. பணம் பெறுபவர் பெயர்

ஆ. கோரப்படும் தொகை

இ. எந்த இனத்தின் கீழ் கோரப்படுகிறது

என்ற மூன்றையும் மட்டும் ஆங்கிலத்தில் குறிப்பிடுதல் வேண்டும். அதில் பட்டியலைப் பணமாக்கும் அலுவலர் மேலொப்பம் இட வேண்டும். வருங்காலங்களில் ஏற்புக்காக அனுப்பப்படும் பட்டியல்கள் மேற்காணும் தெளிவுரைப்படி இருப்பின் அவற்றை உடனடியாகத் தேர்வு செய்து அனுப்புமாறும் எவ்விதக் காரணத்தைக் கொண்டும் கால தாமதம் செய்தல் கூடாது என்றும் அனைத்துக் கருவூல அலுவலர்கள், சம்பளம் மற்றும் கணக்கு அலுவலர்கள் அறிவுறுத்தப்பட்டுள்ளார்கள்.

இது நடைபெற்று ஓராண்டாகிறது. கருவூலத் துறையைக் கவனிக்கும் உயர் அலுவலர் தெளிவுரையும் வழங்கியுள்ளார். இந்நிலையில், தமிழில் எழுதப்படும் காசோலையை ஏற்க மறுப்பவர் தமிழக அரசின் கோட்பாட்டுக்கு எதிராகச் செயல்பட்டுள்ளார் என்ற அடிப்படையில் உரிய நடவடிக்கை எடுக்கப்படும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். பட்டியல் போன்றவற்றையே தமிழில் தர இடமுள்ளபோது தமிழ்க் காசோலையைத் திருப்பி விட்ட உத்திரமேரூர்க் கருவூல அலுவலர் விசாரிக்கப்பட வேண்டியவர்தான். 'தினமணி'யில் வெளிவரும் இவ்வறிக்கை வாயிலாகத் தமிழகக் கருவூலங்கள் அனைத்தும் உரிய கவனம் செலுத்தும் என்று நம்புகிறேன்.

மு. தமிழ்க்குடிமகன்
தமிழ்ப் பண்பாடு, இந்து சமயம் மற்றும்
அறநிலையத் துறை அமைச்சர்

தமிழ்நாடெங்கும் இந்தக் கடிதம் அனுப்பப்பட்டபின், திண்டுக்கல் மாவட்டத் த.வ.உ. இயக்குநர் க. தேவதாசு தன் மாவட்டத்தில் உள்ள அனைத்துக் கருவூலங்களிலும் தமிழைக் கொண்டுவர எவ்வளவு முயற்சிகள் மேற்கொண்டுள்ளார் என்பதனை அவர் தந்த நடவடிக்கைத் தொகுப்பிலிருந்து முழுமையாகக் காணலாம்.

இப்படி, ஒவ்வொரு துறையாகப் பார்த்துத் தான் பணியாற்ற வேண்டி இருக்கிறது.

நான் கல்லூரியில் முதல்வராக இருந்த காலத்திலேயே சம்பளப் பட்டியல் (Pay Bill) முழுவதும் தமிழில் தான் உருவாக்கப்பட்டு, அளிக்கப்பட்டது. அதில் எந்தச் சிக்கலும் இல்லை.

இந்தப் பழக்கம் இருந்ததால்தான், 'கருவூலத்தில் தமிழ்' பற்றிய கவனம் எடுக்க முடிந்தது. இதில், உதவி இயக்குநரின் செயல்முறைகள் கவனிக்கத்தக்கவை.

அரசு அலுவலகங்கள் பட்டியல்களைத் தமிழில் உருவாக்கி அளிப்பது குறித்து மடல் எழுதுகிறார். அடுத்து மாவட்டக் கருவூல அலுவலரைச் சந்தித்து, உரிய நடவடிக்கை எடுக்க வேண்டுகிறார்.

மா.க. அலுவலரும் கருவூலம் / சார் நிலைக் கருவூல அலுவலகப் பணியாளர்களுக்கு அறிவுரை வழங்குகிறார்.

நே.மு.க.ந.க. எண்.7320/99 (ஏ6)

என் அன்பார்ந்த

பொருள் : தமிழ் வளர்ச்சி - தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் - கருவூலத்தில் / துறையலுவலகங்களில் சமர்ப்பிக்கப்படும் பட்டியல்கள் - தமிழில் எழுத வேண்டுவது - தொடர்பாக.

பார்வை : 1. 25.3.97 ஆம் நாளிட்ட அரசு நிதி (கக2) துறைக் கடித எண்.100168/நிதி (கக.2)/96-4.

2. திண்டுக்கல் மாவட்டத் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் கடித எண்.68/99 நாள் : 7.4.99

பார்வையில் காணும் அரசுக் கடிதம் மற்றும் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் அவர்களின் கடிதம் ஆகியனவற்றை இத்துடன் இணைத்துள்ளேன்.

மேற்படி அரசுக் கடிதத்தில் கருவூலங்களில் சமர்ப்பிக்கப்படும் பட்டியல்கள் எவ்வாறு அமைய வேண்டுமெனத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. அதன்படி, பட்டியல், கைச்சாத்து ஆகியவற்றைத் தமிழில் தயாரிக்கலாம். அவ்வாறு தயாரிக்கும்போது

அ. பணப் பெறும் அலுவலர்

ஆ. கோரப்படும் தொகை

இ. எந்த இனத்தின் கீழ் கோரப்படுகிறது

என்ற மூன்றை மட்டும் ஆங்கிலத்தில் குறிப்பிட வேண்டும். அதில் பட்டியலைப் பணமாக்கும் அலுவலர் மேலொப்பம் இட வேண்டும். எனவே அரசின் தெளிவுரையின்படி, இம்மாவட்டத்தில்

செயற்பட்டு வரும் அரசு அலுவலகங்கள் அனைத்துப் பட்டியல்களையும் தமிழிலேயே தயாரிக்க கேட்டுக் கொள்ளப்படுதல் வேண்டும். சார்நிலைக் கருவூலங்களிலும் பட்டியல் தமிழில் தயாரித்தல் வேண்டும் என அறிவுறுத்தப்படுகிறது. தமிழில் தயாரித்துக் கொடுக்கப்படும் பட்டியல்கள் சரியாக இருப்பின் கருவூலங்களில் அனுமதிக்கப்பட வேண்டும்.

இதனை வலியுறுத்திக் கருவூலங்களின் அலுவலக முகப்புகளில் சுவரொட்டிகள் ஒட்டப்பட்டன.


சுற்றறிக்கை

25-3-97 ஆம் நாளிட்ட அரசு (நிதி) (க.க.2) துறைக் கடித எண் 10048/நிதி(க.க.2)/96-4 ன்படி இக் கருவூலத்தில் பணம் பெறும் அலுவலர்களால் சமர்ப்பிக்கப்படும் அனைத்து [illegible] பட்டியல் [illegible] [illegible] 70-ஆவது [illegible] பதிவேடுகள் அனைத்தும் தமிழிலேயே இருக்க வேண்டுமென அறிவுறுத்தப்படுகிறது. தேவைப்படும் விளக்கங்களுக்கு கருவூல அலுவலரை அணுகவும்.

கருவூல அலுவலர்,
திண்டுக்கல்.

இப்படிக் கடும் முயற்சி மேற் கொண்டதால் 95% மேல் பட்டியல்களும் இணைப்புகளும் தமிழில் உருவாக்கி அளிக்கும் நடைமுறை வந்துவிட்டது.

உதவிக் கருவூல அலுவலர்களும் இதை மையமாக வைத்து ஒரு சுற்றறிக்கை அனுப்புகின்றனர். (எ.டு : நத்தம்)

கருவூலங்கள் தமிழில் நடவடிக்கைகளை மேற்கொள்ளத் தொடங்கியதும் பல தனியார் அச்சகங்கள் அவற்றிற்குரிய படிவங்களைத் தமிழில் அச்சிட்டு விற்கத் தொடங்கிவிட்டன

1. படிவம் எண் : 100
2. படிவம் எண் : 103
3. முகப்புக் கடிதம்
4. பொது சேமநல நிதி பிடித்தத்திற்கான அட்டவணை

5. பிடித்தம் செய்யப்பட்ட குடும்ப நலநிதி விவரங்கள்

6. சுகாதார நிதிப் பிடித்தத்திற்கான அட்டவணை

7. சிறப்பு சேம நலநிதி (ம) பணிக்கொடை பிடித்தங்களுக்கான அட்டவணை

8. ஆயுள் காப்பீட்டுத் தொகைப் பிடித்தத்திற்கான அட்டவணை

9. கைத்தறி / கதர் / கல்வி / விழா முன்பணம் பிடித்தத்திற்கான அட்டவணை

10. ஊதியச் சான்றுகள்

ஒரு மாவட்டத்தில் எடுக்கப்பட்ட முயற்சியின் விளைவுகளைப் பார்த்தோம். இதை அனைவரும் பின்பற்றி விட்டால் தமிழ் ஆட்சிமொழியாகச் செங்கோலோச்சும் என்பதில் ஐயமில்லை.

எனவே அமைச்சர் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளையும், ஒரு மாவட்டத்தின் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் மேற்கொண்ட முயற்சிகளையும் வழிகாட்டிகளாகக் கொண்டு கருவூலம் செல்லும் அன்பர்களும் தமிழில் நடவடிக்கைகளைத் தொடர வேண்டுகிறேன்.

23.6.99

(129)

அனுப்புநர் பெறுநர்

ஐயா,

பொருள்:

பார்வை:

ஆணை

10.6.99

இயல் - இருபத்து நான்கு

## ஒட்டுமொத்த ஆய்வு

ஒவ்வோர் உதவி இயக்குநரும் தலைமையகத்தில் இருந்தாக வேண்டிய நாள், த.வ. இயக்குநரால் அழைக்கப்படுகிற நாள், அந்த வட்டாரத்தில் நடைபெறும் தமிழ் வளர்ச்சித் தொடர்பான விழாநாள் தவிரப் பிற நாள்களில் ஒவ்வொரு நாளும் இரண்டு மூன்று அலுவலகங்களை ஆய்வு செய்கிறார். அறிவுரை வழங்கப்படுகிறது; ஆய்வறிக்கை தரப்படுகிறது. எனினும் சிலர் விடாப்பிடியாக 'ஆங்கில'ப் பாதையிலேயே சென்று வருகின்றனர்.

அந்த வகையில் ஒரு முழு நிதியாண்டில் (1.4.99 முதல் 31.3.2000 முடிய) ஆய்வு மேற்கொள்ளப்பட்ட அலுவலகங்கள் 10288 ஆகும்.

அதுமட்டுமன்றி, த.வ. இயக்குநரே சார்நிலை அலுவலகங்களை நேரடியாக ஆய்வு செய்கிறார். அதன்படி ஒரு மாதத்தில் எத்தனை அலுவலகங்கள் ஆய்வு செய்யப்படுகின்றன என்ற விவரத்தைக் காணலாம்.

பிப்ரவரி 2001 மாத ஆய்வு

1. மருத்துவக் கல்வி இயக்ககம், சென்னை - 10 (2 நாள்)
2. முறை சாராக் கல்வி இயக்ககம், சென்னை - 6 (2 நாள்)
3. தலைமைப் பொறியாளர் அலுவலகம், வடிவமைப்பு (6) புலனாய்வு, சென்னை-25 (1 நாள்)
4. தோட்டக் கலைத்துறை, சென்னை - 2 (1 நாள்)
5. மீன் வாரியம், சென்னை-2 (1 நாள்)
6. முதன்மை வனப் பாதுகாவலர் அலுவலகம் சென்னை-2 (1 நாள்)
7. விருதுநகர் மாவட்ட ஆட்சியர் அலுவலகம் ( 2 நாள்)
8. பால்வளத்துறை, மாதவரம், சென்னை-51 (1 நாள்)

ஒரு மாதத்தில் ஒரு மாவட்ட ஆட்சியர் அலுவலகம் ஆய்வு செய்யப்படுகிறது.

7 சார்நிலை அலுவலகங்கள் 10 நாள்கள் ஆய்வு செய்யப்படுகின்றன.

மாதந்தோறும் இந்தத் திட்டம் செயல்படுத்தப்பட்டு வருகிறது.

ஆய்வு மேற்கொள்கிறார்கள், அறிவுரை கூறப்படுகிறது, தனி அமைச்சகம் தனிக் கவனம் செலுத்துகிறது என்று அனைத்து அலுவலர்கட்கும் தெரியும். எனவேதான் இந்த ஆய்வுகளால் அலுவலர்களிடையே ஓர் எச்சரிக்கை உணர்ச்சியைத் தூண்ட முடிகிறது என்பதை நாங்கள் உணர்கிறோம்.

சென்னையில் எழும்பூரில் உள்ள காவல்துறை ஆணையர் அலுவலகம், சென்னை மாநகரம் முழுமைக்குமான சட்டம், ஒழுங்குப் பணிகளைச் செய்கிறது. அதிலும் அப்போது ஆணையராக இருந்த பெ. காளிமுத்து, இ.கா.ப. நல்ல தமிழ்ப் பற்றாளர். இயல்பாகப் பேசும்போதுகூட நல்ல தமிழில் தான் பேசுவார்.

17, 18-8-99 ஆகிய நாள்களில் அவரது அலுவலகம் த.வ. இயக்குநரால் ஆய்வு செய்யப்பட்டது. ஆய்வின் போது கண்டறியப்பட்ட உண்மைகளை 'ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பது போல' அப்படியே தருகிறேன்.

தமிழ் வளர்ச்சித் துறை

அனுப்புநர் | பெறுநர்

முனைவர் ம. இராசேந்திரன்,<br>தமிழ் வளர்ச்சி இயக்குநர்

காவல்துறை ஆணையர்,<br>எழும்பூர், சென்னை-600 008

பொருள் : தமிழ் வளர்ச்சி - ஆய்வு - ஆட்சிமொழித் திட்டச் செயற்பாடு குறித்த ஆய்வு - 17.8.99, 18.8.99 அன்று ஆய்வு மேற்கொண்டமை - ஆய்வறிக்கை அனுப்புதல் பற்றி.

பார்வை : 30.7.99 ஆம் நாளிட்ட இதே எண் பெற்ற இவ்வியக்கக் கடிதம்.

ஆட்சிமொழித் திட்டச் செயற்பாடு குறித்துத் தங்கள் அலுவலகத்தில் 17.8.99, 18.8.99 அன்று ஆய்வு மேற்கொள்ளப்பெற்றது. அதன் தொடர்பிலமைந்த ஆய்வறிக்கை இதனுடன் அனுப்பப்பெறுகிறது. ஆய்வறிக்கையில் சுட்டிக்காட்டியுள்ள குறைகளைக் களைந்து, பத்திவாரியான குறைகளைவு அறிக்கையினை விரைவில் அனுப்புமாறு அன்புடன் வேண்டுகிறேன்.

இணைப்பு : ஆய்வறிக்கை<br>தமிழ் வளர்ச்சி இயக்குநர்

படி :

மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு<br>மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர்<br>அவர்களின் முதுநிலை நேர்முக உதவியாளர்,<br>தலைமைச் செயலகம்.

(தகவலுக்காகப் பணிந்தனுப்பப்படுகிறது)

தமிழ் வளர்ச்சி இயக்குநர் அவர்களின் தமிழ்த்திட்டச் செயலாக்க ஆய்வறிக்கை

| | | |
|---|---|---|
| ஆய்வு செய்த அலுவலகம் | : | காவல்துறை ஆணையர் அலுவலகம், எழும்பூர், சென்னை - 8 |
| அலுவலகத் தலைவர் | : | திரு. பெ. காளிமுத்து, இ.கா.ப., |
| ஆய்வு செய்த நாள் | : | 17.8.99 - 18.8.99 |
| ஆய்வு அலுவலர் | : | முனைவர் ம. இராசேந்திரன் |

பதிவேடுகள்

துப்பாக்கி உரிமப்பதிவேடு, சில பிரிவுகளின் தன்பதிவேடுகள், திரையரங்கு உரிமப்பதிவேடு திரையரங்கு அனுமதி வழங்கல் படிவம், கருவூலப்பட்டியல் பதிவேடு, சில்லரைச் செலவினப் பதிவேடு, பணிப்பதிவேடுகள், ஊதிய உயர்வுப் பதிவேடு, படிவங்கள் இருப்புப் பதிவேடு ஆகியவை ஆங்கிலத்திலும் முதன்மைப்பணப்பதிவேடு, சம்பளம் கொடுபடாப்பதிவேடு ஆகியவை தமிழ், ஆங்கிலம் கலந்தும் எழுதப்பட்டுள்ளன. இனி இப்பதிவேடுகள் அனைத்தும் தமிழில் பேணப்படவேண்டும்.

கடிதப்போக்குவரத்து

காவல் ஆய்வாளர்களுக்கு அனுப்பப்படும் வாலாயமான கடிதங்கள்கூட ஆங்கிலத்தில் உள்ளன. அரசுக்கு அனுப்பப்படும் மேற்குறிப்பு நினைவூட்டு கடிதங்கள் ஆங்கிலத்தில் உள்ளன.

வருகைப் பதிவேடு

வருகைப்பதிவேட்டில் தலைப்பெழுத்து, விடுப்புவிவரங்கள் அலுவல்பணி விவரங்கள் ஆகியன ஆங்கிலத்தில் உள்ளன. சிலரது ஒப்பங்கள் ஆங்கிலத்தில் உள்ளன. அரசாணைப்படி அனைவரும் தமிழில் ஒப்பமிடவேண்டுமென சுற்றறிக்கை வாயிலாக அறிவிக்கப்பட வேண்டும்.

ரப்பர் முத்திரைகள்

ஒருசில ரப்பர் முத்திரைகள் ஆங்கிலத்தில் உள்ளன. ஆங்கிலத்தில் உள்ள ரப்பர் முத்திரைகளைத் தமிழில் செய்து பயன்படுத்த வேண்டும்.

பணிப்பதிவேடுகள்

பெரும்பாலான பணிப்பதிவேடுகளில் பதிவுகள் ஆங்கிலத்தில் உள்ளன. அரசாணைக்கிணங்க இனி பணிப்பதிவேடுகளில் பதிவுகள் தமிழில் இருக்கவேண்டுமென சுற்றறிக்கை வாயிலாக அறிவிக்கப்படவேண்டும்.

தட்டச்சுப் பொறிகள்

தமிழில் 20 தட்டச்சுப் பொறிகளும் ஆங்கிலத்தில் 22 தட்டச்சுப் பொறிகளும் உள்ளன. துறைத்தலைமை அலுவலகத்தில் 75 விழுக்காட்டு அளவுக்கும், சார்நிலை அலுவலகத்தில் 100க்கு 100 விழுக்காட்டு அளவுக்கும் தமிழ்த் தட்டச்சுப் பொறி இருக்குமாறு பார்த்துக்கொள்ள வேண்டும். அதற்குரிய நடவடிக்கை எடுக்கப்பெற வேண்டும்.

காலமுறை அறிக்கை

காலமுறை அறிக்கைகள் ஒரு சில ஆங்கிலத்திலும், தமிழ் ஆங்கிலம் கலந்தும் உள்ளன. மைய அரசுக்கு அனுப்பப்படும் காலமுறை அறிக்கைகள் நீங்கலாகப் பிற அனைத்தும் தமிழில் இருக்க வேண்டும்."

ஆய்வு முடிந்து நான்கு மாதங்கள் கழித்துக் (17.12.99) (என்ன காரணத்தால் இவ்வளவு காலச் சுணக்கம்?) கலந்துரையாடல் கூட்டம் நடைபெறுகின்றது. அனைத்துச் செயல்களும் உணர்த்தப்படுகின்றன. அந்தக் குறிப்பினையும் அப்படியே தந்துள்ளேன்.

கலந்துரையாடல் குறிப்புரை

ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் தொடர்பாக காவல்துறை ஆணையாளர் அலுவலகம் 17.8.99, 18.8.99 ஆகிய நாட்களில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. ஆய்வுக் குறிப்புகளின் அடிப்படையில் 17.12.99 அன்று (பி.ப. 4.00 மணியளவில்) தமிழ் வளர்ச்சி இயக்குநர் அவர்கள், காவல்துறை ஆணையாளர், துணை ஆணையாளர், அலுவலக முதுநிலைக் கணக்கர், நேர்முக எழுத்தர்கள், கண்காணிப்பாளர்கள், உதவியாளர்கள் உள்ளிட்ட அனைத்துப் பணியாளர்களுடன் கலந்துரையாடினார்கள். அக்கலந்துரையாடலின்போது இத்திட்டத்தைச் செயற்படுத்துவதில் அனைவரும் ஆர்வங்கொண்டுள்ளது பாராட்டுக்குரியது; தமிழ் மொழி வழக்கை விரிவான முறையில் அன்றாட நடைமுறையிலும், ஆவணங்களிலும் ஆட்சியிலும் செயற்படுத்த வேண்டும். சட்டம் ஒழுங்கைப் பாதுகாப்பது தங்கள் துறையினர்க்கு எவ்வாறு முக்கியமோ அதுபோன்றே ஆட்சிமொழிச் சட்டத்தை நடைமுறைப்படுத்துவது எங்களின் கடமை. காவல் துறையினர் சட்டம் ஒழுங்கைப் பராமரித்து அமைதிகாத்தல், குற்றம் தடுத்தல், போக்குவரத்து ஒழுங்குபடுத்தல் ஆகியவற்றை நடைமுறைப்படுத்துவதற்கு அதிகாரம் உள்ளது போன்று தமிழில் ஒப்பமிடல், பதிவேடுகள் தமிழில் பேணுதல், கடிதப்போக்குவரத்து தமிழில் மேற்கொள்ளுதல் போன்றவற்றை நடைமுறைப்படுத்துவதற்கு ஆணைகள் உள்ளன. தற்போது இத்திட்டத்தைத் தீவிரப்படுத்துவது இன்றியமையாததாகின்றது. ஆங்கிலேயர்கள் இந்தியாவை ஆண்டபோது குறுகிய காலத்தில் ஆங்கிலத்தை ஆட்சிமொழியாக நடைமுறைப்படுத்தியுள்ளனர். தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் நடைமுறைக்கு வந்து ஆண்டுகள் பலவாகியும் இத்திட்டச் செயலாக்கம் எதிர்பார்த்த அளவு

முன்னேற்றம் அடையவில்லை. எனவே, இத்திட்டச் செயலாக்கத்தை விரைவுபடுத்த வேண்டிய நிலையில் உள்ளோம்.

சொற்களுக்கு மொழியாக்கம் தேவைப்படின் மொழிபெயர்ப்புத் துறை, தமிழ் வளர்ச்சித் துறை ஆகியவற்றுடன் தொடர்பு கொண்டு உரியவாறு மொழியாக்கங்களைப் பெறலாம். வளர்ந்துவரும் புதுத்துறைகளுக்கேற்ப புதுப்புதுச் சொற்களை உருவாக்க வேண்டிய கடமையும் உள்ளது. பொதுமக்களுக்கு எழுதப்படும் அனைத்துக் கடிதங்களுக்கும், மாவட்ட அலுவலகங்களுக்கு எழுதப்படும் அனைத்துக் கடிதங்களுக்கும் அரசுச் செயலகத் துறைகளுக்கு எழுதப்படும் கடிதங்களுக்கும் தமிழைப் பயன்படுத்த வேண்டும்.

இத்திட்டத்தை மேலும் முனைப்பான அளவில் செயற்படுத்துவதற்கும் எங்கும் தமிழ் எதிலும் தமிழ் எனும் இலக்கினை எய்துவதற்கும் காவல்துறை ஆணையர் அலுவலகம் முன்நிற்க வேண்டும்;" முன்நிற்கும் என்று உறுதியளித்தார் காவல்துறை ஆணையர்.

மாநகரக் காவல் துறை ஆணையர் அவர்களுக்கும், ஈடுபாடுகாட்டிய துணை ஆணையர், அலுவலர்கள், பணியாளர்கள் அனைவருக்கும் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

| | | |
|---|---|---|
| முன்னேற்றம் | : | நன்று |
| காட்டிய அக்கறை | : | தொடர்ந்துதேவை. |

தமிழ் வளர்ச்சி இயக்குநர்
(ஒ-ம்.)

இதுபோல, ஒட்டு மொத்த ஆய்வுகள் பல ஆண்டுகள் மேற்கொள்ளப்பட்டு வந்தாலும் அமைச்சர் நேரடியாகக் கவனிப்பார் என்ற எண்ணத்தோடு பலர் தக்க மாற்றங்களைச் செய்யத் தொடங்கினர் என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

இவை மட்டுமில்லாமல் அதிரடி ஆய்வும் மேற்கொள்ளப்படுகிறது. அதனையும் காணலாம்.

# ஆங்கிலத்தில் குறிப்பு எழுதும் அதிகாரிகள்: தமிழ்க்குடிமகன் கோபம்

சென்னை, ஏப். 27— விட்டனர். மழலையர் பள்ளிக அப்புறப்படுத்துவேன்.

## இயல் - இருபத்தைந்து

# பறக்கும் படை ஆய்வு

முதலில் இந்தச் செய்தியைப் படியுங்கள் *"தினத்தந்தி"* 26/6/2000

காஞ்சிபுரம் மாவட்டத்தில் தமிழில் பெயர்ப்பலகைகள் உள்ளனவா?

அதிகாரிகள் திடீர் சோதனை

காஞ்சிபுரம், ஜுன். 26- காஞ்சிபுரம் மாவட்டத்தில் வணிக நிறுவனங்களின் பெயர்ப் பலகைகள் தமிழில் வைக்கப்பட்டுள்ளனவா? என்பதைக் கண்டறிய 28 பேர்களைக் கொண்ட அதிகாரிகள் குழுவினர் 'திடீர்' சோதனை நடத்தி வருகிறார்கள்.

இது குறித்து காஞ்சிபுரம் மாவட்டத்தில் உள்ள தமிழ் வளர்ச்சித் துறை வெளியிட்டுள்ள செய்திக் குறிப்பில் கூறப்பட்டு இருப்பதாவது:-

எங்கும் தமிழ்

காஞ்சிபுரம் மாவட்டத்தில் "எங்கும் தமிழ்! எதிலும் தமிழ்!" என்கிற தீவிர தமிழ் வளர்ச்சி முனைப்பு திட்டத்தின் கீழ் தமிழகத்திலுள்ள பல்வேறு மாவட்டங்களைச் சார்ந்த உதவி இயக்குநர்கள் உள்ளிட்ட 25 நபர்கள் கொண்ட குழுவினர் "அதிரடி ஆய்வு" மேற்கொண்டுள்ளனர். இதில் மகளிர் 8 பேர் உள்ளனர்.

இக்குழுவினர் காஞ்சிபுரம் மாவட்டத்தில் உள்ள அரசு அலுவலகங்களில் கடந்த 19 ஆம் தேதியிலிருந்து இதுவரை 218 அலுவலகங்களை ஆய்வுக்குட் படுத்தியுள்ளனர்.

பெயர்ப்பலகைகள்

இவர்கள் இப்பணியோடு வணிக நிறுவனங்களில், பெயர்ப்பலகைகள் தமிழில் உள்ளனவா? என்று நடந்தே சென்று, ஆய்வு செய்கிறார்கள். தமிழில் அல்லாத பெயர்ப்பலகை வைத்துள்ள வணிக நிறுவனங்களுக்கும், தொழிலாளர் நல வாரியத்திற்கும் வணிக வரி அலுவலருக்கும் தகவல் தந்து உடனடியாகத் தமிழில் பெயர் மாற்றிட அதிரடி நடவடிக்கை மேற்கொண்டு வருகின்றனர்.

தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கத்தை வலியுறுத்தி மாவட்டமெங்கும் தெருமுனைப் பிரசாரங்களையும், ஒட்டு வில்லைகளையும் கொண்டு தமிழைப் பரப்பி வருகின்றனர்.

30-ந் தேதிக்குள்

இந்தப் பெருமுயற்சிகளினால், ஜுன் 30-க்குள் காஞ்சிபுரம் மாவட்டத்தில் "எங்கும் தமிழ் எதிலும் தமிழ்" என்று தன்னிறைவு பெற்ற மாவட்டமாக தமிழ் வளர்ச்சி பண்பாடு - அறநிலையத்துறை அமைச்சர் மு. தமிழ்க்குடிமகன் அறிவிக்க இருப்பதால் காஞ்சி மாவட்ட கலெக்டர் அ. சுகுமாரன் தீவிர முனைப்புக் காட்டிடுமாறு இக்குழுவினரிடம் வலியுறுத்தியுள்ளார்.

அண்ணா பிறந்த மாவட்டமான காஞ்சிபுரம் மாவட்டத்தை ஆட்சி மொழிச் செயலாக்கத்தில் நூறு விழுக்காடு தமிழ் என்ற நிலை உருவாக்கிட, "அதிரடிப்படை" குழுவின் ஒருங்கிணைப்பாளராக இருக்கும் காஞ்சிபுரம் மாவட்ட உதவி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன், மாவட்ட கலெக்டரின் மேற்பார்வையில் தமது குழுவினரோடு தீவிரமாக ஈடுபட்டுள்ளனர்."

இவ்வாறு அதில் கூறப்பட்டுள்ளது.

தமிழை முழுமையான ஆட்சிமொழி ஆக்கும் பொருட்டு, அனைத்து மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களிலும் ஒரே நேரத்தில் நாலைந்து உதவி இயக்குநர்கள் அடங்கிய ஒரு குழு திடீரென்று சென்ற ஆய்வு நடத்தியது. 12.7.2000 நாளிட்ட 'தினத்தந்தி' இதழ் அமைச்சர் தமிழ்க்குடிமகன் ஆணையின் பேரில் த.வ. துறை இந்த முயற்சியை மேற்கொண்டது என்று குறிப்பிட்டது. மதுரையில் நடைபெற்ற ஆய்வுக் குறிப்புச் செய்தி இதோ.

தினந்தந்தி 12.7.2000

"அரசு அலுவலகங்களில் தஸ்தாவேஜுகள், தமிழில் பராமரிக்கப்படுகிறதா? மதுரையில் அதிகாரிகள் சோதனை"

மதுரை, ஜுலை, 12- மதுரை மாவட்டத்தில் அரசு அலுவலகங்களில் தஸ்தாவேஜுகள் தமிழில் பராமரிக்கப்படுகின்றனவா? என்று தமிழ் வளர்ச்சித்துறை அதிகாரிகள் சோதனை நடத்தி வருகிறார்கள்.

தமிழ்க்குடிமகன் உத்தரவு

2000 ஆண்டுக்குள் "எங்கும் தமிழ் எதிலும் தமிழ்" என்னும் சீரிய திட்டத்தினைச் செயல்படுத்துவது தொடர்பாக தமிழக அரசு தீவிர நடவடிக்கைகள் எடுத்து வருகிறது.

இதன் காரணமான அரசு அலுவலகங்களில் தஸ்தாவேஜுகள் தமிழில் பராமரிக்க வேண்டும் என்று அரசு உத்தரவிட்டு உள்ளது.

இந்த நிலையில் அரசு அலுவலகங்களில் தமிழ்த் திட்ட செயல்பாடுகள் குறித்து ஆய்வு நடத்துவதற்காக அமைச்சர் தமிழ்க்குடிமகன் உத்தரவின் பேரில் சென்னை தமிழ் வளர்ச்சி இயக்குநர் ஆலோசனைப்படி தனி பறக்கும் படை அமைக்கப்பட்டு உள்ளது.

அதிகாரிகள் ஆய்வு

சென்னைத் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர்கள் மாரியப்பன், தேவதாஸ் மற்றும் அதிகாரிகள் அடங்கிய இந்தப் பறக்கும் படையினர் மதுரையில் கடந்த 2 நாட்களாக அரசு அலுவலகங்களில் முன் அறிவிப்பு எதுவும் இன்றித் திடீர் ஆய்வு நடத்தினார்கள்.

அரசு அலுவலகங்களில் பதிவேடுகள், அனைத்து வகையான பட்டியல்கள், இணைப்புகள், அலுவலர், பணியாளர் கையொப்பங்கள், பயணநிரல் மற்றும் நாட்குறிப்புகள், பெயர்ப்பலகைகள், தகவல் பலகைகள், கோப்பு குறிப்புகள் ஆகியன தமிழில் உள்ளனவா? என்று ஆய்வு நடத்தினார்கள். மதுரை தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் பெ. சந்திரா மற்றும் அதிகாரிகள் கல்யாண சுந்தரி, பேபி சுந்தரி, அன்னபூரணி, செல்லப்பாண்டி ஆகியோர் இந்த ஆய்வுகளின்போது உடன் இருந்தார்கள்.

இந்த ஆய்வுப்பணி வருகிற 14-ந்தேதி வரை நடக்கிறது.

இந்த 3 நாட்களில் மதுரை மாவட்டத்தில் உள்ள அனைத்து அரசு அலுவலகங்களிலும் தமிழ் வளர்ச்சி அதிகாரிகள் அடங்கிய பறக்கும் படையினர் சென்று ஆய்வு நடத்துகிறார்கள்."

இந்த ஆய்வுகளை ஊக்குவித்தும் உடனிருந்து உதவிசெய்தும் பெரிதும் அக்கறை காட்டிய நெல்லை மாவட்ட ஆட்சியர் கி. தனவேல் இது தொடர்பாக ஓர் அறிக்கையே வெளியிட்டுள்ளார்.

தமிழ்ப் பயன்பாடு - மாவட்ட அலுவலகங்களில்
அதிகாரிகள் சிறப்பு ஆய்வு

திருநெல்வேலி, ஜுலை 16- தமிழகத்தில் தமிழ் ஆட்சி மொழித் திட்டத்தை முழுமையாகச் செயல்படுத்திடத் தமிழக அரசு தீவிரமாக செயல்பட்டு வருகிறது. இதற்காகப் பல்வேறு அதிரடி நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இப்போது இதில் தீவிர கவனம் செலுத்த அரசு ஒவ்வொரு மாவட்ட கலெக்டர்களுக்கும் அறிவுரை வழங்கியுள்ளது. இந் நிலையில் இது சம்பந்தமாக திருநெல்வேலி மாவட்ட கலெக்டர் தனவேல் விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:

எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்ற தமிழக அரசின் கொள்கையினை 2000ஆம் ஆண்டிற்குள் முழுமையாக அரசு அலுவலகங்களில் நடைமுறைப்படுத்த அரசு பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது. இதன் தொடர்ச்சியாக நெல்லை மாவட்டத்தில் உள்ள அனைத்து அரசு அலுவலகங்கள், கழகங்கள், வாரியங்கள் மற்றும் தன்னாட்சி நிறுவனங்கள் ஆகியவற்றில் எவ்வித முன்னறிவிப்பும் இன்றி ஆட்சிமொழித் திட்டத்தை செயல்படுத்துவது குறித்து தமிழ் வளர்ச்சித்துறை அலுவலர்கள் கடந்த 10 ஆம் தேதி முதல் அரசு அலுவலகங்களில் சிறப்பு ஆய்வு செய்து வருகின்றனர். இந்த ஆய்வு வரும் 21ஆம் தேதி வரை நடக்கிறது.

1956 ஆம் ஆண்டு ஆட்சிமொழிச் சட்டத்தில் தமிழ் முழுமையாக ஆட்சி மொழியாக அலுவல் மொழியாக அறிவிக்கப்பட்டு அதனை அலுவலகங்களில் அறிவிக்கை வாயிலாக நடைமுறைப்படுத்த அரசு வழிவகை செய்துள்ளது. அதன் தொடர்ச்சியாக ஆட்சிமொழித் திட்டத்தினை முனைப்புடன் அரசு அலுவலகங்களில் செயல்படுத்தப் பல்வேறு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டது. இந்த நடவடிக்கைகளுக்கு முத்தாய்ப்பு வைத்தாற்போல் தற்போது நடப்பாண்டிற்குள் எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்ற திட்டத்தினை அரசு அலுவலர் அனைவரின் ஒத்துழைப்புடன் நடைமுறைப்படுத்த நடவடிக்கை மேற்கொண்டுள்ளது. இந்த திட்டத்திற்கு அனைவரும் ஒத்துழைப்புக் கொடுக்க வேண்டும்.

தமிழக அரசின் ஆட்சிமொழிச் செயலாக்கத் திட்ட நோக்கம் நிறைவேறும் வகையில் அரசு அலுவலகங்கள், நிறுவனங்கள், வாரியங்கள் ஆகியவற்றில் 100க்கு 100 சதவீதம் தமிழில் அமையும் வகையில் ஒத்துழைக்க வேண்டும்." இவ்வாறு அதில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

அதே போலத் தூத்துக்குடி மாவட்ட ஆட்சியர் மாலிக் பெரோஸ்கான் மிகுந்த ஆர்வமும் அக்கறையும் எடுத்துக்கொண்டு ஓர் அறிக்கை விட்டுள்ளார். (தினமணி 9.7.2000)

அரசு அலுவலகங்களில் தமிழைக் கைவிட்டால் தக்க நடவடிக்கை
மாவட்ட ஆட்சியர் அதிரடி அறிவிப்பு

தூத்துக்குடி ஜூலை 9- தூத்துக்குடி மாவட்ட அரசு அலுவலகங்களில் தமிழைப் பயன்படுத்தவில்லை என்றால் தக்க நடவடிக்கை எடுக்கப்படும் என்று மாவட்ட ஆட்சியர் மு. மாலிக் பெரோஸ்கான் அதிரடி உத்தரவு பிறப்பித்துள்ளார்.

இது சம்பந்தமாக தூத்துக்குடி மாவட்ட ஆட்சியர் வெளியிட்டுள்ள செய்திக்குறிப்பில் தெரிவித்துள்ளதாவது:

தமிழக அரசு 2000-ம் ஆண்டிற்குள் 'எங்கும் தமிழ் எதிலும் தமிழ்' என்ற சிறப்பு திட்டங்களைத் தீட்டி செயல்பட்டு வருகின்றது. இதற்காக மாவட்டங்களில் ஆட்சிமொழித் திட்டத்தை விரிவுபடுத்தியுள்ளது. தமிழ் வளர்ச்சித்துறை அலுவலர்கள் இதற்காக முனைப்பாகச் செயல்பட்டு வருகிறார்கள்.

தமிழக அரசின் தன்னிகரில்லாத இத்திட்டம் வெற்றியடைய மாவட்டத்திலுள்ள அனைத்து அரசு அலுவலகங்களும் முழு ஒத்துழைப்புத் தரவேண்டும். தமிழ் வளர்ச்சித்துறை அதிகாரிகள் இதற்காக அரசு அலுவலகங்கள், கழகங்கள், வாரியங்கள் ஆகியவற்றில் ஆட்சிமொழித் திட்டம் செயல்படுத்துவது பற்றி, திடீர் ஆய்வுகளை மேற்கொள்ள உள்ளனர்.

மகாகவி பாரதியார், வ.உ.சி., உமறுப்புலவர் போன்ற தமிழ்மக்கள் பிறந்த நம் மாவட்டத்தில் தமிழை நடைமுறைப் படுத்துவதில் நம் மாவட்டம் முன்னோடியாகத் திகழ வேண்டும். அரசின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில் 100 சதவீதம் தமிழ் ஆட்சிமொழியாக விளங்கிட அரசுத்துறையினர் ஆதரவு கொடுக்க வேண்டும். கடந்த 1956-ஆம் ஆண்டு தமிழ் ஆட்சிமொழியாக அறிவிக்கப்பட்டு இத்தனை ஆண்டுகள் ஆகியும் முழுமையாக நடைமுறைக்கு வராதது வருந்தத்தக்க செய்தியாகும். எனவே 2000 ஆண்டிற்குள் 'எங்கும் தமிழ் எதிலும் தமிழ்' என்ற இலக்கை அடைவதற்கு அனைவரும் தங்கள் பங்களிப்பைத் தரவேண்டும் என்று அவர் தனது செய்திக்குறிப்பில் கூறியுள்ளார்.

'பாரதியார், வ.உ.சி., உமறுப்புலவர் போன்ற தமிழ் மக்கள் பிறந்த நம் மாவட்டத்தில் தமிழைப் பயன்படுத்துவதில் நாம் முன்னோடியாகத் திகழ வேண்டும்' என்று குறிப்பிட்டுள்ளார்.

மதுரையில் பறக்கும் படை ஆய்வு குறித்து 'The Hindu' இதழும் செய்தி வெளியிட்டுள்ளது.

## 'LANGUAGE SQUAD' VISITS VARIOUS DEPARTMENTS

MADURAI, JULY 17. The flying squad, formed to check whether Tamil is being 'totally'used in official works of Government departments in Madurai district, expressed satisfaction over the functioning of a few departments.

According to a press release, the squad, formed by the Department of Tamil Language and Culture to pursue its 'Tamil everywhere-2000'policy, found documents such as name boards, attendance registers, officials' notebooks, files and tour programmes in order. The Tamil usage was upto 90 per cent in certain departments, including the ESI headquarters hospital and noon-meal centres.

In the offices of Assistant Director (Panchayat Unions), Special Deputy Collector (Stamps) and the Kallar Reclamation, the Tamil usage was upto 50 per cent. However, majority of works in the Departments of Adi Dravidar Housing Board and TNEB head office (distribution) were found using English.

The squad instructed officials of the treasury office to maintain all registers and documents in Tamil. They also warned that severe action would be initiated against those who did not comply with the order. The officials who were present in the squad included Mr. M. Mariappan, Mr. K. Devadoss and Ms. P. Chandra.

மின் வாரியம் ஆதி திராவிடர் வீட்டு வசதிவாரியம் போன்றவை ஆங்கிலத்தை இன்றும் விடவில்லை. உதவி இயக்குநர் (ஊ. ஒன்றியம்) கள்ளர் சீரமைப்பு ஆகிய துறைகளில் தமிழ் 50% மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளது.

இவை, ஆய்வில் கண்டறியப்பட்டு எச்சரிக்கை செய்யப்பட்டது.

'They also warned that severe action would be initiated against those who did not comply with the order" - இந்து வெளியிட்ட செய்தி.

இவ்வகையில் எங்கள் முயற்சி எவ்வளவு கடுமையாக அமைந்துள்ளது என்பதை உணரலாம்.

இந்த அதிரடி ஆய்வுகள் முதலில் காஞ்சிபுரம் மாவட்டத்திலும், திருவாரூர் மாவட்டத்திலும் எடுத்துக்கொள்ளப்பட்டன. அறிஞர் அண்ணாவின் மாவட்டம் - கலைஞரின் மாவட்டம் என்பதால் இவை முதலில் ஆய்வுக்குள்ளாயின.

காஞ்சிபுரத்தில் 399 அலுவலகங்களும் திருவாரூரில் 326 அலுவலகங்களும் ஆய்வு செய்யப்பட்டன - இவை இரண்டும் சூன் 2000 த்தில் முடிக்கப்பட்டன.

அடுத்து சூலை 2000த்தில் 9 மாவட்டங்கள் எடுத்துக்கொள்ளப்பட்டன. இந்த மாவட்டங்களில் 2432 அலுவலகங்கள் ஆய்வு செய்யப்பட்டன.

அடுத்து ஆகச்டு 2000த்தில் 5 மாவட்டங்கள் ஆய்வு செய்யப்பட்டன. எங்களுடைய இந்தப் பறக்கும்படை ஆய்வு குறித்து எல்லாச் செய்தித்தாள்களும் நல்ல முறையில் செய்திகளை வெளியிட்டன. தினத்தந்தி (வேலூர்) 13.7.2000 - தந்த செய்தியை அப்படியே தந்துள்ளேன்.

அரசு அலுவலகங்களில் கடிதப்போக்குவரத்து தமிழில் உள்ளதா?
ஆய்வு செய்யத் தனிப்படை அமைப்பு

வேலூர், ஜூலை.13 - அரசு அலுவலகங்களில் கடிதப் போக்குவரத்து தமிழ் மொழியில் உள்ளதா? என ஆய்வு செய்யத் தனிப்படை அமைக்கப்பட்டது.

ஆய்வுக்கூடம்

தமிழ்நாட்டில் 2000-ம் ஆண்டுக்குள் எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்பது அரசின் திட்டம் ஆகும். வேலூர் மாவட்டத்திலுள்ள அரசு அலுவலகங்களில் செயல்பாடுகள் அனைத்தும் தமிழில் இருக்க வேண்டும் என்பதற்காக அனைத்துத்துறை அதிகாரிகள் தமிழ் வளர்ச்சித்துறை அதிகாரிகள் கலந்து கொண்ட கலந்தாய்வுக் கூட்டம் வேலூர் மாவட்ட கலெக்டர் அலுவலகவளாகக் கூட்ட அரங்கில் நடந்தது.

கூட்டத்துக்கு மாவட்ட கலெக்டர் தலைமை தாங்கினார்

கூட்டத்தில் தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டு பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது :-

தமிழ் தொன்மையான மொழி, சுதந்திரத்திற்குப்பின் மாநிலங்கள் மொழிவாரி மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டன. குடியாட்சித் தத்துவப்படி மக்களுக்குப் புரியும் மொழியில் அரசின் செயல்வரைவுகள் இருக்கவேண்டும்.

அதனால் தமிழ்நாட்டில் தமிழ் ஆட்சி மொழியாக அறிவிக்கப்பட்டு அனைத்துச் செயல்பாடுகளும் தமிழில் இருக்க வேண்டும் என அரசு ஆணை பிறப்பித்துள்ளது. தட்டச்சு மறைந்து கணினி மயமாகும் இந்நாளில் ஆங்கிலம், வேறு சில மொழிகளை விட தமிழ் மொழியினைக் கணினிகள் புரிந்து ஏற்றுக் கொள்கின்றன.

வேலூரில்

உலகில் அதிக அளவில் கணினி மென்பொருள் தமிழில் உருவாக்கப்பட்டுள்ளது. சட்டம் ஒழுங்கைக் காப்பாற்ற அரசு அதிகாரிகள் செயல்பாடுகள் தமிழில் இருக்கவேண்டும். வேலூரில் 90-95 சதவீதம் நடைமுறையில் உள்ளது. ஜுன் 2000-த்திற்குள் கருவூலம் முதல் அனைத்து அலுவலகங்களிலும் 100 சதவீதம் தமிழ் மொழி வழிச் செயல்பாடுகள் இருக்க முயல வேண்டும். அரசு அலுவலகங்களில் அனைத்துக் கடித போக்குவரத்துக்கள் தமிழில் உள்ளதா? என்று திடீர் ஆய்வுகள் 11.7.2000 முதல் 21.7.2000 வரை நடத்திட ஒரு அதிரடிப் படை அமைக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு அவர் கூறினார்.

அதிகாரிகள்

மாவட்ட வருவாய் அதிகாரி ஆ. பாரதிதாசன், கூடுதல் கலெக்டர் (வளர்ச்சி) தர்மேந்திர பிரசாத் யாதவ், தமிழ் வளர்ச்சித்துறை உதவி இயக்குநர் உமா மகேசுவரி மற்றும் பல்வேறு அரசுத்துறை அதிகாரிகள் ஆகியோர் கலந்து கொண்டனர்.

அடுத்து 14.7.2000 தினத்தந்தியில் திருவள்ளூர் மாவட்டம் பற்றிய செய்தி - படியுங்கள்

## திருவள்ளூர் மாவட்டத்தில் இந்த ஆண்டு இறுதிக்குள் தமிழை முழுமையாகப் பயன்படுத்த வேண்டும் - தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் அறிவிப்பு

திருவள்ளூர், ஜுலை. 14- திருவள்ளூர் மாவட்டத்தில் அரசு நிர்வாகத்தில் இந்த ஆண்டு இறுதிக்குள் 100 சதவீதம் தமிழைப் பயன்படுத்த வேண்டும் என்று தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் தெரிவித்துள்ளார்.

தமிழ் பயன்பாடு

திருவள்ளூர் மாவட்டம் - கலெக்டர் அலுவலகக் கூட்ட அரங்கில் "தமிழ்ப் பயன்பாடு" குறித்து ஆய்வுக்கூட்டம் நடைபெற்றது. மாவட்டத்தில் உள்ள பல்வேறு அரசுத் துறை அலுவலகங்களில் தமிழ் எந்த அளவில் பயன்படுத்தப்படுகிறது என்பது பற்றி அவர் கேட்டறிந்தார்.

தலைமை தாங்கிய கலெக்டர் பேசும்போது கூறியதாவது :-

அரசின் கொள்கையான "எங்கும் தமிழ் எதிலும் தமிழ்" என்ற நிலைப்பாடு நம் மாவட்ட நிர்வாக செயல்பாட்டில் தமிழ் எந்த அளவு பயன்படுத்தப்படுகிறது என்பதை ஆய்வு செய்யவே இந்தக் கூட்டம் நடைபெறுகிறது.

தமிழில் பதில் எழுத வேண்டும்

தமிழைப் பயன்படுத்துவதில் உங்களுக்கு ஏதாவது சிரமம் இருப்பின் அதனைத் தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநரிடம் தெரிவிக்கலாம்.

அலுவலகங்களில் பயன்படுத்தப்படும் பல்வேறு படிவங்களில் ஆங்கிலம் இருந்தாலும் தமிழில் பதில் எழுதி அனுப்பவேண்டும். மிக முக்கியமாக அனைத்து அலுவலகங்களிலும் அலுவலர்களும், ஊழியர்களும் தமிழில் கையெழுத்திட வேண்டும்.

இவ்வாறு கலெக்டர் கூறினார்.

பயன்டுத்தவில்லை

தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் ராசேந்திரன் பேசியதாவது:-

"ஆட்சிமொழித் திட்டம் செயல்படுத்த 40 வருடங்களுக்கு முன்பு சட்டம் இயற்றப்பட்டது. ஆனால் சட்டத்தை மதித்துத் தமிழைப் பயன்படுத்தவில்லை, அதில் ஏனோ தயக்கம் உள்ளது.

கடும் நடவடிக்கை

திருவள்ளூர் மாவட்டத்தைப் பொறுத்தவரை அரசு அலுவலகங்களில் தமிழை அதிகபட்சம் 90 சதவிதம் பயன்படுத்துகிறார்கள். இதை 100 சதவீதமாக மாற்ற கடும் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

நம் தமிழ்மொழி தொன்மையும், சீரும் சிறப்பும் நிறைந்த செம்மொழி. இதனைப் பயன்படுத்துவதில் ஏன் தயக்கம்? இனித் தயக்கம் வரவேகூடாது.

மொழிவாரி மாநிலம்

நம் நாட்டில் அவரவர் தாய்மொழியின் சிறப்புக் கருதியே மொழிவாரி மாநிலங்களைப் பிரித்து அந்தந்த மாநிலங்களில் அவரவர் தாய்மொழியை ஆட்சிமொழியாக ஏற்படுத்தியுள்ளனர்.

அதை மதிக்க வேண்டிய நாம் மீறிக் கொண்டிருக்கிறோம். இது சட்டத்திற்கே விரோதம் ஆகும். ஒளிவுமறைவு அற்ற ஆட்சி நடத்திடவும், இடைத் தரகர்கள் ஆதிக்கத்தை ஒழித்திடவும் பாமர மக்களும் புரிந்து கொள்ளும் வகையில் தாய்மொழியான தமிழில் அல்லவா பேசுவதும் எழுதுவதும் இருத்தல் வேண்டும்.

குண்டர் சட்டம்

ஒரே தவற்றை இரண்டு மூன்று முறை செய்தால் கலெக்டர் குண்டர் சட்டத்தில் போடுகிறார். ஆனால் நம் தமிழை 40 ஆண்டு கால ஆட்சிமொழியாக இருந்தும் 21 ஆண்டுகளுக்கு முன்பே தமிழில் கையெழுத்துப் போடவேண்டும் என்று அரசு ஆணை பிறப்பித்தும், இன்றும் தமிழ்ப் பயன்பாடு குறித்து கூட்டம் நடத்தும் நிலை உள்ளது.

100 சதவீதம்

இனி நாம் தமிழைக் கட்டாயமாக செயல்படுத்த வேண்டிய நிலையில் உள்ளோம். நாம் இந்த மாவட்டத்தில் வரும் டிசம்பர் இறுதிக்குள் 100 சதவீத அளவில் தமிழ்ப் பயன்பாட்டினை செயல்படுத்தியே ஆக வேண்டும்.

இவ்வாறு அவர் கூறினார்.

இந்த நிகழ்ச்சியில் தமிழ் வளர்ச்சித்துறை உதவி இயக்குநர்கள் கண்ணபுரகண்ணன், சு.பெ. ராணி உள்பட அனைத்துத்துறை அலுவலர்கள் கலந்து கொண்டனர்.

15.7.2000 தினத்தந்தியில் மதுரை மாவட்டம் பற்றிய செய்தி வந்துள்ளது.

தலைப்பே அதிர்வுதான்!

### ஆங்கிலம் மூலம் பணிகள் செய்வதா? அரசு அதிகாரிகளுக்கு தமிழ் வளர்ச்சித்துறை எச்சரிக்கை

மதுரை, ஜுலை. 15 - ஆங்கில மொழி மூலம் பணிகள் செய்யும் அரசு அதிகாரிகள் மீது கடும் நடவடிக்கை எடுக்கப்படும் என்று தமிழ் வளர்ச்சித்துறையினர் எச்சரித்து உள்ளனர்.

'எங்கும் தமிழ் எதிலும் தமிழ்'

2000 ஆண்டுக்குள் எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்ற திட்டத்தை நிறைவேற்ற அரசு தீவிர நடவடிக்கை எடுத்து வருகிறது. அமைச்சர் தமிழ்க்குடிமகன், தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர்

ராசேந்திரன் ஆகியோர் உத்தரவுகளுக்கு இணங்க அரசு அலுவலகங்களில் தமிழ் மொழிச் செயலாக்கம் பற்றி ஆய்வு நடத்தத் தனிப் பறக்கும் படை அமைக்கப்பட்டுள்ளது.

தமிழ் வளர்ச்சித்துறை உதவி இயக்குநர்கள் மாரியப்பன், தேவதாஸ், சந்திரா மற்றும் உதவி அதிகாரிகள் கொண்ட இந்தப் பறக்கும் படையினர் மதுரை மாவட்டத்தில் கலெக்டர் தங்கவேலு ஒத்துழைப்புடன் கடந்த 5 நாட்களாக அரசு அலுவலகங்களில் முன் அறிவிப்பு இன்றித் தீவிர சோதனை நடத்தினார்கள்.

பாராட்டு

இந்த ஆய்வின் போது அலுவலகப் பெயர்ப்பலகை, வருகைப் பதிவேடு, அலுவலர்கள் நாட்குறிப்பு, முன்பயணத் திட்டம், அலுவலக உத்தரவுகள், கோப்புகள் அனைத்தையும் பறக்கும் படையினர் பார்வையிட்டனர்.

ஆய்வின் போது தொழிலாளர் அரசு ஈட்டுறுதித்தலைமை மருத்துவமனை அலுவலகம், சத்துணவு அலுவலகம் ஆகியவற்றில் 90 சதவீதத்திற்கும் மேற்பட்ட பணிகள் தமிழில் நடைபெறுவதை பாராட்டியதோடு மீதமுள்ள பணிகளையும் தமிழில் நடைமுறைப்படுத்த அறிவுறுத்தினர்.

ஆங்கிலம்

உதவி இயக்குநர் (ஊராட்சிகள்) அலுவலகம், தனித்துணை ஆட்சியர் (முத்திரைத்தாள்) அலுவலகம், தனித்துறை ஆட்சியர் (கள்ளர் சீரமைப்பு) அலுவலகம் போன்றவற்றில் 50 சதவீதப் பணிகள் மட்டுமே தமிழில் நடைபெற்று வருவதும் கண்டுபிடிக்கப்பட்டது.

தமிழ்நாடு ஆதிதிராவிடர் வீட்டு வசதி மேம்பாட்டு வாரியம், மின்வாரிய தலைமைப் பொறியாளர் (பகிர்மானப் பிரிவு) அலுவலகம், மேற்பார்வைப் பொறியாளர் (பொது நிர்மாணப் பிரிவு) அலுவலகங்களில் பெரும்பாலான பணிகள் ஆங்கிலம் வாயிலாகவே நடைபெறுவது தெரியவந்தது.

மேற்கண்ட அலுவலகங்களில் அனைத்துப் பணிகளும் தமிழில் நடைபெற நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.

எச்சரிக்கை

மதுரை மாவட்ட சம்பளக் கணக்கு அலுவலகத்தில் பறக்கும் படையினர் ஆய்வு செய்தனர். அங்கு சம்பளப்பட்டியல்கள் பயணப்படி பட்டியல்கள், சில்லறைச் செலவினப் பட்டியல்கள், பொது வைப்புநிதி, முன்பண பட்டியல் உள்ளிட்ட அனைத்து வகையான பட்டியல்களும், இணைப்புகளும் தமிழில் மட்டுமே இருக்க வேண்டும் எனவும், தமிழில் வராத பட்டியல்களை ஏற்கக் கூடாது எனவும் அறிவுரைகள் வழங்கப்பட்டது.

தமிழில் பட்டியல்கள் கொடுக்காத அலுவலகத்தின் மீது தமிழ் வளர்ச்சித் துறையினர் மூலம் கடும் நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்று எச்சரிக்கை செய்யப்பட்டது.

14.7.2000 தினமணியில், வந்த செய்தி இது.

அரசு அலுவலகங்களில் தமிழ் ஆட்சிமொழி திட்ட பறக்கும் படையினர் திடீர் ஆய்வு

மதுரை, ஜூலை. 13

மதுரை மாவட்டத்திலுள்ள அனைத்துத் துறைகளையும் சார்ந்த அரசு அலுவலகங்களில் தமிழ் ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கப் பறக்கும் படையினர் முன்னறிவிப்பின்றி ஆய்வு செய்தனர்.

இது குறித்து மதுரை மாவட்ட தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் பெ. சந்திரா தெரிவித்துள்ளதாவது:

ஆய்வின்போது அலுவலகப் பெயர்ப்பலகை, வருகைப் பதிவேடு, அலுவலர்களின் நாட்குறிப்பு, முன்பயணத்திட்டம், அலுவலக ஆணைகள், கோப்புகள் அனைத்தையும் பறக்கும் படையினர் பார்வையிட்டு, அனைத்துப் பணிகளும் தமிழில் நடைபெற்று வருகின்றனவா என ஆய்வு செய்தனர்.

இந்த அலுவலகங்களில் அனைத்துப் பணிகளும் தமிழில் நடைபெற நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

15.7.2000 தினகரனிலும் விரிவான செய்திகள் வந்துள்ளன.

'தினகரன்' செய்தியைப் படியுங்கள்.

தமிழ்த் திட்ட செயல்பாடு : பறக்கும் படை ஆய்வு

மதுரை, ஜூலை. 15 -

அரசு அலுவலகங்களில் தமிழ்த் திட்ட செயல்பாடு குறித்து மதுரை மாவட்டத்தில் உள்ள அனைத்துத் துறைகளையும் சார்ந்த அரசு அலுவலகங்களில் ஆட்சிமொழித் திட்ட செயலாக்க ஆய்வு பறக்கும் படையினரால் முன் அறிவிப்பின்றி ஆய்வு நடந்தது. இதன்படி அலுவலகங்களில் பராமரிக்கக்கூடிய பதிவேடுகள் அனைத்து வகையான பட்டியல்கள் மற்றும் இணைப்புகள் அலுவலர், பணியாளர் கையொப்பம், கோப்பு குறிப்புகள் போன்றவை தமிழில் உள்ளனவா? என ஆய்வுக்குழுவினர் ஆராய்ந்து பார்த்தனர்.

தினகரன் 15.7.2000

**தமிழ்நாட்டில் பட்டியல் தராத அரசு அலுவலகங்கள் மீது கடும் நடவடிக்கை தமிழ் வளர்ச்சித்துறை எச்சரிக்கை**

மதுரை, ஜுலை.15 -

அரசு அலுவலகங்களில் சம்பளப்பட்டியல்கள், பயணப்பட்டியல்கள் போன்றவற்றை தமிழில் கொடுக்காத அலுவலகங்கள் மீது தமிழ் வளர்ச்சித்துறை பறக்கும் படையினர் கடும் நடவடிக்கை எடுப்பார்கள் என்று மதுரை மாவட்ட தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் எச்சரிக்கை விடுத்து இருக்கிறார்.

பறக்கும் படையினர்

இந்த உத்தரவை தொடர்ந்து மதுரை மாவட்ட ஆட்சித்தலைவர் தங்கவேலு உத்தரவின் பேரில் மதுரை மாவட்டத்தில் உள்ள அனைத்து துறைகளையும் சேர்ந்த அரசு அலுவலகங்களில் தமிழ் ஆட்சி மொழித் திட்ட செயலாக்க பறக்கும் படையினர் முன் அறிவிப்பின்றி சோதனை நடத்தி வருகின்றனர்.

அனைத்தும் தமிழில்

இந்த சோதனையின்போது அலுவலக பெயர் பலகைகள், வருகைபதிவேடு அலுவலர்களின் நாட்குறிப்பு, முன்பயணத்திட்டம், அலுவலக கோப்புகள் போன்றவற்றைப் பறக்கும் படையினர் பார்வையிட்டு அனைத்துப் பணிகளும் தமிழில் நடைபெற்று வருகிறதா? என்பதை சோதனை நடத்தினார்கள்.

கடும் நடவடிக்கை

தமிழில் பட்டியல்களை கொடுக்காத அலுவலகத்தின் மீது தமிழ் வளர்ச்சித்துறையினர் கடும் நடவடிக்கை எடுப்பார்கள்.

தொடர்ந்து தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கத் திட்ட பறக்கும் படையினர் மதுரை மாவட்டத்தில் உள்ள அரசு அலுவலகங்களில் திடீர் சோதனையில் ஈடுபடுவார்கள்.

இந்த தகவலை மதுரை மாவட்டத் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் பெ. சந்திரா விடுத்து உள்ள அறிக்கையொன்றில் கூறி இருக்கிறார்.

அதேபோல, 'இந்து' 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' இதழ்களும் செய்திகளை வெளியிட்டன.

INDIAN EXPRESS

Wednesday, July 19, 2000, Flying squad visits offices

A flying squad formed by the Department of Tamil Language and Culture to monitor the total usage of Tamil language in the State administration inspected various offices in the district today. The squad visited the office of PA to Collector (Agriculture), Madurai District

Co-operative Milk Dairy, Deputy Director, Vilangudi Panchayat Office and the Assistant Engineer's Office of Madurai South. Some of the names and information boards in English were removed and direction were given to replace them in Tamil, according to a press release.

அதுமட்டுமன்றி, 21.7.2000 ஆம் நாளிட்ட 'தினமலர்' ஒரு செய்தியைத் தருகின்றது.

ஆங்கில ரப்பர் ஸ்டாம்புகளுக்கு சீல் - தமிழ் வளர்ச்சித்துறையின் சாதனை

"மதுரை, ஜூலை 21

மதுரை மாவட்ட அரசு அலுவலகங்களில் உள்ள ஆங்கில ரப்பர் ஸ்டாம்புகளை பறிமுதல் செய்த தமிழ் வளர்ச்சித்துறையினர் அவற்றுக்கு சீல் வைத்தனர்.

மதுரை மாவட்ட அரசு அலுவலகங்களில் தமிழ் வளர்ச்சித்துறையினர் கடந்த 10ம் தேதி முதல் திடீர் சோதனைகளை நடத்தினர்.

அப்போது அரசு அலுவலகங்களில் பயன்படுத்தப்பட்டு வந்த ஆங்கில ரப்பர் ஸ்டாம்புகளை பறிமுதல் செய்து அவற்றை கவரில் போட்டு சீல் வைத்து, இனி அவற்றைப் பயன்படுத்தக்கூடாது என்று அறிவுறுத்தினர்.

இனி அரசு அலுவலகங்களில் தமிழைத் தவிர வேறு மொழிகளை பயன்படுத்தும் அலுவலர்கள் மீது கடும் நடவடிக்கை எடுக்க பரிந்துரைக்கப்படும் என்றும் தமிழ் வளர்ச்சித் துறையினர் தெரிவித்துள்ளனர்."

இப்படி ஒருசில நடவடிக்கைகளையாவது கடுமையாக எடுத்தால்தான் அலுவலர்கள் சரியாக வருவார்கள் என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை உடையவன் நான்.

அடுத்து, சேலம் மாவட்ட ஆய்வின் போது வந்த செய்திகள் - 4.8.2000 நாளிட்ட தினமணி, மாலை முரசு, தினமலர் ஆகிய இதழ்கள் எங்கள் நடவடிக்கை குறித்த செய்திகளை விரிவாக எடுத்துரைத்தன.

தினமணி 4.8.2000

டிசம்பருக்குள் அரசுத் துறைகளில் தமிழ் ஆட்சி மொழி
தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் தகவல்

சேலம், ஆக.3 -

தமிழ் ஆட்சிமொழி அமலாக்கம் தொடர்பாக சேலம் மாவட்ட நிலையிலான அலுவலர்கள் கூட்டம் வியாழக்கிழமை நடைபெற்றது. இதில் தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் ம. இராசேந்திரன் மாவட்ட ஆட்சியர் முகமது நசிமுத்தின் ஆகியோர் பங்கேற்றனர்.

பின்னர் ராசேந்திரன் நிருபர்களிடம் கூறியதாவது:-

"தற்போது எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்ற திட்டம் மேற்கொள்ளப்பட்டு முனைப்பாகச் செயல்படுத்தப்பட்டு வருகிறது. இந்த ஆண்டு இறுதிக்குள் 100 சதவீதம் அமலாக்கப்படும்.

ஒவ்வொரு மாவட்டமாக இதனை அமல்படுத்த இலக்கு நிர்ணயிக்கப்பட்டு இதுவரை திருவாரூர், காஞ்சிபுரம் உள்பட 11 மாவட்டங்களில் அரசு நிர்வாகம் அனைத்தும் தமிழிலேயே நடைபெறுவதற்கு நடவடிக்கை எடுக்கும் பணி முடிந்து இருக்கிறது.

இதில் காஞ்சிபுரம் மாவட்டம் முன்னணியில் இருக்கிறது.

சேலம் மாவட்டத்தில் இம்மாத இறுதிக்குள் அரசு நிர்வாகப் பணிகள் அனைத்தும் தமிழிலேயே நடைபெறவேண்டும் என்று அறிவுரை கூறப்பட்டு இருக்கிறது.

இதன்படி கோப்புகள் அனைத்தும் தமிழிலேயே இருக்கவேண்டும். பதிவேடுகள் தமிழிலேயே இருக்கவேண்டும். அதிகாரிகள் தமிழிலேயே கையெழுத்து இடவேண்டும்.

முதல் முறையாக தலைமைச் செயலகமும், தமிழ் மொழிநிர்வாக ஆய்வுக்காக எடுக்கப்பட்டது. இதில் முதற்கட்ட ஆய்வின்போது தமிழ் நடவடிக்கை 40 சதவீதம்தான் இருந்தது. 2-வது கட்ட ஆய்வின் போது அது 80 முதல் 90 சதவீதம் அளவிற்கு உயர்ந்து இருக்கிறது.

நிர்வாகத்தில் தமிழ்மொழியை முழுமையாக அமல்படுத்துவதில் சில விலக்குகளும் அளிக்கப்பட்டுள்ளன.

இதன்படி மாநில அரசில் இருந்து மத்திய அரசுக்கு எழுதும் கடிதங்கள், அதுபோல பிற மாநிலங்களுக்கு எழுதும் கடிதங்கள், போக்குவரத்து உரிமங்கள் போன்றவற்றுக்கு விதிவிலக்கு அளிக்கப்பட்டுள்ளது.

இதில் அரசுத் துறைகளில் தமிழில் நடவடிக்கைகளை முழுமையாக அமல்படுத்தாத அதிகாரிகள் மீது நடவடிக்கையும் எடுக்கப்படும்.

தனியார் நிறுவனங்கள், கடைகள் வைத்திருப்போர் தமிழில் பெயர்ப்பலகை வைக்கவேண்டும். அதோடு அவர்கள் விரும்புகிற மொழியிலும் எழுதிக்கொள்ளலாம். தமிழ்ப்படுத்த முடியாத வார்த்தைகளை ஆங்கிலத்தில் இருப்பது போல தமிழிலும் எழுதிக்கொள்ளலாம்.

மாலை முரசு 4.8.2000

## அரசுத் துறைகளில் முழுமையாக தமிழை அமுல்படுத்தாத அதிகாரிகள்மீது நடவடிக்கை : இயக்குநர் தகவல்

சேலம், ஆக.4 -

அரசுத்துறைகளில் முழுமையாக தமிழை அறிமுகப்படுத்தாத அதிகாரிகள் மீது தக்க நடவடிக்கை எடுக்கப்படும் என்று சேலத்தில் நிருபர்களுக்கு தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் பேட்டியளிக்கும்போது தெரிவித்தார்.

அப்போது அவர் கூறியதாவது

எங்கும் தமிழ் எதிலும் தமிழ்

1956-ம் வருடம் ஆட்சிமொழிச் சட்டம் இயற்றப்பட்டது. 57-ம் ஆண்டு முதல் நடைமுறைப்படுத்தப்பட்டது. ஆனால் 43 ஆண்டு ஆகியும் அரசு விரும்புகிறபடி 100 சதவீதம் அமுல்லாக்கத்தை எட்டமுடிய வில்லை. எல்லா ஆட்சிக் காலத்திலும் இதே நிலைதான் உள்ளது. எனவே இந்த ஆண்டு இறுதிக்குள் 100-க்கு 100 சதவீதம் எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்ற திட்டம் மேற்கொள்ளப்பட்டு முனைப்பாகச் செயல்படுத்தப்பட்டு வருகிறது.

இந்த மாத இறுதிக்குள்...

சேலம் மாவட்டத்தைப் பொறுத்த வரையில் இந்த மாத இறுதிக்குள் அனைத்தும் தமிழிலேயே நடைபெற வேண்டும் என்று கூறப்பட்டு இருக்கிறது. இதன்படி கோப்புகள் அனைத்தும் தமிழிலேயே இருக்க வேண்டும். பதிவேடுகள் தமிழிலேயே இருக்க வேண்டும். அதிகாரிகள் தமிழிலேயே கையெழுத்து இடவேண்டும்.

முக்கிய நோக்கம்

முழுக்க, முழுக்கத் தமிழில் கொண்டு வரும் நோக்கம் அரசு நிர்வாகத்தை பற்றிய முழு தகவலையும் சாதாரண, மக்கள் அறிந்து கொள்ள வேண்டும். நிர்வாகத்தில் இடைத்தரகர்கள் ஒழிக்கப்படவேண்டும் என்பதே இதன் முக்கிய நோக்கமாகும்.

நடவடிக்கை

இதில் அரசுத்துறைகளில் முழுமையாக அமுல்படுத்தாத அதிகாரிகள் மீது நடவடிக்கையும் எடுக்கப்படும்.

இவ்வாறு அவர் பேசினார்.

தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கருத்துக்களை ஒரு முறை பார்க்கலாம். 'His master's voice' என்பதைப் போல இந்த நேர்காணலில் தமிழ்க்குடிமகனின் குரல் கண்டிப்புடன் ஒலிப்பதைக் காணலாம்.

இப்படி எல்லா மாவட்டங்களிலும் அதிரடி ஆய்வு மேற்கொண்டனர். 10.8.2000 அன்று தமிழ் வளர்ச்சி இயக்குநர் இத்திட்டம் குறித்த குறிப்புரையை என் பார்வைக்கு அனுப்பியிருந்தார்.

பல ஆண்டுகளாக இயல்பான ஆய்வு, ஆய்வுக் குறிப்பு, அதற்குத் தொடர்புடைய அலுவலர்களின் குறிப்பு என்று செக்குச் சுற்றிய மாடாகவே இயங்கி வந்தோம். ஆனால் பெரும்பயன் விளையவில்லை.

தனி அமைச்சகம் அமைந்தபின் நான் கொடுத்த ஊக்கத்தில், நான் பாதுகாப்பேன், பாராட்டுவேன் என்னும் நம்பிக்கையில் என் அலுவலர்கள் எடுத்த முயற்சிதான் 'பறக்கும்படை ஆய்வு' - 2000க்குள் "எங்கும் தமிழ் எதிலும் தமிழ்" என்பதைக் கொண்டு வருவதில் நாங்கள் எடுத்த உச்சகட்ட முயற்சி இது.

* * *

23.12.2000 நாளிட்ட 'கதிரவன்' இதழ்ச் செய்தியை அப்படியே தருகிறேன்.

'எங்கும் தமிழ்; எதிலும் தமிழ்' கொள்கையை அமுல்படுத்த
அரசு அலுவலகங்களில் அதிரடி சோதனை;
கோப்புகளை தமிழில் எழுத அதிகாரிகளுக்கு உத்தரவு

சென்னை, டிச.23 -

சென்னையில் உள்ள அரசு அலுவலகங்களில் தமிழ் வளர்ச்சித்துறை அதிகாரிகள் திடீர் ஆய்வு நடத்தினார்கள். பின்னர் அரசு அலுவலகங்களில் கோப்புகளைத் தமிழில் எழுத சிபாரிசு செய்தனர்.

இதுபற்றிய விவரம் வருமாறு:-

எங்கும் தமிழ் எதிலும் தமிழ்

எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்ற கொள்கைகளுக்கேற்ப அரசு அலுவலகங்களில் எழுதப்படும் கோப்புகளைத் தமிழில் எழுத வேண்டும் என்பது அரசு ஆணை.

இதன் அடிப்படையில் தமிழ் வளர்ச்சித்துறை அதிகாரிகள் தமிழ்நாட்டில் உள்ள அனைத்து மாவட்டங்களிலும் அரசு அலுவலகங்களில் அதிரடி ஆய்வு நடத்தமுடிவு செய்யப்பட்டது. இதன் அடிப்படையில் முதல்கட்ட நடவடிக்கையாக தஞ்சாவூர், திருவாரூர் பகுதிகளில் உள்ள அரசு அலுவலகங்களில் அதிகாரிகள் அதிரடி ஆய்வு நடத்தினர்.

ஆய்வுக்குழுவின் அதிரடி சோதனை

தமிழ்நாட்டில் உள்ள 29 மாவட்டங்களிலும் உதவி இயக்குநர்கள் தலைமையில் அரசு அலுவலகங்களில் ஆய்வு நடத்த அந்தந்த மாவட்ட கலெக்டர்கள் வாகனங்களை தந்து

உதவியுள்ளார்கள். 5 பேர் கொண்ட தமிழார்வக்குழுவினர் எந்தவித முன்னறிவிப்பும் இன்றி அரசு அலுவலகங்களுக்குச் சென்று திடீர் ஆய்வு நடத்தினார்கள்.

இதுவரை 28 மாவட்டங்களிலும் இந்த அதிரடி ஆய்வு நடத்தப்பட்டது. அரசு அலுவலர்கள், அதிகாரிகள் என அனைத்து தரப்பினரையும் சந்தித்து அலுவலகங்களில் கோப்புகளில் தமிழைத்தான் கையாள வேண்டும் என அறிவுரை வழங்கப்பட்டது.

கடைசியாக, சென்னையில் உள்ள அரசு அலுவலகங்களில் இந்த அதிரடி ஆய்வு நடத்தப்பட்டு வருகிறது. தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் முனைவர் ராசேந்திரன் தலைமையில் 8 குழுக்கள் சென்னையில் அரசு அலுவலகங்களில் ஆய்வு நடத்த உள்ளனர்.

ஒரு குழுவில் 3லிருந்து 4 உதவி இயக்குநர்கள் 2 துணை இயக்குநர்கள் இருப்பார்கள். இவர்கள் சென்னையில் உள்ள அரசு அலுவலகங்களுக்கு முன் அறிவிப்பு இன்றித் திடீரென்று செல்வார்கள்.

அங்கு அதிகாரிகள் முதல் கடைநிலைப் பணியாளர்கள் வரை ஒன்றாக சேர்ந்து கோப்புகளில் தமிழில் பயன்படுத்துகிறார்களா என கேட்டும் பார்த்தும் தெரிந்து கொள்வார்கள். பிறகு அவர்களுக்கு தமிழ் எழுத்துகளை பயன்படுத்துமாறு அறிவுரை வழங்குவார்கள்.

தமிழக தலைமைச் செயலகத்திலேயே இந்த ஆய்வு நடத்தப்பட்டிருப்பது தமிழக வரலாற்றில் இதுவே முதல்முறை என்கிறார்கள். அரசு அலுவலகங்களில் கையாளப்படும் கோப்புகளில் மட்டும் அல்லாது சம்பள ரசீது கூடத் தமிழில் தான் இருக்க வேண்டும் என்ற விதிமுறை கூட உண்டு என்கிறார்கள்.

ஓய்வூதிய இயக்ககத்தில். . . !

செவ்வாய்க்கிழமை சென்னை டி.எம்.எஸ். வளாகத்தில் உள்ள ஓய்வூதிய இயக்ககத்திற்கு தமிழ் வளர்ச்சி இயக்குநர் முனைவர் இராசேந்திரன் தலைமையிலான குழு சென்று அதிரடி ஆய்வு நடத்தியது.

அங்குள்ள பணியாளர்கள், அதிகாரிகள் அனைவரையும் அழைத்து ஆய்வு நடத்தியது. ஓய்வூதிய இயக்குநர், இணை இயக்குநர், உள்பட அதிகாரிகளிடமும் மற்ற பணியாளர்களிடமும் நேரடி ஆய்வு நடத்தியபோது பலர் கையெழுத்தை தமிழில் போடாதது தெரிய வந்தது.

இந்த அலுவலக அதிகாரி ஒருவர் உயர்மட்ட அதிகாரிகள் கூட தமிழில் கையெழுத்து போடுவதில்லை என குறைபட்டுக் கொண்டார். கடைசியில் கோப்புகள் உள்பட கடிதங்கள் மற்றும் கோரிக்கைகள் தமிழிலே எழுத முடிவு செய்யப்பட்டது.

தமிழன் என்று சொல்லடா

இப்போதெல்லாம் நகரின் எல்லையைத் தாண்டும் போது சில ஊர்களில் எல்லைகளில் நுழையும் போது தமிழன் என்று சொல்லடா! தலை நிமிர்ந்து நில்லடா என்ற பலகைகளைக் காணலாம். நகராட்சி, ஊராட்சி அதிகாரிகள் தமிழ் வளர்ச்சித்துறையின் தூண்டுகோலால் இப்படி எழுதியிருப்பது அவர்களின் தன்னார்வத்தையே காட்டுகிறது.

ஆரம்ப காலத்தில் இந்த அதிரடி ஆய்வு நடத்துவதை கண்ணுற்ற சிலர் தமிழுக்கு தாத்தாக்கள் தேவை. தமிழுக்குத் தாதாக்கள் தேவை இல்லை என விமர்சித்தார்கள். கடந்த ஜுன் மாதத்தில் இருந்து இந்த அதிரடி ஆய்வு தீவிரப்படுத்தப்பட்டது. சென்னையில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட அலுவலகங்கள் உள்ளன. நவம்பர், டிசம்பர் மாதங்களில் இங்குள்ள அலுவலகங்களில் ஆய்வு நடத்தி முடிக்க முடிவு செய்துள்ளோம். இந்த அதிரடி ஆய்வு முழுக்க முழுக்க எங்கும் தமிழ்; எதிலும் தமிழ் என்ற தாரகமந்திரத்திற்காக தான் என்கிறார் தமிழ் வளர்ச்சி இயக்குநர் முனைவர் இராசேந்திரன். தமிழ்நாடு அரசு அலுவலகங்கள் அனைத்திலும் முழுவதுமாக தமிழ் ஆட்சி என்ற நிலை வெகு தூரத்தில் இல்லைதான்.

அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுத்தால் — தினத்தந்தி 1-12-96 — 11

## "அரசு அலுவலகங்களில் தமிழ் ஆட்சி மொழி ஆகிவிடும்"

### தமிழ்க்குடிமகன் பேட்டி

திருச்சி, டிச. 1- தமிழை பயன்படுத்தாத அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுத்து விட்டால் எல்லா அரசு அலுவலகங்களிலும் தமிழ் ஆட்சி மொழியாகி விடும் என்று தமிழ் ஆட்சி மொழி மற்றும் பண்பாட்டுத்துறை - அமைச்சர் தமிழ்க்குடிமகன் கூறினார்.

வழங்கி விட்டால் எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்ற நிலைமை ஏற்பட்டு விடும். அரசு அலுவலகங்கள் அனைத்திலும் தமிழ் மொழியிலேயே நடைபெறத் தொடங்கி விடும்.

நடவடிக்கை

அரசு ஆணைகளை மீறும் அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுத்தால் தான் தமிழ் மொழியை பயன்படுத்துவார்கள்

நடவடிக்கையை மேற்கொள்ள வில்லை. போகப் போக சரியாகி விடுவார்கள் என்று நம்புகிறோம். அதி காரிகள் காட்டி வரும் மெத்தனத் தால் தான் நாம் வெற்றி பெற முடியவில்லை.

வார்த்தை சங்கங்கள் தமிழ் சொற்கள் அடங்கிய பட்டி யலை மதுரையில் விரைவில் வெளியிடுகிறோம். யார் மீதும் நடவடிக்கை எடுக்க விரும்ப வில்லை. அதிகாரிகளுக்கு வாய்ப்பு கொடுத்து இருக் கிறோம்.

இவ்வாறு அமைச்சர் தமிழ்க்குடிமகன் கூறினார்.

இயல் - இருபத்தாறு

## தலைமைச்செயலக ஆய்வு

## ஒரு முன்னுரை

நான் சட்டப் பேரவைத் தலைவராக இருந்தபோதே அனைத்து நடவடிக்கைகளையும் தமிழுக்கு மாற்றினோம். அதில் இரண்டை மட்டும் பார்க்கலாம்.

அலுவலக ஆணை எண்.2094/89-1 ச.ம.பே.செ. (30.12.89)

பணியாளர்களுக்கான அறிவுரைகள் வழங்கும் ஆணை இது.

அதே நாளில் 2093 என்ற எண்ணில் பிறப்பிக்கப்பட்ட ஆணையினை மட்டும் பாருங்கள்.

அதனையும் அப்படியே தந்துள்ளேன்.

"சட்டமன்றப் பேரவைச் செயலகத்தில் வருகைப் பதிவேடு பராமரிப்பது குறித்துக் கீழ்க்கண்ட அறிவுரைகள் வழங்கப்படுகின்றன:-

1. பெயர்கள் தமிழிலேயே எழுதப்படவேண்டும்.

2. வருகைப் பதிவேட்டில் தமிழில் கையொப்பம் இடப்பட வேண்டும்.

மேலும், கீழ்கண்ட சொற்றொடர்களை ஒரே மாதிரியாக அனைத்துப் பிரிவுகளும் வருகைப் பதிவேட்டில் பயன்படுத்த வேண்டும்.

| | | |
|---|---|---|
| Earned Leave | .. | ஈட்டிய விடுப்பு |
| Medical Leave | .. | மருத்துவ விடுப்பு |
| Casual Leave | .. | தற்செயல் விடுப்பு |
| Compensatory Leave | .. | சரிக்கட்டும் விடுப்பு |
| Restricted Leave | .. | வரையறுக்கப்பட்ட விடுப்பு |
| Maternity Leave | .. | பேறுகால விடுப்பு |
| Leave on Loss of Pay | .. | ஊதியமில்லா விடுப்பு |
| Late Permission | .. | தாமத வருகை |
| On Other Duty | .. | மாற்றுப் பணி |
| No Report | .. | தகவல் இல்லை |

சார்புச் செயலாளர்கள், பிரிவுகளுக்குக் கண்காணிக்கும் பணிக்குச் செல்லும்போது மேற்குறிப்பிட்ட அறிவுரைகளை வழுவாமல் பிரிவுகள் கடைப்பிடிக்கின்றனவா என்பதையும், அதில் ஏதேனும் தவறுகள் தென்படின் அதனையும் ஆணையர் மற்றும் செயலாளர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டுவர வேண்டும்." * * *

எனவே, தமிழ் ஆட்சிமொழி அமைச்சராய் அமர்த்தப்பட்டதனால்தான் தமிழ்ப் பணிகளை மேற்கொண்டோம் என்றில்லை. சட்டப்பேரவைத் தலைவராக இருந்த போதும் செய்தோம். ஆனால் அமைச்சரான பின் பல துறைகளையும் பார்க்கும் போது மனம் எவ்வளவு வேதனையுற்றிருக்கும் என்பதை எண்ணிப் பாருங்கள்.

ஒரு சிறு பார்வை மட்டும் போதும். அதற்கான விவரங்கள் இவை.

1. தலைமைச் செயலகத்தில் மாவட்ட ஆட்சியாளர் கூட்டம் நடைபெறுகிறது.

அதில் கலந்துகொள்ள அழைக்கப்படுபவர்களுக்கு அனைத்தும் ஆங்கிலத்தில்:

1. கலந்துகொள்ள அழைப்பு
2. மகிழுந்து அனுமதி (Car Pass)
3. மார்பொட்டி (Batch)
4. இவற்றை அனுப்பி வைக்கும் உறை & அதில் முகவரி.

Hon'ble Dr. M. THAMIZKUDIMAGAN
Minister for Tamil Official Language & Tamil Culture and
Hindu Religious & Charitable Endowments

2. மாவட்ட ஆட்சியாளர் கூட்டம் நடைபெறுகிறது. 7.11.98 இல் கூட்டம். பின் 14.11.98-க்கு மாற்றம்.

இது தொடர்பான மடல்கள் யாவும் ஆங்கிலத்தில். மூன்று மடல்கள் - மிக எளிய செய்திகள். பொதுத் துறையில் இவற்றைத் தமிழில் தரவேண்டுமெனும் எண்ணமே இல்லை.

எ-டு.

GOVERNMENT OF TAMILNADU
U.O. Note No.46524/GLI/98-68
Public (General.I) Dept.
Chennai - 9

Dated : 6.11.98

Sub : Collector's Conference scheduled to be held on 7.11.98 - Postponed to 14.11.98 - Reg.

The Collector's Conference scheduled to be held on 7.11.98 has been postponed to 14.11.98. The Senior Personal Assistants to Ministers may be requested to inform this to Hon'ble Ministers.

S.KARUTHIAH PANDIAN
DUPUTY SECRETARY TO GOVERNMENT

TO

All Senior Personal Assistants to Ministers

3. அதேபோல தேசிய ஒருமைப்பாட்டு உறுதிமொழி எடுத்துக் கொள்ள வருமாறு ஆங்கிலத்தில் அழைப்பு. (9.11.98- பொதுத்துறை)

4. இந்தியக் குடியரசுத் தலைவரது வருகை ஒத்தி வைக்கப்பட்டுள்ளது. இவ்வளவுதான். இதற்கு இரண்டு பக்கங்களில் விவரங்கள்; அனைத்தும் ஆங்கிலத்தில் (5.12.99)

எனக்கு எப்படியிருக்கும் என்பதை எண்ணிப்பாருங்கள். அதன்பிறகு. . . இனி, நேரடியாகக் களத்தில் இறங்கி, நேருக்கு நேர் நின்று எடுத்துச் சொல்லாவிட்டால் - கண்டிக்காவிட்டால் - ஒன்றும் நடக்காது என்று முடிவு செய்துவிட்டோம். அதன் விளைவுதான் தலைமைச் செயலகத்தில் ஆய்வு.

அதன் விளைவு - அதே பொதுத்துறை (13.1.2000) 'தியாகிகட்காக மௌன அஞ்சலி' செலுத்திடத் தமிழில் அழைக்கிறது. . .

மாற்றங்கள் ஏற்பட்டு விட்டன. அதில் - இந்தக் கட்டுரையின் கடைசிப் பகுதியில் 1999க்கும் 2000க்கும் இடையில் ஏற்பட்ட மாற்றங்களையும் - ஏற்றங்களையும் பார்க்கலாம்.

தலைமைச் செயலக ஆய்வு

1956 முதல் 1966 வரை தமிழ் ஆட்சிமொழித் தொடர்பான அரசாணைகள் அனைத்துமே ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டன. 1967க்குப் பின்தான் தமிழில் அரசாணைகள் வெளிவரத் தொடங்கின.

ஆனால் 1999 இல் இந்த நிலை முழுமையடைந்ததா என்றால் இல்லை. எடுத்துக் காட்டாக ஆறுமாதகாலத்தில் போக்குவரத்துத் துறையில் வெளியான அரசாணைகளை எடுத்துப் பார்த்தால்

வெட்கக் கேடாக இருக்கும். வெளியான அரசாணைகள் 563 என்றால் இவற்றுள் தமிழில் ஒன்றே ஒன்றுதான்.

தலைமைச் செயலகத் துறைகளில் ஆய்வு செய்வதற்காகத் தலைமைச் செயலர் தலைமையில் 1995 இல் குழு அமைக்கப்பட்டது. நான் ஆட்சிமொழிக் கருத்தரங்குகளில் பங்கு கொண்டு, பலரும் தலைமைச் செயலகத்தைத் திருத்துங்கள் என்று வேண்டுகோள் வைத்தபிறகுதான் தலைமைச் செயலகத்தில் கை வைத்தோம்.

அமைச்சர்களுக்கு இ.ஆ.ப. அலுவலர்களாக உள்ள செயலாளர்கள் எடுத்துச் சொல்லவேண்டும். செயலாளர்களே புதிதாக அமர்த்தப்படும் போது, அங்குள்ள துணைச் செயலர், இணைச் செயலர்கள் எடுத்துச் சொல்லவேண்டும். அப்போதுதான் உடனடி நடவடிக்கை தொடங்கும்.

ஆனால் எங்கள் துறையில் துணைச் செயலாளர், இணைச் செயலாளர் கூட இதில் அக்கறை காட்டவில்லை என்றே நினைக்க வேண்டியுள்ளது. தமிழ் ஆட்சிமொழித் திட்டம் இந்த அளவுக்காவது செயற்பட்டிருக்கிறது என்றால் அதற்கு ஆர்வமுள்ள சில அரசு ஊழியர்கள் முக்கிய காரணம் என்பதை மறக்கவில்லை. இத் திட்டம் இன்றும் முழுமையடையவில்லை என்றால் அதற்கும் அக்கறையற்ற, தமிழில் எந்த வகையான ஈடுபாடும் பற்றும் இல்லாத அரசு ஊழியர்கள்தான் காரணம்.

ஆங்கிலத்தில் மடல் வந்தாலும் தமிழில் விடை எழுதிவிட்டால் தமிழ் நிமிரும்.

எவ்வளவு கடினமானதாக இருந்தாலும் ஒரு முறை மொழி பெயர்த்து வெளியிட்டுவிட்டால் பின் வரும் அனைவரும் அதையே பின்பற்றுவர். அப்போது தமிழ் எழுந்து உட்காரும்.

தமிழ் நாட்டில், தமிழக அரசில் பணியாற்றும் தமிழர்களாகிய நாம் அரசாணையையும் மீறி, ஆங்கிலத்தில் கையொப்பம் போடுகிறோமே என்று அரசு ஊழியர்கள் ஒருகணம் நினைத்துப் பார்த்தாலே போதும்.

கி.பி.2001 இல் 100க்கு 70 பேர் ஆங்கிலத்தில் ஒப்பமிடும் அவல நிலையைக் காண வேண்டியிராது.

அரசாணைகளை மீறுபவர்கள் மீது தக்க நடவடிக்கை எடுத்துக் குறைந்தது வசவு (Censure) எனும் தண்டனையாவது கொடுத்திருந்தால் போதும்.

ஆனால் கலைஞர்தான் அடிக்கடி என்னைக் கடிந்து கொள்வார். வசவு எனக்குத்தான்!

நான் ஆட்சிமொழிக் கருத்தரங்குகளில் அதிகாரிகளைக் கடுமையாக எச்சரிக்கிறேன். இது கூடாதாம்.

எச்சரிக்கைக்கே எனக்கு எச்சரிக்கை வரும்போது நான் யாரைத் தண்டிப்பது?

எந்த மேலதிகாரி தமிழுக்காகத் தன் கீழ் உள்ளவரைத் தண்டிப்பார்?

தலைமைச் செயலகம் ஆய்வு :-

ஆட்சிமொழிச் சட்டம் வெளிவந்த காலத்திலிருந்து கடந்த 43 ஆண்டுகளாகத் தலைமைச் செயலகத்தில் ஆய்வுகள் மேற்கொள்ளப்படவில்லை. ஆனால், தி.மு.க. ஆட்சியில் முதல் முறையாக 1999-இல் தலைமைச் செயலகத்தில் உள்ள 31 துறைச் செயலாளர் அலுவலகங்களும் ஆய்வு செய்யப்பட்டன. அந்த ஆய்வின் மூலம் கண்டறியப்பட்ட உண்மைகள் அமைச்சர் அவர்களால் ஒவ்வொரு துறைச் செயலாளர்க்கும் நேரிடையாகத் தரப்பட்டன. தொடர்புடைய அனைத்து அமைச்சர்களுக்கும் நேர்முக மடல்கள் எழுதப்பட்டன. 6 மாதம் முடிந்து மறு ஆய்வு செய்கின்றபோது, தலைமைச் செயலகத்தில் பெரிய முன்னேற்றம் ஏற்பட்டிருப்பதைக் காண முடிந்தது. இதற்குமுன் 50 விழுக்காடு என்ற அளவிலிருந்த ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் தற்போது 80 விழுக்காடு என்ற அளவில் உயர்ந்துள்ளது. இது தமிழ் ஆட்சிமொழித் துறையின் தலையாய சாதனையாகும்.

தலைமைச் செயலகத்தில் ஆய்வு - இதற்கு முன். . . ?

31.10.1986 இல் வெளியிடப்பட்ட 371 ஆம் எண்ணுள்ள அரசாணையின்படி தலைமைச் செயலகத்தில் தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம் கொண்டுவரப்பட்டது.

சட்டம் நிறைவேறி 30 ஆண்டுகள் கழிந்த பின்புதான் 'ஆட்சி மொழித் தமிழ்' தலைமைச் செயலகத்துக்குள் வரலாம் என ஆணைபிறப்பிக்க வேண்டிய நிலை.

அந்த ஆணை இதுதான்

"ஆட்சிமொழி முனைப்புத் திட்டத்தை விரிவுபடுத்தும் பொருட்டு, தலைமைச் செயலகத் துறைகளிலும், அரசுச் சார்பு நிறுவனங்கள், கழகங்கள், வாரியங்கள், கூட்டுறவு இணையங்கள் போன்ற அனைத்திலும் தமிழ்த் திட்டத்தை உடனடியாகச் செயற்படுத்திடக் கீழ்க்காணும் வகையில் ஆணை பிறப்பிக்கப்படுகின்றது.

அ. வெளியிடப்படும் கடிதங்கள், அலுவல் சார்பற்ற குறிப்புகள், போக்குவரத்துகள் ஆகியவை அரசாணை நிலை எண்.2070, கல்வித்துறை, நாள் 2.12.1971 இல் அறிவிக்கப்பட்டவாறு விலக்களிக்கப்பட்ட இனங்களைத் தவிர பிற எல்லா இனங்களிலும் தமிழில் தான் நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும்.

ஆ. கடிதப் போக்குவரத்து மற்றும் இதர குறிப்புகள்

கடிதப் போக்குவரத்தைப் பொறுத்த மட்டில் ஆங்கிலத்தில் ஒரு கடித வரைவினை எழுத வேண்டுவது இன்றியமையாததென்று கருதப்பட்டால் பொறுப்புள்ள ஒரு அலுவலரின் அனுமதியின்றி

அதனை ஆங்கிலத்தில் எழுதக்கூடாது எனவும், அவ்வரைவு விதிவிலக்குப் பெற்ற இனத்தைச் சேர்ந்ததா என்பதை ஆராய்ந்து அந்த அலுவலர் அனுமதித்த பின்னரே ஆங்கில வரைவுகள் எழுதப்படலாம். இதைத் தவிர கற்றாணைக் குறிப்புகள், கோப்பின் குறிப்புகள் நினைவூட்டுகள், ஒப்பளிப்புக் கடிதங்கள், இடைக்கால மறுமொழிகள் அசல் திருப்புகை முடிவுகள், அலுவல் சார்பற்ற குறிப்பாணை ஆகிய வரைவுகளுக்கும் தமிழையே பயன்படுத்த வேண்டும். ஆங்கிலத்தை அறவே தவிர்த்திட வேண்டும்.

இ. பதிவேடுகள் பேணுவது

பொதுவாகப் பதிவேடுகள் அனைத்தும் தமிழிலேயே பேணப்படலாம். அவற்றிற்கு விதிவிலக்கு அளிக்கப்படவில்லை. மாநிலக் கணக்காய்வாளரால் கணக்கு தணிக்கைக்கு உட்பட்ட சில பதிவேடுகளில் மட்டும் ஆங்கிலம் பயன்படுத்தலாம். இதைத் தவிர இதுவரையில் ஆங்கிலத்தில் பயன்படுத்தப்பட்டு வந்த பதிவேடுகளை உடனடியாகத் தமிழுக்கு மாற்றலாம்.

ஈ. ஆய்வு

தமிழ் வளர்ச்சி இயக்குநர் இதுவரை துறைத் தலைமை அலுவலகங்களிலும், மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களிலும் சில சார்நிலை அலுவலகங்களிலும தமிழ்த் திட்டச் செயற்பாடு அளவுகுறித்து ஆய்வு செய்து வருகின்றார். அவ்வாய்வுப்பணி இனித் தலைமைச் செயலகத் துறைகளிலும் அரசு சார்பு நிறுவனங்கள், வாரியங்கள், அரசுக் கழகங்கள் போன்ற அனைத்திலும் மேற்கொள்ளலாம். தலைமை அலுவலகங்களில் தமிழ் வளர்ச்சி இயக்குநரும் அவற்றின் சார்நிலை அலுவலகங்களில் மாவட்டத் தமிழ் வளர்ச்சி இயக்குநரும் அவற்றின் சார்நிலை அலுவலகங்களில் மாவட்டத் தமிழ் வளர்ச்சி ஆய்வு உதவி இயக்குநர்களும் ஆய்வுப்பணி மேற்கொள்ளலாம். தலைமைச் செயலகத்தைப் பொறுத்த மட்டில் தமிழைப் பயன்படுத்திட முனைப்பு முன்னேற்றம் குறித்து ஆய்வு செய்ய இந்திய ஆட்சிப்பணி (ஐ.ஏ.எஸ்.) நிலையில் உள்ள முதுநிலை உயர் அலுவலர் ஒருவரை அவ்வப்போது நியமனம் செய்துஅவர் தம் மற்றப் பணிகளுடன் இவ்வாய்வுப் பணியையும் மேற்கொள்ளலாம். இந்த ஆய்வறிக்கையின் நகல்கள் தமிழ் வளர்ச்சி இயக்குநருக்கும் குறிக்கப்படலாம். இதன் தொடர்பான உரிய மேல் நடவடிக்கைகள் பொதுத்துறை மற்றும் பணியாளர் நிர்வாகச் சீர்திருத்த (ஆய்வுத்) துறை மேற்கொள்ளலாம். தமிழ் வளர்ச்சி ஆய்வு உதவி இயக்குநர்களின் ஆய்வறிக்கைகள் ஆயப்படும். அச்சார்நிலை நிறுவனங்கள் அதன் தலைமை அலுவலகங்களுக்கும் அதன் நகல் தமிழ் வளர்ச்சி இயக்குநருக்கும் தவறாமல் அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்ளலாம். தமிழ் வளர்ச்சி இயக்குநரின் ஆய்விற்குப் பின் நகல் தொடர்புடைய தலைமைச் செயலக தலைமைத் துறைக்கு அனுப்பி வைக்க வேண்டும். அரசின் சீரிய இத்திட்டத்தினை முனைந்து செவ்வனே நிறைவேற்றிட சம்பந்தப்பட்ட துறைத் தலைவர்கள் ஆவன செய்யக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்."

இ.ஆ.ப. நிலையில் உள்ள முதுநிலை உயர் அலுவலரை ஆய்வுப் பணி மேற்கொள்ளச் செய்யலாம் என்று தெரிவிக்கப்பட்டது. ஆனால் எதுவும் நடக்கவில்லை. ஆமாம்! 1984-இல் பணியேற்ற தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத்துறைச் செயலர் என்ன ஆனார்?

ஆனால் அ.ஆ. எண். 211 நாள் 27.6.88 இல் சில மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன.

"தமிழ் வளர்ச்சித் துறையில் ஏற்கெனவே பணிபுரிகின்ற ஒருபிரிவு அலுவலரும், ஓரிரு உதவிப் பிரிவு அலுவலர்களும் அடங்கிய சிறு பிரிவொன்று ஏற்படுத்தப்பட்டு தலைமைச் செயலகத் துறைகளில் தமிழ்மொழியை ஆட்சிமொழியாகக் கொண்டு வரும் திட்டத்தின்கீழ் ஏற்பட்ட முன்னேற்றம் பற்றி ஆய்வு செய்து, குறைகூறும் குறிப்புகளோ, பாராட்டுக் குறிப்புகளோ இன்றி உள்ளபடியான குறிப்பு ஒன்றைத் தயாரித்து தமிழ் வளர்ச்சித் துறைச் செயலாளருக்கு அனுப்பவேண்டும். அக்குறிப்பின் நகல் ஒன்றை, சம்பந்தப்பட்ட துறைச் செயலாளருக்கு அனுப்பவேண்டும். தமிழ் வளர்ச்சித் துறைச் செயலாளர் இக்குறிப்பைப் பரிசீலனை செய்து, அவருடைய கருத்துக்களுடன் தலைமைச் செயலாளருக்கு அனுப்புவார். தலைமைச் செயலாளர் இக்குறிப்பை ஆராய்ந்த பின்னர் உரிய உத்தரவுகளைப் பிறப்பிப்பார்.

மேற்குறிப்பிட்ட தமிழ்த் திட்டச் செயற்பாடானது, இவ்வாணை வெளியிடும் நாளிலிருந்து தலைமைச் செயலகத்தில் உடனடி நடைமுறைக்குக் கொண்டுவரப்படுகிறது எனவும், இவ்வாய்வறிக்கையின் நகல், தமிழ் வளர்ச்சி இயக்குநருக்கு அனுப்பப்படும் எனவும் அரசு ஆணையிடுகிறது."

1988ஆம் ஆண்டில் தலைமைச் செயலகத் துறைகளில் ஆய்வு செய்திட வழிவகைகள் செய்யப்பட்டுள்ளன.

ஆனால் 1989 முதல் 1991 வரையிலிருந்த தி.மு.க. ஆட்சியில் கல்வித் துறைக்குள் அடங்கிச் செயற்பட்ட த.வ. பண்பாட்டுத்துறை எந்த ஆய்வும் நடத்தவில்லை. இவ்வளவுக்கும் துறை தனியாகப் பிரிக்கப்பட்டு, த.வ.ப. துறைக்குத் தனியாக ஒரு செயலர் அமர்த்தப்பட்டிருந்தார். அவரும் இதுபற்றிக் கவலைப்படவில்லை.

பணியாளர் (ம) சீர்திருத்தத்துறை மெதுவாக ஆய்வு செய்து ஆய்வறிக்கையில் குறிப்பெழுதியும் வந்துள்ளது.

1993 இல் த.வ. இயக்குநரின் பரிந்துரையின்படி 18.10.1995 ஆம் நாளிட்ட அரசாணை 258 இல் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

"தமிழ் ஆட்சி மொழித்திட்டச் செயலாக்கத்தினை நிருவாகம் குறித்த பொது ஆய்வில் சேர்ப்பதால் பலன் ஏதும் இராது என்பதால் தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் குறித்து தமிழ்

வளர்ச்சி இயக்குநர் துறைத் தலைமை அலுவலகங்களில் தனி ஆய்வு நடத்துவது போன்று, தலைமைச் செயலகத்தில் தலைமைச் செயலாளர் தலைமையில் தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தினைத் தனி ஆய்வு மேற்கொள்வதான் சிறப்பாக இருக்கும் எனப் பரிந்துரைத்திருந்தார்.

தமிழ் வளர்ச்சி இயக்குநரின் பரிந்துரையின் அடிப்படையில் தமிழ் ஆட்சிமொழித் திட்டம் அரசு அலுவலகங்களில் முனைப்பாகச் செயற்படுவதைக் காலமுறையாக தமிழ் வளர்ச்சி இயக்குநர் ஆய்வு செய்வதைப் போன்று தலைமைச் செயலகத்திலும் கால முறையாக ஆய்வு செய்வதற்கான பணிகள் குறித்தும், இதற்கெனப் பணியாளர்களை ஈடுபடுத்துவது குறித்தும் ஆய்வு செய்து அறிவுரை வழங்கும் வகையில் தலைமைச் செயலாளர் தலைமையில் தமிழ் ஆட்சிமொழித் திட்ட உயர்நிலைக் குழுவை அமைத்து கீழ்க்கண்ட அலுவலர்களை நியமனம் செய்து அரசு ஆணையிடுகிறது.

1. தலைமைச் செயலாளர் .. தலைவர்
2. திரு. சி. சிவசுப்பிரமணியன், இ.ஆ.ப., .. உறுப்பினர்
3. திரு. த.ம. ஆறுமுகம், இ.ஆ.ப., .. உறுப்பினர்
4. திரு. இரா. கிருத்துதாசு காந்தி, இ.ஆ.ப., .. உறுப்பினர்
5. அரசு செயலாளர், சட்டத்துறை .. உறுப்பினர்
   (Ex-Officio)
6. அரசு செயலாளர், .. செயல் உறுப்பினர்
   தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறை
   (Ex-Officio)

எனினும் இந்தக் குழு செயற்பட்டதற்கான குறிப்புகள் இல்லை. 1988 இல் ஓர் ஆணை. 1995 இல் இதற்குத் திருத்தம் இவ்வளவுதான் த.செ. துறைகள் ஆய்வு. 1996 இல் புதிய ஆட்சியும் வந்து விட்டது.

அதன்பின் எடுத்த முயற்சிகள் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

14.4.67 இல் அறிஞர் அண்ணா அவர்களால் 'தமிழக அரசு தலைமைச் செயலகம்' என்றும், தமிழக அரசு (Madras Govt.) 'வாய்மையே வெல்லும்' (சத்திய மேவ ஜயதே) என்றும் பொறிக்கப்பட்டன. 18.7.1967 இல் 'மதராஸ் ஸ்டேட்' என்பது 'தமிழ்நாடு' என்று அறிஞர் அண்ணாவால் மாற்றப்பட்டது.

1996 வரை சென்னை மாநகரின் பெயரை ஆங்கிலத்தில் Madras என்று எழுதி வந்தனர். 1996 ஆம் ஆண்டில் சென்னையின் பெயர் ஆங்கிலத்திலும் 'Chennai' என்றே எழுதவேண்டும்

என்று சட்டம் கொண்டு வந்து நிறைவேற்றினார் கலைஞர். அது என்ன 'செந்நாய்'? என்ற கேலி பேசிய போலிகளும் இந்த நாட்டில் உண்டு.

துறைப்பற்றாளர் (Nodal Officers) கூட்டம்

தமிழக அரசில் இயங்கி வரும் 61 துறைகளும் அரசாணைகளைத் தமிழில் வெளியிடல் - வழக்குகள், குறிப்புகள் ஆகியவற்றையும் தமிழில் தருதல் - பொதுமக்களிடமிருந்து வரும் மடல்களுக்குத் தமிழில் விடையெழுதுதல் போன்ற பணிகளைச் செம்மையாகச் செய்ய வேண்டும் என்றும் ஆட்சிமொழித் துறையின் ஆய்வுக்குட்படும் போது சுட்டிக் காட்டப்படும் குறைகளைச் சரிசெய்ய வேண்டுமென்றும் எதிர்பார்த்துத் தான் ஆட்சிமொழிச் சட்டம் இயற்றப்பட்டது.

ஆனால் பல துறைகள் இவற்றைக் கடைப்பிடிக்க வில்லை. 1) தமிழ் ஆட்சிமொழித்துறை 2) அற நிலையத்துறை 3) ஆதி திராவிடர் நலத்துறை 4) சட்டத்துறை ஆகிய நான்கு துறைகள் மட்டுமே அரசாணைகள் அனைத்தையும் தமிழில் வெளியிட்டுள்ளன. இதனாலேயே ஒவ்வொரு துறைக்கும் பற்றாளர் ஒருவர் அமர்த்தப்பட வேண்டிதாயிற்று.

இது தொடர்பாக 17.6.98 அன்று துறைப் பற்றாளர்கள் கூட்டம் என் தலைமையில் நடத்தப் பெற்றது.

எங்கள் நடவடிக்கைகள் எப்படி இருந்தன என்பதற்கு த.வ. இயக்குநரின் ஒரு மடல் சான்றாகும்.

பொருள் : ஆட்சிமொழி - தமிழ் வளர்ச்சி - முழுமையாகச் செயல்படுத்துதல் - பல்வேறு நடவடிக்கைகள் மேற்கொண்டது - குறித்து.

நாள் 22.12.99

ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் குறித்து அரசால் பல்வேறு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. நாள்தோறும் வெளியாகும் அரசுத்துறை விளம்பரங்களிலும், அரசுத் துறைச் செய்திகளிலும், அரசு அலுவலர்களின் பெயர்களில் தலைப்பெழுத்துக்களிலும், சரியான தமிழ் எழுத்துக்களையும், சொற்களையும் பயன்படுத்த வேண்டும் என்று பேரூராட்சிகளின் இயக்குநர், ஊரக வளர்ச்சி ஆணையர், கூட்டுறவு சங்கங்களின் பதிவாளர் ஆகியோர்களுக்கு அவர்தம் சார்நிலை அலுவலர்களுக்கு அறிவுரை வழங்க வேண்டும் என இவ்வியக்ககத்திலிருந்து கடிதம் அனுப்பப்பட்டுள்ளது. (எண். இ1/8470/90 நாள் 16.7.99)

மேலும் தமிழில் ஒப்பமிடுதல், விளம்பரங்களில் சரியான தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்துதல், பெயர்ப் பலகைகளில் சரியான தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்துதல் போன்று ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கம் தீவிரமாக்கப்பட வேண்டும் எனும் நோக்கில் தமிழில் அனைத்து

நடவடிக்கைகளும் அமைய வேண்டும் என அவர்தம் மாவட்டங்களிலுள்ள சார்நிலை அலுவலர்களுக்கு அறிவுரை வழங்குமாறு மாவட்டத் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர்கள் அறிவுறுத்தப்பட்டுள்ளனர்.

ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் வெகுவாக நிறைவேறி வருவதற்கு அண்மையில் திருநெல்வேலி நகரப் பேருந்துகளில் பெயர்ப்பலகைகள் தமிழில் மாற்றி அமைக்கப்பட்டுள்ளது எடுத்துக்காட்டாகும். இதுபோன்று ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்திற்குப் பல்வேறு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

அண்மையில் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர் அவர்களின் தலைமையில், நடைபெற்ற தமிழ் வளர்ச்சி மன்றக் கூட்டத்திலும், ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தில் அடையப்பெற்ற முன்னேற்றம் குறித்து கலந்துரையாடப்பெற்றது என்பதையும் அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்."

தலைமைச் செயலக ஆய்வு

தலைமைச் செயலகத்தில் முதற்சுற்று ஆய்வு செய்து, அறிவுரைகளை வழங்கி, நேர்முக மடல்கள் தந்து, அமைச்சர்களும், அரசுச் செயலாளர்களும் அக்கறை எடுத்துக்கொண்டு செயலாற்றியபின் பெரிய முன்னேற்றம் ஏற்பட்டது.

இரண்டாவது சுற்று ஆய்வு செய்தபோது அதைக் காண முடிந்தது.

பின்வரும் ஒப்பீட்டுப் பட்டியல் இதனை மெய்ப்பிக்கும்.

29% முதல் 52% வரை என்றிருந்த ஆட்சிமொழிச் செயலாக்கம் எங்கள் நேரடி ஆய்வுக்குப் பின் 54% முதல் 85% வரை சென்றுள்ளது என்பதை அறியலாம்.

2000-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 15-ஆம் நாள் வரை - தலைமைச்

செயலகத் துறைகள் - இரண்டாம் சுற்று ஆய்வு மேற்கொண்டமை - விவரம்.

| வரிசை எண் | துறையின் விவரம் | முதல் சுற்று ஆய்வு மேற்கொண்ட நாள் | முதல் சுற்று ஆய்வு தமிழ் விழுக்காடு | இரண்டாம் சுற்று ஆய்வு மேற்கொண்ட நாள் | 2-ஆம் சுற்று ஆய்வு தமிழ் விழுக்காடு |
|---|---|---|---|---|---|
| 1. | 2. | 3. | 4. | 5. | 6. |
| 1. | கால்நடைப் பராமரிப்பு (மற்றும்) மீன்வளத்துறை. | 26.7.99 | 50% | 5.7.2000 | 75% |
| 2. | செய்தி (மற்றும்) சுற்றுலாத் துறை. | 18.8.99 | 50% | 12.7.2000 | 75% |
| 3. | ஆதி திராவிடர் (மற்றும்) பழங்குடியினர் நலத்துறை. | 31.8.99 | 58% | 17.7.2000 | 80% |
| 4. | கைத்தறி துணி நூல் (மற்றும்) கதர்த் துறை. | 9.8.99 | 43% | 20.7.2000 | 85% |
| 5. | ஊரக வளர்ச்சித் துறை | 5.10.99 | 40% | 21.7.2000 | 64% |
| 6. | சுற்றுப்புறம் (மற்றும்) வனத்துறை | 22.10.99 | 43% | 26.7.2000 | 80% |
| 7. | சமூகநலம் (மற்றும்) சத்துணவுத் திட்டத் துறை | 14.9.99 | 43% | 28.7.2000 | 70% |
| 8. | சிறுதொழில் துறை | 26.10.99 | 45% | 28.7.2000 | 75% |
| 9. | வீட்டுவசதி (மற்றும்) நகர்ப்புற வளர்ச்சித்துறை. | 10.11.99 | 52% | 4.8.2000 | 77% |
| 10. | கூட்டுறவு, உணவு (மற்றும்) நுகர்வோர் பாதுகாப்புத் துறை | 3.12.99 | 47% | 18.8.2000 | 78% |
| 11. | நெடுஞ்சாலைத் துறை | 10.12.99 | 31% | 25.8.2000 | 62% |
| 12. | வேளாண்மைத் துறை | 29.11.99 | 29% | 6.9.2000 | 54% |
| 13. | தொழிலாளர் (மற்றும்) வேலைவாய்ப்புத் துறை. | 20.11.99 | 48% | 29.8.2000 | 71% |
| 14. | போக்குவரத்துத் துறை | 3.1.2000 | 42% | 7.9.2000 | 65% |
| 15. | நகராட்சி நிர்வாகம் (ம) குடிநீர் வழங்கல் துறை | 15.12.99 | 52% | 8.9.2000 | 65% |
| 16. | பிற்பட்டோர் (ம) மிகவும் பிற்பட்டோர் நலத்துறை. | 31.12.99 | 40% | 15.9.2000 | 75% |
| 17. | சட்டத்துறை | 28.10.99 | 45% | -- | 65% |

(ஒ) [illegible]

இது குறித்து, நான் எடுத்த நடவடிக்கைகளின் சாரத்தை உள்ளடக்கி 18.11.2000 அன்று மாண்புமிகு முதல்வர் அவர்களுக்கு ஒரு மடல் எழுதினேன்.

பொருள் : தலைமைச் செயலகத்தில் தமிழ்

ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம்

பெருமதிப்புக்குரிய தாங்கள் தமிழின்மீது கொண்ட ஆராக் காதலால் "எங்கும் தமிழ் எதிலும் தமிழ்" என்ற கோட்பாட்டைச் செயற்படுத்தும் வகையில் தமிழ் ஆட்சிமொழித்துறையைத் தனியாகப் பிரித்தமைத்து இயங்க வைத்துள்ளீர்கள். தங்கள் நோக்கம் நிறைவேறும் வகையில் எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் குறித்தும் எய்தப்பட்ட முன்னேற்றங்கள் குறித்தும் சுருக்கமாகத் தங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

1. ஆட்சிமொழிக் கருத்தரங்குகள்

மாவட்ட ஆட்சியர் அளவிலான அலுவலர்கள் ஆட்சிமொழித் திட்டத்தைச் செயலாக்காத நிலையிருந்தால் சுட்டிக்காட்டவும், பிற இடங்களில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களை ஒப்பிட்டுக் காட்டவும், சிறப்பாகச் செயலாற்றிய துறை அல்லது அலுவலர் ஆகியோருக்குப் பாராட்டுக் கேடயங்கள் வழங்கவும் இந்த ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் பயன்படுகின்றன. நமது ஆட்சிக் காலத்தில் 29 மாவட்டங்களிலும் ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் ஆங்காங்குள்ள தமிழறிஞர்கள், சட்டமன்ற உறுப்பினர்கள் ஆகியோரின் உரைகளுடன் நடைபெற்றுள்ளன. பெரும்பாலான அமைச்சர்களும் இந்த நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டுள்ளனர். இப்போது 29 மாவட்டங்களிலும் இக்கருத்தரங்குகள் முழுமையாக முடிக்கப்பட்டு, இரண்டாவது சுற்றாக கோவை, நெல்லை, காஞ்சிபுரம், திருவண்ணாமலை போன்ற இடங்களிலும் கருத்தரங்குகள் நடைபெற்றுள்ளன.

இந்த வகையில் பொதுமக்களிடத்திலும் அரசு அலுவலர்களிடத்திலும் பெரிய விழிப்புணர்ச்சி ஏற்பட்டுள்ளது. மாவட்ட ஆட்சியாளர்களின் தனிக் கவனத்தால் வளர்ச்சிகளும் ஏற்பட்டுள்ளன.

2. சார்நிலை அலுவலகங்களில் ஆய்வு

உதவி இயக்குநர்கள் ஒவ்வொருவரும் மாதந்தோறும் 40-க்கும் மேற்பட்ட அலுவலகங்களை ஆய்வு செய்ய வேண்டுமென்ற கட்டுப்பாடு உள்ளது. என்றாலும் இன்னும் அதிகமான முன்னேற்றத்தைக் காட்ட வேண்டுமென்ற அடிப்படையில் அதிரடி ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. ஒரே நேரத்தில் ஒரு மாவட்டத்தில் 10-க்கும் மேற்பட்ட உதவி இயக்குநர்கள் ஆய்வு செய்யுமாறு பணித்தோம். அதன் வாயிலாக அனைத்து அலுவலகங்களும் முழுமையாக ஆய்வு செய்யப்பட்டு, அதில் ஏற்பட்டுள்ள குறைகள் குறித்த அறிக்கைகள் மாவட்ட ஆட்சியாளர்க்குத் தரப்பட்டுள்ளன. அந்த வகையில் அதிரடியில் 10,288 அலுவலகங்கள் ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

3. தலைமைச் செயலகத்தில் ஆய்வு

13.5.1996-இல் 'தமிழ் ஆட்சிமொழித்துறை' தனித்து இயங்கியவுடன் தமிழகமெங்கும் ஆட்சிமொழித் திட்டத்தைச் செயலாக்குவதில் பாராட்டத்தக்க அளவிலான முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது என்பதுடன் தமிழக வரலாற்றிலேயே முதன்முறையாகத் தலைமைச் செயலகத்திலுள்ள அனைத்துத்துறைகளும் ஆய்வு செய்யப்பட்டன என்பது சிறப்பாகும். முதல்கட்டமாக ஆய்வு செய்யப்பட்டபோது, தலைமைச் செயலகத்தில் அனைத்துத் துறைகளிலும் ஏறத்தாழ 40 விழுக்காடு நடவடிக்கைகள் தமிழில் அமைந்திருந்தன. அதுகுறித்து எங்கள் துறைச் செயலாளர் அனைத்துத் துறைச் செயலாளர்களுக்கும் அறிவுரைகளை வழங்கியிருந்தார்.

அதன்பிறகு அமைச்சர் என்ற முறையில், நானே எல்லா அமைச்சர்களுக்கும் நேர்முக மடல் வரைந்தேன். அதனை அமைச்சர்களிடத்தில் நேரிலேயே கொடுத்து, அதுகுறித்து விவாதித்திருக்கிறேன். அதேபோல அனைத்துச் செயலாளர்களுக்கும் நேர்முக மடல்களை எழுதி, ஒவ்வொருவரையும் நேரிலேயே அழைத்து உரிய மாற்றங்களைச் செய்யுமாறு வலியுறுத்தியுள்ளேன்.

குறிப்பிட்ட 6 மாத காலத்திற்குப்பின் மீண்டும் மறு ஆய்வு செய்யப்பட்டது. இந்த மறு ஆய்வில் பெரிய முன்னேற்றம் ஏற்பட்டிருப்பது கண்கூடு. முன்பு 40 விழுக்காடாக இருந்த ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் தற்போது 80 விழுக்காடு வரை உயர்ந்துள்ளது என்பதனை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறேன். எடுத்துக்காட்டுக்கு அமைச்சர் ஒருவருக்கு எழுதிய நேர்முக மடலும், செயலாளர்கள் சிலருக்குத் தரப்பட்ட நேர்முக மடல்களும் பார்வைக்காக இணைக்கப்பட்டுள்ளன.

குறிப்பாக நிதித்துறை, வணிகவரித்துறை, பொதுத்துறை மற்றும் உள்துறை ஆகிய துறைச் செயலாளர்களுக்கு நேரில் அளிக்கப்பட்ட நேர்முக மடல்கள் பார்வைக்காக இணைக்கப்பட்டுள்ளன. உள்துறைச் செயற்பாடுகள் குறித்து ஆய்வு நடத்திய எங்கள் துறை தந்த குறிப்புரை மட்டும் பார்வைக்காக இணைக்கப்பட்டுள்ளது. மேலும், முதன் முறையாக ஆய்வு செய்யப்பட்டிருந்தபோது கண்டறிந்த ஆட்சிமொழிச் செயலாக்க விழுக்காடும், இரண்டாம் முறை ஆய்வு செய்தபோது ஏற்பட்டுள்ள வளர்ச்சி விழுக்காடும் ஒப்பிட்டுப் பார்ப்பதற்காக - தங்கள் பார்வைக்கு வைக்கப்படுகின்றன.

ஒப்பிட்ட வகையில் சிறுதொழில்துறை (அரசுச் செயலாளர் திருமதி ஓ.போ. சோசம்மா, இ.ஆ.ப.,) குறித்த அறிக்கை மட்டும் தங்கள் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளது.

| தொ. எண் | ஆய்வுக்குட்பட்டவை | ஆண்டு 1999 | | | ஆண்டு 2000 | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | மொத்தம் | தமிழில் | விழுக்காடு | மொத்தம் | தமிழில் | விழுக்காடு |
| 1. | வருகைப்பதிவேடு | 38 | 7 | 18 | 54 | 51 | 93 |
| 2. | கடிதப்போக்குவரத்து | 9389 | 3756 | 40 | 4893 | 3324 | 72 |
| 3. | அரசாணைகள் | 675 | 73 | 10 | 535 | 440 | 82 |

ஆணைகள் 1.1.2000 முதல் 30.6.2000 வரை

| | | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1. | அலுவலக நடைமுறை | 183 | 3 | 186 |
| 2. | வாலாயம் | 138 | 16 | 154 |
| 3. | நிலையாணை | 18 | 17 | 35 |
| 4. | பத்தாண்டு | 74 | 36 | 110 |
| 5. | இருபதாண்டு | 2 | 21 | 23 |
| 6. | முப்பதாண்டு | 3 | - | 3 |
| 7. | நாற்பதாண்டு | 22 | 2 | 24 |
| | | 440 | 95 | 535 |

| 4. தட்டச்சு செய்த பக்கங்கள் | | மொத்தம் | தமிழில் | விழுக்காடு |
|---|---|---|---|---|
| | 1999 | 11881 | 4753 | 40% |
| | 2000 | 10559 | 7096 | 67% |

இந்த வகையில் பெரிதும் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளதைத் தங்கள் மேலான பார்வைக்கு வைக்கின்றேன்.

அனைத்துச் செயலாளர்களும் முழுமையாக ஒத்துழைக்கின்றனர். இதுகுறித்து அனைவருமே உறுதிமொழி அளித்து எனக்கு மடல்களும் அனுப்பியுள்ளனர்.

எனவே, தமிழகம் முழுவதும் தலைமைச் செயலகத்திலிருந்து வரும் நடவடிக்கைக் குறிப்புகளையும் ஆணைகளையும் எதிர்பார்த்தே ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் இருப்பதால்,

எல்லா மட்டங்களிலும் சிறந்த முன்னேற்றம் ஏற்பட்டிருப்பதை மகிழ்வுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

தங்கள் அன்புள்ள,
(மு. தமிழ்க்குடிமகன்)

நான் வரைந்த நேர்முக மடல்களின் முகப்பும், முடிவும் எப்படியிருந்தன என்பதைப் பாருங்கள்.

அன்புடையீர்,

தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் 1956-இல் நிறைவேறியது. ஆனால், நாற்பதாண்டுகளுக்கும் மேலாகியும் தமிழ்நாட்டில் "தமிழ்" முழுமையாக ஆட்சிமொழியாகவில்லை. அதனாலேயே மாண்புமிகு முதல்வர் கலைஞர் அவர்கள், "தமிழ் ஆட்சிமொழித்துறை" யைத் தனியாகப் பிரித்து, "தமிழ் ஆட்சிமொழி" எனும் குறிக்கோளை நிறைவேற்ற ஆவன செய்தார்கள்.

கடந்த மூன்றாண்டுகளில் பல துறைகளில் முன்னேற்றங்கள் ஏற்பட்டுள்ளன. எனினும் ஆட்சிமொழிக் கருத்தரங்குகளின்போது வெளிப்படுத்தப்பட்ட வேண்டுகோளின்படியும், நாங்கள் கண்டறிந்த உண்மைகளின்படியும் தலைமைச் செயலகத்துறைகளில்தான் தமிழ் ஆட்சிமொழிச் சட்டமும், ஆணைகளும் அலட்சியப்படுத்தப்படுகின்றன என்பதை அறிந்தோம்.

1. நீலகிரி மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கின்போது, அந்த மாவட்ட வருவாய் அலுவலர் சங்கத்தின் செயலாளர் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். "நாங்கள் ஆட்சிமொழித் திட்டத்தைச் செம்மையாகச் செயற்படுத்தவேண்டும் என்று விரும்பி முயன்றாலும், தலைமைச் செயலகத்திலிருந்து பிறப்பிக்கப்படும் அரசாணைகளிலும் மடல்களிலும் அதிக அளவில் ஆங்கிலமே இடம்பெற்றிருப்பதை வேதனையோடு சுட்டிக் காட்டுகிறோம். முதலில் தலைமைச் செயலகத்தைத் திருத்துங்கள். அங்கிருந்து எல்லாமே சரியாக வருமானால், நாங்கள் உடனே சரியாகிவிடுவோம்" என்றார்.

2. கடலூர் மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கில், மாவட்ட ஆட்சித் தலைவர் திரு. சந்தீப் சாக்சேனா, இ.ஆ.ப., பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார் :-

"நான் மத்தியப்பிரதேச மாநிலத்தைச் சேர்ந்தவன். ஆனாலும் தமிழ்நாட்டில் பணியாற்றுவதால் அனைத்து நடவடிக்கைகளையும் தமிழில் மேற்கொள்ள எல்லாவகையிலும் முயற்சி செய்து வருகிறேன். ஆனால், தலைமைச் செயலகத்திலிருந்து வருகின்ற அரசாணைகள், கடிதங்கள் ஆகியவை தேவையில்லாமல் ஆங்கிலத்தில் வருகின்றன. இது எங்களைத் திக்குமுக்காடச் செய்கிறது."

3. கடலூர் மாவட்ட, சார் ஆட்சியர் குசராத்காரர். அவர் பின்வருமாறு குறிப்பிட்டார்: -

"குசராத் மாநிலத்தில் அனைத்துமே குசராத்தி மொழியில்தான். தமிழ்நாட்டில் மட்டும் ஏன் இன்னும் தமிழ் இருக்க வேண்டிய இடத்தில்கூட ஆங்கிலத்தில் எழுதுகிறோம் என்பது வியப்பாக உள்ளது."

4. கருநாடக மாநிலத்திலிருந்து, "கருநாடக சாகித்திய அகாதமி" குறித்த அறிக்கை கன்னட மொழியில் அனுப்பப்பட்டுள்ளது. இதற்கான ஆங்கில மொழிபெயர்ப்பு ஏதும் அவர்கள் வைத்துக் கொள்ளவில்லை. நம்மை மொழிபெயர்த்துக்கொள்ளச் சொல்லியுள்ளார்கள்.

விளங்கும் உண்மைகள்!

இவற்றிலிருந்து வெளியாகும் உண்மைகள் -

1. தமிழக அரசின் - தலைமைச் செயலகத்தில் "தமிழ்" அலட்சியப்படுத்தப்படுகிறது.
2. பிற மாநிலத்தவர்களுக்கிருக்கின்ற பொறுப்புணர்ச்சி தமிழர்களாகிய நமக்கு இல்லை.
3. பிற மாநிலத்தில் இருக்கின்ற தெளிவு நம்மிடத்தில் இல்லை.

எடுக்கப்பட்ட நடவடிக்கைகள்

1. இந்த நிலைமைகளை ஆட்சிமொழித்துறை அமைச்சர் எனும் முறையில் நானே அறிந்ததனால்தான் அனைத்துத் துறைகளின் செயலாளர்களுக்கும் ஒரு நேர்முக மடல் எழுதினேன். சில செயலாளர்களிடமிருந்து பொறுப்போடு விடை வந்தது. சிலர் எந்த விடையும் எழுதவில்லை.

2. அரசாணைகள் பல தொடர்ந்து ஆங்கிலத்தில் வெளிவருவதை அமைச்சரவைக் கூட்டத்தில் மாண்புமிகு முதல்வர் அவர்களின் ஒப்புதலோடு சுட்டிக்காட்டியிருக்கிறேன். இதை எல்லா அமைச்சர்களும் அறிவார்கள். அதே கூட்டத்தில் மாண்புமிகு முதல்வர் அவர்கள் உடனடியாக அனைத்துச் செயலாளர்களுக்கும் மடல் எழுதுமாறு தலைமைச் செயலாளரிடம் எடுத்துக் கூறினார். அவரும் அனைத்துச் செயலாளர்களுக்கும் மடல் எழுதினார். ஆனாலும் அவை பொருட்படுத்தப்படவில்லை.

நடவடிக்கைகள்

இந்நிலையில் எல்லாத் துறைகளையும் ஆய்வு செய்தால், உண்மை நிலையை வெளிக் கொண்டுவந்துவிடமுடியும் என்ற அடிப்படையில் 14.9.99-ஆம் நாளன்று எங்களது துறைச் செயலாளர் திரு. இராமகிருட்டிணன், இ.ஆ.ப., தமிழ் வளர்ச்சி இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் ஆகியோர் தங்கள் துறையினை ஆய்வு செய்தனர். அதில் கண்டறியப்பட்ட உண்மைகள் இணைப்பில் தரப்பட்டுள்ளன. மேலும், கீழ்க்கண்ட உண்மை நிலையையும் தங்களுக்கு உணர்த்த வேண்டியது என் கடமை.

பொதுக்குறிப்பு

ஆட்சிமொழிச் சட்டம் இயற்றப்பட்டு 40 ஆண்டுகளுக்கும் மேலாகிவிட்டது. தலைமைச் செயலகத் துறைகளில் தமிழ்ப் பயன்பாடு இன்னும் முழுமையாக அமையவில்லை. மொத்தத்தில் நிருவாக நடைமுறையில் தமிழ் குறைந்த அளவிலேயே பயன்படுத்தப்படும் நிலை உள்ளது.

மேற்கூறப்பெற்ற அனைத்து இனங்களிலும் தமிழ் முழுமையாகப் பயன்படுத்தப்பட இத்துறை முனைப்பான நடவடிக்கைகளை உடன் மேற்கொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். அத்துடன் தொடர்புடைய துறைத் தலைமை அலுவலர்களிடமிருந்து வரப்பெறும் கடிதங்கள் தமிழில் அமைந்திடவும், இத்துறை தொடர்பான அனைத்து அலுவலகங்களிலும் தமிழ் முழுமையாகப் பயன்படுத்தப்படவும் உரிய நடவடிக்கைகளை உடன் மேற்கொள்ளுதல் வேண்டும்.

ஒன்பதுக்கும் மேற்பட்டவர்கள் தமிழ் காக்க - நஞ்சுண்டும் தங்கள் தேக்குமரத் தேகங்களைத் தீயிட்டுக் கொண்டும் மடிந்தனர் என்பதைத் தாங்கள் அறிந்திருக்கக்கூடும். எனினும் ஆட்சிமொழித்துறை அமைக்கப்பட்டதன் நோக்கம், மாண்புமிகு முதல்வர் அவர்களின் குறிப்பு, அமைச்சரின் நேர்முக மடல், தலைமைச் செயலாளரின் அறிவிப்பு ஆகிய அனைத்தும் புறக்கணிக்கப்பட்டுள்ளன. தாங்கள் இனிமேலாவது இதில் தக்க கவனம் செலுத்துவீர்கள் என்று நம்புகிறேன்.

தங்களிடம் இதுபற்றி நேரில் எடுத்துச் சொல்லப்பட்டுள்ளது. ........குள் அனைத்தையும் செம்மை செய்துவிடுவதாக உறுதி அளித்திருந்தீர்கள். அதன்படி பணிகளை முடிப்பீர்கள் என்று நம்புகிறேன். மீண்டும் சனவரித் திங்கள் மறு ஆய்வு நடக்கும்போது இந்தக் குறைகள் அகற்றப்பட்டிருக்கும் என்று நம்புகிறேன்.

அன்புடன்

(மு. தமிழ்க்குடிமகன்)

அலுவலர்கள் இதே பொறுப்புணர்ச்சியுடன், தொய்வு விழுந்து விடாமல், தொடர்ந்து செயலாற்றினாலே ஆட்சிமொழித் திட்டம் முழுமையாகி விடும்.

என் கருத்துகளை வலியுறுத்தியும் தலைமைச் செயலகத்தின் முன்னேற்றம் குறித்தும் சில இடங்களில் பேசிய பேச்சின் சில பகுதிகள் இங்கே தரப்படுகின்றன.

'முகம்' என்ற மாத இதழின் 15-ம் ஆண்டு விழா சென்னை மயிலாப்பூரில் உள்ள சீனிவாச சாஸ்திரி அரங்கத்தில் நடைபெற்றது. இதில் சிறப்பு விருந்தினராக கலந்துகொண்ட தமிழ் ஆட்சி மொழித்துறை அமைச்சர் மு. தமிழ்க்குடிமகன் பேசியதாவது :

இப்பொழுதுதான் தமிழர்களுக்கெல்லாம் ஒரு நம்பிக்கை பிறந்திருக்கின்றது. கடந்த ஆண்டு வரவு-செலவு திட்டத்தின்போது எனது முயற்சிகளை மேற்கொள்ள தொடங்கினேன். அந்த முயற்சிகளுக்கு எக்கச்சக்க கிண்டல்கள் இருந்ததை நீங்கள் மறக்கமுடியாது. இப்பொழுது கிண்டல் செய்தவர்களே, ஆக்கப்பணியில் ஈடுபட்டிருப்பதை நாம் மறுக்க முடியாது. சில நேரம் தமிழையே பலர் கிண்டல் செய்கிறார்கள். அவர்கள் ஆங்கிலத்தில் சில பிழைகள் இருந்தாலும் கண்டுகொள்வதில்லை. எல்லா மொழிகளுக்கும் நிறைகளும், குறைகளும் உண்டு.

விழிப்புணர்ச்சி தேவை

தமிழ் மொழிக்கு இருக்கின்ற வாய்ப்புகள் ஆங்கிலத்திற்கு இல்லை. நம் மொழிக்குள்ள இடத்தை யாரும் கவர்ந்துவிடமுடியாது. இதுவரை நாம் விழிப்புணர்ச்சி இல்லாமல் இருந்தோம். இனி விழிப்புணர்ச்சி தேவை. இந்திய அரசு மும்மொழி சட்டத்தை இயற்றினாலும் மாநில அரசு சட்டம் போட்டுத் தடுக்கும். பொதுமக்களுக்கு எல்லாம் தொலைக்காட்சி, நடிகர்-நடிகைகள் மீதுதான் பார்வை உள்ளது. அறிவியல் கருவிகளை வைத்துநாம் அவர்களது மூளையை சலவை செய்துவிட்டோம். எனவே அவர்களைப் பற்றி நான் கவலைப்படுவதில்லை.

பொதுமக்களுக்கு தமிழ் உணர்வு இல்லாவிட்டாலும்கூட நாம் நோய்வில்லாமல் தமிழ் வளர்ச்சிக்கு பாடுபடவேண்டும். ஒரு சில இடத்தில்கூட தமிழுக்கு மாறாக ஏதாவது நடந்தால் தட்டிக் கேட்க நெஞ்சுரம் வேண்டும். தற்பொழுது தலைமை செயலகத்தில் 25 விழுக்காடு அளவில்தான் தமிழ் வளர்ச்சி உள்ளது. மீதமுள்ள 75 விழுக்காடு அளவிற்கும் தமிழை வளர்க்க வேண்டிய பெரிய பொறுப்பு எனக்கு இருக்கிறது.

வளர்ச்சிப் பணிகள்

தமிழ்மொழி வளர்ச்சிக்காக எல்லா மாவட்டத்திலும் முழு ஆய்வு செய்து தமிழ் தட்டச்சுபொறிகள் வழங்க முடிவு செய்துள்ளோம். தமிழ் சுருக்கெழுத்து நூல் கிடைக்காததால் அதை அச்சிட்டு தர உள்ளோம். சென்னை அருங்காட்சியகத்தில் ரூ.2 கோடி செலவில் தமிழ் வளர்ச்சி வளாகம் என்னும் எழில் மையம் கட்டப்படவிருக்கின்றது. இந்த எழில் மையத்தில் தமிழ் துறையில் அனைத்துப் பிரிவுகளும் இயங்கும். இதற்காக ஒரே நேரத்தில் ரூ.2 கோடியை ஒதுக்கித் தந்தவர் தமிழக முதல்வர் தான் என்பதை யாரும் மறக்கக்கூடாது.

கருத்து வேறுபாடுள்ள செய்திகளை என்னிடத்தில் சொன்னாலும் சரி செய்யப்படும். களத்தில் இறங்காமல் நாம் வெற்றிபெற முடியாது. எனவே நீங்களும், நானும் இணைந்து பெறுகின்ற வெற்றி தான் தமிழுக்கு அரிய வாய்ப்பு - பெரிய வாய்ப்பு என கருதுகிறேன். இவ்வாறு அவர் கூறினார்.

தமிழ் ஆட்சி மொழி அமலாக்கம்

தமிழ் வளர்ச்சித்துறையின் மூலம் மதுரையில் புதன்கிழமை நடைபெற்ற தமிழ் ஆட்சிமொழிக் கருத்தரங்குக்குத் தலைமைவகித்து அவர் பேசியதாவது:

தமிழ் ஆட்சிமொழி ஆணையை செயல்படுத்துவதில் நமது மாநிலத்தில் பணிபுரியும் வெளி மாநிலங்களைச் சேர்ந்த ஆட்சிப் பணி அலுவலர்கள் (ஐ.ஏ.எஸ்.) காட்டும் ஆர்வத்தை தமிழகத்தைச் சேர்ந்த அலுவலர்கள் காட்டுவதில்லை.

தமிழகத்தில் நடைபெறும் கருத்தரங்குகள் தமிழில் நடைபெறவேண்டும். தமிழக அரசின் தலைமைச் செயலகத்தில் தமிழ் ஆட்சி மொழி அமலாக்கம் முழுமையாகக் கடைப்பிடிக்கப்படுகிறது. இதே நிலை அனைத்துத்துறைகளில் ஏற்பட வேண்டும்.

தமிழில் பெயர்ப் பலகை வைக்கவேண்டும் என்பதை வர்த்தக அமைப்பைச் சேர்ந்தோர் குறை கூறுவதை ஏற்க இயலாது. சிங்கப்பூர் நாட்டில் அனைத்து வர்த்தக நிறுவனங்களின் பெயரும் தூய தமிழ் மொழியிலும் இடம் பெற்றுள்ளது.

தமிழகத்தில் அரசு ஆணைகள், உத்தரவுகள் ஆங்கிலத்தில் வெளிவருவதை எனது கவனத்திற்குக் கொண்டுவந்தால் அந்த ஆணையை வெளியிட்ட துறையின் மீது உடன் நடவடிக்கை எடுக்கப்படும் என்றார்.

தற்போது தமிழ்ப் பணி செய்வதற்கு எதிராக யாரும் இல்லை. அனைவரும் ஒரு சார்புடன் ஆதரவு தருகின்றனர். 'தமிழனை அழித்துவிட்டுத் தமிழை வாழ வைக்கப் போகிறீர்களா? என்று கடுமையாக விமர்சனம் எழுதிய 'சோ' கூட மாறிவிட்டார். விளக்கிக் கூறிய பின்னர் 'நான் அவசரப்பட்டுவிட்டேன்' என்று எழுதினார்.

தமிழக அரசுத் துறையில் தமிழ் மொழியைக் கொண்டுவரும் ஒவ்வொரு முயற்சியையும் சட்டமன்றத்தில் அனைத்துக் கட்சியினரும் ஆதரிக்கின்றனர்.

தமிழில் விளம்பரப் பலகை

மதுரை மாவட்டத்தில் அரசு அலுவலகங்களில் ஆட்சிமொழியாக 90 சதவீதம் தமிழ் உள்ளது. ஆனால் தலைமைச் செயலகத்தில் 25 சதவீதம்தான் தமிழ் மொழி பயன்படுத்தப்படுகிறது. தற்போது 500 தமிழ்த் தட்டச்சுகள் வாங்கப்பட்டபின் தமிழைப் பயன்படுத்துவது அதிகரித்து உள்ளது."

தலைமைச் செயலகத்தில் 35 துறைகள் உள்ளன அவற்றுள் தேர்தல் துறை, திட்டம் (ம) வளர்ச்சித் துறைகள் ஆய்வுக்கு உட்படுத்தப்படவில்லை. தமிழ் வளர்ச்சித் துறைக்கு ஆய்வு தேவையில்லை. தகவல் தொழில் நுட்பத் துறை புதியது என்பதால் பின்னர் ஆய்வு செய்யலாம் என விடப்பட்டது. எஞ்சிய துறைகள் அனைத்தும் ஆய்வு செய்யப்பட்டன. அவற்றின் முழுவிவரங்களையும் படியுங்கள்.

தலைமைச் செயலகத்தில் ஆய்வு

*1. விழிப்புப் பணித்துறை* (Vigilance Department )

28.4.2000 அன்று ஆய்வு செய்யப்பட்டது.

12 பேரில் 2 பேர் மட்டுமே தமிழில் ஒப்பமிடுகின்றனர். கடிதப் போக்குவரத்து முழுவதும் ஆங்கிலத்தில் உள்ளது. பெரும்பாலும் ஆங்கிலத்திலும் சிறிய அளவில் தமிழிலும் நடவடிக்கைகள் உள்ளன. இது தொடர்பாக எமது செயலர் திருமதி. இலத்திகா பட்டகருடன் கலந்துரையாடி சில குறிப்புகளைத் தந்துள்ளார்.

ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கம்

தமிழ் வளர்ச்சி, பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத்துறை - விழிப்புப் பணி ஆணையாளர் அவர்களுடன் கலந்தாய்வு.

கலந்தாய்வு நாள் : 28.4.2000

| | | |
|---|---|---|
| 1. வருகைப் பதிவேடு | : | 12 பேரில் 2பேர் தமிழிலும் 10 பேர் ஆங்கிலத்திலும் ஒப்பமிடுகின்றனர். |
| 2. பற்றொப்பப்பதிவேடு<br>3. பணிப்பதிவேடு | : | இப்பதிவேடுகள் பணியாளர் மற்றும் நிர்வாக சீர்திருத்தத் துறையில் அலுவலக நடைமுறைப் பிரிவில் பேணி வரப்படுகின்றன. |
| 4. கால முறை அறிக்கைகள்<br>கமுக்க அறிக்கைகள்<br>பதிவுத் தாள்கள் | : | நிலை எழவில்லை |
| 5. ஆணைகள் | : | இந்த ஆணையம் தலைமைச் செயலகத்தின் ஒரு துறையன்று தனிப்பட்ட அமைப்பு. ஆகவே அரசு ஆணைகள் எதுவும் பிறப்பிக்கும் வாய்ப்பு எதுவும் இல்லை. |
| 6. கடிதப் போக்குவரத்து | : | இலஞ்ச ஒழிப்பு மற்றும் விழிப்புப்பணி இயக்ககத்திற்கும் ஒழுங்கு நடவடிக்கை தீர்ப்பாய ஆணையங்களுக்கும் ஆங்கிலத்தில் மட்டுமே கடிதப் போக்குவரத்து உள்ளது. |
| 7. விடுப்பு விண்ணப்பங்கள் | : | தமிழிலும், ஆங்கிலத்திலும் விண்ணப்பங்கள் பெறப்படுகின்றன. அவற்றின் மீதான ஆணைகள் தமிழிலும், ஆங்கிலத்திலும் உள்ளன. |

8. சிறப்புப் பணிகள் : விழிப்புப்பணி ஆணையத்தின் ஆண்டறிக்கை சட்டப்பேரவையில் தமிழிலும், ஆங்கிலத்திலும் அளிக்கப்படுகின்றது. பிறவாலாயப் பணிகள் யாவும் ஆங்கிலத்திலும், தமிழிலும் மேற்கொள்ளப் படுகின்றன.

ஒம்/-

திருமதி. லட்டிகா த.படால்கர்

விழிப்புப்பணி ஆணையர்

/உண்மை நகல்/

செயலர்.

இதை அடிப்படையாகக் கொண்டு நானும் அவர்க்கு 9.5.2000 அன்று ஒரு நேர்முக மடல் வரைந்தேன்.

அந்த மடல் அப்படியே தரப்பட்டுள்ளது.

அன்புக்குரிய திருமதி. லட்டிகா படால்கர் அவர்களுக்கு,

'ஆட்சிமொழி' தொடர்பாகத் தங்கள் துறை ஆய்வு செய்யப்பட்டிருப்பதை அறிந்தேன். சில சீர்திருத்தங்களைச் செய்தாலேயே தங்கள் துறை முற்றிலும் எங்கள் பணிக்கு உதவியதாக அமையும். "அரசு ஊழியர்கள் அனைவரும் தமிழில்தான் கையொப்பமிடவேண்டும்" என்று 1978-ஆம் ஆண்டிலேயே அரசு ஆணை பிறப்பித்துள்ளது. அதற்கு விதிவிலக்கு ஏதுமில்லை. அதேபோல நாமே பயன்படுத்திக் கொள்கிற வருகைப்பதிவேடு மற்றும் பற்றொப்பப் பதிவேடுகளில் தமிழில் கையொப்பமிடப்பட வேண்டும். விடுப்பு விண்ணப்பங்களைத் தமிழில் அளிக்கவேண்டும். இவற்றின் மீதான ஆணைகள் தமிழில் தரப்படவேண்டும். பதிவேடுகளில் பதிவுகள் தமிழில் இருக்க வேண்டும். தமிழ்நாட்டுக்குள்ளிருந்து வருகின்ற எந்தக் கடிதத்திற்கும் தமிழிலேயே பதில் தரப்படவேண்டும். இவற்றைக் கடைப்பிடித்தாலேயே தங்கள் துறை 100-க்கு 100 ஆட்சிமொழித் திட்டத்தைச் செயலாக்கியதாக அமையும். ஆவன செய்வீர்கள் என்று நம்புகிறேன்.

அன்புடன்

மு. தமிழ்க்குடிமகன்

பெறுநர் :

திருமதி. லட்டிகா த. படால்கர், இ.ஆ.ப.,
விழிப்புப்பணி ஆணையர், தலைமைச் செயலகம், சென்னை - 600 009

அதனை ஏற்று அத்துறையின் ஆணையர் 5.6.2000 அன்று எனக்கொரு மடல் எழுதியிருக்கிறார். அவருடைய மடல் மிகவும் நம்பிக்கை அளிப்பதாக இருந்தது.

அந்த மடல் அப்படியே தரப்பட்டுள்ளது.

மாண்புமிகு அமைச்சர் அய்யா,

பொருள் : தமிழ் வளர்ச்சி - ஆட்சி மொழித்திட்டம் - செயலாக்கம் - விழிப்புப் பணி ஆணையம் - ஆய்வு மேற்கொள்ளப்பட்டது - ஆய்வு தொடர்பாக.

பார்வை : தங்களின் நே.மு.கடிதம், நாள். 2.5.2000

தங்களின் நேர்முகக் கடிதம் கிடைக்கப் பெற்றேன்.

2. தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறையினரால் விழிப்புப் பணி ஆணையத்தில் கடந்த 28.4.2000 அன்று ஆட்சிமொழித்திட்டச் செயலாக்கம் குறித்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. ஆய்வின்போது கூறப்பட்ட அறிவுரைகள் ஏற்கப்பட்டு, தற்போது இவ்வாணையத்தில் பணிபுரியும் அனைத்து அரசு ஊழியர்களும் வருகைப் பதிவேட்டில் தமிழில்தான் கையொப்பமிடுகின்றனர். அதுபோல் பற்றொப்பப் பதிவேடுகளிலும், விடுப்பு விண்ணப்பங்களிலும் தமிழிலேயே கையொப்பமிடுகின்றனர். விதிவிலக்குகளுக்குட்பட்டு தமிழில் மேற்கொள்ள வேண்டிய இனங்களில் தமிழிலேயே பதில் எழுதப்படுகிறது.

3. மேலே உள்ள தகவல்களை தங்களின் மேலான பார்வைக்கு பணிவன்புடன் சமர்ப்பிக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள

(ல.த. படால்கர்)

பெறுநர் : மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க்குடிமகன், எம்.ஏ., பி.எச்.டி., சென்னை - 9

*2. பொதுத்துறை*

இத்துறை மாண்புமிகு முதல்வர் அவர்கள் பொறுப்பில் வருகின்றது.

25.2.2000 அன்று இத்துறை ஆய்வு செய்யப்பட்டது. வருகைப் பதிவேட்டில், பற்றொப்பப் பதிவேட்டில் மிகச் சிலரைத் தவிர, பலர் ஆங்கிலத்திலேயே ஒப்பமிடுகின்றனர்.

கடிதப் போக்குவரத்துக் கூடப் பெரும்பாலும் ஆங்கிலத்தில். தமிழில் 24,785 என்றால் ஆங்கிலத்தில் 60,056 மடல்கள்; இங்கு ஆட்சி மொழி எந்த அளவில் பயன்படுத்தப்படுகிறது என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

இவ்வளவுக்கும் பிற சார் நிலை அலுவலகங்களிடமிருந்து 23,351 மடல்கள் தமிழிலும், 10,114 மடல்கள் ஆங்கிலத்திலும் வருகின்றன. பதிவேடுகள் எல்லாம் ஆங்கிலத்தில் உள்ளன.

ஆணைகள் (1.1.99 முதல் 31.1.2000 வரை 13 மாதங்களில்) தமிழில் 3365 என்றால் ஆங்கிலத்தில் 15,568

தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தை மிக மோசமான நிலையில் செயற்படுத்தும் துறை பொதுத்துறைதான். இது குறித்துச் செயலர் பாருக்கியிடம் நேரில் பேசப்பட்டது. நேர்முக மடலும் அளிக்கப்பட்டது.

பொதுத்துறை

ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் - தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத்துறை

அரசுச் செயலாளர் - ஆய்வு அறிக்கை

ஆய்வு நாள் : 25.02.2000

1. வருகைப் பதிவேடு

அ. 411 பேரில் 128 பேர் தமிழிலும்
283 பேர் ஆங்கிலத்திலும் ஒப்பமிடுகின்றனர்

ஆ. தொடர் குறிப்பேடு வருகைப் பதிவேடு தமிழில் உள்ளன.

இ. தற்செயல் விடுப்பு, மருத்துவ விடுப்பு, தகவலின்மை, சமய விடுப்பு, இல்லப்பணி போன்ற விவரங்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன.

2. பற்றொற்பப் பதிவேடு (அலுவலர்கள்)

அ. 905 பேரில் 131 பேர் தமிழிலும்
774 பேர் ஆங்கிலத்திலும் ஒப்பமிடுகின்றனர்

ஆ. பதிவறை எழுத்தர், அலுவலக உதவியாளர் அடிப்படைப் பணியாளர், மின் தூக்கி இயக்குபவர் மற்றும் காவலர்களுக்கான பற்றொப்பப்பதிவேடு.
381 பேரில் 74 பேர் தமிழிலும்
307 பேர் ஆங்கிலத்திலும் ஒப்பமிடுகின்றனர்.

பெரும்பாலோர் ஆங்கிலத்தில் ஒப்பமிட்டுள்ளனர்.

| 3. காலமுறை அறிக்கைகள் உட்பட கடிதப் போக்குவரத்து (விதிவிலக்குப் பெற்ற இனங்கள் தவிர) | | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|---|
| அ. | பொதுமக்களுக்கும் அரசுச் சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | 6,717 | 6,069 | 12,786 |
| ஆ. | மேல்நிலை அலுவலர்களுக்கு | 5,516 | 33,697 | 39,213 |
| இ. | சார்நிலை, சமநிலை அலுவலர்களுக்கு | 7,124 | 9,071 | 16,195 |
| ஈ. | அரசின் மற்ற அலுவலகங்களுக்கு | 5,428 | 11,219 | 16,647 |
| | மொத்தம் | 24,785 | 60,056 | 84,841 |

| | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| 4. அலுவலகப் பணியாளர்கள் சார்நிலை அலுவலர்கள் ஆகியோரிடமிருந்து வரப்பெற்றவை | 23,351 | 10,114 | 33,465 |

5\. அ. பதிவேடுகள்

| | |
|---|---|
| பணக் கணக்குப் பதிவேடு, வழங்கப்படாச் சம்பளப் பதிவேடு, மறு கவனிப்பு பதிவேடு, வங்கிப் பதிவேடு துணைக் கணக்குப் பதிவேடு, ஊதிய உயர்வுப் பதிவேடு, கடன்களும் முன் பணங்களும் குறித்த பதிவேடு, எழுதுபொருள் விவரப் பதிவேடு, பல்வகைப் பிடித்தங்கள் பதிவேடு ஆகியன | ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன. |
| ஆ. அனுப்புகைப் பதிவேடு தன்பதிவேடு, சுத்த நகல் பதிவேடு, பகிர்மானப் பதிவேடு போன்றவை | தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன. |

6\. பணிப்பதிவேடு

| | |
|---|---|
| மாற்றல், நியமனம், ஊதிய உயர்வு, பணிவரன்முறை, நீண்ட காலக் கடன், | தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன. |

ஊதியம் அனுமதியிடல், பணி சரிபார்ப்பு போன்றவை (அலுவலக நடைமுறை - நிர்வாகம். 3ல் தமிழில் பதிவுகள் மேற்கொள்ளப்படுகின்றன

7. ஆணைகள்

| (1.1.1999 முதல் 31.1.2000 வரை) | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. வாலாயம் | 419 | 5,042 | 5,461 |
| 2. நிலையாணை | 234 | 1,956 | 2,190 |
| 3. பத்தாண்டு | 29 | 300 | 329 |
| 4. இருபதாண்டு | 6 | 91 | 97 |
| 5. முப்பதாண்டு | 5 | 5 | 10 |
| 6. நாற்பதாண்டு | - | 44 | 44 |
| 7. அலுவலக நடைமுறை | 2,642 | 8,116 | 10,758 |
| 8. அலுவலக ஆணைகள் | 30 | 14 | 44 |
| மொத்தம் | 3,365 | 15,568 | 18,933 |

தமிழில் : 3,365

ஆங்கிலத்தில் : 15,568

8. தட்டச்சுப்பணி

1. அ. தமிழ்த் தட்டச்சுகளின் எண்ணிக்கை : 127

ஆ. ஆங்கிலத் தட்டச்சுகளின் எண்ணிக்கை : 122

(சுருக்கெழுத்தர் உட்பட)

தட்டச்சர் : 35

தமிழ்ச் சுருக்கெழுத்துத் தட்டச்சர் : 16

தமிழ்த் தட்டச்சில் தேர்ச்சி பெறாதோர் விவரம் : இல்லை

9. கடந்த ஆறு திங்களில் தட்டச்சுச் செய்யப்பட்ட பக்கங்களின் எண்ணிக்கை

| | | |
|---|---|---|
| தமிழில் | - | 33,761 |
| ஆங்கிலத்தில் | - | 78,805 |
| மொத்தம் | - | 1,12,566 |

10. பதிவுறுத்தாள்கள் கமுக்க அறிக்கைகள் : ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன.

மாண்புமிகு அமைச்சர் பெருமக்களில் (26 பேர்களில்) சற்றொப்ப பதின்மர் நீங்கலாக அனைவரும் ஆங்கிலத்தில் ஒப்பமிடுகின்றனர்.

கலந்துரையாடல் குறிப்புரை

ஆய்வுக் குறிப்புகளின் அடிப்படையில் தமிழ் வளர்ச்சிப் பண்பாட்டுத்துறை அரசுச் செயலாளர், தமிழ் வளர்ச்சிப் பண்பாட்டுத்துறை இணைச் செயலாளர் தமிழ் வளர்ச்சி இயக்குநர் மொழி பெயர்ப்புத்துறை இயக்குநர் ஆகியோருடன் பொதுத்துறை அரசுச் செயலாளர் அவர்களின் அலுவலக அறையில் கலந்துரையாடினர். இக்கலந்துரையாடலின்போது பெரும்பாலோர் வருகைப் பதிவேடு, பற்றொப்பப்பதிவேட்டில் ஆங்கிலத்தில் ஒப்பமிட்டுள்ளனர். அரசாணைக்கிணங்க அனைவரும் தமிழில் ஒப்பமிடவேண்டும். அலுவலக நடைமுறை, அலுவலக ஆணைகள், வாலாயம் போன்ற ஆணைகள் பெருமளவில் ஆங்கிலத்தில் வெளியிடப்படுகின்றன. வாலாயமான நடவடிக்கைகளைச் செயற்படுத்துதற்குரிய இவ்வாணைகள் அனைத்தும் தமிழில் வெளியிடப்பட வேண்டும். நிலையாணைகள் தமிழில் மாற்றக்கூடியனவற்றைத் தமிழிலேயே வெளியிட வேண்டும். தேவைப்படின் மொழிபெயர்ப்புத்துறையின் வாயிலாக மொழியாக்கம் செய்து கொள்ளலாம். பதிவேடுகள் அனைத்தும் தமிழிலேயே எழுதப்படவேண்டும். இவற்றுக்கு விதிவிலக்கு அளிக்கப்பட வில்லை. பணிப்பதிவேடுகளில் பதிவுகள் யாவும் தமிழும் ஆங்கிலமும் கலந்து எழுதப்படுகின்றன. இப்பதிவுகள் அனைத்தும் தமிழிலேயே மேற்கொள்ளப்படவேண்டும். ஆய்வுக்கு முந்திய அரையாண்டில் இவ்வலுவலகத்திலிருந்து அனுப்பப்பட்ட மொத்தக் கடிதங்கள் 84841. இவற்றில் 24785 மட்டுமே தமிழில் இருந்திருக்கின்றன. இப்புள்ளி விவரத்திலிருந்து மூன்றில் ஒரு பங்குக் கடிதங்கள் மட்டுமே தமிழில் எழுதப்பட்டுள்ளன. இனி, அனுப்பப்படும் கடிதங்கள் யாவும் (விதி விலக்குகள் தவிர) தமிழிலேயே எழுதப்படவேண்டும். பற்றாளர் தமிழ்த்திட்டத்தைச் செயற்படுத்துவதில் ஆர்வங் காட்டவேண்டும்.

ஆட்சிச் சொல்லகராதி (நான்காம் பதிப்பு) கையடக்கப் பதிப்பு, மாதிரி வரைவுகள் போன்ற நூல்களைத் தேவைப்படும் படி எண்ணிக்கை விவரங்களுடன் தமிழ் வளர்ச்சி இயக்குநர் அவர்களிடம் தொடர்பு கொண்டு பெற்றுக்கொள்ளலாம். இவற்றுடன் கழக - ஆங்கிலத் தமிழ்க் கையகராதி, பிழை நீக்கி எழுதும்முறை போன்ற நூல்களை அலுவலகப் பயன்பாட்டிற்கென வாங்கிக்

கொள்வதற்கு வகை செய்யப்பட்டுள்ளது. தேவைப்படின் சென்னைப் பல்கலைக்கழகத்தால் வெளியிடப்பட்டுள்ள பல்கலைக் கழக அகராதியும் (தமிழ் - ஆங்கிலம்) வாங்கிப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

தமிழுக்குப் பெருமை சேர்க்கும் வகையில் மாநில அரசு அலுவலகங்களின் விவரங்களடங்கிய தொலைபேசிக் கையேடு, தமிழில் அச்சிட்டு அனைத்துத் துறைகளுக்கும் தங்கள் துறையின் மூலம் வழங்கியுள்ளமை பாராட்டுக்குரியது. எனினும் மேல்முறையீட்டுக் குட்பட்ட சட்டத் தொடர்புடைய ஆணைகள், வெளிநாட்டு நிறுவனங்கள் தூதரகங்கள், மைய அரசு அலுவலகங்கள் ஆகியவற்றிற்கு எழுதப்படும் கடிதங்கள் நீங்கலாக அனைத்துக் கடிதப் போக்குவரத்துக்களும் தமிழிலேயே மேற்கொள்ள வேண்டும் எனப் பல்வேறு கருத்துக்களைத் தமிழ் வளர்ச்சிப் பண்பாட்டுத் துறைச் செயலாளர் அவர்கள் தெரிவித்தார்கள். இக்குறைகளை மூன்று திங்களில் களைந்து ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்திற்கு உறுதுணை புரிவதாக பொதுத்துறைச் செயலாளர் அவர்கள் உறுதி அளித்தார்கள்.

அரசுச் செயலாளர்
தமிழ் வளர்ச்சி பண்பாடு (மற்றும்) இந்து
சமய அறநிலையத்துறை, சென்னை - 9

அதன்பின் சில மாற்றங்கள் ஏற்பட்டன. மாநில அரசு அலுவலர்களின் விவரங்கள் அடங்கிய தொலைபேசிக் குறிப்பேடு 2000த்தில் தமிழில் வெளியிடப்பட்டது.

தட்டச்சுப் பொறிகளைப் போதுமான அளவு மாற்றிக் கொள்ளவில்லை.

6 மாதத்தில் தட்டச்சுச் செய்யப்பட்ட பக்கங்கள் தமிழில் 33,761 என்றால் ஆங்கிலத்தில் 78,805 என்பது எவ்வளவு மோசமான நிலை என்பதை உணரலாம்.

27.3.2000 அன்று செயலர் எழுதிய மடலில் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன என்று தெரிவித்துள்ளார்.

அன்பார்ந்த அய்யா,

பொருள் : நிர்வாகம் - பொதுத்துறை ஆட்சிமொழிச் செயலாக்கம் குறித்த ஆய்வு அறிக்கை - சம்பந்தமாக.

பார்வை : தங்களின் நேர்முக மடல் நாள் 06.03.2000

பார்வையில் கண்ட தங்களின் நேர்முக மடல் கிடைக்கப்பெற்றது. அக்கடிதத்தில் சுட்டிக் காட்டப்பட்டுள்ள குறைகளைக் களைந்து இத்துறையில் தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கத்தை

முழுமையாகச் செயல்படுத்தும் வகையில், நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றது என்பதைத் தங்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தங்கள் அன்புள்ள

(எம்.எ.'ப். பாரூகி)

பெறுநர்,

முனைவர் மு. தமிழ்க்குடிமகன், எம்.ஏ., பி.எச்.டி.,
தமிழ் ஆட்சிமொழி அமைச்சர்,
தலைமைச் செயலகம், சென்னை - 600 009

*3. பொதுப்பணித்துறை*

இத்துறையின் பணிகள் அனைத்தும் பொறியாளர்களால் மேலாண்மை செய்யப் படுவதால் ஆங்கிலத்தின் தாக்கம் அதிகமாகவே இருக்கும். எனினும் நண்பர் துரை முருகன் இத்துறை அமைச்சர் என்பதாலும் அவர் தக்க நடவடிக்கை எடுப்பார் என்பதாலும் அவரது துறை ஆய்வுக்குறிப்பு செயலர்க்கும், அமைச்சர்க்கும் அனுப்பப்பட்டது.

21.12.99 இல் ஆய்வு மேற்கொள்ளப்பட்டது.

166 பேரில் 26 பேர் மட்டுமே வருகைப் பதிவில் தமிழில் கையொப்பமிடுகின்றனர்.

| | | |
|---|---|---|
| ஆறுமாதத்தில் அராசணை | : | தமிழில் 286 ஆங்கிலத்தில் 688 |
| கடிதப் போக்குவரத்து | : | தமிழில் 4633 ஆங்கிலத்தில் 5257 |

இது எவ்வளவு மோசமான நிலை என்பதை உணர்த்தினோம்.

கலந்துரையாடி, குறிப்புகளைப் பெறுவதற்கே அத்துறையின் செயலர் பல மாதங்கள் இழுத்தடித்துள்ளார்.

3.5.2000 அன்று தான் கலந்துரையாடல் நடந்துள்ளது.

அதுவும் 4 மாதம் கழித்து. எவ்வளவு பொறுப்போடு செயல்படுகிறார்கள் என்பதைக் கவனிக்க வேண்டும். 10.5.2000 அன்று நான் என் நேர்முக மடலைச் செயலாளர் குப்தாவுக்கு வழங்கினேன். ஆறு பக்கங்களில் நான் தந்துள்ள செய்திகளில் எங்கள் உணர்வுகள் அனைத்தும் அடங்கியுள்ளன.

அதேநாளில் ஒரு தனிமடல் அமைச்சர் அவர்களிடம் தரப்பட்டது.

இது, தொடர்பாக இரண்டரை மாதம் கழித்து 30.7.2000 அன்று பொதுப் பணித்துறை அமைச்சர் துரை முருகன் எனக்கொரு நேர்முக மடல் வரைந்திருந்தார்.

1.1.2000 முதல் 20.6.2000 வரைக்குமான கால கட்டத்தில் தமிழ் பெரிய அளவில் பயன்படுத்தப்பட்டுள்ளது என்று சுட்டிக் காட்டியுள்ளார்.

ஏற்பட்டுள்ள மாற்றங்களைப் பட்டியலிட்டுக் காண்பித்துள்ளார்.

அடுத்த ஆய்விற்குள் தமிழ் முழுமையாய் பொதுப்பணித் துறையில் செயல்படுத்தப்படும் என்று உறுதியளித்திருந்தார்.

பொதுப்பணித்துறை

அனுப்புநர்

திரு. ந.பி. குப்தா, இ.ஆ.ப.,
அரசுச் செயலாளர்

பெறுநர்

மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர் அவர்கள்
தமிழ்நாடு அரசு, சென்னை - 600 009

மாண்புமிகு அய்யா,

பொருள் : அலுவலக நடைமுறைகள் - அரசாணைகள் - தமிழில் வெளியிட அறிவுரைகள் - தொடர்பாக.

பார்வை : தங்களின் 17.7.1998 நாளிட்ட கடிதம்.

இத்துறையில் தமிழை ஆட்சிமொழியாகத் தீவிரமாக செயல்படுத்தும் பொருட்டு தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறையின் வேண்டுகோளின்படி ஒரு 'பற்றாளர்' நியமிக்கப்பட்டுள்ளார். மேலும் அரசாணைகள் அனைத்தும் தமிழிலேயே வெளியிடப்பட வேண்டும் என்று இத்துறையின் அனைத்துப் பிரிவுகளும் அறிவுறுத்தப்பட்டுள்ளன (நகல் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது) இத்துடன் 1997-ஆம் ஆண்டு தமிழில் வெளியிடப்பட்ட அரசாணையின் நகல்கள் தமிழ் வளர்ச்சி மற்றும் பண்பாட்டுத் துறைக்கு அனுப்பி வைக்கப்பட்டுள்ளன என்பதையும் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

2. தங்களின் கடிதத்தில் அறிவுறுத்தப்பட்டுள்ளபடி இனிமேல் வருகின்ற அரசாணைகள் அனைத்தும் தமிழிலேயே வெளியிடப்படுமென்றும், ஆங்கிலத்தில் வெளியிடப்படும் அரசாணை தமிழிலும் சேர்த்து வெளியிடப்படும் என்றும் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள

(ந.பி. குப்தா)

தமிழ் நாடு அரசு

பொதுப்பணித்துறை

புனித ஜார்ஜ் கோட்டை,

சென்னை - 600 009

பொருள் : ஆட்சிமொழி - தலைமைச் செயலகத்தில் 'தமிழ்' ஆட்சி மொழித் திட்டம் செயலாக்கம் - மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி தமிழ்ப்பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் தலைமையில் கூட்டம் - முடிவு - செயலாக்கம் - ஆணை பிறப்பிக்கப்படுகிறது.

பார்வை : அரசு கடித எண்.5387/த.வ.1.1/98.6 த.வ.ப. (மற்றும்) அறநிலைத்துறை நாள் 10.6.98

தலைமைச் செயலகத்தில் கடந்த இரண்டாண்டுகளில் ஆட்சிமொழியாகத் தமிழைச் செயற்படுத்தியதில் ஏற்பட்ட முன்னேற்றம் மற்றும் இடர்ப்பாடுகள் குறித்தும், இடர்ப்பாடுகளைக் களைவது குறித்து விவாதிக்கவும், தமிழில் சிறந்த முறையில் வரைவுகளும் குறிப்புகளும் எழுதுவதற்கான பயிற்சித் திட்டத்தினை செவ்வனே செயல்படுத்துவது மற்றும் தமிழாக்கப் பணிகளைச் செம்மைப்படுத்தவும் செழுமைப்படுத்தவும் தலைமைச் செயலகத்துறைகளின் பற்றாளர்கள் (Nodal Officers) கூட்டம் மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி அமைச்சர் அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

2. ஆட்சிமொழி வளர்ச்சி பற்றி அமைச்சர் பேசும்போது தலைமைச் செயலகத்தின் எந்தத் துறையிலும் ஆட்சிமொழித் திட்டம் சரிவர செயலாக்கம் செய்யப்படவில்லை என்று சுட்டிக் காட்டியுள்ளார். மேலும் துறைத் தலைவர்களிடமிருந்து வரும் கடிதங்கள் ஆங்கிலத்தில் வருமேயானால் அவைகளை திருப்பி அனுப்பி தமிழில் அனுப்புமாறு கேட்டுக்கொள்ள வேண்டும் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

3. எனவே பொதுப்பணித்துறையில் உள்ள எல்லாப் பிரிவுகளும் இனிவரும் காலங்களில் குறிப்புகள், கடிதங்கள், ஆணைகள், அனைத்தும் கண்டிப்பாகத் தமிழில் வெளியிடப்பட வேண்டும்

என இதன் மூலம் அறிவுறுத்தப்படுகிறார்கள். இதற்கான நடவடிக்கைகளை அனைத்துப் பிரிவுகளும் உடனே மேற்கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

நா. நடேசன்
அரசு துணைச் செயலாளர்

பெறுநர்

அனைத்துப் பிரிவுகள், பொதுப்பணித்துறை, சென்னை - 9

/ஆணைப்படி / அனுப்பப்படுகிறது/

பிரிவு அலுவலர்

அமைச்சரின் மடல்

நேர்முகக் கடித எண்:43304/அருமுபி-2/99-3, நாள் 30.7.2000

மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி அமைச்சர் அவர்களுக்கு,

பொருள் : தமிழ்வளர்ச்சி - தமிழ்வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் - தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம் குறித்து ஆய்வு

பார்வை : பொதுப் பணித்துறைச் செயலருக்கு 18.5.2000-ம் நாளிட்ட நேர்முக மடல்.

பொதுப்பணித்துறைச் செயலாளருக்கு அனுப்பப்பட்டுள்ள தங்களின் நேர்முக மடலில் இத்துறையில் அனைத்து இனங்களிலும் தமிழ் முழுமையாகப் பயன்படுத்தப்படவில்லை என்று சுட்டிக் காட்டப்பட்டதைத் தொடர்ந்து பொதுப்பணித் துறையில் தற்பொழுது அனைத்து இனங்களிலும் அதிக அளவில் தமிழைப் பயன்படுத்த நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டுள்ளது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

2. தங்களின் நேர்முக மடலில் செயலாளர், தமிழ் வளர்ச்சி, பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அவர்கள் 3.5.2000 அன்று மேற்கொண்ட ஆய்வின் போது பொதுப்பணித்துறையில் 1.1.1999 முதல் 30.6.1999 வரை தமிழ் எந்த அளவிற்கு பயன்படுத்தப்பட்டுள்ளது என்றும், தமிழின் பயன்பாடு என்ன என்பது குறித்தும் கீழ்க்கண்டவாறு சுட்டிக்காட்டியுள்ளார். இவ்வாறு சுட்டிக்காட்டப்பட்டுள்ள இனங்களின் மீது 1.1.2000 முதல் 20.6.2000 வரையில் பொதுப்பணித்துறையினால் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கை கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

ஆய்வின்போது சுட்டிக்காட்டப்பட்டவை

1. கையொப்பம்

வருகைப் பதிவேட்டிலும் இதர பட்டியல் களிலும் பலர் ஆங்கிலத்திலேயே கையொப்பமிடுகின்றனர்.

2. மடல் போக்குவரத்து

தமிழில் 4633-ம் ஆங்கிலத்தில் 5237 கடிதங்களும் வெளியிடப்பட்டுள்ளன. தமிழைவிட ஆங்கிலமே அதிகம் பயன் படுத்தப்பட்டுள்ளது

3. அரசாணைகள்

தமிழில் 286-ம், ஆங்கிலத்தில் 688-ம் அரசாணைகள் வெளியிடப்பட்டுள்ளன

4. பதிவேடுகள்

பெரும்பாலான பதிவேடுகள் ஆங்கிலத்திலேயே பராமரிக்கப்படுகின்றன.

5. தட்டச்சுபொறிகள்

இரண்டு ஆங்கிலத் தட்டச்சுகள் விதிமுறைக்கு அதிகமாக இருக்கின்றன. இவற்றை ஒப்படை செய்துவிட்டு தமிழ்த் தட்டச்சுகள் பெறப்பட வேண்டும். பொதுப்பணித்துறை விதித் தொகுப்புகள் ஆங்கிலத்திலேயே உள்ளன. இவற்றைத் தமிழில் மொழி பெயர்க்க வேண்டும்.

பொதுப்பணித்துறை எடுத்த நடவடிக்கை

1. கையொப்பம்

தற்பொழுது அனைத்து அலுவலர்களும் அனைத்து இனங்களிலும் தமிழில்தான் கையொப்பமிடுகின்றனர்.

2. மடல் போக்குவரத்து

கடந்த ஆறுமாதத்தில் பொதுமக்கள் அரசு சார்பற்ற நிறுவனம் மற்றும் அரசுத் துறைகளுக்கு 8507 மடல்கள் தமிழில் எழுதப்பட்டுள்ளன.

3. அரசாணைகள்

கடந்த ஆறுமாதத்தில் வெளியிடப்பட்ட 1207 அரசாணைகளில் 857 தமிழில் வெளியிடப் பட்டுள்ளன. இது மொத்த அரசாணையில் 70 விழுக்காடு ஆகும்.

4. பதிவேடுகள்

தற்சமயம் பதிவேடுகள் அனைத்தையும் தமிழிலேயே பராமரிக்க நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டுள்ளது.

5. தட்டச்சுப் பொறிகள்

விதிமுறைகளுக்கு அதிகமாக உள்ள இரண்டு ஆங்கிலத் தட்டச்சுகளுக்கு பதில் இரண்டு தமிழ்த் தட்டச்சுக்களை அரசு எழுதுபொருள் இயக்கத்தில் பெற நடவடிக்கை எடுக்கப் பட்டுள்ளது. இத்துறையில் உள்ள விதித் தொகுப்புகள் அனைத்தையும் தமிழில் மொழி பெயர்க்கும்படி தலைமைப் பொறியாளர்கள் அறிவுறுத்தப்பட்டுள்ளனர்.

3. பொதுப்பணித்துறையில், காவிரி நதி நீர் பிரச்சினை, மாநிலங்களுக்கிடையேயான நதி நீர் பிரச்சினைகள், கிருஷ்ணா குடிநீர் திட்டம், நீர் வள ஆதார தொகுப்புத் திட்டம், உலக வங்கி கடனுதவி பெறும் இனங்கள் ஆகியவற்றுக்கு மத்திய அரசு, அண்டை மாநிலங்கள், காவிரி நடுவர் மன்றம், உயர்நீதி மன்றங்கள், உச்சநீதி மன்றம், உலக வங்கி இவற்றுக்கு கடிதப் போக்குவரத்து மேற்கொள்ள வேண்டியிருப்பதால் இவ்வினங்களில் தமிழை முழுமையாகப் பயன்படுத்த இயலாத நிலை உள்ளது. எனவே இவ்வினங்களில் மட்டும் ஆங்கிலம் பயன்படுத்தப்பட்டு வருகிறது. இருப்பினும் இவ்வினங்களில் சுற்றாணைக்குறிப்பு, அமைச்சரவைக் குறிப்பு, சட்ட மன்ற நடவடிக்கைகளுக்கான குறிப்புகள் அனைத்திலும் தமிழ் பயன்படுத்தப்பட்டு வருகிறது. இத்தகைய சில இனங்கள் தவிர, ஏனைய அனைத்து இனங்களிலும், தமிழைப் பயன்படுத்த முழுக் கவனம் செலுத்தப்படுகிறது. தங்கள் துறையின் செயலாளரின் அடுத்த ஆய்விற்குள் தமிழ் முழுமையாக பொதுப்பணித்துறையில் செயல்படுத்தப்படும் என்று தங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். இதற்கு, மேலும் சிறிது கால அவகாசம் தேவைப்படுவதால், இத்துறையில் தமிழ் ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கம் குறித்த ஆய்வினை செப்டம்பர் திங்களில் மேற்கொள்ளலாம் எனக் கருதுகிறேன்.

தங்கள் அன்புள்ள,

(துரை முருகன்)

பெறுநர்

முனைவர் மு. தமிழ்க்குடிமகன், எம்.ஏ., பி.எச்.டி.,

தமிழ் ஆட்சிமொழி அமைச்சர், புனித ஜார்ஜ் கோட்டை, சென்னை - 600 009

செயலர் ந.ப. குப்தா என் மடலை ஏற்றும், துறைப் பற்றாளர் (Nodel Officer) சுற்றறிக்கையை இணைத்தும் இனிமேல் வருகின்ற அரசாணைகள் அனைத்தும் தமிழிலேயே வெளியிடப் படுமென்றும் உறுதியளித்திருந்தார்.

*4. பணியாளர் (ம) நிர்வாக சீர்திருத்தத்துறை*

இத்துறையில் 13.3.2000 அன்று ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. வருகைப் பதிவேட்டில் 105 பேர்களில் 20 பேர் மட்டுமே தமிழில் ஒப்பமிடுகின்றனர்.

13 மாதங்களில் 1119 அரசாணைகள் தமிழிலும் 2461 அரசாணைகள் ஆங்கிலத்திலும் பிறப்பிக்கப்பட்டுள்ளன. கடிதப் போக்குவரத்தே தமிழில் 40% மட்டுமே, 28778 மடல்கள் தமிழில் என்றால் 43168 மடல்கள் ஆங்கிலத்தில்.

17.4.2000 அன்று எமது செயலரால் கலந்துரையாடல் குறிப்பு வழங்கப்பட்டுள்ளது.

அதே நாளில் துறை பல உறுதி மொழிகளை வழங்கியுள்ளது.

ஆய்வு நாள் : 13.3.2000

திருவள்ளுவராண்டு 2013/பிரமாதி - மாசி 30.

1. அ) வருகைப் பதிவேடு

105 பேர்களில் 85 பேர் ஆங்கிலத்திலும்,
20 பேர் தமிழிலும் : ஒப்பமிடுகின்றனர்.
(அளிக்கப்பெற்றுள்ள விவரங்களின்படி)

ஆ) 'அ' பிரிவு வருகைப் பதிவேடு தொடர் குறிப்பேடு, 'கே' பிரிவு வருகைப் பதிவேடு, மாநில நிருவாகத் தீர்ப்பாய வருகைப் பதிவேடு போன்றவை : ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன.

இ) தொடர் குறிப்பேடு, விடுப்பு விண்ணப்பங்கள் போன்றவை : தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன

ஈ) அனுமதி, தகவலின்மை, தற்செயல் விடுப்பு, ஈட்டிய விடுப்பு, அலுவல் பதிவுகள் பணி போன்றவை : தமிழிலும், ஆங்கிலத்திலும் மேற்கொள்ளப்படுகின்றன

2. பற்றொப்ப பதிவேடு

272 பேர்களில் 240 பேர் ஆங்கிலத்திலும்
32 பேர் தமிழில் தமிழிலும் : ஒப்பமிடுகின்றனர்

3. பதிவேடுகள் :

அ) காசோலைப் பதிவேடு, பணக்கணக்கு பதிவேடு, கருவூலப் பதிவேடு, துணைக் கணக்குப் பதிவேடு, கடன்களும், முன் பணங்களும் குறித்த பதிவேடு பொது வைப்பு முன் பணப் பதிவேடு, நீண்ட காலக் கடன்கள் குறித்த பதிவேடு, சில்லரைச் செலவினப் பதிவேடு போன்றவை : ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன

ஆ) தன் பதிவேடு, அனுப்புகைப்பதிவேடு : தமிழும், ஆங்கிலமும் கலந்து
நடமாட்டப் பதிவேடு போன்றவை எழுதப்படுகின்றன

4. அரசாணைகள் (1.1.99 முதல் 31.1.2000 வரை)

| | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. அலுவலக நடைமுறை | 740 | 1458 | 2198 |
| 2. வாலாயம் | 299 | 581 | 880 |
| 3. நிலையாணை | 30 | 229 | 259 |
| 4. பத்தாண்டு | 39 | 115 | 154 |
| 5. இருபதாண்டு | 1 | 36 | 37 |
| 6. முப்பதாண்டு | 5 | 3 | 8 |
| 7. நாற்பதாண்டு | - | 17 | 17 |
| 8. அலுவலக ஆணை | 5 | 22 | 27 |
| மொத்தம் | 1119 | 2461 | 3580 |

| 5. கடிதப் போக்குவரத்து | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| அ. பொது மக்களுக்கும் அரசு சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | 8301 | 12412 | 20,713 |
| ஆ. மேல்நிலை அலுவலர்களுக்கு | | | |
| இ. சார்நிலை அலுவலர்களுக்கு | 6582 | 8045 | 14,627 |
| ஈ. அரசின் மற்ற அலுவலகங்கள் | 13,895 | 22,711 | 36,606 |
| மொத்தம் | 28,778 | 43,168 | 71,946 |

| | | |
|---|---|---|
| தமிழில் | .. | 28,778 |
| ஆங்கிலத்தில் | .. | 43,168 |
| விழுக்காடு | .. | 39.9% |

பணியாளர் மற்றும் நிருவாகச் சீர்திருத்தத்துறை
ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கம்
தமிழ் வளர்ச்சிப் பண்பாட்டுத் துறை அரசுச் செயலர் அவர்களின் ஆய்வு

ஆய்வு நாள் : 17.4.2000

திருவள்ளுவராண்டு 2031/ விக்கிரம சித்திரை 5

ஆய்வுக் குறிப்புகளின் மேல் எடுக்கப்பட்ட தொடர் நடவடிக்கை விவரங்கள்

| இனம் | குறிப்பு | தொடர் நடவடிக்கை |
|---|---|---|
| 1. அ) | வருகைப் பதிவேடு கையொப்பம் இடுதல் | தற்போது எடுக்கப்பட்டுள்ள தொடர் நடவடிக்கையின் விளைவாக அனைவரும் தற்போது தமிழில் கையொப்பம் இடுகின்றனர் |
| 1.ஆ) | வருகைப் பதிவேடு பராமரித்தல் | குறிப்பிடப்பட்ட பிரிவு அலுவலர்களுக்கு இனிவருங் காலங்களில் வருகைப் பதிவேடுகள் தவறாமல் தமிழில்தான் பராமரிக்கப்படவேண்டும் என அறிவுறுத்தப்பட்டுள்ளது. இதன் செயல்பாடு இனித் தொடர்ந்து கண்காணிக்கப்படும். |
| 1. இ) | தொடர் குறிப்பேடு, விடுப்பு விண்ணப்பங்கள் | இவை அனைத்தும் இனிவருங்காலங்களில் தமிழில்தான் பராமரிக்கப்படவேண்டும் என்றும் விடுப்பு விண்ணப்பங்கள் அனைத்தும் தமிழில்தான் எழுதப்படவேண்டும் என்றும் அறிவுறுத்தப்பட்டுள்ளது. இதன் செயல்பாடு இனித் தொடர்ந்து கண்காணிக்கப்படும். |
| 1.ஈ) | அனுமதி, தகவலின்மை, தற்செயல் விடுப்பு, அலுவல்பணி போன்றவை | இவை அனைத்தும் இனிவருங்காலங்களில் தமிழில்தான் பராமரிக்கவேண்டும் என்றும் மேற்படி விண்ணப்பங்கள் அனைத்தும் தமிழில்தான் எழுதப்படவேண்டும் என்றும் அறிவுறுத்தப் பட்டுள்ளது. இதன் செயல்பாடு இனித் தொடர்ந்து கண்காணிக்கப்படும். |
| 2. | பற்றொப்பப் பதிவேடு | பற்றொப்பப் பதிவேட்டில் இனி அனைவரும் தமிழில்தான் பற்றொப்பம் இடவேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டுள்ளது. மார்ச்சு, 2000 மாதச் சம்பளம் அனைவருக்கும் பற்றொப்பச் சீட்டில் தமிழில்பற்றொப்பம் இட்டபின்னரே வழங்கப்பட்டது. |

| | | |
|---|---|---|
| 3. அ) | பதிவேடுகள் கருவூல விதிகளின் கீழ் பேணப்படுபவை | கருவூல விதிகளின்கீழ் பேணப்படும் பதிவேடுகள் அனைத்தும் தொடர்ந்து ஆங்கிலத்தில் அச்சிட்டு வழங்கப்பட்டுள்ளதாலும்,மாநிலகணக்காய்வாளரின் ஆண்டாய்வின் போது அவை சமர்ப்பிக்கப்பட வேண்டும் என்பதாலும், விலக்களிக்கப்பட்ட இனங்களில் உள்ளதாலும், அவை தொடர்ந்து ஆங்கிலத்தில் பராமரிக்கப்படுகின்றன. |
| ஆ) | தன்பதிவேடு, அனுப்புகைப் பதிவேடு போன்றவை | இவை அனைத்தும் இனி தமிழில்தான் எழுதப் படவேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டுள்ளது. இதன் செயல்பாடு இனித் தொடர்ந்து கண்காணிக்கப்படும். |
| 4. | அரசாணைகள் | இனி வருங்காலங்களில் தமிழில் அரசாணைகள் வெளியிடுவதை அதிகரிக்க உரிய நடவடிக்கை மேற்கொள்ளப்படும். |
| 5. | கடிதப் போக்குவரத்து | தற்போது 39.9% என்றுள்ள தமிழ் கடிதப் போக்குவரத்தை 60% அளவிற்கு உயர்த்த உரிய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும். |
| 6. | வரப்பெற்ற கடிதப் போக்குவரத்து | தமிழின் செயல்பாட்டினை மேம்படுத்த அலுவலகப் பணியாளர்கள் அனைவரும் இனி வருங் காலங்களில் தங்கள் விண்ணப்பங்கள் மற்றும் கோரிக்கைகளைத் தமிழிலேயே சமர்ப்பிக்குமாறு அறிவுறுத்தப்படுவார்கள். |

(அடுத்த பாகத்தில் தொடரும்)

# கருவி நூற்பட்டியல்

## நூல்கள்


1. அறிஞர் அண்ணா - மதுரை காமராசர் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழா உரை
2. அறிவு நம்பி, அ. - தமிழ் வளர்ச்சி, சிக்கல்களும் தீர்வுகளும்
3. இரத்தினவேல் சதாசிவம் - எங்கும் தமிழ் எதிலும் தமிழ்
4. கல்கி - அலையோசை
5. சந்திரன், வீ. - ஆட்சிமொழியும் மொழிபெயர்ப்பும்
6. சுந்தரராசன், த. - தமிழ் மறுமலர்ச்சி
7. - நூற்றாண்டுத் தமிழ் வளர்ச்சி
8. சுந்தரேசன், துரை. - தமிழ் ஆட்சிமொழி, ஒரு வரலாற்று நோக்கு (1921 - 1956)
9. - " " (1960 - 1965)
10. - " " - மாநாடுகள், இதழ்கள்
11. சுப்பிரமணியம், சி. - தமிழால் முடியும்
12. தமிழ்க்குடிமகன், மு. - வாழ்ந்து காட்டுங்கள்
13. தந்தை பெரியார் - ஈ.வெ.ரா. சிந்தனைகள் (வே. ஆனைமுத்து)
14. தமிழக அரசு - ஆட்சிச் சொல் அகராதி
15. - வணிகச் சொற் பட்டியல்
16. - ஆட்சித் தமிழ்
17. திருமாறன், கு. - மறைமலையடிகளும் தமிழக அரசின் தமிழ் ஆட்சிமொழிப் பணிகளும்
18. - தனித்தமிழ் இயக்கம் - ஒரு திறனாய்வு
19. பசும்பொன், க. - தமிழ் வளர்ச்சித் திட்டம்
20. புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம் - தமிழ் ஆட்சி மொழி
21. பெரியாண்டவன், த. - ஆட்சித் தமிழ்
22. மயிலாடுதுறை வேதநாயகம் பிள்ளை - பிரதாப முதலியார் சரித்திரம்
23. மலையமான் - தமிழ் ஆட்சி மொழி - சிக்கல்களும் தீர்வுகளும்
24. வளர்மதி, மு. - தமிழ் வள்ளல் பாண்டித்துரைத் தேவர்
25. வீரமணி, அ. - சிங்கப்பூர் வளர்ச்சியில் தமிழ் மொழி

## நாளிதழ்கள்

1. நமது எம்.ஜி.ஆர்.
2. விடுதலை
3. முரசொலி
4. தினத்தந்தி
5. தினமணி
6. தினமலர்
7. தினபூமி
8. தினகரன்
9. கதிரவன்
10. மாலைமலர்
11. மாலை முரசு
12. மதுரை மணி
13. மக்கள் குரல்
14. மக்கள் செய்தி
15. The Hindu
16. The New Indian Express

## கிழமை, மாத இதழ்கள்

1. இராணி
2. தேவி
3. செந்தமிழ்ச் செல்வி
4. தென்மொழி
5. தமிழ்ப் பாவை
6. தமிழ் மாருதம்
7. சட்டக் கதிர்
8. கல்கி
9. தெருவிளக்கு
10. மக்கள் செங்கோல்
11. தெளி தமிழ்
12. வெல்லும் தூயதமிழ்
13. நந்தன்
14. நமது தமிழாசிரியர்
15. துக்ளக்
16. கல்கண்டு
17. ஜூனியர் விகடன்
18. இதயம் பேசுகிறது
19. சுரபி
20. தராசு
21. ஆசிரியர் பேரணி

## அறிக்கைகள்

1. தமிழக அரசு - தமிழ் அரசாணைகளின் தொகுப்பு
2. 1996 - 2001 ஐந்தாண்டுகளுக்கான நிதி நிலை அறிக்கைகள்
3. 1989 - 1991 - 1996 - தி.மு.க. தேர்தல் அறிக்கைகள்

## முனைவர் மு. தமிழ்க்குடிமகன் எழுதியவை. . .

கையிருப்பில் இல்லாதவை :-

- புதுக்கவிதை (திறனாய்வு)
- மனமாற்றம் (வரலாற்று நாடகம்)
- வாழ்ந்து காட்டுங்கள் (கட்டுரை)
- மணங்கவர்ந்த மலேசியா (பயண நூல்)
- செந்நீர்க் கடலில் ஈழத் தமிழன் (வரலாறு)

அறிவொளி பதிப்பகம், மதுரை - 2

- ஐரோப்பியப் பயணம்
- பாவேந்தரின் மனித நேயம்
- தமிழில் வழிபாடு - தடையென்ன நமக்கு?
- தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கம்
- தமிழ் வழிக் கல்வி (அச்சில்)
- எனது தமிழ்ப் பணிகள் (அச்சில்)

வானதி பதிப்பகம், சென்னை - 17

- பத்தாண்டுத் தமிழ்க் கவிதைகள் (முனைவர் பட்ட ஆய்வேடு)
- தமிழ் மேம்பாடு

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி

- பாவாணரும் தனித் தமிழும்

பாரதி பதிப்பகம், சென்னை - 17

- அந்தமானைப் பாருங்கள் (பயண நூல்)

தமிழ் மண் பதிப்பகம், சென்னை - 17

- காலமெனும் காட்டாறு
- சீன நாடும் சின்ன நாடும்
- மலேசிய முழக்கம்

திருமகள் புத்தக நிலையம், சென்னை - 17

- கவிதைக் கனிகள்
- பாவேந்தர் கனவு
- கண்ணீர்

செங்கதிரோன் இரவல்ஒளி பெறுவ தில்லை
செந்தமிழ்க்கும் பிறமொழிச்சொல் தேவை இல்லை
தங்குதடை யில்லாமல் மணிக்க ணக்கில்
தனித்தமிழில் பொழியவல்லார் இவர்போல் யாரே?
பொங்கிளமைக் கல்லூரிப் பருவந் தொட்டே
போற்றிவரும் கொள்கைகளில் மாற்ற மின்றி
எங்கெவரோ டிருந்தாலும் எடுத்துச் சொல்லும்
ஏறுதமிழ்க் குடிமகன்தான்! இதிலென் ஐயம்?

எப்பொறுப்பில் இருந்தாலும் இலையென் றாலும்
இவர்விருப்பு தமிழ்நலந்தான்; இவரின் கையில்
ஒப்படைக்கும் சிறுகல்லும் சிற்ப மாகும்
ஒல்லியுடல், வெள்ளையுடை, காலம் போற்றும்
செப்பரிய வினையாற்றல், எழுத்து, பேச்சு,
செவிமலரத் தமிழ்பாடி நடிக்கும் ஆற்றல்...
இப்படியே பலதிறன்கள் இணைந்த தோழர்
எங்கள் தமிழ்க் குடிமகன்தான்! தமிழ்போல் வாழ்க!

-முனைவர் இரா. இளவரசு

